## ஏழாவது

## து ரோ ண ப ரு வ ம்

*வீட்டுமபருவம் என்பதற்குப் பொருள்கூறியது போலவே, இந்தத்* **துரோணபருவ** *மென்ற வடசொற்றொடர்க்கும் பொருளைக் கூறிக்கொள்க. துரோணன் - பரத்துவாச முனிவனதுகுமாரன்; கிருபாசார்யனுடன் பிறந்தவளான கிருபியின் கணவன்; அசுவத்தாமனது தந்தை :சகல சாஸ்திரங்களையும் தன்பிதாவினிடம் கற்றுப் படைத்தொழிலைப் பரசுராமனிடத்துஏழுநாளிற் பயின்றவன். துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் அஸ்திர சாஸ்திரங்களைக்கற்பித்த ஆசிரியன். [முதலிற் சிறிதுகாலம் கிருபனும், பின்பு பிரதானமாகத் துரோணனும் கௌரவபாண்டவர்க்கு வில் வித்தை பயிற்றி வைத்தன ரென அறிக] இவன் துரியோதனாதியர்க்கு இரண்டாவது சேனைத்தலைவன். வைதிக விரதாநுட்டானஞ்செய்கையில் தேவர்களா லேவியனுப்பப்பட்ட மேநகையின் கட்டழகைக் கண்டு காதல்கொண்ட பரத்துவாச மகாமுனிவனது விருப்பத்தால் ஒரு துரோணகும்பத்தில் பிறந்தமைபற்றி இவனுக்குத் துரோண னென்று பெயர் : துரோணகும்பம் - பதக்களவு கொண்ட பாத்திரம். இனி, துரோணம் என்று வில்லுக்குப் பெயருண்மையால், துரோணனென்பது - வில்வன்மைபற்றிவந்த பெயரென்னவுமாம். இவன், அங்கிவேசமுனிவன்பக்கலிலும் படைகள் தேர்ந்தான்.*

## பதினோராம்போர்ச்சருக்கம்

*பத்து + ஒன்று = பதினொன்று : உம்மைத்தொகையில் நிலை மொழி ஈற்று உயிர்மெய்கெட இன்சாரியைதோன்றிற்று ; [நன். உயிர். 47.] ஒன்று + ஆம்=ஓராம் : ஒன்று ஈற்றுயிர்மெய் கெட்டு னகரம் ரகராய் முதல் நீண்டது : [நன் - உயிர் : 38, 39,]*

### *1.-கடவுள் வாழ்த்து*

**காயமும் புலனு மந்தக் காரணமு மாகி யெல்லாத்**
**தேயமும் பரந்து நின்று மீளவுஞ் சித்துஞ் சுத்த**
**மாயமு மாகி நீங்கி வருபெரு ஞானா னந்த**
**மாயவெம் பெருமா னென்னை யாண்டரு ளாழி யானே.**

*(இ-ள்.) காயம்உம் - உடம்பும், புலன்உம் - (அதிலுள்ள) பஞ்ச இந்திரியங்களின் உணர்வும், அந்தக்கரணம்உம் - (அவ்வுணர்வுக் கிடமான) மனமும், ஆகி - (என்னும் இவற்றின்) வடிவமாய், எல்லாம் தேயம்உம் பரந்து நின்று - எல்லாவிடங்களிலும் பரவி நிலைபெற்று, மீளஉம்-மறுபடியும், சித்துஉம் சுத்தமாய்உம் ஆகி நீங்கி - உயிரும் பரிசுத்தமான மூலப்பிரகிருதியுமாய் (அவ்வவ்விடங்களினின்று) பிரிந்து, வரு-(இங்ஙனம் * கற்பந்தோறும் மாறிமாறி) வருகிற, பெரு ஞான ஆனந்தம் ஆய எம்பெருமான் - (மற்றையறிவுகளினுஞ்) சிறந்த பேரறிவும் (மற்றையின்பங்களினுஞ்) சிறந்த*

---

** கல்பம் - இங்கே, பிரமனாயுள் ; பிரமனது தினமன்று.*

*பேரின்பமும் என்னும் இவற்றின் சொரூபமான கடவுள்,- என்னை ஆண்டு அருள் ஆழியான்ஏ - என்னை அடிமைகொண்டு கருணைசெய்கிற சக்கரபாணியான திருமாலே யாவன் ; (எ - று.)*

*சிருஷ்டிகாலந்தோறும் எல்லாத்தத்துவங்களின் வடிவமாய் அவற்றினாலாகிய பிரபஞ்சரூபமாகக் காணப்பட்டுப் பிரளயகாலந்தோறும் அவையாவுந் தன்னுள் ஒடுங்கச்செய்து முற்றுணர்வு வரம்பிலின்பங்களின் மயமாய் நிற்கிற முழுமுதற்கடவுள், ஸ்ரீமந் நாராயணனே யென்பதாம்.*

*பிரபஞ்சத்தின் உத்பத்தி ஸ்திதி விநாசங்களுக்குப் பகவானே காரண மென்பது இதில் விளங்கும்; 'காயமும் புலனு மந்தக்கரணமு மாகி' என்றதனால் உற்பத்தியும், 'எல்லாத்தேயமும் பரந்து நின்று' என்றதனால் ஸ்திதியும், 'மீளவுஞ் சித்துஞ் சுத்தமாயமு மாகி நீங்கி' என்றதனால் விநாசமூ மெனக் காண்க.*

*புலன்களைக்கூறியதில் அவற்றில் தோன்றிய பஞ்சபூதங்களும், அவற்றின்கூறாகிய* ***ஐந்துஞானே*** *ந்திரியங்களும், ஐந்து கருமேந்திரி யங்களும் அடங்கும். பூதங்களைந்து-ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பூமி என்பன. ஞாநேந்திரியங்களைந்து - மெய்வாய்கண் மூக்குச் செவிகள். கர்மேந்திரியங்களைந்து - வாக்கு பாணி பாதம் பாயு உபத்தம் என்பன. ஐம்புலன்களுக்கும் மனத்துக்கும் இடமாதலாலும், ஐம்புலன்களின் காரியமாகிய பஞ்சபூதங்களின் சேர்க்கையால் ஆகியதாதலாலும், உடம்பு முன்கூறப்பட்டது. காயமும் புலனு மந்தக் கரணமுமாகி என்றதனால், இவற்றிற்குக்காரணமான அகங்காரம் மகாந் புருஷன் [உயிர்] பிரகிருதி என்பனவும் பெறப்படும். ஆகவே, இருபத்தைந்து தத்துவங்களும் பகவானதுசொரூபம் என்றதாயிற்று. இவ்விருபத்தைந்து தத்துவங்களும் அல்லது உலகெனப் பிறிதொன்றில்லை யென்று அறிக.*

*மீளவும் என்றது, பிராகிருதப்பிரளயகாலத்தில் [பிராகிருதப் பிரளயம் - பிரமனாயுள் முடிவில்வரும் பிரளயம்.] தத்துவங்களெல்லாம் ஒடுங்கும் நிலையை. சிருஷ்டிகாலத்தில் எந்தப்பொருளினின்று எந்தப்பொருள் உண்டாயிற்றோ அந்தமுறைக்கு எதிராகப் பிரளயகாலத்தில் காரியப்பொருள் தன்காரணப்பொருளில் அடங்கிக் கொண்டு செல்லச்செல்ல இறுதியில் புருஷனும் பிரகிருதியும் பரமாத்மாவில் லயப்படவேண்டியனவாய் நிற்கிற தன்மையை 'மீளவுஞ் சித்துஞ்சுத்தமாயமுமாகி நீங்கி' என்றது. பிரகிருதியின் வ்யக்தஸ்வரூபம் அவ்யக்தஸ்வரூபம் என்ற இரண்டுதன்மைகளுள், இங்கு சுத்தமாயை யென்று கூறியது - அவ்யக்தஸ்வரூபத்தை ; அதாவது - பொறிகளுக்குப் புலனாகாத தன்மையை : [வ்யக்தஸ்வரூபம்- சராசரவடிவமாகப் புலப்படுந் தன்மை.] ஆனது பற்றியே, '* ***சுத்த*** *மாயம்' எனப்பட்டது. பிரகிருதியை 'மாயம்' என்றது, விசித்திரசிருஷ்டியைப் பண்ணுகையாலே. இனி, சுத்த மாயம் என்பதற்கு வேறுபொருளுரைத்தல், விசிஷ்டாத்வைத சித்தாந்தத்துக்கு ஒவ்வாது. சித்து - உணர்வுள்ளது.*

*பெருஞானம்-முற்றுமுணர்தல், சர்வஜ்ஞதை, ஐயந்திரிபில்லாத இயற்கையறிவு. பெருமையை ஆனந்தத்துக்குங் கூட்டுக. பேரா*

*னந்தம் - துக்க சம்பந்தமில்லாமல் நித்தியமாயும் வரம்பில்லாததாயு முள்ள சுகம். பெரு ஞானானந்தமாய என்றது - எல்லாவற்றையும் எப்பொழுதும் ஐயந்திரிபற அறியும் அறிவின்மிகுதியை இயல்பிலுடையனாயும், எல்லாவின்பங்களினும் மேம்பட்டநிரதிசயப் பேரின்பத்தை எப்பொழுதும் உடையனாயு முள்ள வென்றபடி. இப்படிகர்மவசமான பிரபஞ்சரூபமாகத் தோன்றுதல் நிலைத்தல் அழிதல்களை அடைந்தாலும், இவை யாவும் பகவானது இச்சைமாத்திரத்தால் நிகழ்தலால் அப்பெருமானுக்குக் கர்மசம்பந்தம் நிகழாமைபற்றி, ஞானானந்தங்களுக்குக் குறைவில்லை யென்பார், இவ்வாறுகூறினார்.* ***பி - ம்:*** *மீளவுஞ் சிதைத்துச்.*

*இதுமுதல் பதினெட்டுக்கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகி* ***அறுசீராசிரிய விருத்தங்கள் :*** *இவற்றில் மூன்று ஆறாஞ் சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (1)*

### *2.-கவிக்கூற்று : இன்னது கூறுவோமென்றல்.*

***பகிரதிமைந்தன்சேனாபதியெனப்பத்துநாளு***
***மிகல்புரியியற்கையெல்லாமியம்பினமினிமேலந்தத்***
***துகளறுகேள்விவேள்வித்துரோணவாசிரியன்செய்த***
***புகலருமைந்துநாளைப்பூசலும்புகலலுற்றாம்.***

*(இ - ள்.) பகிரதி மைந்தன்-கங்கையின்புத்திரனான பீஷ்மன், சேனாபதி என - சேனைத்தலைவனாக (இருந்து), பத்து நாள்உம்- (சென்று) பத்துத்தினங்களிலும், இகல் புரி-போர்செய்த, இயற்கை எல்லாம் - தன்மைகளெல்லாவற்றையும், இயம்பினம் - (கீழ் வீட்டுமபருவத்தில்) கூறிமுடித்தோம் ; இனிமேல்-, துகள் அறு - குற்றமில்லாத, கேள்வி - நூற்கேள்விகளையும், வேள்வி - யாகங்களையுமுடைய, அந்த துரோண ஆசிரியன் - அந்தத் துரோணாசாரியன், செய்த-, புகல் அரு - சொல்லுதற்கு அருமையான, ஐந்து நாளை பூசல்உம் -ஐந்துநாளைப்போரையும், புகலல் உற்றாம் - (இப்பருவத்தில்) கூறத்தொடங்கினோம் ; (எ - று.)*

*பகிரதி - பாகீரதி யென்னும் வடமொழித்தத்திதாந்தநாமத்தின் குறுக்கல் ; பகீரதனாற் கொணரப்பட்ட தென்று காரணப் பொருள். **பகீரதன்-** சூரியகுலத்துப் பிரசித்தனான ஓரரசன். இவன், கபிலமுனிவனது சாபத்தாற் சாம்பலானவரும் சகரசக்கரவர்த்தி குமாரரும் தனதுபாட்டனுக்குச் சிற்றப்பன்மாருமாகிய அறுபதினாயிரவரை நற்கதிபெறுவித்தற்பொருட்டு அவர்களுடற்பொடியை நனைத்தற்காகத் தேவலோகத்திலிருந்து ஆகாசகங்காநதியை முன்பு கீழுலகத்துக்குக் கொணர்ந்தா னென வரலாறு காண்க. யாகஞ் செய்தல் செய்வித்தல் என்னும் இருதொழிற்கும் உரியவர் அந்தணரே யாதலால், 'வேள்வித்துரோணவாசிரியன்' என்றார். புகல் - புகலுதல்: முதனிலைத்தொழிற்பெயர் ; இனி, புகல் அரும் - (எளிதில்) பிரவேசிக்க வொண்ணாத எனப் பொருள்கொண்டால், புகல் - புகுஎன்னும் பகுதியின்மேற் பிறந்த தொழிற்பெயராம். வீடுமன் தலைமைபூண்டு நடத்தின பத்துநாட்போரினும் துரோ*

*ணன் தலைமைபூண்டு நடத்தின ஐந்துநாட் போரில் கொல்லப்பட்ட அவனுடைய பகைவர் பக்கத்தார் மிகப்பலராதலின், இதனை 'புகலரும்' என விசேடித்தது. (2)*

### *3.-பாண்டவர் போர்க்களங் குறுகுதல்.*

**சென்றனன்கங்கைமைந்தன்றினகரன்மைந்தன்செல்வான்**
**நின்றனன்றுரோணன்மைந்தனீடமர்முனைந்துசெய்யான்**
**வென்றனமினிநாமென்றுமெய்ம்முகில்வண்ணன்சொல்லக்**
**குன்றனகுவவுத்தோளார்வெங்களங்குறுகினாரே.**

*(இ - ள்.) 'கங்கை மைந்தன் - வீடுமன், சென்றனன் - வலியடங்கிப் போய்விட்டான் ; தினகரன் மைந்தன் - சூரியனுக்கு மகனான கர்ணன், செல்வான் நின்றனன் - இறந்துசெல்பவனாய் நின்றான் ; துரோணன் மைந்தன் - துரோணாசாரியன்மகனான அசுவத்தாமனோ, நீடு அமர் - பெரிய போரை, முனைந்து செய்யான் - உக்கிரங்கொண்டு செய்யமாட்டான் ; (ஆதலால்), இனி-, நாம்-, வென்றனம் - (பகைவரைச்) சயித்தேவிட்டோம்,' என்று-, மெய் முகில் வண்ணன் - சத்தியத்தையுடைய மேகம்போலும் (கரியதிருமேனி) நிறத்தையுடைய கண்ணபிரான், சொல்ல-,(மகிழ்வோடு), குன்று அன குவவு தோளார் - மலையையொத்த திரண்ட தோள்களையுடைய பாண்டவர்கள், வெம் களம்- கொடிய போர்க்களத்தை, குறுகினார் - அடைந்தார்கள்; (எ - று.)*

*'தினகரன்மைந்தன் செல்வான் நின்றனன்' என்றது-கற்ற கல்வியெல்லாம் தக்கசமயத்தில் உதவாமல் மறந்துபோய்விடக்கடவதென்று குருவாகிய பரசுராமனிடத்தும், போர்க்களத்தில் உடம்பு பகைவரம்பாற் சிதைந்து தேர்ச்சக்கரமும் நிலத்திலழுந்திவிடக்கடவதென்று ஒரு முனிவனிடத்தும் கர்ணண் சாபங்கள் பெற்றிருத்தலும், உயிர்நிலையாகிய கவசகுண்டலங்களை இந்திரனுக்குக்கொடுத்து இழந்ததும், நாகாஸ்திரத்தை அருச்சுனன்மேல் இரண்டாம்முறை விடுவதில்லை யென்றும் மற்றைப்பாண்டவர் நால்வரையும் கொல்வதில்லையென்றும் குந்திக்கு வரமளித்ததும்முதலிய தக்ககாரணங்கள் பற்றியும், திருமாலின் இயல்பான திரிகாலஞானத்தாலுமாகும். **'தினகரன்மைந்தன்'** என்ற **விவரம் :-** பாண்டவர்கள் தாயான குந்திதேவி கன்னிகையாயிருக்கும்பொழுது தனக்குத் துருவாசமுனிவருபதேசித்த மந்திரத்தைப் பரீட்சித்தறியும் பொருட்டுச் சூரியனை நினைத்து அம்மந்திரத்தை உச்சரிக்க, உடனே அத்தேவன் வந்து அவளுக்கு அநுக்கிரகித்ததனால், அவளிடம் பிறந்த புத்திரன், கர்ணன்; இவனை, பிறந்தபொழுதே குந்தி பழிக்கு அஞ்சி ஒருமிதக்கும் மரப்பெட்டியில் வைத்துப் பூட்டிக் கங்கையாற்றில் விட்டிட, அதனைத்*

*திருதராட்டிரனது தேர்ப்பாகனான அதிரதனென்பவன் கண்டு எடுத்துத் திறந்து பார்த்துக் கொண்டுபோய்த் தன் மனைவியாகிய ராதையும் தானுமாக வசுசேனனென்று பெயரிட்டு வளர்த்தான்: இவனுக்குக் கர்ணன் என்ற பெயர் ஆகாசவாணி யிட்டது. இவன் பின்பு துரியோதனனுக்குப் பிராணசினேகிதனாகி அவனருளால் அங்கதேசத்துக்கு அரசனாயினான்.*

*கண்ணன் துரியோதனனிடந் தூதுசென்றபொழுது விசுவரூபத்தின் பின் அசுவத்தாமனைத் தனியேயழைத்து அவனுடன் சில பேசிக் கொண்டிருக்கையில், தன்கைம்மோதிரத்தைக் கீழேநழுவவிட, அதனை அசுவத்தாமன் இயல்பாக எடுத்துக்கொடுக்கையில், கண்ணபிரான் வாங்கிக்கொள்ளாமல் 'சூரியனைப் பரிவேஷம் சூழ்ந்துள்ளது பார்' என்னவே, அவன் ஆகாயத்தை நோக்கினான்; இதனைத் தூரத்தினின்று பார்த்திருந்த துரியோதனாதியர்க்கு 'அசுவத்தாமன் கண்ணன்கைம் மோதிரத்தைத் தன்கையில்வாங்கிப் பூமியைத்தொட்டு ஆகாயத்தை நோக்கிச் சூரியன்சாட்சியாக ஏதோ சபதஞ் செய்துதந்தான்' என்று அசுவத்தாமனிடம் அவநம்பிக்கை யுண்டாக, அதனால் அவர்கள் அவனை இரகசியமான ஆலோசனைகளுக்கு உடன்கொள்ளாராயினர் : ஆகவே, இவனுக்கும் அவர்களிடம் அபிமானம் குறைந்தது; ஆனதுபற்றியே, 'துரோணனமைந்தன் நீடமர் முனைந்து செய்யான்' என்றான். இங்ஙனம் கண்ணன் தந்திரமாக மித்திரபேதஞ்செய்ததே, மேல் துரோணனிறப்ப தன்பின்பு இவனைச் சேனாபதியாக்காததற்கும் முக்கியகாரணமாம். துரோணன் மனைவியான கிருபியின் அழகைக் கேட்டும் ஒருகால் கண்டும் மிகக்காதல்கொண்ட சிவபிரானருளினாற் குதிரையினிடம் பிறந்தவன் அசுவத்தாமன்.*

*வெல்வம் என்னாது* **வென்றனம்** *என இறந்தகாலத்தாற் கூறினது, விரைவுந் தெளிவும் பற்றிய* ***காலவழுவமைதி ;*** *[நன். பொது. 33.] தெய்வாமிசமான கண்ணன் கூறியவை யாவும் அங்ஙனமே தவறாமல்நடத்தலால், 'மெய்ம்முகில்வண்ணன் சொல்ல' என்றார்.*

### *4.-துரியோதனன் படைவீரருடனும் துரோணனுடனும் போர்க்களஞ் சேர்தல்.*

***மாதனத்தளகையாளுமன்னெனவானிற்பாக<br>சாதனக்கடவுளென்னத்தகும்பெருந்தரணிவேந்தன்<br>சேதனப்படைஞரோடுஞ்சேனையின்காவலான<br>வேதநற்குருவினோடும்வெங்களம்வந்துசேர்ந்தான்.***

*(இ - ள்.) மா தனத்து - மிக்க செல்வத்தையுடைய, அளகை ஆளும் மன் என - அளகாபுரியை ஆளுகிற அரசனான குபேரனென்றும், வானில் - சுவர்க்கத்தில் (அரசனாய்வாழ்கிற), பாகசாதனன் கடவுள் என்ன - இந்திர தேவ னென்றும், தகும் - (உவமை) சொல்லத்தக்க, பெரு - சிறப்புள்ள, தரணி வேந்தன் - நிலவுலகத்து அரசனாகிய துரியோதனன், சேதனம் படைஞரோடுஉம் - (பகைவரை) வெட்டுந்தன்மையுள்ள ஆயுதவீரர்களுடனும், சேனையின் காவல் ஆன - சேனையைப் பாதுகாப்பவனாகிய, வேதம் நல் குருவினோடு உம் - வேதம்வல்ல சிறந்த ஆசிரியனான துரோணனுடனும், வெம் களம் - கொடியபோர்க்களத்தில், வந்துசேர்ந்தான்-; (எ - று.)*

*குபேரனும் தேவேந்திரனும் துரியோதனனுக்குச் செல்வச் சிறப்பில் உவமை. குபேரன், பிரமனிடம் பெருவரம்பெற்று அதனால் நவநிதிநாயகனும் தநாதிபதியும் திக்குப்பாலகருள் ஒருவனுமாகி, பின்பு தந்தையின் கட்டளையால் கைலாசத்திற் சென்று*

*அங்கு அளகையென்னுந் திவ்வியநகரியை அமைத்து அதில் புஷ்பகவிமாநம் முதலிய பெருவிபவங்களுடன் வாழ்ந்து சிவபிரானுக்கு நண்ப னெனப்படுஞ் சிறப்புள்ளவ னாதலால், 'மாதனத்து அளகையாளும் மன்' எனப்பட்டான். மன் - பெருமை: அதனையுடைய மன்னவனுக்குப் பண்பாகுபெயர். பாகசாதனக்கடவுள் - இந்திரனாகிய தேவ னென இருபெயரொட்டுப் பண்புத்தொகை; பாகசாஸநன் - பாகனென்னும் அசுரனைக் கொன்றவனென்று காரணப்பொருள்;*

*(பாகன் - விருத்திராசுரனுடன் பிறந்தவன்.) தரணி - (பொருள்களைத்) தரிப்பது எனக் காரணக்குறி.* ***சே*** *தநம் - சேதித்தல்; இனி, 'சேதனப்படைஞர்' என்பதற்கு- அறிவுள்ளசேனைவீரரென்று உரைத்தல் சிறிதும் சிறவாது. (4)*

### *5.-வீடுமனில்லாத துரியோதனசேனை பொலிவிழந்திருத்தல்.*

***மதியிலாவிசும்புஞ்செவ்விமணமிலாமலருந்தெண்ணீர்***
***நதியிலாநாடுஞ்செம்பொனரம்பிலாநாதயாழும்***
***நிதியிலாவாழ்வுந்தக்கநினைவிலாநெஞ்சும்வேத***
***விதியிலாமகமும்போலும்வீடுமனிலாதசேனை.***

*(இ-ள்.) (அப்பொழுது), வீடுமன் இலாதசேனை-பீஷ்மனில்லாத அக்கௌரவசேனை,-மதி இலா விசும்புஉம் - சந்திரனில்லாத ஆகாயத்தையும், செவ்வி மணம் இலா மலர்உம் - நல்ல வாசனையில்லாத பூவையும், தெள்நீர் நதி இலா நாடுஉம் - தெளிவானநீரையுடைய ஆறு இல்லாத தேசத்தையும், செம் பொன் நரம்பு இலா - சிவந்தபொன்போ லருமையான நரம்பின் அமைதி இல்லாத, நாதம் யாழ்உம் - ஒலிக்கு இடமான வீணையையும், நிதி இலா வாழ்வுஉம் - செல்லவமில்லாத குடிவாழ்க்கையையும், தக்க நினைவு இலா நெஞ்சுஉம் - தகுந்த நல்லெண்ண மில்லாத மனத்தையும், வேதம் விதி இலா மகம்உம் - வேதங்களிற்கூறிய விதிமுறையொழுக்க மில்லாதயாகத்தையும், போலும்- ஒக்கும் : (எ-று.)-பொலிவிழந்திருக்கும் என்றபடி. 'போன்ற' என்ற பாடத்துக்கு-போன்றது' என்பதன் விகார மென்னலாம்.*

*'நட்சத்திரமில்லாத வானம்போலவும், காற்றில்லாத ஆகாயம் போலவும், பயிரில்லாத நிலம்போலவும், திருத்தமில்லாத சொற்போலவும், பலிசக்கர வர்த்தியில்லாதஅசுரசேனைபோலவும், கணவனில்லாத மனைவிபோலவும், நீரில்லாத நதிபோலவும்இருந்தது, வீடுமனில்லாத குருசேனை' என்று வியாசபாரதத்திற்கூறியுள்ளது.உபமானம் உபமேயம் உவமவுருபு என்ற மூன்றும் விரிந்து நிற்கப் பொதுத்தன்மைமாத்திரம் தொக்கிருத்தலால்,* ***பொதுத்தன்மைத் தொகையுவமையணி*** *யாம்.தெளிவானநீரின்வளமில்லாத நதி இருந்தும் பயனில்லை யாதலால்,'தெண்ணீர்நதியிலாநாடு' எனப்பட்டது. மற்றையிசைக் கருவிகளினும் வீணையில்ஸ்வரத்துக்குரிய அக்ஷரங்களின் உச்சாரணை நன்கு அமைதலாலும். செவிக்கு இனியஓசையுடைமையாலும், 'நாதயாழ்' எனப்பட்டது.* ***பி-ம்:-*** *தக்கநரம்பிலா.மிக்கநினைவிலா. (5)*

### *6.-இரண்டுபக்கத்துச் சேனாபதிகளும் தம்சேனையை அணிவகுத்தல்.*

***பகடுதேர்புரவிகாலாள்பலவகைப்பட்டசேனை***
***சகடமாவியூகமாகவகுத்தனன்றனுநூல்வல்லான்***
***திகடருகவுஞ்சயூகமாகவேதிட்டத்துய்மன்***
***துகடருசாதுரங்கம்யாவையுந்தொகுத்துநின்றான்.***

*(இ - ள்.) (அந்நாளில்), பகடு-யானைகளும், தேர் - தேர்களும், புரவி - குதிரைகளும், கால் ஆள் - காலாள்களும் (என்னும் சதுரங்கங்களும்), பலவகை பட்ட-பலபகுப்பாக அமையப்பெற்ற, சேனை - கௌரவசேனையை, தனு நூல் வல்லான் - வில்வித்தையில் வல்லவனான துரோணாசாரியன், மா சகடம் வியூகம் ஆக - பெரிய சகட மென்னும் வியூகமாக, வகுத்தனன் - அணிவகுத்தான்; துகள் தரு- (வன்மையாக நடத்தலால்) புழுதியை மேலெழுப்புகிற, சாதுரங்கம் யாவைஉம்- (பாண்டவரது) நால்வகைச்சேனைகளெல்லாவற்றையும், திட்டத்துய்மன் - திருஷ்டத்யும்நன், திகழ்தரு - விளங்குகிற, கவுஞ்சயூகம் ஆகஏ - கிரௌஞ்சமென்னும் வியூகமாக, தொகுத்து நின்றான் - திரண்டு அமையச்செய்து நின்றான்; (எ - று.)*

*காலாள் - வாகனமின்றிக் கால்களால் நடக்கும் ஆண்மகன்; பதாதி. தநுநூலாவது - வில்முதலிய ஆயுதங்களிற் பயிலும்வகைகளையும், பகைவெல்லுதற்குரிய மந்திரம்முதலிய பிரயோகங்களையும் அறிவிக்கிற ஆயுதசாஸ்திரம். திகழ் + தரு = திகடரு ; இப்புணர்ச்சி "பதினைந்தோடெண்ணிரண்டாய்" என்ற வீரசோழிய விலக்கண விதிப்படி அமைந்தது. இனி, 'திகழ்' என்பது முகரளகரப்போலியால் திகள் என நிற்க, அக் குறில்செறியாத ளகரம் அல்வழியில் வந்த தகரம் திரிந்தபின் கெட்டதெனினும் அமையும் ; இச்சந்தியை மரூஉமொழியில் அடக்குதல், ஒருசாரார்கொள்கை. சாதுரங்கம் - வடமொழிப்புணர்ச்சி. யாவையும், யாவினா - எஞ்சாமை குறிக்கும் ; உம்மை - முற்றுப்பொருளது.* ***பி-ம்:-*** *கரிஞ்சயூகம். (6)*

### *7.-இருசேனாபதியரும் மன்னவர் சூழநின்று இடைவிடாது அம்புபொழிதல்.*

***படையுடையிருவர்சேனாபதிகளும்பனிவெண்டிங்கட்***
***குடையுடைநிருபர்சூழவரூதினிக்குழாங்கள்சூழ***
***நடையுடைத்தடந்தேருந்திநாகரும்பனிக்கும்வண்ணந்***
***தொடையுடைவாளிமாரிசோனையம்புயலிற்பெய்தார்.***

*(இ - ள்.) படை உடை - ஆயுதங்களையுடைய, இருவர் - (கௌரவர் பாண்டவர் என்னும்) இருதிறத்தாரது. சேனாபதிகள்உம் - சேனைத்தலைவர்களான துரோணனும் திட்டத்துய்மனும்,- பனி - குளிர்ச்சியான, வெள் - வெண்ணிறமுடைய, திங்கள் - பூர்ணசந்திரன் போன்ற, குடை உடை - (கொற்றக்) குடையையுடைய, நிருபர்- (தத்தம்பக்கத்து) அரசர்கள், சூழ - சுற்றிலும்வரவும்,- வரூதினி - சேனைகளின், குழாங்கள் - கூட்டங்கள், சூழ - சூழ்ந்து வரவும்,- நடை உடை- (விரைந்த) நடையையுடையை, தட - பெரிய, தேர் - (தம்தம்) தேரை, உந்தி - செலுத்திவந்து, நாகர்உம் பனிக்கும் வண்ணம் - (பார்த்த) தேவர்களும் அஞ்சிநடுங்கும்படி,*

*தொடைஉடை - தொடுக்கப்படுந்தன்மையுள்ள, வாளி - அம்புகளின். மாரி - மழையை, சோனை அம்புயலின் - விடாப்பெருமழைபொழிகிற அழகிய மேகம்போல. பெய்தார் -(ஒருவர்மேல் ஒருவர் இடைவிடாமற்) சொரிந்தார்கள்; (எ - று.)*

*இனி, 'நாகரும்பனிக்கும்வண்ணம்'என்பதற்கு -(பாரமிகுதியால் பாதாளலோகத்திலிருந்து பூமியைத்தாங்குகிற ஆதிசேஷன் முதலிய) நாகர்களும் வருந்தும்படி எனினும் அமையும். தொடையுடைவாளி -ஒன்றையொன்று தொடர்தலையுடைய அம்புகளெளினுமாம்.* ***உவமையணி****. வரூதம் - ரதகுப்தி, தேர்க்காவல்: அதனையுடையது - வரூதிநீஎன ஏதுப்பொருள், நாகரும், உம் - உயர்வுசிறப்பு. (7)*

### *8.-சகதேவனும் சகுனியும் பொருதல்.*

***மருத்துவர்மைந்தர்தம்மிலிளவலும்வலியசூது***
***கருத்துடன்பொருதுவென்றமாமனுங்கலந்துதம்மில்***
***ஒருத்தரையொருத்தர்வேறலரிதெனவுடன்றுவேக***
***சரத்தொடுசரங்கள்பாயச்சராசனம்வாங்கினாரே.***

*(இ-ள்.) மருத்துவர் - (தேவ) வைத்தியரான அசுவிநீதேவர்களின், மைந்தர்தம்மில் - குமாரர்களான நகுலசகதேவர்களுள், இளவல்உம்- இளையவனானசகதேவனும், வலிய சூது- வலிமையையுடைய சூதுபோரை, கருத்துடன் -(வஞ்சனை) நினைப்புடனே, பொருது- செய்து, வென்ற- (பாண்டவரைச்) சயித்த,மாமன் உம் -(துரியோதனாதியரின்) மாமனான சகுனியும், தம்மில் கலந்து- தமக்குள்[ஒருவரையொருவர்]நெருங்கி, ஒருத்தரை ஒருத்தர் வேறல் அரிது என - ஒருவரைமற்றொருவர் வெல்லுதல் முடியாதாம்படி [சமமாய்], உடன்று - உக்கிரங்கொண்டு,வேகம் சரத்தொடு சரங்கள் பாய - விரைவுள்ள அம்புகளோடு அம்புகள் பாய்ந்துஎதிர்கோத்து நிற்கும்படி, சராசனம் வாங்கினார்- வில்லை வளைத்துப்போர்செய்தார்கள் ; ( எ -று.)*

*மருந்தின்தன்மையையறிந்து வியாதிக்கு ஏற்றபடி உபயோகித்தலால், மருத்துவரென்று வைத்தியர்க்குப் பெயர்; மருத்துவர் - மருந்தையுடையவர்; மருந்து- பகுதி. பொருது என்ற வினைக்கு ஏற்ப, சூது, போரெனப்பட்டது. போர் முதலிய செல்வங்களை எளிதிற்பெறுவித்த உறுதியைக் கருதி, 'வலியசூது' என்றார். இனி, வலிமை - கொடுமையுமாம். வேறல், வெல் - பகுதி. (8)*

### *9.-சகதேவன் சகுனியை வெல்லுதல்.*

**ஒருகணைதொடுத்துப்பாகனுயிர்கவர்ந்துயர்த்தகேது**
**விருகணைதொடுத்துவீழ்த்திபிரதமாத்தொலையநான்கு**
**பொருகணைதொடுத்துவஞ்சன்பொருவருமார்பிலாறு**
**வருகணைதொடுத்துவாகைமலைந்தனன்வஞ்சமில்லான்.**

*(இ -ள்.) (பின்பு), வஞ்சம் இல்லான் - வஞ்சனையில்லாதவனாகிய சகதேவன்,- ஒரு கணை தொடுத்து- ஓரம்பைப் பிரயோகித்து, (அதனால்), பாகன் உயிர் கவர்ந்து- (சகுனியின் தேர்ச்) சாரதியினது உயிரை (உடம்பினின்று) பறித்து [பாகனைக் கொன்று], உயர்த்த கேது-(அவன்தேரில்) உயரக்கட்டிய துவசத்தை, இருகணை தொடுத்து வீழ்த்தி - இரண்டுஅம்புகளைப் பிரயோகித்து (அவற்றால்) அறுத்துத்தள்ளி, இரதம் மா தொலைய - தேரிற்பூட்டிய குதிரைகள் (நான்கும்) அழியும்படி, நான்கு பொரு கணை தொடுத்து - போருக்குரிய நான்கு அம்புகளைப் பிரயோகித்து, வஞ்சன் - வஞ்சனையுடையவனான அச்சகுனியின், பொரு அரு மார்பில் - ஒப்பில்லாத மார்பிலே, வரு ஆறு கணை தொடுத்து - (ஒன்றன்பின் ஒன்றாக) வருகிற ஆறு அம்புகளை பிரயோகித்து, வாகை மலைந்தனன் - வெற்றிமாலை சூடினான்; ( எ -று.)*

*முதலில் இருவர்க்கும் சிறிதுபொழுது சமமாகப் போர்நிகழ பின்பு போரில் இன்னாரை இன்னாரால் வெல்லலாயிற்று என இயல்பை யெடுத்துக் கூறுதல், மரபு. மலைதல் - சூடுதல்: "மலைதலு மிலைதலும் வேய்தலுஞ் சூடுதல்" என்பது, பிங்கலத்தை. வஞ்சன் என்றதை, பாகன் கேது இரதம் என்றவற்றோடுங் கூட்டுக. பாகு - யானை தேர் குதிரைகளைச் செலுத்துந் தொழில்: அதனையுடையான் - பாகன். தொலைய என்னும் செயவெனெச்சம், காரியப்பொருளதாதலால், எதிர்காலம். வாகை யென்னும் மரத்தின் மலர்களாகிய மாலையைப் போர்வெற்றிக்கு அறிகுறியாக வீரர்கள் சூடுதல், முறைமை. வஞ்சகச்சூதில் வல்லவ னாதலால், சகுனியை 'வஞ்சன்' என்றார்; "ஸதமாயன்" என்றார் முதனூலாரும். சகதேவன் வஞ்சமில்லானாதலை, கீழ்ப் பழம்பொருந்து சருக்கத்திலும் கிருஷ்ணன் தூதுசருக்கத்திலும் கண்ணனுக்கும் இவனுக்கும் நடந்த சம்பாஷணைகளாலும், (முகூர்த்தங்கேள்விச் சருக்கத்தில்) அடுத்துக்கேட்ட துரியோதனனுக்குச் சிறிதும் வஞ்சனையின்றி நல் முகூர்த்தம் வைத்துக்கொடுத்ததனாலும் அறிக.* ***பி -ம்*** *: மிலைந்தனன். (9)*

### *10.-சகதேவன் கதாயுதப்போரிலும் சகுனியை வெல்லுதல்.*

**உகுநிணச்சேற்றிலூன்றியோடுதற்குன்னுவான்போற்**
**சகுனியத்தேரினின்றுமிழிந்துகைத்தண்டமேந்த**
**நகுலனுக்கிளையோன்றானுநகுமணிவலயத்தோண்மேன்**
**மிகுதிறற்றண்டுகொண்டேவென்னிடப்பொருதுமீண்டான்.**

*( இ -ள்.) உகு - (போர்க்களத்தில் இறந்த பிராணிகளின் உடம்பினின்று) வெளிப்படுகிற, நிணம்- கொழுப்பாகிய, சேற்றில் - சேற்றிலே, ஊன்றி -(ஆதாரமாக) ஊன்றிக்கொண்டு, ஓடுதற்கு-(தான்) ஓடிப்போவதற்கு, உன்னுவான் போல் - எண்ணுபவன் போல, சகுனி-, அ தேரினின்றும் இழிந்து - அந்த(த் தனது) இரதத்தினின்றும் இறங்கி, கை தண்டம் ஏந்த - கையிற் கதாயுதத்தை எடுத்துக்கொள்ள,- (அப்பொழுது), நகுலனுக்கு இளையோன்*

*தான்உம்- நகுலனுக்குத் தம்பியான சகதேவனும், (தேரினின்று இறங்கி), நகு- பிரகாசிக்கிற, மணி - இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற, வலயம்- வளையையணிந்த,தோள்மேல்-(தன்) கையில், மிகு திறல் தண்டுகொண்டுஏ - மிக்கவலிமையையுடைய கதாயுதத்தை எடுத்துக் கொண்டே, வென் இட - (அச்சகுனி) முதுகுகொடுக்கும்படி, பொருது - போர்செய்து, மீண்டான் - திரும்பி (த்தேர்மீது) ஏறினான் ; (எ - று.)*

*தேரினின்று இறங்கிக் கையிற் கதையை யேந்திய சகுனி, சிறிதுபொழுதேனும் எதிர்த்துநின்று அவ்வாயுதங்கொண்டு போர் செய்யமாட்டாமல் உடனே அஞ்சிப் புறங்கொடுத்துத் தோற்று ஓடுதலால், அவனுக்கு அப் படைக்கலம் போர்க்கருவியாகாது, வழுக்குதலுடைய சேற்றுநிலத்திற் சறுக்கிவிழாமல் ஓடுதற்கு உதவியாகிற ஊன்றுகோல்மாத்திரமாகப் பயன்பட்டதென்றார்; இது -* ***தற்குறிப்பேற்றவணி.*** *அத்தேர் - பாகனும் துவசமும் குதிரையும் இழந்த தேர்.*
***பி -ம்:*** *இளையகோவும். (10)*

### *11.-துரியோதனன் வீமனோடு பொருதல்.*

***மதாசலமகுடமான்றேர்வாம்பரிவயவர்வெள்ளப்***
***பதாதியெம்மருங்கும்போதப்பார்த்திவர்நிழலிற்போதப்***
***பிதாமகனிறந்தானென்றுபேதுறுநிருபன்போந்து***
***சதாகதிமைந்தனோடுந்தாக்கினன்றபனன்போல்வான்.***

*(இ-ள்.) மத அசலம்- மதத்தையுடைய மலைகள் போன்ற யானைகளும், மகுடம் மான் தேர் - சிகரத்தையுடைய குதிரைகள் பூட்டிய தேர்களும், வாம்பரி - தாவிச்செல்லுங் குதிரைகளும், (என்னும் இவற்றில் ஏறிய), வயவர் - வீரர்களும், பதாதி வெள்ளம்- காலாள்களின் கூட்டமும், எ மருங்குஉம் போத - எல்லாப் பக்கங்களிலும் (சூழ்ந்து) வரவும், பார்த்திவர் - அரசர்கள், நிழலின் -(தனது) நிழல்போல, போத (நீங்காது உடன்) வரவும்,- தபனன் போல்வான் -சூரியன்போல விளங்குபவனான, பிதாமகன் இறந்தான் என்று பேது உறு நிருபன்- பெரியபாட்டனான வீடுமன் அழிந்தானென்று மதிமயக்கமடைந்த துரியோதனராசன்,- போந்து-வந்து, சதாகதி மைந்தனோடுஉம்- வாயுபுத்திரனான வீமசேனனுடனே, தாக்கினன்- எதிர்த்துப்பொருதான்; ( எ-று.)*

*பார்த்திவர் - பிருதிவியை ஆளுபவர் ; தத்திதாந்தநாமம்: ப்ருதிவீ - பூமி ; ப்ருது என்னும் அரசனால் சீர்ப்படுத்தப்பட்டமை பற்றிய பெயர் இறந்தான் என்றது, இங்கே இலக்கணை; வலிமை முழுதுமொடுங்கி இறந்தாற்போலானா னென்றபடி. பேது - பேதம் என்னும் வடசொல்லின் விகாரம். 'தபனன் போல்வான்' என்பதனை, வீமனுக்கு அடைமொழியாக்கினும் பொருந்தும், மேல் அவனே வெல்லுதலால். (11)*

### *12.- வீமன் துரியோதனனோடு அவனைச் சார்ந்தாரையும் வெல்லுதல்*

***அரிக்கொடியரியேறன்னானரவவெங்கொடியுமற்று***
***வெருக்கொள்பேரரவமன்னான்வில்லுமுனற்றுவீழ***

***வெரிக்கணையேவிச்சூழ்ந்ததரணிபரெதிர்ந்தவேந்தர்***
***கரிக்குலமிவுளிதிண்டேர்மடியவெங்கணைகடொட்டான்.***

*(இ - ள்.) அரி- சிங்கத்தின்வடிவமெழுதிய, கொடி - துவசத்தையுடைய, அரி ஏறு அன்னான் - ஆண்சிங்கத்தை யொத்தவனான வீமன்,- வெரு கொள் பேர் அரவம் அன்னான் - (காண்பவர்) அச்சங்கொள்ளுதற்குக் காரணமான பெரிய பாம்பை யொத்த துரியோதனனது, அரவம் வெம் கொடிஉம் - பாம்பின்வடிவமொழுதிய பயங்கரமான துவசமும், அற்ற - அறுந்து, வில்உம் - (அவன்கை) வில்லும், அற்று - அறுபட்டு, முன் வீழ-(அவையிரண்டும்) எதிரிற் கீழ்விழும்படி, எரி கணை - நெருப்புப்போன்ற கொடிய அம்புகளை, ஏவி- செலுத்தி,- (அதன்பின்), சூழ்ந்த தரணிபர் - (அவனைச்) சுற்றிநின்ற அரசர்களும், எதிர்ந்த வேந்தர்- (தன்னை) எதிர்த்த அவ்வரசர்களின், கரி குலம் -*

*யானைக்கூட்டங்களும், இவுளி - குதிரைகளும், திண் தேர் - வலிய தேர்களும், மடிய - அழியும்படி, வெம் கணைகள் - கொடிய அம்புகளை, தொட்டான் - பிரயோகித்தான்; ( எ -று.)*

*அரி -ஹரி: (யானைமுதலிய பெரிய விலங்குகளையும்) அரிப்ப தென்று பொருள். 'வெருக்கொள்பேரரவமன்னான்' எனத் தோல்வியுறுந் துரியோதனனைக்குறித்ததாகவுமாம். தரணிபர் - பூமியையாள்பவர். ஏவித்தொட்டான் என இயையும்; ஏவிச் சூழ்ந்த என இயைத்து உரைப்பினுமாம். **பி -ம்:** போரரவம். (12)*

### *13.-துரியோதனன் புறங்கொடுப்பதுகண்டு சல்லியன்வந்து வீமனையெதிர்த்தல்.*

***பல்லியமுழங்கமன்னர்படப்படப்பரித்தேரோடும்***
***வில்லியறானைவேந்தன்வென்னிடும்விரைவுகாணாச்***
***சொல்லியவிற்கைவாயுசுதனுடனுருமேறென்னச்***
***சல்லியன்முனைந்துவீரசாயகமேவினானே.***

*(இ -ள்.) பல் -அநேகமான, இயம் - வாத்தியங்கள், முழங்க - ஆரவாரிக்க, (போருக்குவந்து அப்போரில்), மன்னர் பட பட - (தன்னுடன்வந்த) அரசர்கள் மிகுதியாக அழிய, வில் இயல் தானை வேந்தன் - விற்கள் பொருந்திய சேனையையுடைய துரியோதனன், பரி தோரோடுஉம்- குதிரைகள் பூண்ட தேருடனே வென் இடும் -(வீமனுக்குப் ) புறங்கொடுக்கிற, விரைவு - வேகத்தை, காணாபார்த்து, சல்லியன்-, உரும் ஏறு என்ன முனைந்து - பேரிடிபோல உக்கிரங்கொண்டுவந்து, சொல்லிய வில் கை வாயு சுதனுடன் - கீழ்க்கூறின வில்லையேந்திய கையையுடைய வாயுகுமாரனான வீமனை, வீரசாயகம் ஏவினான் - வலிய அம்புகளைத் தொடுத்தான்; ( எ - று.)*

*பல் இயம் - கொட்டுவனவும் ஊதுவனவும் ஆகிய தோற்கருவி துளைக்கருவி கஞ்சக்கருவி நரப்புக்கருவி எனப்படும் அநேகவாத்தியங்களைக் காட்டும் பொதுச்சொல்லாதலால்,'முழங்க' எனப் பொதுவினை கொடுத்தார். சல்லியன் - (பகைவர்க்கு) அம்பு நுனி போல் (வருத்தஞ்செய்) பவன் என்பது பற்றிய காரணப்பெயர்;*

*சல்யம - அம்புமுனை. இவன், மத்திரதேசத்து அரசன்; பாண்டு மகாராசனது இரண்டாம் மனைவியாகிய மாத்திரிக்கு உடன் பிறந்தவனாதலால், நகுலசகதேவர்க்கு மாமனாவன். எய்பவனது பராக்கிரமத்தை அம்பின்மே லேற்றி, 'வீரசாயகம்' என்றது. வாயுஸுதன், சல்யன், வீரஸாயகம்- வடசொற்கள். சொல்லிய - (சிறந்தவனென்று) சொல்லப்பட்ட எனினுமாம்.*

*தருமபுத்திரன் துரியோதனனை யெதிர்த்துத் தாக்கி நாகபாசத்தாற்கட்டிவைக்க, துரோணன் வந்து கருடாஸ்திரத்தால் அந்நாகபாசத்தை விடுவித்துத் துரியோதனனை மீட்டுக்கொண்டு சென்றதாகப் பெருந்தேவனார் கூறியுள்ளார். (13)*

### *14.- சல்லியனைக் குறுக்கிட்டு நகுலன் எதிர்த்தல்.*

***தம்முனோடுடன்றுவந்தசல்லியகுமாரன்றன்னை***
***எம்முடனெதிர்ப்பையாகிலிமைப்பொழுதிகல்செய்கென்னா***
***வெம்முனைகடந்தபொற்றேர்வெஞ்சிலைநகுலன்றோன்றி***
***அம்முனைகவந்தமாடவவனெடும்போர்செய்தானே.***

*(இ -ள்.) தம் முனோடு - தனது தமையனான வீமனுடன், உடன்று வந்த - எதிர்த்துவந்த, சல்லிய(ன்) குமாரன்தன்னை - சல்லியனாகிய ஆண்மகனை (நோக்கி), 'எம்முடன் எதிர்ப்பை ஆகில்-எம்மோடு எதிர்க்கவல்லையானால், இமை பொழுது இகல் செய்க - ஒரு மாத்திரைப்பொழுது போர்செய்வாக,' என்னா- என்ற சொல்லிக்கொண்டு,- வெம் முனை கடந்த - கொடிய (பல) போரை வென்ற, பொன்*

*தேர் - அழகிய தேரையும், வெம்சிலை - கொடிய வில்லையுமுடைய, நகுலன்-, தோன்றி - எதிர்ப்பட்டு, அ முனை கவந்தம் ஆட - அப்போர்க்களத்தில் தலையற்றஉடற்குறைகள் கூத்தாடும்படி, அவனொடுஉம் போர் செய்தான் - அச்சல்லியனோடும் போரைச்செய்தான்; ( எ-று.)*

*சல்லியன் வீமனை யெதிர்க்கச் செல்லுகையில், நகுலன் வீரவாதங் கூறிக்கொண்டு இடையில் வந்து அவனையெதிர்த்துப் பொருதன னென்பதாம். தம்பியாகிய என்னை வென்றபின்பன்றோ தமையனான வீமனை நீ எதிர்க்கத் தகுதியுடையாய் என்றுகருதி வந்ததுதோன்ற, 'தம்முனோடுடன்று வந்த சல்லியனை' என்றார். சல்லியகுமாரன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. **பி - ம்** : அவனுடனடுபோர்செய்தான். (14)*

### *15.- நகுலனுக்குச் சல்லியன் புறந்தந்துபோதல்.*

***மோகரித்தொன்றிரண்டுமூன்றுநாலைந்தம்பேவிப்
பாகனைச்சிலையைப்பொற்றேர்ப்பதாகையைப்பரியைவீழ்த்தி
ஆகமுற்றுருவவெய்தானருச்சுனனிளவன்மாறாப்
போகமத்திரத்தார்கோவும்புறந்தந்துபோகலுற்றான்.***

*(இ -ள்.) அருச்சுனன் இளவல் - அருச்சுனது தம்பியான நகுலன்,- மோகரித்து - வீராவேசங் கொண்டு, ஒன்று இரண்டு மூன்று நால் ஐந்து அம்பு ஏவி - ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து அம்புகளைத் (தனித்தனி) தொடுத்து, (அவற்றால் முறையே),*

*பாகனை - சாரதியையும், சிலையை- வில்லையும், பொன் தேர் பதாகையை - அழகிய தேரின் கொடியையும், பரியை - (நான்கு) குதிரைகளையும், வீழ்த்தி - அழித்துத்தள்ளி, ஆகம் உற்று உருவ - (அச்சல்லியன்) மார்பில் பொருந்தி ஊடுருவிச்செல்லும்படி, எய்தான் - பிரயோகித்தான்; (அதனால்), மாறா போகம் மத்திரத்தார் கோஉம்- நீங்காத செல்வ அனுபவத்தையுடைய மத்திரதேசத்தார்க்கு அரசனான சல்லியனும், புறம்தந்து போகல் உற்றான்- முதுகுகொடுத்துச் செல்லத்தொடங்கினான்; ( எ -று.)*

*ஒரம்புஏவிப் பாகனையும், இரண்டு அம்புஏவிச் சிலையையும், மூன்று அம்புஏவித் தேர்ப்பதாகையையும், நாலம்புஏவித் தேர்ப்பரியையும் வீழ்த்தி, ஐந்து அம்பு ஆகம்உற்று உருவுமாறு எய்தானென **முறைநிரனிறைப்பொருள் கோளாக** உரைத்தார். மோகரித்து- கோபத்தோடு ஆரவாரித்து என்றுமாம். ஆகம் முற்று உருவ எனப்பிரிந்து - உடம்புமுழுவதுந் துளைக்க எனினுமாம் வில் வித்தையிலும் பராக்கிரமத்திலும் நகுலனுக்கு உள்ள சிறப்பு விளங்க, 'அருச்சுனனிளவல்' என்றார். போகம் - மத்திரத்தார்க்காவது கோவுக்காவது அடைமொழியாக்கொள்ளின் இன்பமனுபவித்தலும், மத்திரத்துக்கு அடைமொழியாக்கொள்ளின் பயிர்விளைவுமாம். போகம், மத்ரம் - வடசொற்கள். (15)*

### *16.- கர்ணனும் விராடனும் பொருதல்.*

***சையமோரிரண்டுதம்மிற்பொருதெனத்தடந்தேருந்தி
வெய்யவன்மகனும்வீரவிராடனுமெதிர்ந்தவேலை
வையகங்கம்பமுற்றுமாசுணநடுங்கமேன்மே
லெய்யும்வெங்கணையால்வானத்தெல்லையுமறைந்ததன்றே.***

*(இ-ள்.) ஓர் இரண்டு சையம் - ஒப்பற்ற இரண்டுமலைகள், தம்மில் பொருது என -தமக்குள் எதிர்த்துப் போர்செய்தாற்போல, தட தேர் உந்தி - பெரிய (தம்தம்)தேரைச் செலுத்தி, வெய்யவன் மகன்உம்- சூரியபுத்திரனான கர்ணனும், வீர வீராடன்உம் - வீரத் தன்மையுடைய விராடராசனும், எதிர்ந்த வேலை- (தம்மில்) எதிரிட்ட பொழுதில்,- வையகம் கம்பம் உற்று - (அவ்வதிர்ச்சியால்) பூமி நடுக்கமடைந்து, மாசுணம் நடுங்க - (அப்பூமியைத் தாங்கும் ஆதிசேஷனாகிய) பெரும்பாம்பும் அசைய, மேல் மேல் எய்யும் வெம் கணையால் - மேன்மேல் இடைவிடாது தொடுக்கிற கொடிய*

*அம்புகளால், வானத்து எல்லைஉம் மறைந்தது - ஆகாயத்தினிடமும் மறைபட்டது; (எ-று.) - அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்: அப்பொழுதே என்றுமாம்.*

*சையம்- ஸஹ்யமென்பதன்விகாரம் : குடகுமலைக்குப் பேராகிய ஸஹ்யமென்ற சிறப்புப்பெயர் மலையென்ற பொதுப்பொருளைத் தந்ததென்க; இனி, சைல மென்னும் வடசொல்லின் விகாரமென்றலும் ஒன்று. மலைகள் - தேருக்காயினும், வீரர்க்காயினும் உவமம். பொருதென- பொருதாலென என எச்சத்திரிபாகவாவது, பொருததென எனத் தொழிற்பெயர் விகாரமாகவாவது கொள்ளத்தக்கது. மேல்மேல் - அடுக்கு, இடைவிடாமை பற்றியது. (16)*

***17.- துருபதனும் பகதத்தனும் வேழப்போர் புரிதல்.***

**துருபதயாகசேனநிருபனுந்தும்பைசூடி**
**வரபகதத்தஎனன்னுமடங்கலேறனையகோவும்**
**ஒருபகன்முழுதுந்தங்களூக்கமுமுரனுந்தேசும்**
**பொருபடைவலியுங்காட்டிப்போதகப்பூசல்செய்தார்.**

*(இ-ள்.) துருபத யாகசேன நிருபன்உம் - துருபதனென்றும் யாகசேனனென்றும் பெயருள்ள (பாஞ்சாலதேசத்து) அரசனும், தும்பை சூடிவரு - தும்பைப்பூமாலையைத் தரித்தவருகிற, பகதத்தன் என்னும்- பகதத்தனென்கிற, மடங்கல் ஏறு அனைய கோஉம் - சிறந்த ஆண் சிங்கத்தை யொத்த அரசனும் ( இவ்விருவரும்), ஒரு பகல் முழுதுஉம் - அவ்வொருநாளைப் பகற்பொழுது முழுவதிலும், தங்கள் - தங்களுடைய, ஊக்கம்உம்- (போரில்) உற்சாகத்தையும், உரன்உம்- (தேக) வலிமையையும், தேசுஉம் - பராக்கிரமத்தையும், பொரு படை வலிஉம்- போர்செய்கிற ஆயுதங்களின் பலத்தையும், காட்டி-(பலரும் அறிய) வெளியிட்டு, போதகம் பூசல் செய்தார் - யானைப்போரைச் செய்தார்கள் ; (எ - று.)*

*துருபதயாகசேனநிருபன் - திரௌபதியின் தந்தை. தும்பை யென்னுஞ் செடியின் பெயர், அதன் பூவினாலாகிய மாலைக்கு இரு மடியாகுபெயர். இப்பூமாலை, போர்செய்வார்க்கு உரியது. பகதத்தன்-(பிராக்ஜ்யோதிஷபுரத்து அரசனும் வராகமூர்த்திக்குப் பூமி தேவியினிடம் பிறந்தவனும் கண்ணனாற் கொல்லப்பட்டவனுமாகிய) நரகாசுரனது மகன். மடங்கல்-(பிடரிமயிர்) மடங்குதலுடைய தென ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி. மடங்கலென்றதே ஆண்சிங்கத்தைக் குறித்தலால், 'ஏறு' என்றது- சிறப்பை உணர்த்தும். உரன்- அறிவுமாம். தேசு- தேஜஸ்.போதகப் பூசல்- யானைமேலிருந்து யானைச் சேனைகளொடு பொருந்திப் போர்செய்தல். போதகம் - பத்துவருஷத்து யானைக்குட்டி; இங்கே யானைமென்னுமாத்திரமாய் நின்றது. 'உரனும்' என்றவிடத்து 'முரணும்' என்றும் பாடம். (17)*

***18.-சிகண்டியின் வீரம்.***

**துன்றுவெங் கழற்காற் சோம தத்தனுஞ் சூழ்ந்து நின்ற**
**வன்றிறல் வேந்தர் தாமும் வாளமர் புறந்தந் தோட**
**அன்றுவீ டுமனை வென்ற வாண்டகை சிகண்டி யென்பான்**
**இன்றுபோர் செய்த வீர மெம்மனோர்க் கியம்ப லாமோ.**

*(இ-ள்.) துன்று- நெருங்கிய, வெம் - பயங்கரமான, கழல்- வீரக்கழலையணிந்த, கால்- காலையுடைய, சோமதத்தனும்-, சூழ்ந்து நின்ற-(அவனுக்கு உதவியாய்ச்) சுற்றிலும் நின்ற, வல் திறல் வேந்தர்தாம்உம் - கொடிய வலிமையுடைய அரசர்களும், வாள் அமர்- வாளினாற்செய்யும்போரில், புறம் தந்து ஓட- முதுகுகாட்டியோடும் படி, அன்று வீடுமனை வென்ற ஆண் தகை சிகண்டி என்பான் - அந்நாளில் [முந்தின பத்தாம்போர்நாளில்] பீஷ்மனைச் சயித்த ஆண்மைக்குணடுடையவனான சிகண்டி யென்பவன், இன்று - இந்*

*நாளில் [பதினோராம்நாளில்], போர் செய்த-, வீரம்- பராக்கிரமம், எம் அனோர்க்கு - எம்மைப்போன்றவர்களுக்கு, இயம்பல் ஆம்ஓ- சொல்லுதல் கூடுமோ? [சொல்லமுடியாது என்றபடி]; (எ-று.)*

*சோமதத்தன் - குருவமிசத்தவனான பிரதீபனுடைய புத்திரர் மூவருள் ஒருவனான பாகிலீகனுக்குப் புதல்வன் : கலிங்கநாட்டரசனென்பாருமுளர்.ஆண்தகை - உயர்திணைப்பெயராதலின், அதன் முன் வலி மிகவில்லை. என்பான் - முதல்வேற்றுமைச் சொல்லுருபு.* ***பி-ம்*** *: ஆண்டகைச்சிகண்டி. செய்த வண்ணம். (18)*

வேறு.

### *19.- அபிமன்யுவும் லட்சண குமாரனும் பொருதல்.*

***தேர்த்திரள் பரித்திரள் கரித்திரள் சேனையின்***
***கோத்திரள் புடைவரக் குடைவரக் கொடிவரப்***
***பார்த்திவன் மதலையும் பார்த்தன்மா மதலையுந்***
***தூர்த்தனர் விசும்பையுந் தொடுத்தன தொடைகளால்.***

*(இ-ள்.) தேர் திரள் - தேர்களின் கூட்டமும், பரி திரள்- குதிரைகளின் கூட்டமும், கரி திரள் - யானைகளின் கூட்டமும், சேனையின் கோ திரள் - சேனையின் சம்பந்தமான அரசர்களின் கூட்டமும், புடை வர - பக்கங்களிற் சூழ்ந்துவரவும், குடை வர - குடைகள் (உடன்) வரவும், கொடி வர - துவசங்கள் (உடன்)வரவும், பார்த்திவன் மதலைஉம் - துரியோதனராசனுக்குப் புத்திரனான லக்ஷணகுமாரனும், பார்த்தன் மா மதலைஉம் - அருச்சுனனுக்குச் சிறந்த புத்திரனானஅபிமந்யுவும், (ஒருவரோடு ஒருவர் எதிர்த்து), தொடுத்தன தொடைகளால் - (தாம்தாம்) பிரயோகித்தனவான அம்புகளால், விசும்பைஉம் தூர்த்தனர் - (பரந்த)ஆகாயத்தையும் நிறைத்தார்கள்; ( எ - று.)*

*அபிமந்யு - அருச்சுனன் தீர்த்தயாத்திரைசென்றபோது அவனுக்குக் கண்ணன் தங்கையான சுபத்திரையினிடம் பிறந்தவன். விசும்பையும், உம் - உயர்வுசிறப்பு; அது - அதன் அளவிறந்தபரப்புடைமையை விளக்கும். புடைவர, குடைவர, கொடிவர என்றவற்றில் எண்ணும்மை தொக்கது, வினைச்செவ்வெண். அக்காலத்து இராசராசனாய்ப் பூமியை அரசாண்டவன் துரியோதனனே யாதலால், அவளை 'பார்த்திவன்' என்றார்.*

இதுமுதல் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் எல்லாச்சீர்களும் விளச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்ட **கலிவிருத்தங்கள்.**

### *20,- நான்குகவிகள் - அவ்விருவரும் பொர, முடிவாக, அபிமன்யு லக்ஷணகுமரனைத்தலைமயிரைப்பிடித்துத் தேரிற்கொண்டு போனமைகூறும்.*

**மொய்கணைபிற்படமுந்துதேருந்தவும்**
**பெய்கணைகணையுடன்பின்னிமுன்வீழவு**
**மெய்கணையபிமனுமிலக்கணகுமரனுங்**
**கைகணைதரநெடுங்கார்முகம்வாங்கினார்.**

*(இ-ள்.) மொய் - நெருங்கிய, கணை - அம்புகளும், பின் பட- (வேகத்தில்) பின்னிடும்படி, முந்து தேர் - சிறந்த (தம்தம்) தேர்,*

*உந்தஉம் -(மிக்க விசையாய்ச்) செலுத்தப்படவும், பெய் கணை - (தம்மில் ஒருவரால்) சொரியப்பட்ட அம்பு, கணையுடன் பின்னி -(மற்றொருவரால் விடப்பட்ட) அம்பொடு சிக்கி, முன் வீழஉம் - எதிரில்*

*விழுந்திடவும்,- எய் கணை - தொடுக்கிற அம்புகளையுடைய [அம்புத்தொடுக்கவல்ல என்றபடி], அபிமன்உம் - அபிமந்யுவும், இலக்கணகுமரன்உம்-லக்ஷணகுமாரனும், கை கணை தர - வலக்கை அம்பு (எடுத்துக்) கொடுக்க, நெடு கார்முகம் வாங்கினார் - நீண்ட (தம்) வில்லை வளைத்துப் போர்செய்தார்கள்; ( எ -று.)*

*முதலடியில், கணை என்பதன் இறுதியில் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அபிமன், இலக்கணகுமரன் - வடசொல் திரிபுகள். அபிமந்யு என்னும் வடமொழிப்பெயர், மிக்ககோபமுடையா னென்னும் பொருளுடையது. இப்பாட்டில் அடிதோறும் ' கணை' என வந்த சொல் ஒருபொருளையே குறித்தலால்,* **சொற்பொருட்பின்வருநிலை. பி - ம்** *: தேருந்தியும். (20)*

***21.- இன்சிலைமதனவேளெனவருங்குமரனவ்***
***வன்சிலைவில்லிதான்மகிழ்வுறுங்குமரனை***
***நன்சிலைநடுவுறாநாணொடுந்துணியவே***
***தன்சிலைகொண்டுவெஞ்சாயகமேவினான்.***

*(இ-ள்.) (அப்பொழுது), இன் - இனிமையான, சிலை-(கரும்பு) வில்லையுடைய, மதனன் வேள் என - மன்மதன்போல, வரும் - வருகிற, குமரன் - லக்ஷணகுமாரன், அ- அந்த, வன் சிலை வில்லி தான் மகிழ்வுஉறும் - வலிய (மேரு) மலையை வில்லாகவுடைய சிவபிரான் மகிழ்ச்சிமிகுதற்குக் காரணமான, குமாரனை - அருச்சுனபுத்திரனான அபிமந்யுவை, நல் சிலை - (அவனது) சிறந்த வில், நாணொடுஉம்- நாணியுடனே, நடு உற துணியஏ - நடுவிலே பொருந்தத் துணி படும்படியாகவே, தன் சிலை கொண்டு - தனதுவில்லினால், வெம் சாயகம் ஏவினான் - கொடிய அம்புகளைச் செலுத்தி யெதிர்த்தான்; ( எ - று.)*

*இன்சிலை - சுவையினிய வில்; எனவே, கரும்பாயிற்று. முருக வேளை விலக்குதற்கு, 'மதனவேள்' என்றார். மதனன் - ஆண் பெண்களை மதமடையச் செய்கிறவன்: வடசொல், லக்ஷணகுமாரனென்பது - அழகிய மைந்தனெனப் பொருள்படுதலால், அப்பெயரை 'மதனவேளெனவருங் குமரன்' எனக் குறித்தார். அக்குமரன் என இயையும். அவ் வன்சிலைவில்லி யென இயைத்தால், அ - உலகறிசுட்டாம். அருச்சுனன்போலவே அபிமன்யுவும் சிறந்த சிவபக்தனாய் அப்பிரானதுதிருவள்ளத்தை உவக்கச்செய்பவ னாதலால், 'வன்சிலை வில்லிதான் மகிழ்வுறுங் குமரன்' என்றார்; அத்தன்மையை இச்சருக்கத்தின் 23- ஆம் கவியிலும், பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்தின் 50- ஆம் கவியிலுங் காண்க. சிவபிரான் மகாமேருமலையை வில்லாகக்கொண்டது, திரிபுரசங்காரகாலத்தி லென அறிக. 'சாயகம்ஏவினான்' என்பது- எதிர்த்தான் என ஒருசொல்மாத்திரமாகி, 'குமாரனை என்றசெயப்படுபொருளுக்கு முடிக்குஞ் சொல்லாம்; இனி, குமரனது சிலை யென உருபுமயக்கமாக உரைப்பினும் அமையும்* **பி-ம்** *: நடுவற. (21)*

***22. அற்றவிற்றுணிகளாலரியையும்பாகையுஞ்***
***செற்றனன் சென்றனன்றேரொடுந்தேருகக்***
***கொற்றவர்நூற்றுவர்க்குரியவக்குமரனைப்***
***பற்றினனுயிரொடும்பாண்டவர்குமரனே.***

*(இ-ள்.) (அதன்பின்), பாண்டவர் குமரன் - பாண்டவர்களுக்கு உரியகுமரானான அபிமன், அற்ற வில் துணிகளால் - (எதிரியின் அம்பால்) அறுபட்ட (தனது) வில்லின் துண்டுகளிரண்டாலும், அரியைஉம் பாகைஉம் செற்றனன்- (பகைவனது தேர்க்) குதிரைகளையும் பாகனையும் அடித்துஅழித்து, தேரொடுஉம் தேர் உக - (தனது) தேரினால் (அவனது) தேர்சிந்தும்படி, சென்றனன்- (தாக்கிச்) சென்று, கொற்றவர் நூற்றுவர்க்கு உரிய அ குமரனை - வெற்றியையுடைய ( துரியோதனாதியராகிய) நூறு அரசர்களுக்கும் உரிய குமாரனான அவ்விலக்கணனை, உயிரொடுஉம் பற்றினன் - உயிரோடு பிடித்துக்கொண்டான் ; (எ-று.)*

*அரி = ஹரி: வடசொல்திரிபு : இப்பலபொருளொருசொல் - இங்கு, குறித்தது. பாகு - பாகனுக்குப் பண்பாகு பெயர். நூற்றுவர் -தொகைக்குறிப்பு. துரியோதனாதியர் நூறு பேருக்கும்*

*இலக்கணனிடத்தும், பாண்டவரைவர்க்கும் அபிமனிடத்தும் அபேதமாகவுள்ள அன்பு தோன்ற 'நூற்றுவர்க்குரிய அக்குமரன்' என்றும், 'பாண்டவர்குமரன் 'என்றுங் குறித்தார். (22)*

***23. வீயினால்வென்றபோர்வில்லியைக்கண்ணுதற்***
***றீயினால்வென்றவன்றிகழ்தருஞ்சிந்தையோன்***
***காயினான்வார்குழல்கைப்படுத்தெதிருறப்***
***போயினானவனொடும்பொன்னெடுந்தேரின்மேல்.***

*(இ -ள்.) வீயினால் - மலரம்புகளால், வென்ற - (உலகமுழுவதையும்) சயித்த, போர் வில்லியை - போரில்வல்ல (கரும்பு) வில்லையுடைய மன்மதனை, நுதல் கண் தீயினால்-(தனது) நெற்றிக்கண்ணின் நெருப்பினால், வென்றவன்- சயித்திட்டவனான பரமசிவன், திகழ்தரும் - விளங்கப்பெற்ற, சிந்தையோன் - மனத்தையுடைய அபிமன், காயினான் - (தன்னைக்) கோபித்து எதிர்த்தவனான இலக்கணனது, வார் குழல் - நீண்ட தலைமயிரை, கை படுத்து - கையிற் பிடித்து, அவனொடுஉம் - அவனுடனே, பொன் நெடு தேரின்மேல் - அழகிய பெரிய (தனது) இரதத்தில், எதிர் உற போயினான் - (முன் வந்தவழிக்கு) எதிராக மீண்டுசெல்பவனானான்; (எ - று.)*

*வீ-மலர். கடவுள் அன்பால் நினைவராது உள்ளக்கமலத்தில் அவர் நினைந்தவடிவோடு விரைந்து சென்று வீற்றிருத்தலால், 'வென்றவன்திகழ்தருஞ் சிந்தையோன்' என்றார். காயினான் என்ற தெரிநிலை வினையாயலணையும்பெயரில், இன் -இறந்தகால இடைநிலை. 'எதிரற' என்ற பாடத்துக்கு - எதிர்ப்பவரில்லாமலென்க. (23)*

***24.- அப்போது அபிமனைச் சயத்திரதன் தகைதல்.***

***முந்துவாளபிமனம்மூரிவிற்குமரனை***
***யுந்துதேர்மீதுகொண்டோடலுமொருபுடைச்***

***சிந்துபூபதிசெயத்திரதன்வெஞ்சினமுற***
***வந்துவெங்குசிலைவாளியிற்றகையவே.***

இதுவும், வருங் கவியும் - குளகம்.

*(இ-ள்.) முந்து - சிறந்த, வாள் - ஆயுதப்பயிற்சியையுடைய, அபிமன்-, மூரி வில் - வலியவில்லையுடைய, அ குமரனை- அவ்விலக்கணனை, உந்து தேர்மீது கொண்டு- செலுத்தப்படுகிற (தனது) தேரின்மேற் பிடித்து வைத்துக்கொண்டு, ஓடலும் -வேகமாகச் செல்லுமளவில்-, - ஒரு புடை - ஒரு பக்கத்திலிருந்து, சிந்து பூபதிசெயத்திரதன் - சிந்துதேசத்தரசனான ஜயத்ரதனென்பவன், வெம் சினம் உற - கடுங்கோபமுண்டாக, வந்து- (எதிரில்) வந்து, வெம் குனி சிலை வாளியின் - கொடிய வளைந்தவில்லினின்று (எய்யப்படும்) அம்புகளால், தகைய - தடுத்துபோர்செய்ய,- (எ - று) -" மன்னவன் றோளுரந் தொலைந்தபின்... தேர்ம(ன்)னர்,.... அமர் செய்தார்" என அடுத்த கவியில் தொடர்ந்து முடியும்.*

*முதலில் அபிமனது வில்லைத் தன்வில்வலியால் துணித்திட்டனனாதலால், 'மூரிவிற்குமரன்' எனப்பட்டான். வாள் - ஆயுதப் பொதுப்பெயராய் நின்றது. ஜயத்ரதன் - துரியோதனாதியருடன் பிறந்தவளான துச்சளையின் கணவன்; சிந்துதேசத்தரச னாதலால், ஸைந்தவனென்றும் இவனுக்கு ஒரு பெயர் வழங்கும். **பி-***
***ம்** : வன் செயமுற. (24)*

***25.- சயத்திரன் வலிதொலைய, பிறகு கர்ணன் முதலியபலர் அபிமனொருவனை வளைதல்.***

***மடங்கலைவளைவதோர்சிலம்பிநூல்வலையெனத்***
***தொடங்கியமன்னவன்றோளுரந்தொலைந்தபின்***

**திடங்கொடோளங்கர்கோன்முதலியதேர்மன**
**ரடங்கவந்தபிமனாமொருவனோடமர்செய்தார்.**

*(இ-ள்.) மடங்கலை - ஆண்சிங்கத்தை, வளைவது - சூழந்து அகப்படுத்துவதான, ஓர் - ஒரு, சிலம்பி நூல் வலை என - சிலந்தி யென்னும் பூச்சியின் நூலினாலாகிய வலைபோல, தொடங்கிய - (அபிமனை வளைந்துகொள்ளத்) தொடங்கின, மன்னவன் - சயத்திரதராசன், தோள் உரம் தொலைந்த பின் - (அவ்வபிமனாயுதங்களால் தன்)தோள்வலிமை அழிந்த பின்பு, - திடம் கொள் வலிமையைக்கொண்ட, தோள் - தோள்களையுடைய, அங்கர் கோன் முதலிய - அங்கதேசத்தார்க்கு அரசனான கர்ணன் முதலான, தேர் ம(ன்)னர்- இரதாதிபதிகளான அரசர்கள், அடங்க - எல்லோரும், வந்து - (எதிர்த்து) வந்து, அபிமன் ஆம் ஒருவனோடு - அபிமந்யுவாகிய ஒருத்தனுடனே, அமர் செய்தார் - போர் செய்தார்கள்*

*சயத்திரதனுக்கும் அபிமந்யுவுக்கும் விளைந்த மகாயுத்தத்தில் தேருஞ் சிலையும் அழிப்புண்ட அபிமன், கதாபாணியாய்ப் பாய்ந்து புடைத்துச் சயத்திரனை முடிபிடித்து இழுத்துத் தேரினின்று கீழ்விழத் தள்ளினா னென்று பாரதவெண்பாவிற் கூறியுள்ளது. மடங்கலை வளைவதோர் சிலம்பி நூல்வலை -* ***இல்பொருளு வமை;***

*1சைந்தவனது முயற்சி சிறிதும் பயன்படாமையின், இவ்வுவமை கூறினார். தோளுரம் - புஜபலம். திடம்-த்ருடம் என்னும் வட சொல்லின் திரிபு. பரமசிவனது நெற்றிக்கண் நெருப்புக்கு இரையாகி எரிபட்ட மன்மதனது அங்கம் [உடம்பு] விழுந்த இடத்துக்கு, அக்காரணத்தால் 'அங்கதேசம்' என்ற பெயர். (25)*

*26.- எதிர்த்துவந்தவர்களை அபிமன் முதுகுகொடுத்தோடச் செய்தல்.*

**வந்தவர்வந்தவர்வாணுதனிலைதொறுஞ்**
**சிந்துரத்தூளியாற்றிலகமிட்டனனெனக்**
**கொந்துறுகணைமுனைக்குருதிநீர்மல்கவே**
**வெந்திறல்வில்லின்வென்கண்டனன்வீரனே.**

*(இ -ள்.) வந்தவர் வந்தவர் - (அங்ஙனம் தன்னை) மேன்மேல் எதிர்த்துவந்த அரசர்களது, வாள் நுதல் நிலை தொறுஉம் - பிரகாசமான நெற்றியினிடந்தோறும், சிந்துரம் தூளியால் திலகம் இட்டனன் என - சிந்துரச்செம்பொடியால் திலகமிட்டவன்போல், கொந்து உறு கணை முனை - குத்துதல் பொருந்திய அம்புகளின் நுனியால், குருதி நீர் மல்க - இரத்தப்பெருக்கு நிறைய (ச்செய்து), வீரன்- அபிமன், (அவர்களையெல்லாம்), வெம் திறல் வில்லின் - கொடிய வலிமையுடைய விற்போரால், வென் கண்டனன் - முதுகு கொடுக்கச்செய்தான்; (எ -று.)*

*வந்தவர் வந்தவர் - அடுக்க, மிகுதிகாட்டும். சிறந்த இலக்காதலின், நெற்றி கூறப்பட்டது; மேல் 28-ஆங் கவியில் முகங் கூறுவதுங் காண்க. கொந்து - முதனிலைத்தொழிற்பெயர். 'கொத்து' என்பதன்மெலித்தலெனக் கொண்டால், கொந்துறு- திரட்சிபொருந்திய என்க.* ***பி - ம்*** *: இட்டனரென. (26)*

*27.- அப்போது சல்லியன்வந்து அபிமனை முன்வளைதல்.*

**சென்றதேர்யாவையுந்தன்னொருதேரினால்**
**வென்றுமாமன்னவன்மகனையுமீதுகொண்**
**டன்றுபோம்வெஞ்சிலையாண்மைகண்டபிமனை**
**வன்றிறற்சல்லியன்வந்துமுன்வளையவே.**

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ-ள்.) (இவ்வாறு அபிமன்), சென்ற தேர் யாவைஉம் - (எதிர்த்து) வந்த தேர்களெல்லாவற்றையும், தன் ஒரு தேரினால் - தனது ஒரு தேரினாலே, வென்று - சயித்து, மா மன்னவன் மகனைஉம் - பெரிய துரியோதனராசனது குமாரனான இலக்கணனையும், மீது கொண்டு - (அத்தேரின்) மேல் வைத்துக்கொன்டு, அன்று - அப்பொழுது, போம்-(மீண்டு) சென்ற, வெம் சிலை ஆண்மை - கொடிய வில்லின் திறத்தை, கண்டு - பார்த்து, வல் திறல் சல்லியன் - கொடிய வலிமையையுடைய சல்லியன், வந்து-, அபிமனை-, முன் வளைய - எதிரில் வளைந்துகொள்ள,- ( எ-று.)"விசயன்மதலை ... அடைசினான்" என அடுத்த கவியோடு முடியும்.*

*அபிமன் தான் அதிரத னாதலால், ஒருவனாகவே தன் தேர் குதிரை சாரதிகளுக்கு அழிவுவராமறக்காத்துப் பற்பலதேர்வீரரோடு பொருதன னென்பார், அதனை உபசாரவழக்காகத் தேரின்மேலேற்றி 'சென்றதேர்யாவையுந் தன்னொருதேரினால் வென்று' என்றார். ஆண்மை - பராக்கிரமம். (27)*

### *28.- அபிமன் சல்லியன்மீது அம்புசெலுத்துதல்.*

***சித்திரபானுவிற்சீறிமுற்செல்லுமம்***
***மத்திரராசனைவருகநீவருகவென்***
***றத்திரநாலிரண்டவன்முகத்தடைசினான்***
***மித்திரர்செல்வமாம்விசயன்மாமதலையே.***

*(இ-ள்.) சித்திரபானுவின் - (இருளையழிக்கிற) சூரியன் போல, (விளக்கமுடையனாய்), சீறி முன் செல்லும் - கோபித்து எதிரில் வருகிற, அ மத்திர ராசனை - அந்த மத்திரதேசத்தரசனான சல்லியனை, மித்திரர் செல்வம் ஆம் விசயன் மா மதலை - நண்பர்க்குச் செல்வத்தையொத்த அருச்சுனனது சிறந்த குமாரனான அபிமன், நீ வருக வருக என்று - 'நீ வருவாயாக வருவாயாக' என்று (ஆதரந்தோன்ற) அழைத்து, அத்திரம் நால் இரண்ட - எட்டு அம்புகளை, அவன் முகத்து அடைசினான் அச்சல்லியனது முகத்திற்செலுத்தினான்; (எ -று.)*

*சித்ர **பா** நு வென்னும் வடமொழிப்பெயர் - (ஆச்சரியகரமான) கிரணங்களை யுடைவ னென்று பொருள்படும்: இச்சொல், அக்கினியையும் காட்டும். வருகவருக - அடுக்கு, போரிலுள்ள உற்சாகத்தோடு விரைவையுங் காட்டும், நாலிரண்டு - சில என்றமாத்திரம்: "நஞ்சீயர்செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு" என்ற விடத்துப்போல. செல்வம்போலச் சமயத்தில் சினேகிதர்களுக்குப் பலவாறு உதவுபவ னென்பார், 'மித்திரர் செல்வமாம்' என்றார்; இது - விசயனுக்காயினும், அவன் மதலைக்காயினும் அடைமொழியாம். மித்ரர் என்னும் வடசொல்லுக்கு - அளவறிந்துகாப்பவரென்று பொருள். (28)*

### *29.- பின்னும் பாகனை அபிமன் வேலினால் மாய்க்க, சல்லியன் கதையுடன்தேரினின்றிழிதல்.*

***தோளிரண்டினுநடுத்துளைபடப்பாகன்மேன்***
***மீளவுங்கொடியதோர்வீரவேலேவினான்***
***நீளவெங்கதையுடனீள்வரையிழிதரும்***
***யாளிபோற்சல்லியனிரதம்விட்டிழியவே.***

இதுவும், மேற்கவியும் குளகம்.

*(இ -ள்.) தோள் இரண்டின்உம் - (அச்சல்லியனது) இரண்டு தோள்களிலும், நடு துளை பட - நடுவில் துவாரமுண்டாம்படி, ( இரண்டு அம்பு செலுத்தி), மீளஉம் - பின்பு, பாகன்மேல் - (அச்சல்லியனது) சாரதியின்மேல், கொடியது ஓர் வீரம் வேல்- கொடுமையையுடையதும் பராக்கிரமத்துக்கு உரியதுமான ஒரு வேலாயுதத்தை, ஏவினான் - (அபிமன்) எறிந்தான் ; (அதனால் அப்பாகன் இறக்கவே*

*தேர் செலுத்துபவரில்லாமையால்), சல்லியன்-, நீளம் வெம் கதையுடன் - நீட்சியையுடைய கொடிய கதாயுதத்துடனே, நீள்*

*வரை இழிதரும் யாளி போல்- உயர்ந்த மலையினின்று இறங்குகிற யாளிபோல, இரதம் விட்டு இழிய - தேரை விட்டு இறங்க,- (எ - று.)-" அவன் வருதலும், அணிலன்மாமதலை மொத்தினான்" என அடுத்த கவியில் முடியும்.*

*'மீளவும்' என்றதனால் 'அம்புசெலுத்தி' என்பது வருவிக்கப்பட்டது. இனி, இப்பாட்டை அடுத்த கவியோடு தொடர்வ தென்னாமல், சல்லியன் நீளவெங்கதையுடன் நீள்வரையிழிதரும் யாளி போல் இரதம்விட்டு இழியுமாறு, (அபிமன்), தோளிரண்டிலும் நடுத் துளைபடப் பாகன்மேல் மீளவும் கொடியதோர் வீரவேலவினான் என இயைத்துப் பொருள்கூறி முடிக்கவுமாம். (29)*

***30.- அதுகண்டு வீமன் சல்லியனைத் தரையிற் சாயக் கதைகொண்டு மொத்துதல்.***

***வன்புடனபிமன்மேன்மற்றவன்வருதலும்***
***அன்புடன்கண்டுபேரனிலன்மாமதலைபோய்***
***என்புடன்புயநெரிந்தினமணிமகுடமு***
***முன்புடன்சாயவேதண்டினான்மொத்தினான்***

*(இ -ள்.) (இங்ஙனம் தேரினின்று இறங்கி), அவன்- அச்சல்லியன், வன்புடன் - கொடுமையுடன், அபிமன்மேல்-, வருதலும் - வந்தவளவிலே, பேர் அணிலன் மா மதலை - பெருமையையுடையவாயுவின் சிறந்தகுமாரனான வீமன், கண்டு (அவன்வருதலைப்) பார்த்து, அன்புடன்- (அபிமனிடத்து) அன்போடு, போய் - (அச்சல்லியனை யெதிர்த்துச்) சென்று,- என்புடன் புயம் நெரிந்து - (அவனது) எலும்போடு தோள்களும் நொருங்கி, இனம் மணி மகுடம்உம் சாய- பலவகைப்பட்ட இரத்தினங்களைப் பதித்த (அவனது) கிரீடமும் சரியும்படி, முன்புடன் - வலிமையோடு, தண்டினால் மொத்தினான் - (தனது சத்துருகாதினியென்னும்) கதாயுதத்தால் அடித்தான்; (எ - று.)*

*முன்பு உடன் மொத்தினான் எனப்பிரித்து, அவனை அபிமன் அடிப்பதற்குமுன்பு விரைவில் தான் அடித்தானென்றலும் ஒன்று. மற்று- அசை ; மற்றவன் என எடுத்து, எதிரியான அவனெனினுமாம். வாயுவுக்குப் பெருமை - எல்லாச் சரப்பொருள்களுக்கும் பிராணரூபமாயிருத்தல். (30)*

***31.-தனக்கு இழுக்கென்று அபிமன்யு அயர்வுறுகையில், இலக்கணகுமாரன் தப்பியோடித் தன்தேரி லேறுதல்.***

***தலக்கணேசல்லியன்வீழ்தலுந்தந்தையோ***
***டலக்கணுற்றடியனேனாண்மையென்னாமெனக்***
***குலக்கணியானவிற்குமரனின்றயர்தலும்***
***இலக்கணகுமரனுந்தனதுதேரேறினான்.***

*(இ -ள்.) (இப்படி வீமனால் மொத்தப்பட்டு), சல்லியன்-, தலக்கண்ஏ-தரையிலே, வீழ்தலும் - விழுந்தவளவில், குலக்கு அணி ஆன வில் குமரன் - (பாண்டவரின்) குலத்துக்கு ஓர் அலங்காரமான வில்வித்தையில் வல்ல அபிமன், அலக்கண் உற்று - (தன்னை எதிர்த்துவந்த சல்லியனைத்தான் வெல்லுமுன் வீமன் இடையில் வந்த வென்றதற்கு) வருத்தமடைந்து, தந்தையோடு - (தன்பெரிய)*

*தந்தையான அவ்வீமனோடு, அடியனேன் ஆண்மை என் ஆம் என - '(நீ இவ்வாறுசெய்தால்) எனது பராக்கிரமம் யாதுபயன்படுவதாம்?' என்று பேசி, நின்று அயர்தலும் - (சிறிது) சோர்ந்துநின்ற வளவில், இலக்கணகுமரனும் -, தனது தேர் ஏறினான் - (இதுவே சமயமென்று அவன்கையினின்று தப்பியோடித்) தனது தேர்மேல் ஏறிக்கொண்டான்; ( எ - று.)*

*அபிமன் சுத்தவீர னாதலால், வீமன் இடையிற்புகுந்து தன் பகைவனை வென்றதற்கு வருந்தினான். தனது வலிமையாற்றல்களாலும் வில்லின்திறத்தாலும், தான்பிறந்த குலத்துக்கு விளக்க முண்டாக்குபவனென்பார், 'குலக்கணியான விற்குமரன்'என்றார். குலம் கணி எனப் பிரித்து, தன்குலப்பெருமையை மதிப்பவனென்றுபொருள் கொள்ளுதலு மொன்று. குலத்துக்கு என்பது - குலக்கு என அத்துச்சாரியைதொக்கது: செய்யுள்விகாரம். (31)*

*32.- கிருதவன்மா சல்லியனைத் தன்தேரின்மே லேற்றி. இலக்கணகுமாரனோடு அச்சல்லியனையும் உய்யக்கொண்டுபோதல்.*

***தரையில்வீழ்சல்லின்யறன்னையுந்தனதுபே***
***ரிரதமேலேற்றியவ்விலக்கணகுமரனாங்***
***குரிசிலையன்றுயக்கொண்டுபோயினனரோ***
***கிருதவன்மாவெனுங்கிளர்முடிநிருபனே.***

*(இ -ள்.) கிருதவன்மா எனும் - கிருதவர்மா வென்கிற, கிளர் முடி நிருபன் - விளங்குகிற கிரீடத்தையுடைய அரசன், தரையில் வீழ் சல்லியன்தன்னைஉம் - பூமியில் விழுந்த சல்லியனையும், தனது பேர் இரதமேல் ஏற்றி- தனது பெரிய தேரின் மேல் ஏற்றிக் கொண்டு, அ இலக்கணகுமரன் ஆம் குரிசிலை - அந்த லக்ஷணகுமாரனாகிய வீரனையும், அன்று - அப்பொழுது, உய கொண்டு - தப்பிப் பிழைக்கும்படி (தன்னுடன் கூட்டிக்) கொண்டு, போயினான்- (அப்பால்) சென்றனன்: (எ - று.) --அரோ - ஈற்றசை; செய்யுளினிறுதியில் வருவதுமாத்திர மன்றி, அடியினிறுதியிலும், வாக்கியத்தினிறுதியிலும்வரும் இடைச்சொல்லும் பொருள்தராதாயின் ஈற்றசையெனவே படும்.*

*கிருதவன்மா- துரியோதனன் கண்ணனைப் படைத்துணையழைக்கப்போனபொழுது, அவ்வெம்பிரானால் அவனுக்குத் துணையாகத் தந்த யாதவசேனைக்குத் தலைவனாக அனுப்பப்பட்டவன், இவன்; யதுகுலத்தில் இருதிகனென்பவனது குமாரன். (32)*

*33.-தருமபுத்திரன்பக்கத்து அரசர்வென்றதனால் துரியோதனன் தன்சேனையோடு திரும்புதல்.*

**பொரும்பொரு முனைதொறும் புண்ணியன் சேனையிற்**
**பெரும்பெருந் தரணிபர் பேறுடன் வேறலால்**
**அரும்பெருங் கொடியின்மே லரவவே றெழுதினான்**
**திரும்பினன் பல்வகைச் சேனையுந் தானுமே.**

*(இ -ள்.) (இவ்வாறு அந்நாளில்), பொரும் பொரும் முனை தொறும் - போர்செய்யுமிடந்தோறும், புண்ணியன் சேனையில் பெரு*

*பெரு தரணிபர்- நல்வினையையுடைய தருமபுத்திரனது சேனையிலுள்ள பெரியபெரிய அரசர். பேறுடன் வேறலால் - பாக்கியத்தோடு வெல்லுதலால்,- அரு பெரு கொடியின்மேல் அரவம் ஏறு எழுதினான் - அரிய பெரிய துவசத்தின்மேற் பெரும்பாம்பின்வடிவ மெழுதப்பெற்றுள்ள துரியோதனன், பல்வகை சேனைஉம் தான்உம் திரும்பினன்- பலவகைச்சேனைகளுந் தானுமாக (ப் படைவீட்டுக்கு) மீண்டான்; (எ-று.) - பலவகைச்சேனையுந் தானும் திரும்பினன் - திணைவிரவியெண்ணிச் சிறப்பினால் ஆண்பால்முடிபு ஏற்றது; [நன். பொது.27.] (33)*

வேறு.

*34.- சூரியாஸ்தமனவருணனை.*

***தண்டே கொண்டு வீமனெனுஞ் சண்ட பவனந் தாக்குதலாற்,***
***றிண்டேரென்னப் பட்டதெல்லாஞ் சிதைகின்***
***றதுகண்டிதயம்வெரீஇப்,***
***பண்டே யுள்ளவோராழித் தேரோ டொளித்துப் பரிகளுடன்,***
***கொண்டே யருக்க னவ்வளவிற்குடபான் முந்நீர் குளித்திட்டான்.***

*(இ-ள்.) வீமன் எனும்-வீமசேனனென்கிற, சண்ட பவனம்- கொடுங்காற்று, தண்டுஏ கொண்டு - (தனது) கதாயுதத்தினாலே, தாக்குதலால்- மோதியடித்ததனால், திண் தேர் என்னப்பட்டது எல்லாம் - வலிய தேரென்று பெயர்கூறப்பட்ட பொருள் யாவும், சிதைகின்றது- (போர்க்களத்தில்) நொருங்கியழிகின்றதை, கண்டு -பார்த்து,- அருக்கன்- சூரியன், இதயம் வெரீஇ - (தனது தேருக்கும் அபாயமுண்டாகுமோவென்று) மனமஞ்சி, அ அளவில் - அச்சமயத்தில், குடபால் முந்நீர் குளித்திட்டான் - மேற்குப்பக்கத்திலுள்ள கடலில் முழுகினான்; ( எ -று.)*

*சூரியன் மண்டலத்தோடு இயல்பாக மறைந்ததற்கு, தனது தேருக்கும் வீமன்கதை விரைவாகத்தாக்குதலால் சிதைவுண்டாகுமோ வென்று அஞ்சியோடி யொளித்ததாகக் கவி காரணங்கற்பித்துப் கூறினமையால்,* ***ஏதுத்தற்குறிப்பேற்றவணி.*** *சூரியனதுதேர் சம்வத்ஸ்ரசொரூபமான ஒருசக்கரத்தையுடைய தென்றும், அதில் காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்கிற சந்தங்க ளேழுமே குதிரைகளாகப் பூட்டப்பட்டுள்ளன வென்றும் புராணங் கூறுதலால், 'ஓராழித்தேர்' என்றும், 'பரிகள்' என்றுங் கூறினார். சூரியன் தேர் மற்றையதேர்கள்போலன்றி மிகப்பழையதாகவும், ஒருசக்கரத்தையுடையதாகவும் எளிதில் அபாயமடையத்தக்க நிலைமையிலிருந்த தென்பது தோன்ற, 'பண்டேயுள்ளவோராழித்தேர்' என்றது.*

*முந்நீர்- மூன்றாகிய தன்மையை யுடையது: மூன்றுதன்மைகள்- பூமியைப் படைத்தல் காத்தல் அழித்தல் என்பன; நீரினின்று நிலம் பிறந்ததென வேத மோதுதலால் படைத்தலும், நீரின்றி உலகம் பிழையா தாதலால் காத்தலும், இறுதியில்நீரினால் மூடப்பட்டு*

*உலக மழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்களும் கடலுக்கு உரியனவாயின. வீமனை வாயுவாக* ***உருவகப்*** *படுத்தினார்; இது- வீமனது வலிமை மிகுதியை விளக்கும். சண்டபவநம் - வடமொழித்தொடர். என்னப்பட்டது எல்லாம்- ஒருமைப்பன்மை மயக்கம். வெரீஇ - சொல்லிசையளபெடை. பண்டு - ஏழாம்வேற்றுமையிடப் பொருளுணரநின்ற பழமைகுறிக்கும் இடைச்சொல்.*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பன்னிரண்டுகவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட* ***அறுசீராசிரியவிருத்தங்கள்.***
*(34)*

*35.- பாண்டவர் பக்கத்தார் யாவரும் படைவீட்டில் இரவு இனிது கண் துயிலல்.*

***சென்றநிருபர்புறநாணத்திண்டோளபிமன்முதலான***
***வென்றிநிருபர்குழூஉக்கொண்டுவிறலார்சேனைவேந்தருடன்***
***மன்றல்கமழுந்துழாய்மவுலிமாலுந்தாமும்பாடிமனை***
***யொன்றியினிதிற்கண்டுயின்றாருரனுந்திறலுமுடையோரே.***

*(இ-ள்.) உரன்உம் - பலத்தையும், திறல்உம் - பராக்கிரமத்தையும், உடையோர்-உடையவர்களான, திண் தோள் அபிமன் முதல் ஆன - வலிய தோள்களையுடையஅபிமந்யு முதலிய, வென்றி நிருபர் - வெற்றியையுடைய அரசர்கள், சென்ற நிருபர்புறம் நாண-(எதிர்த்து) வந்த பகையரசர்கள் புறங்கொடுத்து வெட்கமடைய,-குழூஉ கொண்டு- தாம் ஒருதிரளாகக்கூடி, விறல் ஆர் சேனை வேந்தருடன் - வெற்றிமிக்க சேனைகளோடும் மற்றையரசர்களோடும், மன்றல் கமழும் துழாய் மவுலிதாம்உம் - வாசனைவீசுகிற திருத்துழாய்மாலையைச்சூடிய திருமுடியையுடையகண்ணபிரானும் தாங்களுமாக, பாடி மனை ஒன்றி- படைவீட்டை யடைந்து, (அங்கு),இனிதின் கண்துயின்றார் - மகிழ்ச்சியோடு கண்மூடித் தூங்கினார்கள்; (எ - று.)*

*சென்ற நிருபர் புறம் நாண - துரியோதனனுடன் சென்ற அரசர்கள் மற்றொருபுறத்தில் நாணமடைய என்றுங் கொள்ளலாம். மௌலி என்னும் வடசொல், மவுலி யெனப் போலிபெற்றது.*
*(35)*

### *36.- துரியோதனன் பாதிராத்திரியளவும் உடன்சேர்ந்தாரோடு இலக்கணகுமாரன் அபிமனிடம் அகப்பட்ட தாழ்வுக்கிரங்கி உளம் நோதல்*

**பானாளளவுந்துயிலாமற்பாந்தட்டுவசன்றனக்குயிர்நண்**
**பானார்பலரும்வாள்வேந்தரமைச்சர்பலருமிளையோருஞ்**
**சேனாபதியுஞ்சூழவிருந்தபிமன்கையிற்றிருமைந்தன்**
**தானாடமரிலகப்பட்டதாழ்வுக்கிரங்கியுளநொந்தார்.**

*(இ-ள்.) பாந்தள் துவசன் தனக்கு - பாம்புக்கொடியையுடைய துரியோதனனுக்கு, உயிர் நண்பு ஆனார் - பிராணசினேகிதரான, வாள் வேந்தர் பலர்உம் - ஆயுதப்பயிற்சியில்வல்ல அரசர்கள் அநேகரும், அமைச்சர் பலர்உம் - (அவனது) மந்திரிமார் எல்லோரும், இளையோர்உம் - (அவன்) தம்பிமார்களும், சேனாபதிஉம் - சேனைத்தலைவனான துரோணனும், (ஆகிய எல்லோரும்), பால் நாள் அளவுஉம் துயிலாமல் - பாதிராத்திரிவரையுலுந் தூக்கங்கொள்ளாமல், சூழ இருந்து- (அவனைச்) சுற்றிலு மிருந்துகொண்டு,- அபிமன் கையில் - அபிமனது கையிலே, திரு மைந்தன் - லக்ஷணகுமாரன், தான் -, ஆடு அமரில் - செய்த போரில், அகப்பட்ட - அகப்பட்டுக்கொண்ட, தாழ்வுக்கு - அவமானத்துக்கு, இரங்கி- பச்சாத்தாபப் பட்டு, உளம்நொந்தார் - மனம் வருந்தினார்கள்; (எ - று.)*

*பால் - பகுதி, பாதி. நாள் - சிறப்பாய், இங்கே, இரவைக்குறித்தது. உயிர் நண்பு- உயிர்போன்ற நண்பு; உவமைத்தொகை. திருமைந்தன் - அழகிய மைந்தன்; இது -இலக்கணகுமாரனென்பதற்கு ஒருபரியாயநாமமாக நிற்கும். யாவரும் உளம் நொந்தார்- உள மென்னுஞ் சினைப்பெயராகிய அஃறிணையெழுவாய் யாவரும் என்னும்உயர்திணையெழுவாயின் பயனிலையாகிய நொந்தார் என்னும் உயர்திணைவினையைக் கொண்டு முடிதலால் வழுவாகி, தொடர்புண்டாயிருத்தல்பற்றிச் சார்த்திமுடித்தலால், **வழுவமைதி** யாயிற்று. 'நொந்தான்' என்ற பாடத்துக்கு, 'பாந்தட்டுவசன்' - எழுவாய். (36)*

### *37.- துரியோதனன் துரோணனைநோக்கி, 'நாளைத்தருமனை யகப்படுத்தினால்தான் செற்றந்தீரும்' எனல்*

**தனுவேதத்தின்கேள்விக்குஞ்சதுர்வேதத்தின்வேள்விக்குஞ்**
**செனுவேயுன்னையல்லதினிச்செய்துமுடிக்கவல்லவர்யார்**
**மனுவேயனையுதிட்டிரனைநாளைச்சமரில்மற்றிதற்கோ**
**ரனுவேயென்னவகப்படுத்தினல்லாற்செற்றமறாதென்றான்.**

*( இ -ள்.) (அப்பொழுது துரியோதனன், துரோணனை நோக்கி), 'தனுவேதத்தின் கேள்விக்குஉம் - வில்வித்தையின் உபதேசத்துக்கும், சதுர் வேதத்தின் வேள்விக்குஉம்- நான்குவேதங்களிற் கூறியபடி செய்யும் யாகங்களுக்கும், செனுவே - இடமாகவுள்ளவனே! (இப்பொழுது நான் சொல்லுந்*

*தொழிலை), உன்னை அல்லது இனி செய்து முடிக்க வல்லவர் யார் - உன்னை யல்லாமல் செய்து முடிக்க வல்லமையுடையவர் வேறு யாவர் உளர்? [எவருமில்லை]; (அத்தொழில் யாதெனில்,- ), நாளை சமரில் - நாளைக்கு நிகழும் போரில், இதற்கு ஓர் அனுஏ என்ன- இலக்கணனை அபிமன் அகப்படுத்திய) இவ்வவமானத்துக்கு ஓர் இனமாக, மனுஏ அனைய உதிட்டிரனை மனு சக்கரவர்த்தியையொத்த தருமபுத்திரனை, அகப்படுத்தின் அல்லால்- ( உயிரோடு) பிடித்திட்டாலல்லாமல், செற்றம் அறாது-(என்னுடைய) இப்பகைமை தணியாது,' என்றான்-;*

*மனு - நல்லொழுக்கத்திலேயே தாம் ஒழுகுதலோடு எல்லோரையும் அங்ஙனம் நடப்பித்து எல்லாநற்குணங்களோடுங் கூடிப் பிரசித்திபெற்றவனாதலால், தருமனுக்கு உவமை கூறப்பட்டான். ஏ - உயர்வுசிறப்பு. சதுர்வேதம் - இருக்கு, யசுர், சாமம், அதர்வனம் என்பன. செனு - ஜநுஷ் என்னும் வடசொல்லின் திரிபு; முதல் அகரம் எகரமானது, மோனைப்பொருத்ததிற்காக; ஏகாரம் மிக்கது - விளியுருபு. மற்று - அசை ; வினைமாற்றுமாம். அநு என்பது -*

*பின்பு என்னும் பொருள்தரும் வடமொழியிடைச்சொல்: அநுவாதம், அநுகமநம், அநுசுருதி முதலியவற்றிற் காண்க; இது - இங்கே, முன் நடந்ததை யொப்பப் பின் நடப்பது என்ற பொருளை உணர்த்தி, பழிக்குப்பழி வாங்குதலென்ற கருத்தை விளக்கும். ஏ- தேற்றம். செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது: வைரம் ; செறு- பகுதி.*

*38.- இதுவும், மேற்கவியும் குளகம் - துரோணன்கூறும் உத்தரம்.*

***பெற்றோன்றனினுஞ்சதமடங்குவலியோன்வீமன்பின்னிற்கப்***
***பொற்றோள்விசயன்முன்னிற்கப்பொரும்போர்முனையிற்போருதவி***
***யற்றோர்போலவில்வலியாலறத்தோன்றன்னையகப்படுத்தன்***
***மற்றோர்பிறப்பிற்றெரியாதிப்பிறப்பின்முடிக்கமாட்டேமால்.***

*(இ -ள்.) 'பெற்றோன்தனின்உம்- (தன்னைப்) பெற்றதந்தையான வாயுவினும், சதம் மடங்கு- நூறுபங்கு அதிகமான, வலியோன்- வலிமையுடையனான, வீமன்-, பின் நிற்க - பின்னே (பாதுகாத்து) நிற்கவும், பொன் தோள் விசயன்- அழகியதோள்களையுடைய அருச்சுனன், முன் நிற்க - முன்னே (பாதுகாத்து) நிற்கவும், போர் பொரும் முனையில் - போர்செய்யுமிடத்தில் [யுத்தகளத்தில்], அறத்தோன்தன்னை - தருமங்களை யுடையவனான யுதிட்டிரனை, போர் உதவி அற்றோர் போல - போரில் உதவிசெய்பவரையுடையரல்லாதவரை (அகப்படுத்துதல்) போல, வில் வலியால் அகப்படுத்தல்- வில்லின் வலிமையால் (உயிரோடுபற்றி) வசப்படுத்தலை, மற்று ஓர் பிறப்பில் தெரியாது - மற்றொருசன்மத்தில் (எம்மால் நிறைவேற்ற முடியுமோ முடியாதோ அது) தெரியாது: இ பிறப்பில்-, முடிக்க மாட்டோம்- நிறைவேற்ற வல்லமை யில்லோம்; (எ - று.) - ஆல்- ஈற்றசை; ஆதலாலெனினுமாம்.*

*வாயுவின் வலிமை பிரசித்தம். "பிதுச்சதகுணம் புத்ர:" என்றவாறு அவ்வாயுவினும் மிகப்பலமடங்கு வலியவன் வீமனென்க. (38)*

***39. செவ்வாய்வைக்கும்வலம்புரிக்கைத்திருமால்செம்பொற்றேரூர***
***வெவ்வாய்வாளிவில்விசயன்மெய்ம்மைத்தருமனணிநின்ற***
***அவ்வாயிமைப்போதனுகாமற்காப்பார்சிலருண்டாமாகில்***
***இவ்வாய்நாளையகப்படுத்திதரலாமென்றானெழின்மறையோன்.***

*(இ-ள்.) செவ் வாய் - சிவந்த திருவாய்மலரிலே, வைக்கும் - வைத்து ஊதப்படுகிற, வலம்புரி - (பாஞ்சசந்யமென்னும்) வலம்புரிச்சங்கை யேந்திய, கை - திருக்கையையுடைய, திருமால் - திருமகள் கொழுநனான கண்ணபிரான், செம் பொன் தேர் - சிவந்த பொன்னினாலாகிய தேரை, ஊர( பாகனாய்நின்ற) செலுத்த, வெவ் வாய் வாளி வில் விசயன் - கொடிய நுனியையுடைய அம்புகளையும் வில்லையுமுடைய அருச்சுனன், மெய்ம்மை தருமன் அணி நின்ற அ வாய்- சத்தியத்தையுடைய தருமபுத்திரன் அணிவகுப்பில் நின்ற அவ்விடத்தில், இமை போது- ஒரு*

*மாத்திரைபொழுதாவது, அணுகாமல்- சமீபித்துவரவொட்டாதபடி, காப்பர்--(அவனைத்) தடுப்பவர், சிலர் -(யாராயினும்) சிலர், உண்டு ஆகில் - உள்ளாரானால்,- இ வாய்-*

*இவ்விடத்து [போர்க்களத்தில்], நாளை - நாளைக்கு, அகப்படுத்தி தரல்ஆம்- (தருமபுத்திரனை நான்) பிடித்துக்கொடுத்தல் கூடும்,' என்றான் - என்று (துரியோதனனைநோக்கிச் சபையிற்) கூறினான்: எழில் மறையோன் - அழகிய வேதம்வல்ல துரோணன்; (எ - று.) - 'ஆம்' இரண்டில், முதலது - அசை.*

*அருச்சுனனது வெற்றிக்கு முக்கியகாரணம் கண்ணன் தேர் செலுத்துதலாதலாலும், அக்கண்ணபிரான் தான் சங்கநாதஞ் செய்து அவ்வொலிமாத்திரத்தால் பகைவர்சேனைகள் நடுங்கியொடுங்கும்படி செய்தலாலும், 'செவ்வாய் வைக்கும் வலம்புரிக்கைக் திருமால் தேரூர' என்றான்: தருவேனென்று திண்ணமாகக்கூறாமல் , ஒருகால் அகப்படுத்தல்தொழில் நடக்கலாமென்ற ஐயந்தோன்ற, 'தரலாம்' என்றானென்னலாம். தருமன்-தருமபுத்திரனென்றதன் நாமைகதேசம்; தருமத்தினின்று தவறாதவனென யுதிஷ்டிரனுக்குக் காரணக்குறியுமாம்: 'தந்தையே மைந்தனாகிறான்' என்னும் நூல் வழக்குப்பற்றி, தருமபுத்திரனை 'தருமன்'என்றா ரென்றலும் உண்டு. காத்தல் - தடுத்தல். (39)*

### *40.- திரிகர்த்தராசன்முதலான சஞ்சத்தகவரசர் தருமனுக்கு உதவாதபடி அருச்சுனனை வளைப்பதாக வஞ்சினங் கூறுதல்.*

***திகத்தராசன்முதலாகச்சஞ்சத்தகரிற்சிலமன்னர்***
***உகத்திற்கடையிற்கனல்போல்வாரொருவர்க்கொருவருரைமுந்திச்***
***சகத்துக்கொருவனெனும்விசயன்றம்முற்குதவிசெய்யாமன்***
***மகத்திற்சனிபோல்வளைக்குவம்யாமெனவஞ்சினமும்பலசொன்னார்.***

*(இ-ள்.) (அச்சமயத்தில்), திகத்த ராசன் முதல் ஆக - திரிகர்த்ததேசத்து அரசன் முதலாக, சஞ்சத்தகரில் - சம்சப்தகரிற் சேர்ந்த, உகத்தின் கடையில் கனல் போல்வார் - கல்பாந்தகாலத்தில் (உலகத்தையழிக்கிற) அக்கினிபோலக் கொடியவர்களான, சில மன்னர்- சில அரசர்கள், ஒருவர்க்கு ஒருவர் உரை முந்தி - ஒருத்தரினு மொருத்தர் வார்த்தை முற்பட்டு, 'சகத்துக்கு - உலகத்தில், ஒருவன் எனும் - ஒப்பற்றவனென்று சொல்லப்படுகிற, விசயன் - அருச்சுனன், தம் முற்கு - தமையனான தருமனுக்கு, உதவி செய்யாமல் - (போரில்) துணைசெய்யாதபடி, யாம்- மகத்தில் சனிபோல் - மகநட்சத்திரத்துச் சனிபோல, வளைக்குவம் - (நாளைக்கு அவ்வருச்சனனைத்தடுத்துச்) சூழ்ந்துகொள்வோம்,' என - என்றுசொல்லி, (அதற்கு ஏற்ப), பல வஞ்சினஉம் சொன்னார்- பலசபதங்களையுஞ் சொன்னார்கள்; ( எ -று.) - அவற்றை மேல் மூன்றகவிகளிற் காண்க.*

*த்ரிகர்த்தராஜன் - வடசொல்தொடர்; இவனுக்கு ஸூசர்மா வென்பது பெயர். த்ரிகர்த்த மென்பது- லாஹூர்ஜில்லாக்கருகிலிருப்பதான ஜலந்தர்(Jalandur) என்று வழங்கும் ஊர் என்பர். ( **ஸம்சப்தக** )ராவார் - போர்தொடங்குமுன்னமே பலவகைச்சபதஞ்செய்து பின் அவ்வாறே நடத்திக்காட்டும் வீரர்கள்; இவர்கள் த்ரிகர்த்த ராஜபுத்திரர்களும் அவர்களை யனுசரித்தவர்களுமாகி ஒன்பது*

*கோடித் தொகையினராவரென்று வியாசபாரதம் கூறும். இப் பெயர் நன்றாகச்சபதஞ்செய்பவ ரென்று பொருள்படும். இவர்கள் இவ்வாறே பன்னிரண்டு பதின்மூன்றாநாட்போர்களில் அருச்சுனனை அறைகூவித் தனியே அழைத்துக்கொண்டுபோய் வெகுவாகப் பெரும்போர் செய்வர் . சில- குறிப்புப்பெயரெச்சம். உகம் - யுகமென்னும் வடசொல்லின் விகாரம்; அது - காலத்தின் ஒருபேரெல்லைக்குப்பெயர்: அது- இலக்கணையாய். பலயுகங்கள் கூடிய கற்பத்தையுணர்த்தும்; கற்பம்- **பிரமனது தினம்.** ஒவ்வொருபிரமகற்பத்தின் பகல்முடிவிலும் தீ எழுந்து உலகங்களை எரித்தழிக்கு மென்பது, புராணக்கொள்கை; அது பிரளயகாலாக்கினியெனப்படும். ஒருவர்க்கு - நான்காம்வேற்றுமை, எல்லைப்பொருளில்வந்தது. ஜகத்,மகம், சநி- வடசொற்கள்.*

***மகத்துச்சனி*** *பெருந்தீங்குதருதற்கு உவமையாதலை "மகத்திற்புக்கதோர்சனியெனக்கானாய் மைந்தனே மணியே மணவாளா, வகத்திற்பெண்டுகள் நானென்று சொன்னா லமையேற்போ குருடா வெனத்திரியேன், முகத்திற்கண்ணிழந் தெங்ஙனம்வாழ்கேன் முக்கணா முறையோ மறையோ தீ, யுகைக்குந் தண்கடலோ தம்வந் துலவுமொற்றியூரெனுமூருறைவானே" என்ற சுந்தரமூர்த்திநாயனார் தேவாரத்திலும், "அடையார்தமக்கு, மகத்திற்சனியன்னசந்திரவாணன்" என்ற தஞ்சைவாணன் கோவையிலும் காண்க. மக நட்சத்திரத்திற் பிறந்தவனுக்குச் சனிதிசையில் மரணந்தப்பாதென்று 'நஷத்ரபலம்' என்னுஞ்சோதிடநூலால் தெரிகிறது. அன்றியும், சனி மகத்திற்சஞ்சரிக்கும்பலன் சிலதேசங்களுக்கும் சிலமனிதர்களுக்கும் யானைகளுக்கும் பீடை யென்று நூல்கள் கூறும். மகம்- இருபத்தேழு நட்சத்திரங்களுள், பத்தாவது நட்சத்திரம். இது- இலக்கணையாய், சிங்கராசியையுங் குறிக்கும்: எங்ஙன மெனின்,- இரண்டேகால்நட்சத்திரம் ஒருராசி யென்னும் வரையறைப்படி மகமும் பூரமும் உத்தரத்தில் முதற்பாதமும் சிங்கராசியாதல் காண்க. சிங்கம் சனிக்குப் பகைவீடாதலால், மகத்திற் சனி வருத்துதற்கு உவமை கூறப்பட்ட தென்றலும் ஒன்று; சிங்கம் சனிக்குப் பகைவீடாதலைச் சோதிடநூலால் அறிக. மேலும், சிங்க லக்கினத்துக்குச் சனி பாபகிருகமுமாவன். இன்னும் மகச்சனியன் கொடுமைகளைச் சோதிடம்வல்லார்வாய்க் கேட்டுணர்க. சனி - நவகக்கிரகங்களுள் ஏழாமவன்; சூரியனது மகன். இனி, உத்தர நட்சத்திரத்திற் பிறந்தவன், அருச்சுனன்; அது அவனது பற்குண னென்ற பெயராலும், "***பங்குனிநிறைந்ததிங்க*** ளாதபன்பயின்ற நாளில், வெங்குனிவரிவில்வாகைவிசயனும் பிறந்தான் வென்றிப், பங்குனனென்னுநாமம் பகுதியாற்படைத்திட்டானே" என்ற சம்பவச்சருக்கத்துச் செய்யுளாலும், வடநூலாலும் தெரிகிறது. அவனை அந்நட்சத்திரத்து முதற்பாதத்தில் [சிங்கராசியில்] பிறந்தவனெனக்கொண்டால் அவனுக்குமகத்துச்சனி ஜந்மச்சனியும், மற்றைய பாதங்களில் [கன்னியாராசியில்] பிறந்தவனெனக் கொண்டால் பன்னிரண்டாமிடத்துச் சனியுமாகும்: இரண்டும் பெருந்தீங்குவிளைப்பன. பன்னிரண்டாமிடம் ஜந்மஸ்தாநம் இரண்டாமிடம் இம்மூன்றிலும் சனிநிற்றல், ஏழரைநாட்சனியென்று கொடு*

*மையிற் பிரசித்திபெற்றது. இந்தச்சனி ஸ்தாநப்ரஷ்டம் தநஷயம் மரணம் முதலிய பெருந்தீங்குகளைச் செய்யுமென்பது, நூல்துணிபு. இங்கு, வேறிடத்தில் தனியே அழைத்துப்போய்ச்சூழ்ந்து மிகவருத்துதற்கு ஏற்ற உவமையாம். (40)*

***41.- இதுமுதல் மூன்று கவிகள் - சஞ்சத்தகர்கள் கூறும் வஞ்சினங்கள்.***

**அருளேவடிவுகொண்டனையோனருகங்கமரிலணுகாமல்**
**உருளேரிதத்தருச்சனனையொருநாண்முழுதுந்தகைந்திலமேன்**
**மருளேகொண்டுகுடிவருந்தமனுநூல்குன்றிவழக்கழியப்**
**பொருளேவெஃகுமரசரைப்போற்புகுவேம்யாமுநரகென்றார்.**

*(இ- ள்.) 'அமரில்- போர்க்களத்தில், அங்கு - எதிர்ப்பக்கத்திலே, அருள்ஏ வடிவுகொண்டு அனையோன் அருகு - கருணையே ஒருபுருட வடிவங்கொண்டாற்போன்ற தருமபுத்திரனது சமீபத்தில், அணுகாமல் - சேரமுடியாதபடி, உருள் ஏர் இரதத்து அருச்சுனனை- சக்கரங்கள் (வலிய) அழகிய தேரையுடைய அருச்சுனனை, ஒரு நாள் முழுதுஉம் தகைந்திலம்ஏல்- நாளையொருதினம் முழுவதிலும் (நாங்கள் தடுத்திடோமாயின்,- குடி மருள் கொண்டு வருந்த - (தம் நாட்டுச்) சனங்கள் (இன்னது செய்வதென்று அறியாமல்) திகைப்பையே கொண்டு வருந்தவும், மனு நூல் வழக்கு குன்றி அழிய - மனுதர்ம சாஸ்திரத்தின் நீதி குறைபட்டு அழியவும், பொருளே வெஃகும்- (குடிகளின்) செல்வத்தையே(கவர) விரும்புகிற, அரசரை போல் -கொடுங்கோன் மன்னர்களைப்போல, யாம்உம் நரகு புகுவேம் - நாங்களும்நரகத்திற்சேர்வோம்,' என்றார்- என்று (திரிகர்த்தன் முதலியோர்) சபதஞ்செய்தார்கள்;(எ-று.)*

*தருமச்செய்கைகளுக்கும் மறுமைநற்கதிக்குங் காரணமான கருணையை இயல்பில் மிகுதியாகவுடையனென்பார், 'அருளே வடிவு கொண்டனையோன்' என்றார். பகைவரே இங்ஙனம் தருமனைச் சிறப்பித்துக் கூறின ரென்றது கொண்டு, அவனது நற்குணவமைதியை நன்கு உணர்க. (41)*

*42. மறனிற்சிறந்தபுயவலியால்வரைபோன்றனிலன்மைந்தனெனப்*
*புறனிற்பானைத்தம்முனிடைப்போகாவண்ணந்தகைந்திலமேல்*
*அறனிற்கொண்டதன்மனையாளமளித்தலத்தினழுதிரங்கப்*
*பிறனிற்றேடும்பெரும்பாவிபெறும்பேறெமக்கும்பேறென்றார்.*

*(இ -ள்.) 'அனிலன் மைந்தன் என - வாயுவின் குமாரனென்று சொல்லப்பட்டு, புறன் நிற்பானை- (எப்பொழுதும் தருமன்) பின்னே (பாதுகாவலாய்) நிற்பவனான வீமனை, தம்முனிடை போகா வண்ணம் - (அங்ஙனம் துணைசெய்தற்குத்) தமையனான யுதிட்டிரனிடத்துச் செல்லவொட்டாதபடி, மறனில் சிறந்த புயம் வலியால்- பராக்கிரமத்தோடுகூடிச் சிறப்புற்ற (எங்கள்) தோள்களின் வலிமையால், வரைபோன்று- மலை ( குறுக்கிட்டு வழிதடுத்தல்) போல, தகைந்திலம் ஏல்- தடுத்திடோமாயின்,- அறனின் கொண்ட - தருமமாக மணஞ்செய்துகொள்ளப்பட்ட, தன் மனையாள் - தனக்குஉரிய*

*மனைவி, அமளி தலத்தின்- படுக்கையிடத்திலே, அழுது இரங்க- புலம்பி வருந்தும்படி, (அவளைவிட்டு), பிறன் இல் தேடும் - அயலான்மனையாளைத் தேடிச்செல்கிற, பெருபாவி - பெரிய தீவினையுடையவன், பெறும் - (மறுமையிற்) பெறுகிற, பேறு - நரககதி, எமக்குஉம் பேறு - எங்களுக்கும் பெறுங்கதியாகுக, ' என்றார் - என்றும் சபதஞ் செய்தார்கள் ; ( எ -று.)*

*பலமிருந்தும் பராக்கிரமமில்லையாயின் சிறப்புறாதாதலால், 'மறனிற்சிறந்த புயவலி' எனப்பட்டது. 'மறனிற்சிறந்த புயவலியால் வரைபோன்று' என்பதனை 'நிற்பான்' என்பதனோடு கூட்டி, வீமனுக்கு விசேடணமாக்குதலும் ஒன்று. கீழ் "வீமன் பின் நிற்க" என்று துரோணன் கூறினதற்கேற்ப, 'புறனிற்பான்' என்றார். வீமனைக்குறித்துச் சபதஞ்செய்ததும், அத்துரோணன்வார்த்தையை யனுசரித்தே.*

*'அறனிற்கொண்ட தன்மனையா ளமளித்தலத்தி னழுதிரங்கப் பிறனிற்றேடும் பெரும்பாவி' என்றது, தன்மனையாள் வீட்டிலிருந்து வருந்தவிட்டு அயலான்மனையாளிடத்து விரும்பிச்செல்வதன் குற்றங்களை நன்குவிளக்கும் பொருட்டேயன்றி, தன்மனையாளழுதிரங்காவிடின் பிறன்மனையாளிடஞ் செல்லலாமென்று கூறியதன்றெனக் கொள்க; இந்த மகாபாவி பெறும்பயனை "வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து பிறர் பொருள் தாரமென்றிவற்றை, நம்பினா ரிறந்தால் நமன்தமர் பற்றி யெற்றிவைத் தெரியெழுகின்ற, செம்பினா லியன்றபாவையைப் பாவீ தழுவென மொழிவதற்கஞ்சி, நம்பனே வந்துன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்து ளெந்தாய்" என்னுந் திருமங்கையாழ்வார் பாசுரங்கொண்டும்," காதலாள் கரிந்துநையக் கடியவே கனிந்து நன்றி, யேதிலான்தாரம் நம்பி யெளிதெனவிறந்தபாவத், தூதுலை யுருகவெந்த வொள்ளழற் செப்புப் பாவை, ஆதகா தென்னப் புல்லி யலறுமால் யானை வேந்தே" என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளாலும், "தங்கிருட்போதில் தலைச்சென்றயல்மனை, யங்குமகிழ்ந்தாளவ ளிவள்காணெனச், செங்கனலேயெனவெம்பியசெம்பினிற், பொங்கனற்பாவைகள் புல்லப் புணர்ப்பார்" என்னுஞ் சூளாமணிச்செய்யுளாலும் அறிக. (42)*

*43. கன்றால்விளவின்கனியுதிர்த்தோன்கடவுந்திண்டேரவனாக*
*வன்றாட்டடக்கைமாருதியேயாகவமரின்மறித்திலமேல்*
*என்றாநாளைமுனிபோரினெந்நன்றியினுஞ்செய்ந்நன்றி*
*கொன்றார்தமக்குக்குருகுலத்தார்கோவேயாமுங்கூட்டென்[றார்*

*(இ-ள்.) 'குரு குலத்தார் கோவே - குருவமிசத்து அரசர்களுக்குத்தலைவனான துரியோதனனே! கன்றால் -ஒரு கன்றைக்கொண்டு, விளவின்கனி - விளாமரத்தின்பழத்தை, உதிர்த்தோன் - உதிரச்செய்தவனான கிருஷ்ணன், கடவும் - செலுத்துகிற, திண் தேரவன் ஆக- வலிய தேரையுடைய அருச்சுனனேயானாலும், வல்தாள் - கொடிய போர்முயற்சியையும், தடகை - பெரியகைகளையு முடைய, மாருதிஏ ஆக - வீமசேனனேயானாலும், (இவர்கள்) அமரின்- (எதிரில்வந்து)அமைந்தால், என்ற ஆம் நாளை- (இவ்விரவு கழிந்து) சூரிய னுதிக்*

*கும் நாளையதினத்தில், முனி போரின்- கோபித்துச் செய்யும் யுத்தத்தில், மறித்திலம்ஏல்- (தருமனருகிற் சேராதபடி அவர்களைத்) தடுத்திடோமாயின்,- எ நன்றியின் உம்- எல்லாத்தருமங்களுள்ளும், செய் நன்றி - (தமக்குப் பிறர்) செய்த உபகாரத்தை, கொன்றார் தமக்கு- அழித்தபாவிகளுக்கு, யாம்உம் கூட்டு - நாங்களும்இனமாவோம்,' என்றார் - என்றும் (அவர்கள் சபதஞ்) செய்தார்கள்: (எ - று.)*

*பசுவதை, சிசுவதை, பிராமணவதை முதலியபெரும்பாதகங்களைச் செய்தார்க்காயினும் அப்பாவத்தினின்று நீங்கத்தக்க பிராயச் சித்தங்கள் உண்டு; செய்ந்நன்றிமறந்தவனுக்கோ எவ்விதபரிகாரமுமில்லை என்பது, நூல் துணிபு. " எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்ற திருக்குறளையும் காண்க. இனி, தாள் தடக்கை - முழங்காலளவும் நீண்ட பெரிய கை [ஆஜானுபாகு] எனினுமாம்; இது - உத்தம விலக்கணம். அன்றி, வலிய கால்களையும் பெரியகைகளையு முடைய என்றலு மொன்று. 'சூரியனுதிக்கிறநாளை' என்றது, உலகவழக்கு; ஆனது பற்றி,' என்று ஆம் நாளை' என்றார். எல் - ஒளி; அதனையுடையது என்று எனச் சூரியனுக்குக் காரணப்பெயர். 'மறித்திலமே யென்றானாளை' எனப் பாடங்கொண்டு, 'மறித்திலமே யென்றால்' என்று பதம் பிரித்து உரைப்பது தகுதியாம். நன்றி கொல்லுதல் - நன்றியை மறத்தலும், கைம்மாறு செய்யாமையும், தீங்கு செய்தலும். குரு என்பவன் - சந்திரகுலத்தில் பிரசித்திபெற்ற ஓரரசன்; அவனால், அக்குலம் குருகுல மென்றும், அந்நாடு குருநாடு என்றம் குருக்ஷேத்திர மென்றும், அக்குலத்திற்பிறந்தவர் கௌரவரென்றுங் கூறப்படுதல் காண்க.*

***கன்றால் விளவின்கனியுதிர்த்த கதை** : கம்சனாலேவப்பட்ட கபித்தாசுரன், விளாமரத்தின்வடிவமாய், கண்ணன் தன்கீழ்வரும் பொழுது மேல்விழுந்து கொல்வதாக எண்ணி வந்துநிற்க, அதனையறிந்து, கிருஷ்ணபகவான், அவ்வாறே தன்னைமுட்டிக் கொல்லும் பொருட்டுக் கன்றின்வடிவங்கொண்டு தான் மேய்க்குங் கன்றுகளோடு கலந்திருந்த வத்ஸாசுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின்மேலெறிய, இருவரும் இறந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்திட்டனரென்பதாம். இதனால், பகைகொண்டு பகையையழித்த கண்ணனது விசித்திர சக்தி விளங்கும் (43)*

### *44.- வஞ்சினமுரைத்த வேந்தர்க்குச் சிறப்புச்செய்து ஆசிரியனையும் விடுத்துத் துரியோதனன் தன்கோயி லடைதல்.*

**இவ்வாறுரைத்தவேந்தர்தமக்கெய்துஞ்சிறப்புச்செய்தகற்றிக்
கைவார்சாபமுனிவரன்றன்கழற்கால்வணங்கியேகுகெனச்
செவ்வாய்மலர்ந்துமானத்தாற்றிறலால்வாழ்வாற்செகத்தொருவர்
ஒவ்வாவரசன்றன்கோயிலடைந்தான்விபுதர்க்கொப்பானே.**

*(இ -ள்.) மானத்தால் - பெருமையினாலும், திறலால்- வலிமையினாலும், வாழ்வால் - செல்வாழ்க்கையாலும், செகத்து ஒருவர்*

*ஒவ்வா - உலகத்தில் ஒருத்தரும் (தனக்கு) ஒப்பாகப்பெறாத, அரசன்- ராஜராஜனும், விபுதர்க்கு ஒப்பான்- (இன்பவாழ்க்கையில்)தேவர்களுக்கும் உவமையாகுபவனும் ஆகிய துரியோதனன், - இ ஆறு உரைத்த - இங்ஙனம் (தனித்தனி) கூறின, வேந்தர்தமக்கு - அரசர்களுக்கு. எய்தும் (செய்தற்குப்) பொருந்திய, சிறப்பு செய்து - நல்ல சன்மானங்களைச் செய்து, அகற்றி - (அவர்களை) அனுப்பிவிட்டு,- கை வார் சாபம் - கையில் நீண்ட வில்லையுடைய, முனிவரன்தன் பிராமண சிரேஷ்டனான துரோணனது, கழல் கால் - வீரக்கழலணிந்த திருவடிகளை, வணங்கி - நமஸ்கரித்து, ஏகுக என செவ்வாய் மலர்ந்து - (நீ) செல்வாயாக என்று சிவந்த (தன்) வாயைத் திறந்து கூறிவிட்டு, தன் கோயில் அடைந்தான் - தனது சிறந்தவிடத்தைச் சேர்ந்தான் ; ( எ -று.)*

*"இடையிருவகையோரல்லது நாடிற், படைவகைபெறா அரென்மனார் புலவர்" என்ற தொல்காப்பியச்சூத்திரத்து, 'நாடின் என்பதனால், ஒருசார் அந்தணரும் படைக்கு உரிய ரென்பது கொள்க; அவர் இயமதங்கியாரும், துரோணனும், கிருபனும் முதலாயினாரெனக் கொள்க' என்றும், படைப்பகுதி யென்பன- வேலும் வாளும் வில்லும் முதலாயின, என்றுங் கூறியதனால, 'முனிவரன்தன் **கழற்** கால்' என்றது பொருந்தும். அன்றியும், துரோணனை வீடுமன் கௌரவபாண்டவர்க்கு வில்லாசிரியனாக்கியபொழுது, அவனுக்கு அரசர்க்குஉரிய அங்கங்களையெல்லாம் கொடுத்ததாக ஆதிபருவத்திற்கூறியுள்ளது. செவ்வாய்மலர்ந்து - காரியம் காரணத்தாற்கூறப்பட்டது ; உபசாரவழக்கு **பி -ம்** : வெவ்வேறுரைத்த வேந்தர்க்கு வேண்டுஞ்சிறப்பு. (44)*

### *45.- மறுநாட் சூரியோதய வருணனை.*

***கங்குற் சிலைநூன் முனிவனுடன் கழற்காலரசன் பணித்தமைகேட்,***
***டங்குத் தரியா திவன்கரத்தே யருள்கூர் நெஞ்ச னகப்படுமென்,***
***றிங்குத்துயில்வார் யாவரையு மிருபா ளையத்தி னிடந்தோறுஞ்,***
***சங்கக் குரலாற்றுயிலெழப்பித் தபனன் குணபாற் றான் சேர்ந்தான்.***

*(இ -ள்.) சிலை நூல் முனிவனுடன் - வில்வித்தையில்வல்ல துரோணனுடனே, கழல் கால் அரசன் - வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய துரியோதனன், பணித்தமை-(தருமனைப் பிடித்துத் தரும்படி) சொன்ன கடுஞ்சொல்லை, கேட்டு-, கங்குல்-இராத்திரி. 'இவன் கரத்து ஏ-இத்துரோணன் கையிலே, அருள்கூர் நெஞ்சன். கருணைமிகுந்த மனத்தையுடைய தருமன், அகப்படும் - அகப்பட்டுக் கொள்வானே,' என்று - என்று எண்ணி இரங்கி, அங்கு தரியாது- அவ்விடத்தில் நில்லாமல் நீங்கிச்சென்றது; (அதுசெல்ல), இங்கு- இப்பால், தபணன்-சூரியன், -இரு பாளையத்தின் இடம் தோறும் - இருதிறத்துப் படைவீடுகளி னிடங்களிலெல்லாம், துயில்வார் யாவரைஉம் - தூங்குகிறவர்களெல்லோரையும், சங்கம் குரலால் துயில் எழுப்பி - சங்கவாத்தியத்தின் தொனியால் தூக்கம்விழிக்கச்செய்து கொண்டு, தான் -, குண பால் சேர்ந்தான் - கிழக்குத்திக்கில் அடைந்தான் [உதித்தான்]; (எ-று.)*

*இயல்பாக இரவுகழிந்ததைத் துரியோதனன்வார்த்தைகேட்டு அங்கு நிற்க மனம்பொறாமற் சென்றதாகவும், சூரிய னுதிக்கையில் சங்கநாதத்தால் யாவருந் துயிலொழிதலைச் சூரியன் துயிலெழுப்பி வந்ததாகவும் வருணித்தவை, **தற்குறிப்பேற்றவணி** . 'அருள்கூர்நெஞ் சனகப்படுமென்ற' என்பதை மத்திமதீபமாகமேல்வாக்கியத்துக்குங் கூட்டலாம். முதலடியில், முனிவன் அரசனுடன்பணித்தமையென உருபுமாற்றி, துரோணன் துரியோதனனுடன் (நாளை அகப்படுத்திதருவதாகக்) கூறினமை என்றும் உரைக்கலாம். நெஞ்சன்அகப்படும்- செய்யுமென்முற்று ஆண்பாலுக்கு வந்தது. சூரியோதயகாலத்தில் எங்குங் சங்கூதுதல் இயல்பாதலை, "புள்ளுஞ்சிலம்பினகாண் புள்ளரையன் கோயில், வெள்ளைவிளிசங்கின் பேரரவங் கேட்டிலையோ, பிள்ளாயெழுந்திராய்" என்ற திருப்பாவையாலும் அறிக (45)*

## பதினோராம் போர்ச்சருக்கம் முற்றிற்று.

## பன்னிரண்டாம் போரச்சருக்கம்.

### *1.- கடவுள்வாழ்த்து.*

**பொய்யாத தவமுனிபின் போயருளித் தாடகைதன்**
**மெய்யாவ நிகரென்ன வெஞ்சரத்தா லழுத்தியபின்**
**மையாழி முகில்வண்ணன் வாங்கியன பூங்கமலக்**
**கையாலு மொருசாபங் காலாலு மொருசாபம்.**

*(இ-ள்.) மை ஆழி முகில் வண்ணன் - மையும்கடலும் மேகமும்போன்ற கருநிறத்தையுடைய இராமபிரான், பொய்யாத - பொய்யாகாத, தவம் - தவவொழுக்கத்தையுடைய, முனி பின் - விசுவாமித்திரமுனிவனது பின்னே, போய் - சென்ற, அருளி - கருணை கொண்டு, தாடகைதன் மெய் - தாடகையின் உடம்பு, ஆவம் நிகர் என்ன - அம்பறாத்தூணிக்கு ஒப்பென்னும்படி, வெம் சரத்தால் - கொடிய அம்புகளால், அழுத்திய பின் - பதித்தபின்பு,- (அப்பிரானது), பூ கமலம் கையால்- அழகிய தாமரைமலர்போன்ற திருக்கையினால், ஒரு சாபம்உம் - ஒரு சபிப்பும், வாங்கியன - வாங்கப்பட்டன [முறையே, வளைக்கவும் நீக்கவும் பட்டன]; (எ -று.)*

*'மெய்ஆவம் நிகரென்ன' என்றதற்கு - அம்புகள் மிகுதியாக உடம்பினுள் பொருந்த என்று கருத்து. வாங்குதல் என்பது - சிலேடையால், வளைதலும் நீங்கலுமாகிய இருபொருளை உணர்த்தின. சாபம் - வடசொல்திரிபு: இது இவ்விருபொருளு முடையதாதலை "சாபமே சபித்தல் வில்லாம்" என்னும் நிகண்டினாலு மறிக. சாபம் என்ற ஒருசொல்தானே ஓரடியில் வெவ்வேறு பொருளில் வந்தது,* ***மடக்கு*** *என்னுஞ் சொல்லணி.*

*வசிஷ்டமகாமுனிவனது தவவலிமையை ஒருகால் கண்டு அவ்வாற்றலே மெய்ம்மையானதென்றும் மற்றைய ஆற்றல்களெல்லாம் பொய்ம்மையானதென்றுந் துணிந்து அரசாட்சியைவிட்டுநாற்றிசையுஞ் சென்று பற்பல இடையூறுகளைக்கடந்து நெடுங்காலந்தவம் புரிந்து முடிவில் தாம்முன்புகருதிய பிரமவிருடிப் பட்டத்தைப் பெற்ற பெருஞ்சிறப்புடைய னாதலால், கௌசிகன் 'பெய்யாத தவமுனி எனப்பட்டான். பயிர்செழித்தற்பொருட்டுக் களைபறித்தல் போலச் சிஷ்டபரிபாலநத்திற்காகத் துஷ்டநிக்கிரகஞ்செய்தல் கருணையின் காரியமே யாதலால், 'அருளி' எனப்பட்டது.*

***தாடகை-*** *மலைகளில் சஞ்சரிப்பவள்; இவள் - சுகேது என்னும் யக்ஷனது மகள்; சுந்தனென்பவனது மனைவி ; ஆயிரம்யானை வலிமைகொண்டவள். கணவன் அகஸ்தியமகா முனியின் கோபத்தீக்கு இலக்காய்ச் சாம்பரானதை யறிந்த இவள், தன்புத்திரர்களாகிய சுபாகுமாரீசர்களுடனே அம்முனிவனை எதிர்த்துச் சென்ற பொழுது, அவரிட்டசாபத்தால் தன் மக்களோடு இராக்கத்தன்மையடைந்தனள். பின்புமுனிவர்களது யாகாதிகளைக்கெடுக்கிற இவர்களை அழித்துத் தன்வேள்வியைக்காக்கும்பொருட்டுவிசுவாமித்திர முனிவன் தசரதசக்ரவர்த்தியினிடம்அனுமதிபெற்று இளம்பிராயமுடைய இராமலக்குமணரை யழைத்துக்கொண்டுபோனபொழுது, அம்முனிவனாச்சிரமத்துக்குச் செல்லும் வழியிடையிலேவந்து எதிர்த்த* ***தாடகையை*** *ஸ்ரீராமன் முனிவன் கட்டளைப்படி பெண்ணென்றுபாராமற் பொருது* ***கொன்றருளி*** *னான்.*

***கையா லொருசாபம் வாங்கியது:-*** *ஜனகமகாராசன் பரமசிவனாற் கொடுக்கப்பட்டதொரு பெரிய வலிய வில்லையெடுத்து வளைத்தவற்கே தன்மகள் சீதையைக் கலியாணஞ் செய்துகொடுப்ப தென்று கந்யாசுல்கம் வைத்திருக்க, வேள்விமுடித்த விசுவாமித்திரனுடன் மிதிலைக்குச் சென்ற ஸ்ரீராமன் அவ்வில்லை வளைத்துச் சானகியை மணஞ்செய்துகொண்டனனென்பதாம்.*

***காலாலும் ஒருசாபம் வாங்கியது:-*** *அகலிகை விருத்தாந்தம்; நான்காம் போர்ச்சருக்கம் முதற்பாடலுரையிற்காண்க.*

*இதுமுதற் பதினைந்து கவிகள்- பெரும்பாலும் நாற்சீர்களும் காய்ச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்ட* ***கலிவிருத்தங்கள்.*** *(46)*

*2.- ஒற்றரால் துரியோதனன் பாசறையில் நிகழ்ந்தவையறிந்து யுதிட்டிரன் உக்கிரமாகப் பொரக் கருதுதல்.*

**அற்றராபதிகருதியாசானோடுரைத்தவெலாம்**
**ஒற்றராலக்கணத்தேயுணர்ந்தமுரசக்கொடியோன்**

***மற்றராவணைதுறந்மாயனுக்கும்விசயனுக்குஞ்
சொற்றராபதநெருங்கத்தொடைத்தும்பைபுனைந்தானே.***

*(இ -ள்.) அல் - (முந்தினநாளின்) இராத்திரியில், தரா பதி - பூமிக்கு அரசனான துரியோதனன், கருதி - ஆலோசித்து, ஆசானோடு - துரோணாசாரியனுடனே, உரைத்த எலாம்- சொன்ன வார்த்தைகளையெல்லாம், ஒற்றரால் - (தனது) வேவுகாரர்களால், அ கணத்துஏ - அந்த க்ஷணத்திலேயே, உணர்ந்த- அறிந்த, முரசம் கொடியோன் - பேரிகையின்வடிவத்தை யெழுதிய துவசத்தையுடைய தருமபுத்திரன், மற்று - பின்பு, அரா அணை துறந்த மாயனுக்குஉம்- ஆதிசேஷனாகிய சயநத்தை விட்டுவந்த திருமாலாகிய கண்ணபிரானுக்கும், விசயனுக்குஉம்- அருச்சுனனுக்கும், சொற்று-*

*(அச்செய்தியைச்) சொல்லி,- அராபதம் நெருங்க- வண்டுகள் நெருங்கிமொய்க்க, தும்பை தொடை புனைந்தான்- (போருக்குரிய) தும்பைப்பூமாலையைச் சூடினான்; (எ - று.) - உக்கிகரமாகப் போர் செய்ய நிச்சயித்தான் என்பதாம்.*

*ஆங்காங்கு நடப்பவற்றை ஒற்றியறிந்துவருவதால், ஒற்றர் என்று பெயர்; ஒற்றுதல்-அடுத்து நின்று உண்மையைக் கிரகித்தல். இவர் - தூதரினும் வேறுபட்டவர்;வடமொழியில், 'சாரர்' எனப்படுவர். அராபதம்- அறுபதம் என்பதன் விகாரம்போலும்."பனிக்கடலுள் பள்ளிகோளைப் பழகவிட் டோடிவந்து, என் மனக் கடலுள்வாழவல்ல மாயமணாளநம்பீ" என்றார்போல, 'அராவணைதுறந்த மாயன்' என்றார் ; இது - உபசாரம், 'படஞ்செய் நாகணைப் பள்ளி நீங்கினான் " என்றார் கம்பரும். 'அராத்துறந்த' என்னாது 'அராவணைதுறந்த' என்றதனால், அவ்வாதிசேஷன்இங்குப்பலராமனாய் அவதரித்துள்ள தன்மை தொனிக்கும். ஆசான் -ஆசார்யன்என்னும் வடசொல்லின் விகாரம். (47)*

### *3.- பாண்டவசேனை மண்டலவியூகமாக வகுக்கப்படுதல்.*

***கருங்களவின்கனிவண்ணன்கனைகழற்கால்வேந்தரொடும்
பெருங்களஞ்சென்றெய்தியபின்பேணார்கள்வெருக்கொள்ள
இருங்களிறுதேர்பரியாளிருமருங்கும்புடைசூழ
வருங்களிகொள்வரூதினியைமண்டலமாவகுத்தானே.***

*(இ-ள்.) கரு களவின் கனி வண்ணன் - கரிய களாப்பழம் போன்ற திருமேனிநிறத்தையுடைய கண்ணன், - கனை கழல் கால் வேந்தரொடுஉம் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த பாதத்தையுடைய அரசர்களுடனே, பெருகளம் சென்று எய்திய பின் - பெரிய போர்க்களத்தைப் போய் அடைந்த பின்பு, இரு - பெரிய, களிறு - யானைகளும், தேர்- தேர்களும். பரி - குதிரைகளும், ஆள் - காலாள்களும்,(ஆகிய சதுரங்கமும்), இரு மருங்குஉம் - இரண்டு பக்கங்களிலும், புடைசூழ- திரண்டு சூழ்ந்துநிற்க, வரும் -வருகிற, களிகொள் - (போரில்) உற்சாகத்தைக்கொண்ட, வரூதினியை - (பாண்டவ) சேனையை, பேணார்கள் வெரு கொள்ள - பகைவர்கள் (கண்டு) அச்சங்கொள்ளும்படி, மண்டலம் ஆ வகுத்தான் -மண்டலமென்னும் வியூகமாக அணிவகுத்தான்; (எ -று.)*

*மண்டலம் - வியூகத்தின் வகை நான்கனுள் ஒன்றென்பர். நாற்புறத்தும் வட்டமாகச் சேனையை நிறுத்துவது மண்டல மென்றும், அது ஸர்வதோபத்ரம் துர்ஜயம் என இரண்டுவகைப்படு மென்றும் காமந்தக மென்னும் வட நூல் கூறும், களா- ஓர்செடி. புடை சூழ என்பதில், 'புடை' என்னும்பகுதியே புடைத்து என வினை யெச்சப்பொருள்பட்டது. (48)*

### *4.- அந்த வியூகத்தின் முன்புறம் முதலியவற்றில் அருச்சுனன் முதலோர் நிறுத்தப்பட்டமை.*

***பின்னிறுத்திமாருதியைப்பேரணியிற்பலவகையா
மன்னிறுத்தியிருபாலுமருத்துவர்மைந்தரைநிறுத்தி***

***மின்னிறுத்துநெடுவாளி விசயனையுங்குமரனையு***
***முன்னிறுத்திநடுநின்றான்முரசநிறுத்தியகொடியோன்***

*(இ-ள்.) முரசம்- பேரிகையின் வடிவத்தை, நிறுத்திய - எழுதிப்பதித்த, கொடியோன் - துவசத்தையுடைய தருமன்,- மாருதியை - வீமனை, பின் நிறுத்தி - (தனது) பின்புறத்திலே நிற்கச் செய்து, போர் அணியில் - பெரிய அணிவகுப்பிலே, (ஆங்காங்கு), பல வகை ஆம் மன் நிறுத்தி - பலவகைப்பட்ட அரசர்களை நிற்கச் செய்து, இரு பால்உம் - இரண்டு பக்கங்களிலும், மருத்துவர் மைந்தரை நிறுத்தி - அசுவிநீதேவர்களின் குமாரர்களான நகுலசகதேவர்களை நிற்கச்செய்து, மின் நிறுத்தும் - ஒளியை (த்தன்னிடம்) நிலைநிறுத்திய [நீங்காமற்கொண்ட], நெடு வாளி -நீண்ட அம்புகளையுடைய, விசயனைஉம் குமரனைஉம் -அருச்சுனனையும் (அவன்)மகனான அபிமனையும், முன் நிறுத்தி-, நடு நின்றான் - (தான்) நடுவில் நின்றான்;(எ-று.) (49)*

### *5.- துரியோதனன்பக்கத்துச்சேனை கருடவியூகமாக வகுக்கப்படுதல்*

**இப்பான்மற்றிவர்நிற்பவிரவுரைத்தமொழிப்படியே**
**தப்பாமற்றிகத்தகுலத்தலைவனுஞ்சஞ்சத்தகருந்**
**துப்பார்வெஞ்சிலைத்தடக்கைத்துரோணன்முதலனைவோரும்**
**அப்பால்வந்தணிகருடவியூகம்வகுத்தணிந்தாரே.**

*(இ -ள்.) இ பால் - இவ்விடத்து, இவர் - இவர்கள், நிற்ப - (இவ்வாறு) நிற்க, அ பால் - எதிர்ப்பக்கத்தில், இரவு உரைத்த மொழி படிஏ - இராத்திரி சொன்ன வார்த்தையின்படியே, தப்பாமல் - தவறாமல், திகத்தகுலம் தலைவன்உம்- திரிகர்த்ததேசத்து அரசர்கூட்டத்துக்குத் தலைவனான சுசர்மாவும், சஞ்சத்ததகர்உம் - ஸம்சப்தகர்களும், கதுப்புஆர் - வலிமைநிறைந்த, வெம்சிலை - கொடிய வில்லை யேந்திய, தட கை - பெரியகைகளையுடைய, துரோணன் முதல் அனைவோர்உம் - துரோணன் முதலிய எல்லாவீரர்களும், வந்து-, அணி கருட வியூகம் வகுத்து அணிந்தார் - சேனையை அழகிய கருடவியூகமாக அணிவகுத்துநின்றார்கள்; (எ -று.)*

*கருட வியூகம் - கருடன்வடிவமாகச் செய்யும் படைவகுப்பு ; இதுவும் கீழ்ச்சருக்கத்தில் கூறிய சகடவியூகமும், போகமென்னும் வியூகத்தின் பேதங்களிற் சேர்ந்தன. முதனூலிலும் கருடவியூகம் வகுத்தாகவே யுள்ளது. மற்று- அசை; வினைமாற்றுமாம். **பி-ம்** ; மகரவியூகம். (50)*

### *6.- திரிகர்த்தபதி முதலியோர் அருச்சுனனை யறைகூவிப்பொருதல்.*

***காரணிபோற்பொருப்பணிபோற்காற்றணிபோற்களிற்றணியுந்***
***தேரணியும்பரியணியுந் திரிகத்தகுலபதியும்***
***நாரணகோபாலரெனுநராதிபரும்வாள்விசயன்***
***காரணமாவறைகூவிக்கடுங்கொடுங்கார்முகம்வளைத்தார்.***

*(இ -ள்.) கார் அணி போல் - மேகங்களின் வரிசை போன்ற, களிறு அணிஉம் - யானைகளின் வரிசையும், பொருப்பு அணிபோல் - மலைகளின் வரிசைபோன்ற, தேர் அணிஉம்- தேர்களின் வரிசையும்,*

*காற்று அணிபோல் - காற்றின் வரிசைபோன்ற, பரி அணிஉம்- குதிரைகளின்வரிசையும், திரிகத்த குல பதிஉம் - திரிகர்த்தர் கூட்டத்து அரசனும், நாரண கோபாலர் எனும் - நாராயணகோபாலரென்கிற, நர அதிபர்உம் - அரசர்களும், வாள் விசயன் காரணம் ஆ - ஆயுதப் பயிற்சியில்வல்ல அருச்சுனன் விஷயமாக, அறைகூவி -போர்செய்ய அழைத்துக்கொண்டு, கடு கொடு கார்முகம் வளைத்தார் - மிகக் கொடுமையான (தம்) வில்லை வளைத்து வந்தார்கள் ; ( எ -று.)*

*விசயன்காரணமா அறைகூவி- அருச்சுனனைத் தம்முடன் போருக்கு வலிய அழைத்து என்றபடி. 'காரணிபோற்பொருப்பணி போற் காற்றணிபோல்' என்ற உபமானங்கள், முறையே 'களிற்றணியுந் தேரணியும் பரியணியும்' என்ற உபமேயங்களோடு இயைதலால்,* **முறைநிரனிறைப்பொருள்கோள்.** *அணிகளும், பதியும், அதிபரும் வளைத்தார் - திணைவிரவி யெண்ணிச் சிறப்பினால் உயர்திணை முடிபுஏற்றது; [நன். பொது. 27.] நாராயண கோபாலர் - கண்ணனுக்குப் பதினாறாயிரம் கோபஸ்திரீகளிடம் பிறந்தவர்கள். கீழ்த் துரியோதனன் கண்ணனைப் படைத்துணையழைக்கப் போனபோது அவனால் துரியோதனுக்குத் துணையாகக் கொடுக்கப்பட்டனர் இவரென அறிக. நாராயணன் - திருமால், கோபாலர்- இடைச்சாதியார்; இவ்விருவர்சம்பந்தமு முள்ளதனால், நாராயணகோபாலரென்று இவர்க்குப் பெயர். நாராணன் - நாராயணன் : சிருஷ்டிப் பொருள்களுக்கெல்லாம் இருப்பிடமானவ னென்றும், பிரளயப் பெருங்கடலை இருப்பிடமாகவுடையவனென்றும் பொருள்படும். கோபாலர் - பசுக்களைக் காப்பவர்.ீ (51)*

*7.- தருமனைக் காக்க ஏற்பாடுசெய்து விடைபெற்றுக்கொண்டு சென்று அருச்சுனன் அறைகூவினார்மேல் அம்புமழை பொழிதல்.*

***ஆர்த்துவருமவர்நிலைகண்டரசனைநீரிமைப்பொழுது***
***காத்திடுமினெனநின்றகாவலரோடுரைசெய்து***
***கோத்தருமன்பணித்ததற்பின்கோதண்டமுறவாங்கிப்***
***பார்த்தனுமன்றவரெதிர்போய்ப்பலவாளிமழைபொழிந்தான்.***

*(இ -ள்.) ஆர்த்து வரும் - (இப்படி போருக்கு அழைத்து) ஆரவாரித்துவருகிற, அவர் - அவர்களது, நிலை - உறுதிநிலையை, கண்டு - பார்த்து, பார்த்தன்உம் - அருச்சுனனும், அரசனை நீர் இமைபொழுது காத்திடுமின் என - 'யுதிட்டிரராசனை நீங்கள் ஒருமாத்திரைப்போது பாதுகாத்திருங்கள்' என்று, நின்ற காவலரோடு உரைசெய்து - (அங்கு) நின்ற (தன்பக்கத்து) அரசர்களுடனே சொல்லி,- கோ தருமன் பணித்ததன்பின் - அத்தருமராசன் கட்டனையிட்டபின், கோதண்டம் உற வாங்கி - (காண்டீவமென்னும் தன்) வில்லை நன்றாகவளைத்து, அன்று - அப்பொழுது, அவர் எதிர்போய் - அவர்களெதிரிற்சென்று, பல வாளி மழை - அநேக அம்புமழையை, பொழிந்தான்-; (எ-று.)*

*வீமன் விராடன் துருபதன் பாண்டியன் நகுலசகதேவர் திட்டத்துய்மன் திட்டகேது முதலியசோமகர் சிருஞ்சயர் கடோற்கசன் என்னும் இவர்களின் வசத்தில் தருமபுத்திரனை ஒப்பித்து அருச்சு*

*னன் சென்றானென்று பெருந்தேவனார் பாரதத்தால் தெரிகிறது. துருபதராசபுத்திரனும் அதிரதனுமாகிய ஸத்தியஜித்து என்பவனைத் தருமனைக் காக்குமாறு அருச்சுனன் சொல்லிச் சென்றதாக வியாசபாரதம் கூறும். கோதண்டமென்னும் இராமன் வில்லின் பெயர், சிறப்பினால் அருச்சுனன்வில்லைக் குறித்தது; இனி, இச்சிறப்புப்பெயர், பொதுப்பெயராக, வில்லென்றமாத்திரமாகவும் வழங்கிய தென்னலாம். (52)*

*8.- அருச்சுனன் சஞ்சத்தகரோடு கடும்போர் செய்தல்.*

***தூளியேயண்டமுறத்தூர்த்துமுதலகல்விசும்பை***
***வாளியேதூர்க்கும்வகைமலைவாங்குசிலைவாங்கி***
***யாளியேறனையானுமவனிபருங்கவந்தமுடன்***
***கூளியேநடமாடக்கொடுஞ்சமரம்விளைக்குங்கால்.***

இதுவும் மேற்கவியும் - குளகம்.

*(இ -ள்.)ஆளிஏறு அனையான்உம் - ஆண்சிங்கத்தை யொத்த அருச்சுனனும், அவனிபர்உம் - (திரிகர்த்தன் முதலிய) அரசர்களும், - முதல் - முதலில், தூளிஏ - (தமது வாகனங்களால் மேலெழுப்பப்*

*பட்ட) புழுதியே, அண்டம் உற - உலகவுருண்டை முழுவதும் செல்லும்படி, தூர்த்து - நிறைத்து, (அதன் பின்பு), அகல் விசும்பை - பரந்த ஆகாயத்தை, வாளிஏ - (தமது) அம்புகளே, தூர்க்கும் வகை - நிறைக்கும்படி, மலை வாங்கு சிலை வாங்கி - மலையொத்த (தம்தம்) வில்லை வளைத்து, கவந்தமுடன் கூளிஏ நடம் ஆட - தலையற்ற உடற்குறைகளும் பேய்களுமே கூத்தாடும் படி, கொடு சமரம் விளைக்கும் கால் - (ஒருவரோடொருவர்) கொடிய போரைச் செய்யும்பொழுது,- (எ-று.) -" சிலையின் குருவந்தான்" என அடுத்த கவியோடு முடியும்.*

*மலை யென்பதற்கு - (யாவருங்கண்டு) மலையத்தக்கதென்று காரணமுரைப்பர்; மலைதல் - அஞ்சுதல். இங்கே, மலையென்றது, பரமசிவனுக்கு வில்லான மகாமேருவை, பேய்கள் - அங்கு பிணந்தின்ன வந்தவை. கூளி- பெருங்கழுகுமாம். இவை கூத்தாடுதற்குக் காரணம், அங்கே தமக்கு மிகுதியாக இரை கிடைத்தலால். **அதிசயோக்தியலங்காரம்.** (53)*

### *9.- துரோணன் சயத்திரதன்முதலானார்பலர்சூழத் தேர்மேல் வருதல்.*

***கொடித்தலைவேற்சயத்திரதன்சவுபலன்குண்டலன்முதலா***
***முடித்தலைவாளடனிருபர்முப்பதினாயிரர்சூழ***
***விடித்தலைமாமுரசியம்பவிபதுரகப்படைசூழக்***
***கொடித்தலைமான்றடந்தேரான்குனிசிலையின்குருவந்தான்.***

*(இ-ள்.) கொடிது அலை வேல் - கொடியதாய்ச் சுழல்கிற வேலாயுதத்தையுடைய, சயத்திரதன் - சயத்திரதனும், சவுபலன் - சகுனியும், குண்டலன் - குண்டலனும், முதல் ஆ- முதலாக, முடிதலை - கிரீடமணிந்த தலையையும், வாள் - ஆயுதங்களையும், அடல்- வலிமையையுமுடைய, நிருபர் முப்பத்தினாயிரர் - முப்பதினாயிரம் அரசர்கள், சூழ - சூழ்ந்து வரவும், இடி தலை -இடிபோன்ற முழக்கத்தைத் தம்மிடத்திலுடைய, மா முரசு - பெரிய பேரிகைகள்,இயம்ப*

*ஒலிக்கவும், இப துரகம் படை சூழ - யானை குதிரைகளின் சேனைகள் சுற்றிலும் வரவும், குனி சிலையின் குரு - வளைந்த வில்லின் ஆசாரியனான துரோணன், கொடி தலை மான் தட தேரான் - துவசத்தை மேலுடையதும் குதிரைகள் பூட்டியதுமான பெரிய தேரிலேறியவனாய், வந்தான் - (தருமனை எதிர்க்க) வந்தான் ; (எ - று.)*

*கொடிது+அலை =கொடித்தலை; சிறுபான்மை உயிர்த்தொடர்க் குற்றியலுகரத்தில் தகரவொற்று இரட்டிற்று : எருத்துமாடு என்றார்போல. இனி கொடிதலை வேல் என எடுத்து, காக்கைகள் வட்டமிடும் நுனியையுடைய வே லென்றலும் ஒன்று; "பாற்றினஞ் சுழலும் வைவேல்" என்றார்போல: காக்கைகள், அவ்வேலி லொட்டிய தசையையும் அவ்வேலாற் கொல்லப்படும் பிராணிகளையும் தின்ன விரும்பி வந்தவை. இனி, கொடியினிடத்து வேலின் வடிவத்தையுடைய எனவும் பொருள்படும். இனி, 'தடித்தலைவேல்' என்று பாடங்கொண்டு, தடி தலை வேல் எனப் பிரித்து - தசை பொருந்திய நுனியையுடைய வேலென்றாவது, தடித்து அலைவேல் எனப் பிரித்து - மின்னல் போல் அசைந்து விளங்குகிற வேலென்றாவது பொருள் கொள்ளுதல் பொருந்தும். தடி- வில் என்பாரு முளர். ஸௌபலன் - வடசொல் : சுபலனது மகனென்று பொருள்: தத்திதாந்தநாமம். ஸூபலன் - நல்ல வலிமையுடையான்; இவன் - காந்தாரதேசத்து அரசன்: திருதராட்டிரன் மனைவிக்கும், சகுனிக்குந் தந்தை. **பி - ம** ்;இடித்தலைமாமுகிலனையவிபதுரகம் புடைசூழ. (54)*

### *10. அப்போது திருஷ்டத்யும்நன் துரோணனுக்கு எதிரிற்செல்லுதல்.*

***வந்தகுருக்குருகுலமாமன்னுடன்போர்புரிவதன்முன்***
***பந்தமுறப்பாஞ்சாலர் பற்பதினாயிரர்சூழ***
***முந்தவயப்பணைமுழங்கமுழங்கொலிநீர்கொதிப்பதுபோல்***
***அந்தமுனிக்கெதிர்நடந்தானைவர்சேனாபதியே.***

*(இ -ள்.)* வந்த குரு - *(அவ்வாறுவந்த)* துரோணண், குருகுலம் மா மன்னுடன் - குருகுலத்துச் சிறந்த அரசனான தருமனுடன், போர் புரிவதன் முன் - போர்செய்வதன்முன்னே, ஐவர் சேனாபதி - பாண்டவர்சேனைத் தலைவனான திட்டத்துய்மன்,- பந்தம் உற - நெருக்கம் மிக, பாஞ்சாலர் பல்பதினாயிரர் - அநேகம்பதினாயிரக்கணக்காவுள்ள பாஞ்சாலதேசத்துவீரர்கள், சூழ - சூழ்ந்து வரவும்,- முழங்குஒலி நீர் கொதிப்பது போல் - ஆரவாரிக்கிற ஓசையையுடைய நீரையுடைய கடல்பொங்குவதுபோல *(ச் சினம்பொங்க)*,- வயம் பணை- வெற்றிக்கு அறிகுறியானவாத்தியங்கள், முந்த- முன்னே, முழங்க- மிக ஒலிக்கவும், அந்த முனிக்கு எதிர்நடந்தான் - அந்தத் துரோணனெதிரிற்சென்றான்; *( எ -று.)*

குருக்குருகுலமெனச் சந்தவின்ப நோக்கியிரட்டித்தது. **பி-ம்** : ஒலிப்பதுபோல். *(55)*

*11.- திருஷ்டத்யும்நன் பலரை அம்பெய்து மாய்த்தல்*

**இருவர்பெருஞ்சேனையுமுற்றெதிரெதிராயுதமேந்தி**
**ஒருவரொருவரைவேறற்கொண்ணாதவமருடற்றச்**

**செருவிலரியேறனையான்றிட்டத்துய்மனும்வெகுண்டு**
**பொருசிலைவெங்கணைபொழிந்தான்போர்வேந்தர்பலர்மடிந்தார்**

*(இ-ள்.)* இருவர் பெரு சேனைஉம் - *(இந்த)* இருதிறத்தாரது பெரிய சேனைகளும், எதிர் எதிர் உற்று - ஒன்றற்கொன்று எதிராகப் பொருந்தி, ஆயுதம் ஏந்தி - ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு, ஒருவர் ஒருவரை வேறற்கு ஒண்ணாத அமர் - ஒருதிறத்தார் மற்றொருதிறத்தாரைச் சயித்தற்கு முடியாத போரை, உடற்ற, -உக்கிரமாகச்செய்ய, *(அப்பொழுது)*, செருவில் அரி ஏறு அனையான் - போரில் ஆண்சிங்கத்தை யொத்தவனான, திட்டத்துய்மனும்-, வெகுண்டு - கோபித்து, பொருசிலை - போருக்குரிய வில்லினின்று, வெம் கணை - கொடிய அம்புகளை, பொழிந்தான் - சொரிந்தான்; *(அதனால்)*, போர் வேந்தர் பலர் மடிந்தார் - போர்செய்கிற பகையரசர் அநேகர் இறந்தார்கள்; *(எ-று.)* - **பி-ம்** ஆயுதமெடுத்தங்கு. *(56)*

*12.- திருஷ்டத்யும்நனாலழிந்த சேனை துரோணனை யடைதல்.*

***துன்முகனைப்புறங்கண்டுதுன்மருடன்முனைசாய்த்து***
***கன்முகமாங்காந்தாரர்கலிங்கர்கவுசலர்நிடதர்***
***புன்முகராயிளைத்தோடப்பொருதழித்தான்பொருதழிந்த***
***மன்முகவெம்பெருஞ்சேனைமறையவன்பாலடைந்தனவே.***

*(இ -ள்.) (திட்டத்துய்மன்)*, - துன்முகனை - துர்முகனென்னும் அரசனை, புறம்கண்டு - முதுகுகொடுக்கச்செய்தும்,- துன்மருடன் - துர்மர்ஷணனென்பவனது, முனை - போரை, சாய்த்து - ஒழித்தும்,- கல் முகம் ஆம் - கல்லின்தன்மையுடைய, காந்தாரர் - காந்தாரதேசத்துவீரரும், கலிங்கர் - கலிங்கதேசத்துவீரரும், கவுசலர் - கோசலதேசத்துவீரரும், நிடதர் - நிஷததேசத்துவீரரும், புல் முகர் ஆய் - வாடிய முகமுடைவர்களாய், இளைத்து ஓட - மெலிந்து தோற்று ஓடும்படியும், பொருது - போர்செய்து, அழித்தான் - சிதைத்தான்: பொருது அழிந்த -*(அங்ஙனம்)* போர்செய்து சிதைந்த, மன் முகம் வெம் பெரு சேனை -மிகுதியைத் தன்னிடத்திலுடைய கொடிய பெரிய சேனைகள், மறையவன்பால்அடைந்தன - துரோணாசாரியனிடம் சேர்ந்தன; *(எ-று.)*

துர்முகன் என்பதற்கு - கொடிய முகமுடையவனென்றும், துர்மர்ஷணன் என்பதற்கு - *(பகைவராற்)* பொறுக்கவொண்ணாதவனென்றும் பொருள். இவ்விருவரும் துரியோதனன் தம்பியர். துன்மருடன் - மகாரதவீரரில் ஒருவன். கீழ் அணிவகுப்புச்சருக்கத்தில் இவனை மகாரதனாகவும், மற்றைத் துரியோதனன் தம்பிமார்களை அர்த்தரதராகவும் பிரித்து வகுத்துக் கூறியுள்ளமை காண்க. கல் - வலிமைக்கு உவமை. கல்முகமாங் காந்தாரர் - கல் நெஞ்சரான காந்தாரருமாம்; என்றது, அந்நாட்டரசனான சகுனி கொடுமனத்தவ னாதலால். 'கோஸலம் என்ற வடசொல்- க உஸல எனப் பிரிக்கப்பட்டு, படைத்தற்கடவுளான பிரமனும் உல்லாஸப் படத்தக்க தென்னும் பொருளைத் தரும்.

*இப்பெயரால் அந்நாட்டின் சிறப்பு விளங்கும். நிடதம் - நிஷதம் என்னும் வடசொல்லின் திரிபு; இதற்கு - (பலருந்) தங்குமிட மென்று வடநூலார்*

*பொருளுரைப்பர் - புல்முகராய் - புல்லைக் கவ்விய வாயையுடையவராய் என்றுங் கொள்ளலாம்; புற்கௌவுதல் - தோல்விக்கு அறிகுறி. (57)*

***13.- மூன்றுகவிகள்- துருபதன் முதலியோரை வென்று துரோணன் மாற்றார்பலரை மடிவித்தலைக் கூறும்.***

***மறைவாய்வெஞ்சிலைமுனிவன்வரூதினிதன்னிலையழிந்து***
***குறைவாவந்தமைகண்டுகோதண்டமெதிர்வாங்கித்***
***துறைவாய்வெங்கனல்போலுந்துருபதன்கைச்சிலைதுணியப்***
***பிறைவாய்வெங்கணைதொடுத்துப்பிறைமுடியோனெனச்சென்றான்***

*(இ-ள்.) மறை வாய் - வேதங்களையோதிய வாயையும், வெம் சிலை- கொடிய வில்லையுமுடைய, முனிவன் - துரோணன், வரூதினி - (தனது) சேனை, தன் நிலை அழிந்து - தனக்குஉரிய உறுதிநிலை கெட்டு, குறைவு ஆ வந்தமை - குறைவாக வந்ததனை, கண்டு - பார்த்து, கோதண்டம் எதிர் வாங்கி - வில்லை எதிரிலே வளைத்து, துறை வாய் வெம் கனல் போலும் - வேள்வித்துறைவாய்ந்த வெவ்விய அக்கினி போன்ற [மிகக்கொடிய], துருபதன் - துருபதராசகுமாரனான திட்டத்துய்மனது, கை சிலை - கையிலுள்ள வில், துணிய- துண்டாகும்படி, பிறை வாய் வெம் கணை தொடுத்து - பிறைச்சந்திரன்போன்ற [வளைவான] நுனியையுடைய கொடிய அம்பைத் தொடுத்துக்கொண்டு, பிறை முடியோன் என - இளஞ்சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபிரான்போல, சென்றான் - (உக்கிரமாக எதிர்த்துச்) சென்றான் ; (எ-று.)*

*குறைவா வருதல் - சென்றபொழுதினுந் தொகை குறைவாக மீளுதலும், அவமானமுண்டாகப் பின்னிடுதலும். துறை - வேதவிதியொழுக்கம். கனலுவமையும், சிவனுவமையும், எதிர்க்கும் பொருளைத் தவறாது அழித்தற்கு என்க. துருபதபுத்திரனை 'துருபுதன்' என்றார், தருமபுத்திரனை 'தருமன்' என்றாற்போல. (58)*

***14. சத்தியகேதுவின்சாபஞ்சரமொன்றாலிரண்டாக்கிச்***
***சித்திரவெஞ்சிலையாண்மைச்சிகண்டியையுஞ்சிலையறுத்திட்***
***டுத்தமோசாமுதலாவுள்ளகொடுந்திறல்வேந்தர்***
***தத்தமுயிருடன்போகத்தானையெலாமடிவித்தான்.***

*(இ-ள்.) (சென்ற துரோணன்),- சத்தியகேதுவின் - சத்தியகேதுவென்னும் பாஞ்சாலராசனது, சாபம் - வில்லை, சரம் ஒன்றால் - ஒரம்பினால், இரண்டு ஆக்கி -துணித்து, சித்திரம்- அழகிய, வெம் கொடிய, சிலை- வில்லின் திறத்தில், ஆண்மை -பராக்கிரமத்தையுடைய, சிகண்டியையும்-, சிலை அறுத்திட்டு - வில்லையறுத்து,உத்தமோசா முதல் ஆ உள்ள - உத்தமோசா என்னும் அரசன் முதலாகவுள்ள,கொடு திறல் வேந்தர் - கொடிய வலிமையையுடைய அரசர்கள், தம் தம் உயிருடன்போக - தங்கள் தங்களது உயிரோடு புறங்கொடுத்துப் போகும்படி, தானை எலாம் -(பாண்டவ) சேனையை யெல்லாம், மடிவித்தான் - அழியச்செய்தான்; ( எ -று.)*

*சத்தியகேது - உண்மைக்குக் கொடிகட்டியுள்ளவ னெனப் பொருள்படும் : இவனைக் காசிராஜ வமிசத்தவனான விபுவின் தந்தை யென்று கூறுகின்றனர். ஒன்றை இரண்டாக்குதல் வல்லார்செயலாதலால் அங்ஙனம் செய்தானென ஒருசமத்காரந் தோன்ற ' இரண்டாக்கி' என்றார். அளவிறந்த அழிவற்ற செல்வவொளிகளுக்குச் சிகண்டமென்றுபெயர்; அதனையுடையவன், சிகண்டீ; இது, திருமாலின் ஆயிரநாமங்களுள் ஒன்று; அதுவே இவனுக்குப் பெயராக இடப்பட்டதுபோலும். **பி-ம்:** சிகண்டியையுந் தேரழித்திட்டு. உத்தமபானுவை. (59)*

*15.* ***தாண்டியவெம் பரிநகுல சாதேவர் வென்னிட்டார்***
***பாண்டியனு முதுகிட்டான் பாஞ்சாலர் புறமிட்டார்***
***ஈண்டியவெங் களத்தவிந்தா ரெத்தனையா யிரம்வேந்தர்***
***தூண்டியவெம் பரிநெடுந்தேர்த் துரோணன்கைத்தொடையாலே.***

*(இ-ள்.) (அப்பொழுது), தூண்டிய - செலுத்திய, வெம் பரி - வேகமான குதிரைகளைப்பூட்டிய, நெடு தேர் - பெரிய தேரையுடைய துரோணன் - துரோணனது, கை - கையினால் (விடப்பட்ட), தொடையால்- அம்புகளால், தாண்டிய வெம் பரி நகுல சாதேவர் - தாவிச்செல்லுகிற வேகமுள்ள குதிரைத்தொழிலில் வல்ல நகுலனும் சகதேவனும், வென் இட்டார் - முதுகுகொடுத்தார்கள்; பாண்டியன் உம் - பாண்டியநாட்டரசனும், முதுகு இட்டான் - முதுகுகொடுத்தான் ; பாஞ்சாலர் - பாஞ்சாலராசர்கள், புறம் இட்டார் - முதுகு கொடுத்தார்கள்; (இவைஇன்றி), ஈண்டிய- நெருங்கிய, வெம்- கொடிய, களத்து - போர்க்களத்தில், அவிந்தார் - இறந்தவர்,எத்தனை ஆயிரம் வேந்தர் - மிகப்பலவாயிரம் அரசர்களாவர்; (எ -று.)*

*நகுலன் குதிரைத்தொழிலில்வல்லவ னாதலால், 'தாண்டியவெம் பரி நகுலன்' எனப்பட்டான். தோற்றுப்பின்னிடைதலென்ற ஒரு பொருளை, வென்னிட்டார், முதுகிட்டான், புறமிட்டார் என வெவ்வேறு சொற்களாற் குறித்தது -* ***பொருட்பின்வருநிலை*** *யணி. இங்கே பாண்டியனென்றது, அருச்சுனன்மனைவியான சித்திராங்கதையின் தந்தையாகிய சித்ரவாகனனை. (60)*

வேறு.

***16.-துரோணனும் தருமனும் நெருங்குதல்.***

**வடுத்தரு வெஞ்சி லீமுகமும் வணக்குகொ டுஞ்ச ராசனமும்**
**எடுத்தும னங்க தாவுசின மெழுப்பவே ழுந்தொ ரோர்நொடியில்**
**நடுத்தகை வின்றி வானவரு நடுக்குறு கின்ற போர்முனையில்**
**அடுத்தனர் வன்ற போதனனு மடற்றரு மன்கு மாரனுமே.**

*(இ-ள்.) (பின்பு), வானவர்உம் - தேவர்களும், நடுக்கு உறுகின்ற - (கண்டுஅஞ்சி) நடுக்கமடையும்படியான, போர் முனையில் - போர்க்களத்தில், வல்தபோனன்உம் - வலிமையையுடைய துரோணாசாரியனும், அடல் தருமன் குமாரன்உம் - வலிமையையுடைய தருமபுத்திரனும், மனம் - (தம்தம்) மனத்தில், கதாவு - மிகுதியாகப் பொருந்திய, சினம் - கோபம், எழுப்ப - (தம்மைத்) தூண்ட, வடு தரு - விரணத்*

*தழும்பை யுண்டாக்குகிற, வெம் - கொடிய, சிலீமுகம்உம் - அம்புகளையும், வணக்கு- வளைத்தற்குரிய, கொடு - கொடிய, சராசனம்உம்- வில்லையும், எடுத்து -எடுத்துக்கொண்டு, எழுந்து - புறப்பட்டு, நடுதகைவு இன்றி - இடையிலே தடையில்லாமல், ஒர் ஒர் நொடியில்- ஒவ்வொரு மாத்திரைப்பொழுதிலே, அடுத்தனர்- (ஒருவரையொருவர்) நெருங்கினார்கள்; ( எ -று.)*

*ஆறிப்போவதான புண்ணை யுண்டாக்குவதென்பதனினும், ஆறாதுகிடக்கும் வடுவை யுண்டாக்கு மென்பது சிறப்பாதலால், 'வடுத்தரு சிலீமுகம்' என்றார். 'கதுவுசினம்' என்றும், 'எழுப்ப வெழுந்தோர் நொடியில்' என்றும், 'நடுத்தகைவின்வானவரு நடுக் குறுவெம்போர் முனையில்' என்றும் வழங்குகிற பாடம், சந்தவமைதிக்கு வழுவாம், இனி, அடுத்த பாடல்முதல்தான் விருத்தம் வேறுபடுகின்றதென்று கொள்வார்க்கு, இந்தப்பாடங்கள் ஏற்கும்.* ***பி - ம்*** *: எழுப்பவெழுந்த தோர் நொடியில்.*

*இதுமுதல் பத்துக் கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் கருவிளச்சீர்களும், இரண்டாஞ்சீரும் ஐந்தாஞ்சீரும் தேமாச்சீர்களும், மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் கூவிளங்காய்சீர்களுமாக வந்த* ***அறுசீராசிரியச்சந்தவிருத்தங்கள்.***

*' தனத்தன தந்த தான தன தனத்தன தந்த தானதன' என்பது, இவற்றிற்குச் சந்தக்குழிப்பாம்.*
*(61)*

### *17.- இருதிறத்துச்சேனைகளும் தம்மில் பொருதல்.*

***அதிர்த்தனசங்கசாலமுதலனைத்துவிதங்கொள்காகளமும்***
***உதிர்த்தனவண்டகோளமுறவொலித்துடுவின்குழாமுழுதும்***
***விதிர்த்தெனசெங்கைவாளொடயில்விழித்தனகண்கடீயுமிழ***
***வெதிர்த்தனதங்கள்சேனைகளுமெதிர்ப்படுமைந்தர்போர்பொரவே.***

*(இ-ள்.) (அப்போர்க்களத்தில்), சங்க சாலம் முதல் - சங்குகளின் கூட்டம்முதலாக, அனைத்து விதம் கொள் - மிகப்பலவகைகளைக் கொண்ட, காகளம்உம் - வாத்தியங்கள்யாவும், அதிர்த்தன- முழங்கினவாய், அண்டகோளம் உற - உலகவுருண்டைமுழுவதிலும், ஒலித்து - சப்தித்து, உடுவின்குழாம் முழுதுஉம் - நக்ஷத்திரக் கூட்டம் முழுவதையும், உதிர்த்தன - (அதிர்ச்சியால்) உதிரச்செய்தன; செம் கை -(வீரர்களது) சிவந்த கைகள், வாளொடு அயில்- வாளையும் வேலையும், விதிர்த்தன - வேகமான அசைத்தன; கண்கள் - (அவ்வீரர்கள்) கண்கள், தீ உமிழ - நெருப்பைச் சொரியும்படி, விழித்தன - (கோபத்தோடு) திறந்து உற்றுநோக்கின; (இவ்வாறு), எதிர் படு மைந்தர்- (ஒருவருக்கொருவர்) எதிர்ப்பட்ட வீரர்கள், போர் பொர - போர்செய்ய, தங்கள் சேனைகள் உம் - அவர்களது (யானைமுதலிய) சேனைகளும், எதிர்த்தன - (ஒன்றோடொன்று) எதிரிட்டுப்பொருதன; ( எ -று.)*

*காகளம் - எக்காள மென்றும்வழங்கும் ; ஊதப்படுவ தொரு வாத்திய விசேஷம்: இச்சிறப்புப்பெயர், இங்கே , வாத்தியங்களுக்குப் பொதுப்பெயராய் நின்றது.* ***பி -ம்*** *: போர்செயவே.*
*(62)*

### *18.- இதுமுதல் நான்குகவிகளால், சதுரங்கசேனைகளை முறையே வருணிக்கின்றார்; அவற்றுள், இது -யானைவருணனை.*

***மதித்துமதங்களேழினுமெய்வனப்புறுகொண்டன்மானுவன***
***கதித்துநெடுங்கைவீசியுடுகணத்தைமுகந்துவாருவன***
***மிதித்துரகன்பணாமணிகள்விழித்துவெகுண்டுலாவுவன***
***கொதித்திருகண்களாலுமெரிகொளுத்தினகும்பவாரணமே.***

*(இ-ள்.) கும்பம் வாரணம் - (அப்போர்களத்திலுள்ள) மஸ்தகத்தையுடைய யானைகள், மதங்கள் ஏழின்உம் - எழுவகைமதங்களாலும், மதித்து - கொழுத்து, மெய் - (கறுத்த) உடம்பினால், வனப்பு உறு கொண்டல் மானுவன - அழகு மிக்க காளமேகத்தை யொத்திருப்பன; கதித்து - கோபித்து, நெடு தை வீசி - நீண்ட துதிக்கையை மேல்வீசி, உடு கணத்தை - நக்ஷத்திரக்கூட்டத்தை, முகந்த வாருவன - மிகுதியாகமொண்டு எடுப்பன; உரகன் - (கீழிருந்து பூமியைத் தாங்குகிற) ஆதிசேஷனது, பணா மணிகள் - படங்களிலுள்ள மாணிக்கங்களை, மிதித்து - (கால்வலிமைமிகுதியால்) துவைத்து, வெகுண்டு- கோபங்கொண்டு, விழித்து - (அப்கோபந்தோன்றக்) கண்விழித்து, உலாவுவன - சஞ்சரிப்பன; கொதித்து - மனம்வெதும்பி, இரு கண்களாலும்-, எரி கொளுத்தின - தீயைச் சொரிந்தன;*

*மதங்களேழ் - இரண்டுகண்கள், இரண்டுகன்னங்கள், இரண்டு துதிக்கைத்துளைகள், ஆண்குறி என்பவற்றினின்று பாய்கின்றவை. துதிக்கைநீண்டிருந்தால் உத்தம கஜலக்ஷண மாதலால், 'நெடுங்கை' என்றார். உடுகணம், பணாமணி, கும்பவாரணம் - வடமொழித் தொடர்கள். கோபமிகுதியால் கண் மிகச்சிவந்து கொடுமையாகத் தோன்றுதலை 'கொதித் திருகண்களாலு மெரிகொளுத்தின' என்றது. கும்பம் -குடம்; அதுபோன்ற வடிவமுடைய மஸ்தகத்துக்கு உவமவாகுபெயர். 'மிதித் துரகன்பணாமணிகள் விழுத்தி' என்ற பாடம்சிறந்தது; அதற்கு - தாம் மிதித்தால் ஆதிசேஷன்படத்து மாணிக்கங்களைக் கீழ்விழச்செய்த என்ற பொருள். முதலடி*

***உவமையணி*** யும், மற்றையவை - ***உயர்வுநவிற்சியணி*** யுமாம் ***பி-ம்*** : பணா முடிவுகள் விதிர்த்து. *(63)*

### *19.- தேர்வருணனை.*

**வரைக்குலமென்றுகூறிடினவ்வரைக்குவயங்குநேமியில**
**நிரைக்குநெடும்பதாகையிலநிறத்தகொடிஞ்சியாதியில**
**உரைப்படவுந்துபாகரிலருகைத்ததுரங்கராசியில**
**விரைத்துவிரைந்துலாவலிலவெனச்செருமண்டுதேர்பலவே.**

*(இ-ள்.) வரை குலம் என்று- மலைகளின்கூட்டமென்று, கூறிடின் - (உவமை) சொல்லலாமென்றால், அ வரைக்கு - அம்மலைகளுக்கு, வயங்கும் நேமி இல - விளங்குகிற சக்கரங்கள் இல்லை; நிரைக்கும் - வரிசையாகநாட்டப்பட்ட, நெடு பதாகை - நீண்ட துவசங்கள், இல -இல்லை; நிறத்த- நல்லநிறமுள்ள வையாய்விளங்குகிற, கொடிஞ்சிஆதி - கொடிஞ்சிமுதலிய உறுப்புகள், இல - இல்லை;*

*உரை பட - புகழுண்டாக, உந்து-செலுத்துகிற, பாகர் - சாரதிகள், இலர்- இல்லை; உகைத்த- செலுத்தப்படுகிற, துரங்க ராசி-குதிரைகளின் கூட்டங்கள், இல-இல்லை; இரைத்து- ஆரவாரித்துக்கொண்டு, விரைந்து உலாவல்-வேகமாகச்செல்லுந்தொழில்கள், இல-இல்லை, என- என்று சொல்லும்படி, செரு மண்டு - அப்போரிற் பொருந்திய, தேர் -தேர்கள், பல -அநேகங்களாம்; ( எ-று.)*

*வலிமை பருமை உயர்ச்சிகளில் ஒப்பனவாயினும், சக்கரம் முதலியன இல்லாமையால் மலைகளுந் தேர்கலுக்கு ஒப்பாகா என்பதாம். இப்பாட்டில் உபமானமாகிய மலையினும் உபமேயமாகிய தேருக்கு நேமி முதலியன உண்மையாகிய விசேடங் கூறியதனால், **வேற்றுமையணி** . கொடிஞ்சி - கொடிஞ்சு என்றும் வழங்கும். உரை பட- (குதிரைகளை அதட்டுஞ்) சொல் உண்டாக என்றுமாம். **பி -ம்** : பாகரில. (64)*

### *20.- குதிரை வருணனை.*

**உகத்தின்முடிந்தநாளலையோடொலித்தெழுசங்கவேலையென**
**மிகப்புகைகொண்டுவானுலகும்வெடித்திடமண்டுதேயுவென**
**நகச்சிகரங்கள்சாயவெதிர்நடப்பனசண்டைவாயுவென**
**விகற்செய்துசெம்பராகமிசையெழுப்பினதுங்கவாசிகளே.**

*(இ-ள்.) உகத்தின் முடிந்த நாள் - கல்பத்தின் முடிவுகாலத்தில், அலையோடு ஒலித்து எழு - அலைகளோடு ஆரவாரித்துப் பொங்குகிற, சங்கம் வேலை என - சங்குகளையுடைய கடல்போலவும்,- (அக்காலத்தில்), மிக புகை கொண்டு - புகையைமிகுதியாகக்கொண்டு, வான்உலகுஉம் வெடித்திட - மேலுள்ள தேவலோகமும்வெடிக்கும் படி, மண்டு - மூண்டுஎரிகிற, தேயு என - காலாக்கினி போலவும்,(அக்காலத்தில்),- நகம் சிகரங்கள் சாய - மலைகளின் உச்சிகள் சரியும்படி, எதிர்நடப்பன - எதிர்த்துச்செல்வனவான, சண்டம் வாயு என - கொடியகாற்றுக்கள்போலவும்,- துங்கம் வாசிகள் - உயர்ந்த குதிரைகள் இகல் செய்து - போரைச்செய்து, செம் பராகம் - சிவந்த புழுதிகளை, மிசை எழுப்பின - மேலே(கால்களால்) கிளப்பின;*

*ஆரவாரத்துக்கும் அணிபடவருதற்கும் கடலும், அஞ்சத்தக்க கொடுமைக்குத் தீயும், வேகத்துக்கு வாயுவும் என ஏற்றபடி ஒப்புமை கண்டுகொள்க. **உவமையணி.***
*கல்பாந்தகாலத்தில் உலகையழிக்கக் கடல்பொங்கியெழுதலும், பொருந்தீப் பற்றியெரிதலும், பெருங்காற்று விசையோடுஅடித்தலும், இயல்பு, சப்தமருத்துக்களென வாயு எழுவகைப்படுதலால், 'நடப்பன' என அதனைப் பன்மையால் விசேடித்தார். (65)*

*21.- காலாள் வருணனை.*

***விளைத்தனர்தொந்தமாகவமர்மிகைத்தனர்தந்தம்வீரமுட***
***னுளைத்தனர்சிங்கசாபமெனவுறுக்கினர்சென்றுமேன்முடுகி***
***வளைத்தனர்கொண்டவார்சிலைகள்வடித்தசரங்களாலுழுது***
***திளைத்தனர்வென்றிகூரும்வகைசெருக்களமெங்குமாடவரே.***

*(இ-ள்.) செரு களம் எங்குஉம் -அப்போர்களத்தில் எவ்விடத்தும், ஆடவர்- காலாள்வீரர்கள்,- தொந்தம் ஆக - இவ்விரண்டுபேராக, அமர் விளைத்தனர் - (ஒருவரோடொருவர்) போரைச் செய்தார்கள் ; தம் தம் வீரமுடன் - தங்கள் தங்கள்பராக்கிரமத்தோடு, மிகைத்தனர் - செருக்கினார்கள்; சிங்க சாபம் என - சிங்கக்குட்டிகள்போல, உளைத்தனர்- கர்ச்சித்தார்கள்; சென்று மேல் முடுகி - எதிர்சென்று மேல்நெருங்கி உறுக்கினர்- அதட்டினார்கள்; கொண்டவார் சிலைகள் - (தாம்) ஏந்திய நீண்ட விற்களை, வளைத்தனர் - வளைத்தார்கள்; வடித்த சரங்களால்-வடிக்கப்பட்ட அம்புகளால், வென்றி கூரும் வகை - வெற்றிமிகும்படி, உழுது -(பகைவருடம்பைக்) கிளறி, திளைத்தனர் - மகிழந்தார்கள்;*

*தொந்தம், சிங்கசாபம் - த்வந்த்வம், ஸிம்ஹஸாபம் என்னும் வடசொற்களின் திரிபுகள். சாபம் [சாபம்] என்று குட்டிக்குப் பெயர்; இதனை, மேல் பதினெட்டாம்போர்ச்சருக்கத்தில் "காண்டரிய கேசரிவெஞ்சாப மன்னார்" என்னுமிடத்துங் காண்க. சாபம் என்பது - இளமைப்பெயராவதொரு வடசொல் என்று அறியாதார், சாபச்சிங்கமென மொழிமாற்றி, வில்லையுடைய சிங்கம்போல வென்று நலிந்துபொருள்கொண்டு இடர்ப்படுவர். உழுதலென்ற வினைக்கு ஏற்ப, சரத்தைக் கலப்பையாகவும், பகைவருடலைக் கழனியாகவும், போரைப் பயிராகவும், வெற்றியை விளைவாகவும் கொள்க. திளைத்தல் - இடைவிடாது பயிலுதலுமாம்.*
***பி-ம்** : திளைத்தனர் வென்றி கூருவகை. (66)*

*22.- யுதிட்டிரனுக்கும் துரோணனுக்கும் கைகலந்த போர்.*

***மிகைத்தனர்தும்பைமாலைமுடிமிலைச்சினரின்றுசாலுமென***
***நகைத்தனர்தங்கடேருமெதிர்நடத்தினர்சண்டவேகமொடு***
***பகைத்தனரங்கம்யாவுமிசைபடப்படநஞ்சுகால்பகழி***
***யுகைத்தனரன்றையாடமரிலுதிட்டிரனுந்துரோணனுமே.***

*(இ-ள்.) அன்றை ஆடு அமரில்- அன்றைத்தினத்தில் நடந்த போரில், உதிட்டிரனும் துரோணனும்-, மிகைத்தனர்-செருக்கினார்கள்; தும்பைமாலை- (போருக்குஉரிய) தும்பைப்பூமாலையை, முடி மிலைச்சினர் - (தமது) சிரசில் சூடினார்கள்; இன்று சாலும் என -இன்றைக்கு (இப்போர்) தகுமென்று, நகைத்தனர் -சிரித்தார்கள்: தங்கள் தேர்உம்- தம் தம் தேரையும், எதிர் நடத்தினர் -(ஒருவருக்கொருவர்) எதிரிற்செலுத்தினார்கள்; சண்ட வேகமொடு - கொடியஉக்கிரத்துடனே, பகைத்தனர் - பகைமை பாராட்டினார்கள்; அங்கம் யாஉம்-உடம்பினுறுப்புக்கள் எல்லாவற்றிலும், மிசை பட பட - மேலே மிகுதியாய் ஊன்றும்படி, நஞ்சு கால் பகழி - விஷத்தைச் சொரிகிற அம்புகளை, உகைத்தனர் - செலுத்தினார்கள்; (எ -று.)*

*சண்டைவேகமொடு தேரை எதிர் நடத்தினர் என இயைப்பினும் அமையும். படப்பட- அடுக்கு, மிகுதி. பகையை யழித்தற்காக அம்பு நுனியில் விஷந்தடவுதலும் உண்டு; தவறாமற்கொல்லுங் கொடுமையால் விஷத்தன்மையை வெளியிடும் அம்பு என்றலும்*

*இயையும். இன்று சாலும் என - இன்றைக்கே (போர்) முடியுமென்று எனினுமாம். **பி -ம்:** மிலைச்சினரிந்த்ரசால்மென. (67)*

*23.- தருமன் குருவின்பதாகை முதலியவற்றை ஒழியுமாறு செய்தல்.*

***சினத்துமுனைந்தபோரில்வருசிலைக்குருவின்பதாகையற***
***மனத்தினுமுந்துமாதுணியவயத்துடனுந்துபாகன்விழ***
***வனைத்துருளுஞ்சதாவியிடவடுக்குறநின்றதேரழிய***
***வினத்தொடையைந்துபூபதியுமிமைப்பொழுதின்கணேவினனே.***

*(இ-ள்.) சினத்து - கோபத்தோடு, முனைந்த - முயன்று செய்த, போரில் - யுத்தத்தில், வரு -(எதிர்த்து) வந்த, சிலை குருவின் - வில்லாசிரியனான துரோணனது,பதாகை-(வேதக்) கொடி, அற - அறுபடவும், மனத்தின்உம் முந்து - மனோவேகத்தினும் முற்படச்செல்லுகிற, மா - குதிரைகள், துணிய - துண்டாகவும், வயத்துடன் - வலிமையோடு, உந்து -தேர்செலுத்துகின்ற, பாகன் - சாரதி, விழ - இறந்து கீழே விழவும், அனைத்து உருள்உம் - தேர்ச்சக்கரங்களெல்லாம் சதாவியிட - சிதைந்து விழவும், அடுக்க உற நின்ற - (அனேக அங்கங்கள் ஒன்றன்மேலொன்றாக) அடுக்கியிருக்கின்ற, தேர்-, அழிய - அழியவும், இனம் தொடை ஐந்து - ஒருசாதியான ஐந்து அம்புகளை, பூபதிஉம் - பூமிக்குத்தலைவனான யுதிட்டிரனும், இமை பொழுதின் கண் - ஒருமாத்திரைப்பொழுதிலே, ஏவினன் - (அக்கொடி முதலிய ஐந்தன்மேலும் தனித்தனி) செலுத்தினான்; (எ -று.)*

*ஒருபொருளை நினைத்த மாத்திரத்தில் மனம் அப்பொருள் எவ்வளவு தூரத்திலிருப்பினும் அவ்விடத்தே செல்லுதலால், மனம், வேகத்துக்குச் சிறந்த உவமையாகக் கூறப்படும், 'விழ' என்றது- மங்கலவழக்கு. (68)*

*24.- இதுவும் அடுத்த கவியும் குளகம்: படையிழந்த துரோணனைத் தருமன் ஏகுமாறுசொல்ல அவன் ஏகுதல்.*

***தனித்துமலைந்தபோரிலெழுதலத்தரசன்கைவாளிகளில்***
***அனத்தம்விளைந்தநாணொடுவிலறத்துணியுண்டதாகவமுன்***
***முனிக்குலமென்றுமாதிமறைமுதற்குருவென்றுமேன்மையுற***
***இனிக்கணையொன்றுமேவுகிலமிளைப்பறவஞ்சலேகெனவே.***

*(இ-ள்.) தனித்து மலைந்த போரில்- (வேறு எவருந் துணையில்லாமல் தருமனும் துரோணனும் தொந்தயுத்தமாகத்) தனித்துச் செய்த போரிலே, எழு தலத்துஅரசன் - ஏழுதீவுகளாகவுள்ள பூமி முழுவதுக்கும் இராசனான தருமனது, கைவாளிகளில் - கையினா லெய்யப்பட்ட அம்புகளால், அனத்தம் விளைந்து - (துரோணனுக்குத்) தீங்கு உண்டாகி, நாணொடு வில் அற துணியுண்டது- நாணோடுகூடிய வில் இரண்டாம்படி துணிக்கப்பட்டது; (அப்பொழுது), ஆகவம் முன் - போர்க்களத்திலே, (தருமன் துரோணனை நோக்கி), 'முனிகுலம் என்றும் - (நீ பிறந்தசாதி) பிராமணசாதி யாதலாலும், ஆதி மறை முதல் குரு என்றும் - பழமையான வேதம் வல்ல சிறந்த ஆசிரியனாதலாலும், மேன்மை உற - (உன்பக்கல் எமக்குக்) கௌரவபுத்தியிருத்தலால், இனி கணை ஒன்றுஉம் ஏவுகிலம்-*

*இனிமேல் அம்பொன்றையும் (உன்மீது யாம் ) செலுத்தோம்: அஞ்சல் - பயப்படாதே; இளைப்பு அற - சோர்வு நீங்க, ஏகு - செல்வாய்,' என - என்றுசொல்ல,-(எ - று.)- 'முனி போயினன் என அடுத்த கவியில் முடியும்*

*இங்ஙனம் ஏகென விடுத்தது - **தழிஞ்சி** என்னும் புறப்பொருள் துறையின்பாற்படும்; அது- சாய்ந்தவர்மேல் செல்லாமல் தழுவுது. இப்படித் தருமன் பெருமைதோன்றக் கூறினதால், அப்பொழுது துரோணனுயிர் தருமன் வசத்ததாயிருந்தது என்பது போதரும். ஏழு தீவுகள் - சம்பூ, பிலட்சம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம் என்பன. அனத்தம்=அநர்த்தம். துணியுண்டது, உண்- செயப்பாட்டுவினைப் பொருளுணர்த்தும் விகுதி. ஆஹவம் - வட சொல் முன் - ஏழுனுருபு. **பி - ம்** : ஆகவமும். இளைப்புற. (69)*

***25. அறத்தின் மகன்ற னாண்மையினை யழித்துயி ரெஞ்சி டாவகைதன்,***

***மறத்தொடு கொண்டு போவலென மதித்ததெிர் வந்த***
***சாபமுனி,***
***திறத்தினிவன்கை யேவுகணை செயித்தது நாணிமெலி,***
***வுறத்தளர் சிந்தை யோடுதனதுடற்சுமை கொண்டு***
***போயினனே.***

*(இ-ள்.) அறத்தின் மகன்தன் - தருமபுத்திரனது, ஆண்மையினை - பராக்கிரமத்தை, அழித்து - அழியச்செய்து, உயிர் எஞ்சிடா வகை -(அவனது) உயிர் ஒழியாதபடி [உயிருடன் என்றபடி], தன் மறத்தொடு- தனது வலிமையால், கொண்டுபோவல் என - (அவனைப்) பிடித்துக்கொண்டுபோவேனென்று, மதித்து - எண்ணி, எதிர் வந்த - (அவனெதிரிற் போருக்கு) வந்த, சாபம் முனி - வில்லில் வல்லதுரோணன், திறத்தின் - போர்த்திறமையை யுடைய, இவன்- இத்தருமனது, கை -கையினால், ஏவு - எய்யப்பட்ட, கணை - அம்புகள், செயித்தது - (தன்னை) வென்றதை, கண்டு-, நாணி- வெட்கப்பட்டு, மெலிவுஉற- வாட்டமுண்டாக, தளர் சிந்தையோடு- சோர்ந்த மனத்துடனே, தனது உடல் சுமை கொண்டு - தனது உடம்பாகிய பாரத்தைச் சுமந்துகொண்டு, போயினன் - (மீண்டு) சென்றான்; (எ-று.)*

*போரில் தன்மாணாக்கனாற் பரிபவப்பட்ட துரோணாசாரியன் உயிர் நீங்காது உடம்போடிருத்தலை ஒரபாரமாகக்கருதின னென்பதும், அவனுக்கு அப்பொழுது உடம்பும் ஒருபாரமாகும்படி சோர்வு உளதாயிற்று என்பதும் தோன்ற, 'உடற்சுமைகொண்டு' என்றார். மறத்தொடு, ஓடு- கருவிப்பொருளது. பி-ம்: ஏவு பல.*

வேறு.

*26.-தோற்றோடிய துரோணன் வேறொருதேரி லேறுதல்.*

***தருமன் மைந்த னுடன்ம லைந்து சமரி லஞ்சி யோடியுங்***
***கரும நன்று படநி னைந்த கலச யோனி பின்னையு***
***முரண்மி குந்து டற்ற வேகொன் முந்த வோட வேகொலாம்***
***விரைவு டன்சி னங்க டாவ வேறொர் தேரி லேறினான்.***

*(இ - ள்.) (இவ்வாறு), தருமன் மைந்தனுடன் - தருமபுத்திரனுடனே, மலைந்து- போர்செய்து, சமரில் - அப்போரில், அஞ்சி - பயந்து, ஓடிஉம்- (தோற்றுமுதுகுகொடுத்து) ஓடியும்,- கருமம்- (தான் வெல்லவேண்டுந்) தொழிலை, நன்று பட - நன்றாக, நினைந்த- ஆலோசித்த, கலச யோனி- பாத்திரத்தை (த் தனக்குப்) பிறப்பிடமாகவுடைய துரோணன், பின்னைஉம் - மறுபடியும், முரண் மிகுந்து உடற்றஏ கொல் - வலிமை மிக்குப் போர்செய்தற்காகவேயா? முந்த ஓடஏ கொல் ஆம் - விரைவாக ஓடிப்போவதற்காகவேயோ? விரைவுடன் - துரிதத்தோடு, சினம் கடாவ - கோபந் தூண்ட, வேறு ஓர் தேரில் ஏறினான் - மற்றொருதேரின் மீதுஏறினான்;*

*துரோணன் முன்புதோற்றதற்கு நாணி மற்றொருதரத்திலாயினும் வெல்லும்பொருட்டு வேறொருதேரின்மே லேறியதை, இதுவும் முன்போலத் தோல்வியாகவே முடிதலால், கவி சமத்காரமாக 'முரண்மிகுந்துடற்றவேகொல் முந்தஓடவேகொல்' என்று கூறினார். அவன் இவ்விரண்டாந் தரத்திலும் புறங்கொடுத்தலை, மேல் 43-ஆங் கவியிற் காண்க. 'கருமநன்று பட நினைந்த' என்பதற்கு- செய்தொழில்களை நன்றாக ஆராய்ந்தறிந்த என்று இயற்கை குறிப்பதாக் கொள்ளினுமாம். கலசயோநி- வடசொற்றொடர்; வேற்றுமைத்தொகையன்மொழி; இப்பெயர்- பெரும்பாலும் அகத்தியனுக்கும், சிறுபான்மை வசிட்டனுக்கும் வழங்கும்.* ***பி - ம்*** *: நினைந்து-கதாவ.*

*இதுமுதல் பத்தொன்பது கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச் சீரொன்று விளச்சீரும்மற்றையாறும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட* ***எழுசீராசிரியவிருத்தங்கள்.*** *(71)*

*27.- இதுமுதல் நான்குகவிகள் - குளகம்: பாண்டவர்பக்கத்து வீரர் கனன்றுவளைய, துரியோதனன்பக்கத்துச் சேனைவீரர்களும் திரள முனைந்த போர் நிகழ்ந்தது கூறும்.*

***தங்கண்மன்னனம்முனைத்தனித்துவென்றவின்மையுந்***
***துங்கவென்றியின்றியேதுரோணனாரழிந்ததும்***
***அங்குளங்கனன்றுமீளவணிகொடேரினானதுஞ்***
***சிங்கமென்னவருகுநின்றசிறுவர்கண்டுசீறியே.***

*(இ-ள்.) தங்கள் மன்னன்- தங்கள் அரசனான யுதிட்டிரன், அ முனை - அப்போரிலே, தனித்து வென்ற - தனியாய்நின்று சயித்த, வின்மைஉம்- வில் வன்மையையும், துங்கம் வென்றி இன்றிஏ - சிறந்த வெற்றியில்லாமலே, துரோணனார்அழிந்ததுஉம் - துரோணாசாரியர் தோற்றதையும், மீள - பின்பு, உளம் கனன்று -(அந்தத் துரோணர்) மனங்கொதித்து, அங்கு - அவ்விடத்தில், அணி கொள் தேரின்ஆனதுஉம் - அலங்காரங்கொண்ட மற்றொருதேரில் ஏறியதையும், சிங்கம் என்னஅருகு நின்ற சிறுவர் - சிங்கங்கள் போலத் தருமனருகில் நின்ற இளவீரர்கள், கண்டு-, சீறி- (துரோணர்மீது) கோபித்து,- (எ - று.)-"முனியை வளைய" எனஅடுத்தகவியோடு தொடரும். (72)*

***28.- முந்திமுந்திமச்சராசனோடுசேனைமுதல்வனுங்***
***குந்திபோசனாதியானகுலமகீபர்யாவரும்***
***வந்துசூழவேழமீதுவயமடங்கல்செல்வபோல்***
***அந்தவேதமுனியையோடியக்கணத்தில்வளையவே***

*(இ-ள்.) மச்ச ராசனோடு - மத்ஸ்யதேசத்தரசனான விராடனுடன், சேனை முதல்வன்உம் - சேனைத்தலைவனான திட்டத்துய்மனும், குந்திபோசன் ஆதி ஆன - குந்திபோஜதேசத்தரசன் முதலான, குலம் மகீபர் யாவர்உம் - உயர்குலத்தில் தோன்றிய அரசர்களெல்லோரும் , முந்தி முந்தி- ஒருவருக்கொருவர் முற்பட்டு, சூழ வந்து- சுற்றிலும் வந்து, வேழம்மீது- ஒரு யானையின்மேல், வய மடங்கல்- வலிமையையுடைய பலசிங்கங்கள், செல்வ போல்- (எதிர்த்துச்) செல்வனபோல, ஓடி- விரைந்து, அந்த வேதம் முனியை - வேதம் வல்ல அத்துரோணனை, அ கணத்தில்- அந்தக்ஷணத்தில், வளைய - வளைந்துகொள்ள,- ( எ -று.)-"செருச்செய்தார்" என மேல் முப்பதாங்கவியில் முடியும்.*

*மச்சம்- வடசொற்சிதைவு; நீர்வளமிகுதியால் எங்கும் மீன்கள் மலிந்திருத்தல்பற்றி, மத்ஸ்யதேசமெனப் பெயர்போலும். குந்தி போசன் - பாண்டவர் தாயாகிய குந்தியின் உடன்பிறந்த முறையாகுபவன்; இவன்பெயர் 'புரஜித்' என்பதை முதனூலால் அறிக. (73)*

***29. கன்னனாதிசகுனியாதிகலிங்கதேசனாதியா***
***மன்னனாதியாகவங்குமறையவன்பெரும்படை***
***தென்னனாதிநகுலனாதிதிட்டத்துய்மனோடபி***
***மன்னனாதியாகவிங்குதிட்டிரன்வரூதினி***

*(இ-ள்.) கன்னன் ஆதி - கர்ணன் முதலாகவும், சகுனி ஆதி- சகுனி முதலாகவும், கலிங்கதேசன் ஆதி ஆ - கலிங்கநாட்டரசனான சோமதத்தன் முதலாகவும், மன்னன் ஆதி ஆக-(யாவருக்கும்) அரசனான துரியோதனன் முதலாகவும் அங்கு- அப்பக்கத்தில், மறையவன் பெரு படை- வேதியனான துரோணனது பெரியசேனையிலும், - தென்னன் ஆதி- பாண்டியன் முதலாகவும், நகுலன் ஆதி- நகுலன் முதலாகவும், திட்டத்துய்மனோடு அபிமன்னன் ஆதி ஆக -திட்டத்துய்மனும் அபிமந்யுவும் முதலாகவும், இங்கு - இப்பக்கத்தில், உதிட்டிரன்வரூதினி- தருமனது சேனையிலும்,-(எ-று.)-" மன்னர்தாமும் மன்னர் தாமும் செருச்செய்தார்" எனவருங்கவியோடுமுடியும். 'திட்டதுய்மனாதிமால், பின்னனாதியாகவிங் குதிட்டிரன்பெரும்படை' என்ற பாடத்தில், மால்பின்னன் - சாத்தகி யென்க. (74)*

***30. நின்றசேனைமன்னர்தாமுநின்றவந்நிலத்திடைச்***
***சென்றசேனைமன்னர்தாமுமெங்கணுஞ்செருச்செய்தார்***

***என்றுகூறியெதிருரைத்தல்யாவருக்குமுடிவுறா***
***தொன்றுநூறுசின்னமாவுடைந்ததோரொருடலமே.***

*(இ-ள்) நின்ற- (அப்பக்கத்தில்) நின்ற, சேனை மன்னர்தாம் உம் - சேனைகளோடுகூடிய அரசர்களில் இன்னாரின்னாரும், நின்ற அ நிலத்திடை - அங்ஙனம் நிற்கப்பெற்ற அக்குருக்ஷேத்திரத்தி*

*னிடத்து, சென்ற - போய்ச்சேர்ந்த, சேனை மன்னர்தாம் உம் - சேனைகளோடுகூடிய (இப்பக்கத்து) அரசர்களில் இன்னாரின்னாரும், எங்கண்உம்- எல்லாவிடத்தும், செரு செய்தார்- போர்செய்தார்கள், என்று கூறி - என்று பகுப்பிட்டு, எதிர் உரைத்தல் - நேராகச்சொல்லுதல், யாவர்க்குஉம் - எவருக்கும், முடிவு உறாது - முடியாது; (அப்போரில்), ஓர் ஒர் உடலம் - (போர்வீரர் பலரது ) ஒவ்வொரு உடம்பும், ஒன்று நூறு சின்னம் ஆ - ஒவ்வொன்று நூறுதுண்டுகளாக, உடைந்தது - சிதைந்தது; (எ-று.)*

*கீழ்க்கவியிற்கூறிய முறைமைக்கு ஏற்ப, இக்கவியில், 'நின்ற சேனை மன்னர்' எனத் துரியோதனன் பக்கத்தாரையும், 'சென்ற சேனைமன்னர்' எனத் தருமன்பக்கத்தாரையும், முறையே குறித்தது -* ***முறைநிரனிறைப்பொருள்கோள்.*** *குருக்ஷேத்திரம் அப்பொழுது துரியோதனனாளுகைக்கு உட்பட்டிருந்ததனால், அதில்'நின்றமன்னர்' அவரும், 'சென்றமன்னர்' இவருமாவர்.* ***பி-ம்*** *: என்றுகூறியிகலுரைக்கில். (75)*

### *31.- துரியோதனன்பக்கத்து நால்வகை வீரரிலும் பலர் இறந்தமை.*

**வேல்விதத்தும்வாள்விதத்தும்வில்விதத்துவிடுநெடுங்**
**கோல்விதத்துமுடிதுணிந்தகொற்றமன்னர்சற்றலார்**
**நூல்விதத்துமிக்ககேள்விநோன்சிலைக்கைம்முனிபடைக்**
***கால்விதத்துரததுரங்ககயவிதத்துவயவரே.***

*(இ-ள்.) நூல் விதத்து - சாஸ்திரங்களின் வகைகளிலே, மிக்க - மிகுந்த, கேள்வி - பொருட்கேள்விகளையுடைய, நோன் சிலை கை முனி - வலிய வில்லையேந்திய கையையுடைய துரோணனது, படை- சேனையிலுள்ள, கால்விதத்து - காலாள்வகைகளையும், ரதம் துரங்கம் கயம் விதத்து- தேர் குதிரை யானை இவற்றின் வகைகளையும் (ஆகச் சதுரங்கங்களையும்) உடைய, வயவர்- வீரர்களுள் (பகைவர்களது), வேல் விதத்துஉம் - வேல்களின் வகைகளாலும் வாள்விதத்துஉம்- வாள்களின் வகைகளாலும், வில் விதத்து விடு - விற்களின் வகைகளால் எய்யப்பட்ட, நெடு கோல் விதத்துஉம்- நீண்ட அம்புகளின் வகைகளாலும், முடி துணிந்த - தலையறுபட்ட, கொற்றம் மன்னர் - (முன்பு) வெற்றியையுடைய அரசர்கள், சற்று அலார்- கொஞ்சமல்லர் [மிகப்பலர் என்றபடி]; ( எ-று.)*

*வேல்விதம்- குத்துவேல், எறிவேல், கைவேல் முதலியன வாள்விதம் - பெருவாளும், உடைவாளும் முதலியன. கோல்விதம் - நெட்டம்பு, மொட்டம்பு, பிறைமுகவம்பு முதலியன: அஸ்திரங்களும் இதில் அடங்கும். அஞ்சிப் பின்னிடாது பொருது அழிந்தமையின்,'கொற்றமன்னர்' எனப்பட்டார். உயர்திணைப் பொருளாதலின்,காலாள்களை முன்னர்க் கூறினார்; 'துறக்கம் புகு வேட்கையுடைமையின் காலாளைமுற்கூறி' என்பர், நச்சினார்க்கினியர். காலாள்வகைகள்- வில்வீரர், வாள்வீரர்,வேல்வீரர். கொல்வது கோல் எனக் காரணக்குறி. (76)*

### *32.- இரண்டுகவிகள்- தருமன்பக்கத்துச் சேனாவீரரின் செயல் கூறும்.*

**குத்துவார்படைக்கலங்கள்கொண்டுமற்குறிப்பினான்**
**மொத்துவாரிரண்டுதேருமுட்டவிட்டுமொய்ம்பினால்**

**ஒத்துவார்களிற்றினின்றுமொருகளிற்றின்முதுகுறத்**
***தத்துவார்துரங்கமங்கடாரையாகவேறுவார்.***

*(இ-ள்.) (தருமன்பக்கத்து வீரர்கள்), படைக்கலங்கள் கொண்டு - ஆயுதங்களினால், குத்துவார் - (எதிரிகளைக்) குத்துவார்கள்; மல் குறிப்பினால் - (ஆயுதங்களையொழித்து) மற்போர்செய்யுங்கருத்தால், மொத்துவார் - (வெறுங்கைகளால்) அடிப்பார்கள்; தேர் இரண்டுஉம் முட்ட விட்டு - பகைவர் தேர் தம்தேர் என்ற இரண்டும் (ஒன்றையொன்று) தாக்கும்படி செலுத்தி, மொய்ம்பினால் ஒத்துவார் - ( பின்பு) வலிமையோடு விலகுவார்கள்; களிற்றினின்றுஉம்- (ஒரு) யானையினின்றும், ஒரு களிற்றின் முதுகு உற- மற்றொரு யானையின் முதுகிலே பொருந்த, தத்துவார் - பாய்வார்கள்; துரங்கமங்கள் - பலகுதிரைகளை, தாரை ஆகஏறுவார் - ஒழுங்காக ஏறிச்செலுத்துவார்கள் ; (எ - று.)*

*தாரையாக - வரிசையாக எனினும், பலவகைக்கதிகள்பொருந்த எனினும் அமையும். ஒத்துதல் - பொருந்தலுமாம். தாரை - வட சொற்றிரிபு. (77)*

***33. கொற்றவாளின்முடியிழந்தகுறையுடம்புவாளுடன்
கற்றசாரியோடுமக்கணக்கறிந்துபுகழுவார்
அற்றகால்களற்றகைகளாயுதங்களாகவே
யெற்றுவார்படைக்கலனிழந்துநின்றவீரரே.***

*(இ-ள்.) (தருமன்சேனையார்),- கொற்றம் வாளின் - வெற்றியையுடைய(தங்கள்) வாள்களால், முடி இழந்த - தலையையிழந்த, குறை உடம்பு- (எதிரிகளின்) உடற்குறைகள், வாளுடன்- (கையிற் பிடித்த) வாளாயுதத்துடனே, கற்ற சாரி - (முன்புதாம்) பயின்றுள்ள (வலசாரி இடசாரி முதலிய) நடைவிகற்பங்களில், ஓடும்- (தலைபோனபின்பும் சிறிதுபொழுது) விரைந்து செல்லுகிற, அ கணக்கு -அந்த நிலைமையை, அறிந்த - கண்டுஉணர்ந்து, புகழுவார் - கொண்டாடுவார்கள்; படைக்கலன் இழந்து நின்ற - ஆயுதங்களை ( எதிரிகளாற்) தோற்றுநின்ற, வீரர்- (மற்றும்பல) வீரர்கள், அற்ற கால்கள் அற்ற கைகள் ஆயுதங்கள் ஆக ஏ- (போர்களத்தில்) அறுந்து விழுந்துகிடக்கிற (ஆடவரது) கால்களையும் அப்படிப்பட்டகைகளையுமே படைக்கலமாக எடுத்துக்கொண்டு, ஏற்றுவார்- (அவற்றால்பகைவரைத்) தாக்குவார்கள் ;(எ -று.)*

*அற்றகால்களும் அற்றகைகளுந் தம்முடையனவே யென்றலும் தகுதி ; "இருதுடையற்றிருக்கு மறவர்க ளெதிர்பொரு கைக்களிற்றின்வலிகெட, ஒருதுடையைச்சுழற்றி யெறிவர்களொருதுடை யிட்டுவைப்பரெறியவே" என்ற கலிங்கத்துப்பரணியைக் காண்க. முடியிழந்தகுறையுடம்பு - கபந்தம். (78)*

### *34.- நால்வகைச்சேனையும் பட்டமை.*

***சொன்னவாறுகுறியுமுள்ளதுரகதந்துணிந்தன
கன்னவாறுசொரிமதக்களிற்றினங்கள்வீழ்ந்தன
பின்னவாறுபட்டனபிறங்குதேர்பதாதிக
ளின்னவாறுபட்டனவெனக்குறித்தியம்பொணா.***

*(இ -ள்.) (அப்பொழுது துரோணன்சேனையில்), சொன்ன ஆறு குறிஉம் உள்ள - (அசுவநூல்களிற்) கூறியுள்ளபடி எல்லா நல்லிலக்கணங்களையுமுடைய, துரகதம் - குதிரைகள், துணிந்தன - அறுபட்டன; கன்னம்- கபோலங்களினின்று, ஆறு சொரி - ஆறாகப் பெருகுகிற, மதம் - மதநீரையுடைய, களிறு இனங்கள் - யானைக் கூட்டங்கள், வீழ்ந்தன - இறந்துகீழ் விழுந்தன; பிறங்கு தேர்- விளங்குகிறதேர்கள், பின்னம் ஆறு பட்டன - பிளவுத்தன்மையை அடைந்தன; பதாதிகள் - காலாட்கூட்டங்கள், இன்ன ஆறு பட்டன என குறித்து இயம்பு ஒணா-'இவ்விதமாக அழிந்தன' என்ற குறிப்பிட்டுச் சொல்லமுடியாதவையாயின; ( எ -று.)*

*குறி -அடையாளம். 'சொன்னஆறு குறியுமுள்ள' என்பதற்கு (குதிரை நூல்களில் நல்லிலக்கணமாகக்) கூறின (பிறப்பிடம், நிறம், சுழி, குரல், உறுப்பமைதி, நடை என்னும்) ஆறுதன்மைகளையுமுடைய என்றும் உரைக்கலாம். 'பதாதிகள்' என்பது - இங்கே, அஃறிணைப்பன்மைபாற் பட்டதனால்,*

*'பட்டன','இயம்பொணா' என்னும் அஃறிணைப்பன்மைமுற்றைக் கொண்டது. சிலபிரதியில், இந்தப்பாடல் அடுத்தபாடலின்பின் உள்ளது. (79)*

### 35.-யுதிட்டிரன் பக்கத்தவரின் செருக்குமொழியும், துரியோதனன் பக்கத்தவரின் இரக்கமொழியும்.

***உங்கள்சேனைகெட்டதென்றுதிட்டிரன்றளத்துளார்***
***திங்களன்னகும்பயோனிசேனைதன்னையிகழுவார்***
***எங்கள்சேனைகெட்டதுங்களிறைவன்வின்மையாலெனத்***
***தங்கள்சேனையந்தணன்றளர்ந்ததற்கிரங்குவார்.***

*(இ-ள்.) உதிட்டிரன் தளத்து உளார் - தருமன்பக்கத்தின் சேனையிலுள்ளவர்கள், திங்கள் அன்ன கும்பயோனி சேனை தன்னை- பூர்ணசந்திரனையொத்த துரோணனது சேனையை, உங்கள் சேனை கெட்டது என்று - 'உங்கள்சேனை தோற்றது' என்று, இகழுவார்- நிந்திப்பார்கள்; (அதற்கு அவர்கள்), உங்கள் இறைவன் வின்மையால் எங்கள் சேனை கெட்டது என - 'உங்களரசனான தருமனது வில்லின்திறத்தால் எங்கள் சேனை அழிந்தது' என்று ஒப்புக்கொண்டு, தங்கள் சேனை அந்தணன் தளர்ந்ததற்கு இரங்குவார் - தங்கள் சேனைத்தலைவனான துரோணன் தளர்ச்சியடைந்ததற்கு மனம் வருந்துவார்கள்; (எ-று)*

*அப்பொழுது அவர்கள் தோல்வி அவர்களே ஒத்துக்கொள்ளும் படியிருந்த தென்பது, பின்னிரண்டடிக்குக் கருத்து. திங்களுவமை- கலைநிரம்புதற்கு. **பி - ம்** : திறத்துளார். (80)*

### 36.- இருதிறத்துசேனையும் ஒத்துப்பொருகையில் கடோத்கசன் பாண்டவசேனைக்குத் துணையாதல்.

**இருதளத்துநின்றமன்னரிருவராகவிகலியே**
**யொருதளத்துமன்னரென்னவொத்துநின்றுடற்றினார்**
**பொருதளத்திலிங்ஙனின்றுபோர்புரிந்தபொழுதிலே**
**வருதளத்தொடுதவினான்மருத்துவீமன்மைந்தனே.**

*(இ-ள்.) (பின்னும்), இரு தளத்துஉம் -இரண்டுசேனைகளிலும், நின்ற - (இறந்தவர்போக மிச்சமாய்) நின்ற, மன்னர் - அரசர்கள், இருவர் ஆக - இவ்விரண்டுபேராக, இகலி - (தம்மில்) மாறுபட்டு, ஒரு தளத்து மன்னர் என்ன ஒத்துநின்று - ஒருசேனையரசர்போல நெருங்கிநின்று, உடற்றினார்- போர்செய்தார்கள்; இங்ஙன் - இவ்வாறு, பொரு தளத்தில் - போர்க்களத்திலே, நின்று - நெருங்கிநின்று,போர் புரிந்த பொழுதில் - யுத்தஞ்செய்தசமயத்தில், மருத்து வீமன் மைந்தன் - வாயுகுமாரனான வீமசேனனது புத்திரனான கடோத்கசன், வரு தளத்தொடு -கூடவருகிற சேனையுடனே, உதவினான் - (பாண்டவசேனைக்குத்) துணையானான்;(எ - று.)*

### 37.- கடோற்கசன் அபிமன் மற்றும் காவன்மன்னர் துரோணன்மேல் நடக்க, பகைச்சேனை பறத்தல்.

***நிருதகன்னிமகனுநேமிநீலவண்ணன்மருகனுங்***
***கருகிநெஞ்சழன்றுவந்தகாவன்மன்னர்யாவருஞ்***
***சுருதியன்னதூமொழித்துரோணன்மேனடக்கவே***
***பரிதிகண்டபனியெனப்பகைத்தளம்பறந்ததே.***

*(இ-ள்.) நிருதகன்னி மகன்உம்- இராக்கதகன்னிகையான இடிம்பியின் புத்திரனான கடோற்கசனும், நேமி நீல வண்ணன் மருகன்உம்- சக்கராயுதத்தையுடைய நீலநிறமுள்ள கண்ணபிரானது மருமகனான அபிமந்யுவும், (மற்றும்), நெஞ்சு கருகி - மனங்கோபித்து, அழன்று வந்த - சீறிக்கொண்டுவந்த, காவல்*

*மன்னர்யாவர்உம்- (இராச்சியத்தைக்) காக்குந்தன்மையுள்ள அரசர்களெல்லோரும், சுருதி அன்ன தூ மொழி- வேதவாக்கியத்தை யொத்த சுத்தமானசொற்களையுடைய, துரோணண்மேல்-, நடக்க- எதிர்த்துசெல்ல, பகை தளம்- பகைவரான துரியோதினாதியரது சேனை, பரிதி கண்ட பனி என - சூரியமண்டலத்தைக்கண்ட பனி போல, பறந்தது - (இருந்தவிடந்தெரியாதபடி உடனே) விரைந்து ஒடிற்று; ( எ -று.)*

*மருகன் -மருமகன் : இங்கே, உடன்பிறந்தவள்மகன்: கண்ணனது தங்கை சுபத்திரைமகன். உண்மையானவும், வீண்படாதனவும், யாவராலும் சிறந்தபிரமாணமென்று அங்கீகரிக்கப்படுவனவும், இலக்கணமமைந்தனவும், பொருள் நிரம்பினவு மான நிறைமொழி யென்பார், 'சுருதி யன்ன தூமொழி' என்றார். (82)*

***38.- புறங்கொடுத்தமன்னர்யாவரும் துரியோதனனைச் சார்தல்.***

***பறந்துபோய்நெடும்பணிப்பதாகையானொடெய்தினார்***
***பிறந்துபோய்வளர்ந்தபின்பிறப்புணர்ந்தபெருமனுந்***
***துறந்துபோயவிதுரன்முன்றுணித்தவில்லெனத்துணிந்***
***திறந்துபோனமன்னரன்றிநின்றமன்னரெவருமே.***

*(இ -ள்.) துறந்து- (பாண்டவர் துரியோதனாதியர் என்னும் இருதிறத்தார்க்கும் உதவிசெய்தலை) விட்டு, போய - (தீர்த்தயாத்திரை) சென்ற, விதுரன்-, முன் துணித்த- முன்னே ( துரியோதனசபையில்) ஒடித்தெறிந்த, வில் என - வில்போல, துணிந்து-*

*(உடம்பு) இரண்டுதுண்டுபட்டு, இறந்துபோன-, மன்னர் அன்றி அரசர்க ளல்லாமல், நின்ற - (இறவாமல் மிச்சமாய்) நின்ற, மன்னர் எவர்உம்- ( துரியோதனசேனை) அரசர்களெல்லோரும்,- பிறந்து- (ஒருத்திமகனாய் ஓரிடத்துப்) பிறந்து, போய்- (உடனே அவ்விடத்தைவிட்டு) நீங்கி, வளந்த பின் - (பின்பு ஒருத்திமகனாய் ஓரிடத்தில்) வளர்ந்த பிறகு, பிறப்பு உணர்ந்த- (தன்) பிறப்பு வரலாற்றை யறிந்துகொண்ட, பெருமன்உம் - சிறந்த அரசனான கர்ணனும்,- பறந்து போய்- வேகமாகச்சென்று, நெடு பணி பதாகையானொடு - நீண்டபாம்மை யெழுதிய கொடியையுடைய துரியோதனனுடன், எய்தினார்- சேர்ந்தார்கள்; ( எ -று.)*

*நெடுமை - பணிக்கும், பதாகைக்கும் அடைமொழியாம், பிறப்பு உணர்ந்தது, பாண்டவர்க்காகத் தூதுவந்தபொழுது கண்ணன் இரகசியமாகச்சொன்னதனாலும் , அதன்பின் அவன்கட்டளைப்படி குந்திவந்த கூறியதனாலும் என்க. பெருமன்- பெருமானென்பதன் விகாரமுமாம். கண்ணன் பாண்டவர்க்குத் தூதாய்வந்தமைபற்றி அவனையும், அவனுக்குத் தன்வீட்டில் இடங்கொடுத்து விருந்து செய்து உபசரித்தமைபற்றி விதுரனையும், துரியோதனன் பலவாறு இராசசபையில் தூஷிக்க, விதுரன் கடுங்கோபங்கொண்டு 'பாதகனாகிய உன்பொருட்டுப் போர்செய்யேன்: இத்தனைநாளாய் உன் சோற்றயுண்டமைபற்றி உனக்கு எதிராகப் பாண்டவரோடு சேர்ந்தும் பொரேன்' என்றுசொல்லித் தனது வில்லை இரண்டு துண்டாக முறித்துப்போகட்டுவிட்டுத் தீர்த்தயாத்திரைக்குப் பல ராமனுடன் சென்றிட்டானென்பது, கீழ்உத்தியோகபருவத்துவந்த* **வரலாறு** *. விதுரன் - வில்முதலியபடைத்தொழில்களில் மற்றை யாவரினும் மிகவல்லவன்; இவனை, யமதருமராசனதுஅமிசமென்றும், பரமபாகவதர்களில் ஒருவ னென்றும் நூல்கள் கூறும். (83)*

***39.-இரண்டுகவிகள்- புறங்கொடுத்துவந்ததுணர்ந்த துரியோதனன், சேனைகளை நெருங்கச்செல்ல ஏவித் தானும் பொரச்செல்லுதல் கூறும்.***

***வதிட்டனுந்துதிக்கும்வாய்மைவரிசிலைக்கைம்முனிவனோ***
***டுதிட்டிரன்புரிந்தபோருரைக்கவேயுணர்ந்துளான்***
***பதிட்டிதம்பிறந்ததின்றுபாண்டவர்க்குஞாலமென்***
***றதிட்டமொன்றுமுணர்கலானுமனிலவேகமாயினான்.***

*(இ -ள்.) (துரியோதனனைச்சேர்ந்தஅரசர்கள்யாவரும்), வதிட்டன்உம் துதிக்கும்- வசிஷ்டமகாமுனிவனுந் தோத்திரஞ் செய்யும் படியான, வாய்மை- சத்தியவார்த்தையையும், வரி சிலை கை - கட்டமைந்தவில்லையேந்திய கையையுமுடைய, முனிவனோடு- துரோணனுடனே, உதிட்டிரன் புரிந்த - தருமபுத்திரன்செய்த, போர்- யுத்தத்தின்தன்மையை [துரோணனைத் தருமன் வென்றதை], உரைக்கவே- சொல்லவே, உணர்ந்துளான்- (அதனை) அறிந்தவனாய், அதிட்டம் ஒன்றுஒம் உணர்கலான்உம் - வினைப்பயனைச் சிறிதும் ஆலோசித்தறியாதவனான துரியோதனனும், 'இன்று-இப்பொழுது, பாண்டவர்க்கு - பாண்டு புத்திரர்க்கு, ஞாலம் - பூலோகம், பதிட்டிதம் பிறந்தது - நிலைநின்றதாய்விட்டது,' என்று- என்றுஎண்ணி, அனிலம் வேகம் ஆயினான் - வாயுவேகமுடையவனாய் வந்தான்;*

*நல்வினைதீவினைகளின் தன்மையும் அவற்றின்பயனையும் சிறிதாயினும் அறிந்திருப்பின் பாண்டவர்க்கு அரசுகொடாமை முதலிய அநீதிகளைப் புரியானென்பார்,' அதிட்டமொன்று முணர்கலான்' என்றார். வதிட்டன்-வஸிஷ்டன் என்னும் வடசொல்லின் திரிபு; இதற்கு- (பஞ்சஇந்திரியங்களை) நன்றாக வசப்படுத்தினவன் என்று காரணப்பொருள்: ஞானத்திற் குடிகொண்டவ னென்றுங் கூறுவர். இவன்- பிரமனது புத்திரன்: வைதிக லௌகிக ஒழுங்கங்களில் மிகச்சிறந்தவன். சூரியகுலத்தரசர்க்குப் புரோகிதனும் பிரதானமந்திரியுமான இவன்போலவே, துரோணனும்கௌரவர்க்குக் குருவும் சிறந்தமந்திரியும் ஆனதால்,' வதிட்டனுந்துதிக்கும்வாய்மை வரிசிலைக்கைம்முனிவன்' என்றார். உம் - உயர்வுசிறப்பு. பதிட்டிதம்- ப்ரதிஷ்டிதம் என்னும் வடசொல் சிதைந்தது; இதற்கு- நிலைநிறுத்தப்பட்டது என்று பொருள். தெளிவுபற்றி, 'பதிட்டிதம் பிறந்தது' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது; **காலவழுவமைதி** . அதிட்டம் - அத்ருஷ்டம்: இதற்கு- கண்ணாற் காணப்படாத தென்று அவயவப்பொருள். (84)*

***40. விட்டவிட்டரதசதுரங்கவேழவாகனத்தொடுந்***
***தொட்டதொட்டசிலையொடுந்துணிந்துவெங்களத்திடைப்***
***பட்டபட்டநிருபர்தங்கள்பாடுகாணவெண்ணியோ***
***முட்டமுட்டவேகுகென்றுதன்படைக்குமுந்தினான்***

*(இ-ள்.) விட்ட விட்ட - மேன்மேற்செலுத்தின, ரதம் - தேர்களும் துரங்கம்- குதிரைகளும், வேழம் - யானைகளுமாகிய, வாகனத்தொடுஉம்- வாகனங்களுடனும், தொட்டதொட்ட- மிகுதியாக(க்கையில்) ஏந்திய, சிலையொடுஉம் - வில்லுடனும், துணிந்து- துண்டு பட்டு, வெம் களத்திடை - கொடிய போர்க்களத்தில், பட்ட பட்ட - மிகுதியாக இறந்த, நிருபர்தங்கள்- (தன்பக்கத்து) அரசர்களது, பாடு- நிலைமையை, காண - பார்க்க, எண்ணிஓ - நினைத்தோ, (துரியோதனன்), முட்ட முட்ட ஏகுக என்று - மிகநெருங்கச் செல்லுங்களென்று (தன்சேனையரசரை நோக்கிச்) சொல்லிக்கொண்டு, தன் படைக்கு முந்தினான் - தனது சேனைக்கு முற்பட்டு வந்தான்;*

*துரியோதனன் வந்தது, மேல் போரிற் பகைவரை வெல்லுதலாக முடியாமையால், அதனை, போர்க்களத்தில் அழிந்த அரசர்கள் பட்டபாட்டைப் பார்க்கக்கருதியோ வந்தானென்று சமத்காரமாக* ***உத்பிரேட்சித்தார்.*** *(85)*

*41.-இரண்டுகவிகள்-அபிமன் தானொருவனாக எண்ணில்லாத சேனைகளையழித்தல் கூறும்.*

***முந்தவந்தமன்னனுமுரண்கொள்வாகையரசரும்***
***வந்தவந்தசேனையும்வகுத்தணிந்துமுனையவே***
***யந்தவந்தமுனைகடோறுமந்தவந்தவீரர்மெய்***
***சிந்தவந்துடற்றினன்சிலைத்தடக்கையபிமனே.***

*(இ-ள்.)* முந்த வந்த- *(இங்ஙனம்)* முற்பட வந்த, மன்னன் உம்- துரியோதனனும், முரண் கொள்- வலிமையைக்கொண்ட, வாகை- வெற்றிக்கு உரிய, அரசர்உம்- *(அவன்பக்கத்து)* அரசர்களும், வந்த வந்த- *(அவர்களுடன்)* மிகுதியாய்வந்த, சேனைஉம்-, வகுத்து அணிந்து - ஒழுங்காக அணிவகுக்கப்பட்டுநின்று, முனையஏ- போர்செய்யவே,- அந்த அந்த வீரர் மெய் சிந்த - அவ்வவ்வீரரது உடம்பு அழிந்து கீழ்ச்சிந்தும்படி, சிலை தட கை அபிமன்- வில்லைப்பிடித்த பெரியகையையுடைய அபிமந்யு, வந்து உடற்றினன்- எதிர்த்துவந்து போர்செய்தான்; *(எ-று.)* *(86)*

***42.* சிந்திவாளிமழைகளோடுசிலைவளைத்துமுடுகுதே**
**ருந்திவாரிமேகமென்னவமர்செய்தானுமொருவனே**
**யந்திவானமொத்ததக்குருதிநீர்கொளடுகளந்**
**தந்திவாசிதேர்களோடுடைந்ததெண்ணிறானையே.**

*(இ-ள்.)* முடுகு தேர்- விரைந்துசெல்லுந்தன்மையதான தேரை, உந்தி - *(எங்கும்)* செலுத்தி, ஓடு சிலை - விரைவாகத் தொழில்செய்கிற வில்லை, வளைத்து - வணக்கி, வாளி மழைகள் - அம்புமழைகளை, சிந்தி - சொரிந்துகொண்டு, வாரி மேகம் என்ன - நீர்கொண்ட மேகம்போல, அமர்செய்தான்உம் - *(எதிரில்)* போர் செய்தவனும், ஒருவன்ஏ- *(அபிமன்)* ஒருத்தனே; *(அவனால்)*, எண் இல் தானை - அளவிறந்த *(பகைவர்)* சேனை, தந்திவாசி தேர்களோடு- யானைகள் குதிரைகள் தேர்கள் என்பவற்றோடு, உடைந்தது- அழிந்தது; அ குருதி நீர் கொள் - அப்படி *(அழிந்தபிராணிகள்)* இரத்தப்பெருக்கைக்கொண்ட, அடு களம் - போர்க்களம், அந்திவானம் ஒத்தது- மாலைப்பொழுதிற் காணப்படுஞ் செவ்வானத்தை யொத்தது; *(எ -று.)*

அபிமனுக்கு நீர்கொண்டமேகம் நிறத்துக்கும், விசையோடு வருதற்கும், வில்ஏந்துதற்கும், அம்புமழைசொரிதற்கும் உவமை. செவ்வானம்- நிறத்திற்கு உவமை.மழைகளோடு - மழைகளையெனினுமாம். **பி-ம்** : உற்றகுருதி நீரிலக்களம் *(87)*

### *43.*-துரோணன் தருமனுக்குத் தோற்று, பலவீரர்காக்க முனையினின்று விலகுதல்.

**ஏறுதேரழிந்துசாபமிற்றுமுற்றுமின்றியே**
**வேறுதேருமின்றிநின்றுவில்லெடுத்தவேதியன்**
**கூறுதேருதிட்டிரன்குனித்தவிற்குடைந்துபன்**
**னூறுதேர்தனைப்புரக்கநொய்தினிற்கழற்றினான்.**

*(இ-ள்.)* நின்று - *(தருமநெறியில்)* நின்று, வில்எடுத்த - வில்லையேந்திப் போர்செய்த, வேதியன் - துரோணாசாரியன், *(அவன்எய்த அம்புகளால்)*, ஏறு தேர் அழிந்து *(தான்)* ஏறிய தேர் சிதைந்து, சாபம் இற்று- கைவில்லுந்துணிந்து, முற்றுஉம் இன்றி- *(மற்றையாயுதங்கள்)* அனைத்தும் இல்லாமலே, கூறு தேர் உதிட்டிரன் குனித்த விற்கு உடைந்து- சிறப்பித்துச் சொல்லப்படுகிற தேர்வீரனான தருமன் வளைத்த வில்லுக்குத் தோற்று, வேறு தேர்உம்

இன்றி - *(மீண்டும்ஏறிப்போர்செய்தற்கு)* வேறொருதேரும் இல்லாமல், பல் நூறு தேர்தனை புரக்க - பலநூறுதேர்வீரர்கள் *(தன்னைப்)* பாதுகாக்க, நொய்தினில் - விரைவில், கழற்றினான்- *(தன்னை)* அச்சேனையினின்று) நீக்கிக்கொண்டான்; *( எ -று.)*

போரினின்று விலகுதற்றொழிலைச் செய்வதற்கே வருத்தப்பட வேண்டியதாயிற் றென்ற பொருள் தோன்ற, 'கழற்றினான்' எனப் பிறவினையாற் கூறினார்; இனி தன்வினைப்பொருளைப் பிறவினைச் சொல்லாற் குறித்தாருமாம். இனி இதனை, கழறினான் என்றதன் விரித்த லெனக்கொண்டு, அநேகநூறுதேர்வீரர் தன்னைப் பாதுகாக்கும்படி தந்திரமாகச்சொன்னான் என்று உரைப்பாரு முளர். விற்குஉடைந்து, நான்கனுருபு - பகைப்பொருளின்பாற்படும். **பி - ம்** : தேருமேறிநின்று. *(88)*

*44.-அதுகண்ட பகதத்தன் தருமன் சேனையை எதிர்க்கவருதல்.*

***முனியு மேனை யானை தேரின் முடுகி வந்த நிருபருங்***
***குனிசி லக்கை யபிமன் வெங்க ணைக்கு வென்கொ டுக்கவே***
***யினிந மக்கு நல்ல கால மென்று சீறி யெய்தினான்***
***றனித மிக்க சலத மன்ன சதம கன்ச காயனே.***

*(இ-ள்.) முனியும்- கோபங்கொண்ட, யானை தேரின் முடுகி வந்த- யானைகளின்மேலும் தேர்களில்மேலும் விரைவாகவந்த, ஏனை நிருபர்உம் - (துரியோதனன் முதலிய) மற்றையரசர்களெல்லோரும், குனி சிலை கை - வளைந்தவில்லைப்பிடித்த கையையுடைய, அபிமன்- அபிமந்யுவினது, வெம் கணைக்கு - கொடிய அம்புகளுக்கு, வென் கொடுக்கஏ - முதுகுகொடுக்கவே,- (அச்சமயத்தில்), தனிதம் மிக்க - இடிமிகுந்த, சலதம் - மேகத்தை, அனன - ஒத்த,சதமகன் சகாயன்- இந்திரனது துணைவனான பகதத்தன், இனி நமக்கு நல்ல காலம்என்று - (போர்வலிமைகாட்டற்கு) இப்பொழுது நமக்கு நலல சமயமென்று, சீறிஎய்தினான் - கோபங்கொண்டு எதிர்த்து வந்தான்; (எ-று.)*

*சிறந்தபோர் எப்பொழுதுநேருமோ என்று சமயத்தை எதிர்பார்த்திருக்குஞ் சுத்தவீர னாதலால், 'இனி நமக்கு நல்ல காலம்' என்றான். இவன் வருகிற ஆரவாரத்துக்கு 'தனிதமிக்கசலதம்' என உவமைகூறினார், முனியும்- எதிர்காலப்பெயரெச்சம்; இதற்கு - துரோணனும் என்று பொருள் கூறுதல், இவ்விடத்துக்குப்பொருந்தாது. பகதத்தனைச் சதமகன் சகாயனென்ற விவரம், நான்காம் போர்ச்சருக்கத்துக் கூறப்பட்டது. (89)*

வேறு.

*45.- மூன்றுகவிகள் - பகதத்தன்வருஞ் சிறப்புக் கூறும்.*

***அதிதவள மத்த வார ணமுமுத லமுதமத னத்தி லாழி மிசை***
***வரு,***
***மதகளிறு சுத்தமாக விவனும மகபதியெ டுத்த கார்மு கமுமவ,***
***னெதிர்தரவெடுத்த சாப மிவனுட னிகல்செயநி னைக்க***
***யாவருளரென,***
***விதமுறவ குத்தயானை யணியுடன் விருதுபக தத்த ராசனுதவவே.***

*இதுமுதல் ஏழுகவிகள்- குளகம்;அவற்றில், முதல் மூன்றரைச் செய்யுள் ஒருதொடரும், மற்றவை ஒருதொடருமாம்.*

*(இ-ள்.) 'அதி தவளம்- மிக வெண்ணிறமான, மத்த வாரணம்உம்- மதம்பிடித்த(இவனது) யானையும், முதல் - பூர்வ காலத்தில், அமுத மதனத்தில் - தேவாமிருதத்துக்காகக் கடைகையில், ஆழிமிசை- திருப்பாற்கடலின்மேல், சுத்தம் ஆகவரும் - வெண்ணிறமாகத் தோன்றிய, மதம் களிறு- (ஐராவதமென்னும் இந்திரனது) மதயானையேபோலும்; இவன்உம்-, அ மகபதி - அந்த இந்திரனே போல்வான் ; எடுத்த கார்முகம்உம்- (இவன்கையில்) ஏந்திய வில்லும், அவன்- அவ்விந்திரன், எதிர்தர- (பகைவர்) எதிர்க்கையில், எடுத்த - (கையில்) எடுத்த சாபம்-வில்லேபோலும்; இவனுடன் இகல்செய நினைக்க - இவனொடு (எதிர்த்துப்) போர்செய்தற்கு நினைக்கவும், யாவர்உளர் - எந்தவீரர் தகுதியுள்ளார்?' என - என்று, விருது உதவ - (துதிபாடகர்) பிருதாவளிகளைக்கூற, - விதம் உற வகுத்த - பலவகையாகப் பகுக்கப்பட்ட, யானை அணியுடன்- யானைச்சேனையுடனே,- பகதத்தராசன்-,- (எ-று.)-"களத்திலானபொழுதிலே" என 47 - ஆங் கவியோடு தொடரும்.*

*இவன் ஏறிவரும் பட்டத்துயானைக்கு 'சுப்பிரதீகம்' என்று பெயர்; இது தேவயானையென்றும், இந்திரனால் இவனுக்கு அளிக்கப்பட்ட தென்றுங் கூறப்படும்; இது நூறாயிரம்யானை பலமுடைய தென்று பெருந்தேவனார் பாரதத்து உரைநடையால் தெரிகிறது. இவனதுவில்லைப் பெருந்தேவனார்*

*"கடவுட்சிலை" என்றதையும் இங்கே யறிக. மத்தவாரணம், அம்ருதம **த** நம், சுத்தம்- வடசொற்கள். விருது- பிரதாபத்தை வெளியிடும் வாக்கியங்கள்; வெற்றி யென்று கூறினாருமுளர். அம்மகபதியென்பது, சந்தவின்பத்துக்காகத் தொக்கது. **பி-ம்** : - உயர்மகபதி.*

*இதுமுதற் பத்துக்கவிகள்- பெரும்பாலும் ஒன்று ஐந்தாஞ்சீர்கள் கருவிளங்காய்ச்சீர்களும், இரண்டுமூன்று ஆறுஏழாஞ்சீர்கள் தேமாச்சீர்களும், நான்குஎட்டாஞ்சீர்கள் கருவிளச்சீர்களும் ஆகிய கழிநெடிலடி நான்குகொண்ட* ***எண்சீராசிரியச்சந்த விருத்தங்கள்.*** *'தனதனன தத்த தான தனதன தனதனன தத்ததான தனதன' எனச் சந்தக்குழிப்புக் காண்க. (90)*

***46. இருபத்திற்றுநூறுகளிறுள விவனினுமிகுத்தவீரர்கடவுவ.***
***ரொருபதுபதிற்று றுவமையெனமிக்கவாகுவலியினன்.***
***நூறுமழகளிமுருகனெனவெற்றிநேமிமுகிலென***
***முரணவுணருக்கு வாழ்வுகெடவுயர்,***
***சுரபதிதனக்குவாழ்வுவரும்வகை சுரருலகளித்த***
***தோழனிவனரோ.***

*(இ-ள்.) இருபது பதிற்று நூறு களிறு - இருபதினாயிரம் யானைகள், உள- (இவனுக்கு) உள்ளன; (அவற்றை), இவனின்உம் மிகுத்த வீரர் - இவனைக்காட்டிலுஞ் செருக்கிய வீரர்கள், கடவுவர்- செலுத்துவார்கள்; இவன்-, ஒருபது பதிற்றுநூறுமழ களிறு உவமைஎன- பதினாயிரம் இளையஆண்யானைகள் ஒப்பு என்று சொல்லும் படி, மிக்க- மிகுந்த, வாகு வலியினன் - தோள்வலிமையையுடையான்;*

*முருகன் என- (தேவசேனாபதியான) சுப்பிரமணியமூர்த்திபோலவும், வெற்றி நேமி முகில் என - சயத்தைத்தருகிற சக்கராயுதத்தையுடைய மேகம்போன்ற திருமால்போலவும், முரண் அவுணருக்கு வாழ்வு கெட- வலிமையையுடைய அசுரர்களுக்கு வாழ்க்கையொழிய, உயர் சுரபதிதனக்கு - சிறந்த தேவேந்திரனுக்கு, வாழ்வு வரும் வகை - நல்வாழ்க்கையுண்டாகும்படி, சுரர் உலகு அளித்த - தேவ லோகத்தை (மீட்டு)க்கொடுத்த, தோழன் - சினேகிதன்; (எ - று.) அரோ- ஈற்றசை. கீழ்ச்செய்யுளில் 'பகதத்தராசன்' எனப் பெயரைப் குறித்த ஆசிரியர், இப்பாட்டால், அவனது சிறப்புக்களைத் தெரிவித்தார்; ஆதலின், இது - குளகத்தில் இடைப்பிறவரலாக நின்றது.* ***பி - ம்*** *:- கடவுவ.*

*'பதினாயிரம்யானைப் பலமுடையான் நூறாயிரம்யானையின் பல முடையதோர் சுப்பிரதீபமென்னும் மதஹஸ்தியை மேற்கொண்டு' என்றார், பெருந்தேவனாரும். முருகு- தெய்வத்தன்மை, இளமை, வலிமை; அவற்றையுடையவன்- முருகன்: சூரபதுமன் முதலிய அசுரர்களைச் சங்கரித்தற்காகவே அவதரித்தவ னாதலால் முருகனையும். பற்பலசமயங்களில் பகைவரை யொழித்து அமரரைக் காத்ததனால் திருமாலையும், பகதத்தனுக்கு அசுரசங்காரத்திலும் தேவபரிபாலனத்திலும் உவமைகூறினார். முகில்- உவமையாகுபெயர். 'சுரபதிதனக்கு' என்பதை 'வாழ்வுவரும்வகை' என்றதோடும், 'சுரருலகளித்த' என்றதோடும், 'தோழன்' என்றதோடும் கூட்டுக. பாற்கடலைக் கடைந்தகாலத்து அதினின்று உண்டானதொரு சுரையை [வாருணியென்னும் ஒருவகை மதுவை] ப் பானஞ்செய்தது பற்றித் தேவர்க்குச் சுரர் என்றும், அதனைப்பானஞ்செய்யாதது பற்றி மற்றொரு திறத்தார்க்குஅசுரர் என்றும் பெயர். (91)*

***47. எழிலணிதடக்கைமேருகிரிநிக ரிபசிரமதைக்கமோதியுருமென,***
***மொழியுறவதிர்த்துநீடுபுயகிரிமுறைமுறைதடிக்கவேகமொடுபுகை,***
***பொழிசினமனத்தின்மூளவவிரொளிபுனைநுதல்வெயர்க்க***
***வாயுகதியென,***
***விழிவழிநெருப்புவீழவிரைவுடன் விறன்மிகு களத்திலான***
***பொழுதிலே.***

*(இ-ள்.) எழில் அணி- அழகுபெற்ற, தட கை - பெரியதுதிக்கையையுடைய, மேரு கிரி நிகர் இபம் - மகாமேருமலையையொத்த (தான் ஏறிய) யானையினது, சிரம்- தலையை, அதைக்க- அழுந்தும் படி,*

*மோதி - (கையால்) அடித்து,- உரும் என - இடியோசை போல, மொழி உற - சொற்கள் வெளிப்படும்படி, அதிர்த்து - ஆரவாரித்து,- நீடு புய கிரி- உயர்ந்த மலைகள்போன்ற தோள்கள், முறை முறை தடிக்க - மேல்மேல் பூரிக்க, - புகை பொழி சினம்- புகையைச்சொரிகிற கோபத்தீ, வேகமொடு- உக்கிரமாக, மனத்தில் மூள - நெஞ்சிற்பற்றியெழ,- (அதனால்), அவிர் ஒளி புனை நுதல்- விளங்குகிற ஒளியைக்கொண்ட நெற்றி, வெயர்க்க- வேர்வையடையவும்-, விழிவழி- கண்களின்வழியாய், நெருப்பு வீழ - தீச்சிந்தவும், - வாயு கதி என - காற்றின் ஓட்டம்போல், விரைவுடன் - வேகத்தோடு, விறல் மிகு களத்தில் - வெற்றிமிக்க போர்க்களத்திலே,*

*ஆன பொழுதில் - (அந்தப்பகதத்தன்) வந்த சமயத்தில்,- ( எ-று.)-" திருகின, *** முடுகினர்" என மேற்கவியில் முடியும்.*

*'எழிலாவது - வளர்ந்தமைந்தபருவத்தும் இதுவளர்ந்துமாறிய தன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்' என்றார், நச்சினார்க்கினியர். மொழி - யானையை அதட்டுதற்குக் கூறுஞ் சொற்களும், வீரவாதமும். புயகிரி - முன்பின்னாகத் தொக்க உவமைத்தொகை. மிக்ககோபாவேசத்தால் தோள்கள் புடைபருத்தலும், உடம்புவேர்த்தலும், கண்கொடிதாதலும் இயல்பு. (92)*

### 48.-அப்போது புறங்கொடுத்த துரியோதனன் பக்கத்தார் பொரமீள, தருமனும் அபிமனும் எதிர்கொள இருதிறத்தார்க்கும் போர்நிகழ்தல்.

**பொருதுபுறகிட்டசேனையிவன்வருபொலிவொடுபுறக்கிடாதுதிருகின,**
**வரவினையுயர்ந்தகோவுமிளைஞருமவனிபருமொத்துமீளமுடுகினர்,**
**முரசெழுதுபொற்பதாகைநிருபனுமுதலமர்செகுத்தவாகையபிமனு.**
**மிருகைமலர்கொட்டியாடியெதிர்கொளவிருபடையு**
**முற்றபூசல்விளையவே.**

*(இ-ள்.) பொருது புறகு இட்ட சேனை - (கீழ்ப்) போர்செய்து பின்னிட்ட (துரியோதனன்) சேனைகள், இவன் வரு பொலிவொடு- இப்பகதத்தன் (துணை) வருகிற உற்சாகத்தால், புறக்கிடாது திருகின- பிற்படாமல் (போருக்குத்) திரும்பின; அரவினை உயர்த்தகோஉம் - பாம்புக்கொடியை உயர நாட்டிய துரியோதனனும், இளைஞர்உம்- அவன்தம்பிமார்பலரும், அவனிபர்உம்- (மற்றை) அரசர்களும், ஒத்து-கூடி, மிள முடுகினர் - மறுபடி வேகமாகவந்தார்கள்; (அங்ஙனம் வந்தவர்களை), முரசு எழுத பொன் பதாகை நிருபன் உம்- முரசத்தின்வடிவத்தையெழுதினஅழகிய கொடியையுடைய தருமனும், முதல் அமர் செகுத்த வாகை அபிமன்உம்-முந்தின போரில்(பகையை) அழித்த வெற்றியையுடைய அபிமந்யுவும், இரு கை மலர்கொட்டி ஆடி - (உற்சாகத்தோடு) தாமரைமலர்போன்ற (தம்தம்) கைகளிரண்டையும்தட்டிக் கூத்தாடிக்கொண்டு, எதிர்கொள- எதிர்கொள்ள,- இருபடைஉம்- இருதிறத்துச்சேனைகளிலும், உற்ற பூசல் விளைய - மிக்கபோர் உண்டாக,- (எ - று.)"வாயு குமாரன் குத்தி" என வருங்கவியோடு தொடரும்.*

*பிறகு என்பதுபோல, புறகு என்பதும்- பின் என்னும்பொருள் தருவதோர் இடைச்சொல்லாம். புறகு + இடாது - புறக்கிடாது; உயிர்த்தொடரில் சிறுபான்மை ககரவொற்று இரட்டிற்று. பொற்பதாகை- பொற்காம்பு அமைந்த துவசமுமாம்; பொன்-அதனாலாகிய தண்டத்துக்குக் கருவியாகுபெயர். 'முதல் அமர்' என்றது- பதினொன்றாநாட்போரையும், இப்பன்னிரண்டாநாட்போரில் இதற்கு முந்திநடத்ததையும். (93)*

### 49.- மூன்றுகவிகள்- பகதத்தனுக்கும் வீமனுக்கும் நிகழ்ந்த கைகலந்த போரைக் குறிக்கும்.

**நிசிசரனெடுத்தவாதிகயிலையுநிகரலவிதற்கெனாமுன்வருகரி,**
**விசையுடனடத்திவீமனெவணவன்விறன்முடிதுணித்துமீள்**

**வனினியென,**
**வசைபலபிதற்றிவேகமுடன்வரும்வலியாபகதத்தன்வாகு**

**கிரிகளை,**
**யொசிதரவளைத்துமார்புசுழிதரவொருகைகொடுகுத்திாவயு**
**குமரனே.**

*(இ-ள்.) 'நிசிசரன்- இராக்கதனான இராவனன், எடுத்த - (கைகளால்) தூக்கின,ஆதி கயிலைஉம் - பழமையான கைலாசகிரியும், இதற்கு நிகர் அல - இவ்யானைக்கு ஒப்பன்று', எனா - என்று சொல்லப்பட்டு, முன்வரு - சிறப்பாக வருகிற, கரி- (தனது வெள்ளை) யானையை, விசையுடன்நடத்தி- வேகமாகச்செலுத்திக் கொண்டு, 'வீமன் எவண் - வீமன் எவ்விடத்தில் (உள்ளான்)? அவன் விறல் முடி துணித்து - அவனது வலிமையையுடைய தலையைத் துண்டித்து, இனி மீள்வன்- பின்பு திரும்புவேன்,' என - என்று, வசைபலபிதற்றி - பலநிந்தைமொழிகளைச் சொல்லிக்கொண்டு, வேகமுடன்வரும் - விரைவாகவருகிற, வலிய பகதத்தன் - வலிமையையுடைய பகதத்தனது, வாகு கிரிகளை - மலைகள் போன்ற கைகளை, ஓசிதர - ஒடியும்படி, வாயுகுமாரன் - வீமன், வளைத்து- (தன்கைகளாற் பிடித்து) மடக்கிவிட்டு, மார்பு சுழிதர - (அவன்) மார்பு குழிபடும் படி, ஒரு கைகொடு குத்தி-(தனது) ஒருகையாற்குத்தி,- (எ -று.) -"கதைகொடு அடித்து" என அடுத்த கவியில் தொடரும்.*

*இவன் கூறிய வீரவாதம் மேல் பயன்பெறாது முடிதல்பற்றி, 'பிதற்றி' என்றார். வாகுகிரிகளை வளைத்தல்- தோள்களைத்தழுவுதலுமாம். வெள்ளிமலையாதலால், கைலையை வெள்ளையானைக்கு எடுத்துக்கூறினார். **இராவணன் கைலையெடுத்தது:-** இராவணன்திக்கு விசயஞ் செய்கையில் குபேரனோடு எதிர்த்துப் பொருது அவனை வென்று அவனது புஷ்பகவிமானத்தைப்பறித்து அதன்மேலேறிக் கொண்டு கைலாசமலைக்கு மேலாக ஆகாசமார்க்கத்திலே விரைந்து மீண்டுவருகையில், அம்மலையின் மகிமையால் விமானந்தடைப்பட்டு நிற்க, அதற்குக்காரணம் இன்னதென்று அறியாது திகைக்கையில், நந்தி எதிரில்வந்து 'சிவபிரானுக்குத் தங்குமிடமான திருக்கைலாயத்தின் பெருமை இது' என்று சொல்லவும் கேளாமல் தசமுகன் தனது பிரயாணத்துக்குத் தடையாகிய இம்மலையை இப்பொழுதே வேரொடுபறித்து எடுத்து அப்பால் எறிந்துவிட்டுத் தடையின்றி மேற்செல்வேனென்று கூறி விமானத்தினின்றும் இறங்கித் தனது இருபதுகைகளையும் அம்மலையின்கீழ்க்கொடுத்து அதனைப்பெயர்த்து அசைத்தனனென்பது **கதை** . ஓசிதர- துவளஎன்பாருமுளர். **பி -ம்** : குழிதர, சுளிதர. (94)*

**50. கதைகொடுபனைக்கைவீசியெதிர்வருகடகரியினெற்றி**
**யோடையணியொடு,**
**புதைபடவடித்துமீளவிசையொடுபுரவியிரதத்தின்**
**மீதுகுதிகொள,**
**விதயமலர்செற்றமுளவிவனவனெதிர்சிலைவளைத்து**
**வாளிநிரைபட,**
**வுதையவுதைபட்டவாளி தனதுகை யுயர்கதை**
**புடைத்துவீழமுனியவே.**

*(இ-ள்.) பனை கை வீசி- பனைமரம்போன்ற துதிக்கையை வீசிக்கொண்டு, எதிர்வரு - எதிர்த்துவருகிற, கட கரியின் - (பகதத்தனது) மதயானையினது, நெற்றி -, ஓடை அணியொடு - முகப்படாத்தோடும் ( பட்டமாகிய) ஆபரணத்தோடும். புதைபட - உட்குழியும்படி (வீமசேனன்), கதைகொடு- (தனது) கதாயுதத்தால்.*

*அடித்து-, மீள - பின்பு, விசையொடு -வேகத்துடனே, புரவி இரதத்தின்மீது - குதிரைகள்பூண்ட தேரின்மேல், குதி கொள- பாய்ந்து ஏறிக்கொள்ள,- (அதனால்), இவன்-பகதத்தன், இதயம் மலர்*

*செற்றம் மூள - இதயகமலத்தில் கோபம் மிக, அவன் எதிர் - அவ்வீமனெதிரில், சிலை வளைத்து - வில்லை வளைத்து, வாளி - அம்புகளை, நிரைபட - கூட்டமாக, உதைய - செலுத்த,- உதைப்பட வாளி - (அங்ஙனம்) செலுத்தப்பட்டுவந்த அம்புகள், தனமு கை உயர்கதை புடைத்து வீழ- தன்னுடைய [வீமனுடைய] கையிலுள்ள சிறந்தகதாயுதத்தில் தாக்கிவிழ, முனிய - (அதனால் வீமன்) கோபங்கொள்ள, (எ-று.)-" வாளிநெடுமழை *** விலகின" என அடுத்த கவியோடு குளகமாய் முடியும்.*

*பனைமரம்- துதிக்கைக்கு, திரண்டு உருண்டு நீண்ட வடிவத்தால் உவமம். ஓடையணி- பன்மையீறுபெறாத அஃறிணையும்மைத்தொகை. இதயம், தாமரை மலர்வடிவமானதொரு மாம்ஸாகாரமாகவுள்ளதனால், ' இதயமலர்' எனப்பட்டது. **பி - ம** ்:பணைக்கை, முனைய.*

***51. ஒருவரையொருத்தர்வேறலரிதரிதொருபடிசெருச்செய்தாலு***
***மினியென,***
***விருவருமெடுத்தசாபமொலிபடவெதிரெதிர்தொடுத்தவாளி***
***நெடுமழை,***
***யொருவருடலத்தின்மூழ்கிமுனையுறவுருவுதொழிலற்றுநூலின்***
***முறைமையி,***
***னிவரும்விலக்கவோடிவிலகினவெதிரெதிர்கடித்துவான***
***மறையவே.***

*(இ-ள்.) ஒருபடி- ஒரேவிதமாக, செரு செய்தால்உம் - போர் செய்தாலும், இனி- இனிமேல், (இவர்கள்), ஒருவரை ஒருத்தர் வேறல் அரிது அரிது என - ஒருத்தரையொருத்தர் வெல்லுதலில்லை யென்னும்படி, இருவர்உம் - அந்த இரண்டுபேரும்,எடுத்தசாபம் - பிடித்த விற்களினின்று, ஒலிபட - ஓசையுண்டாக, எதிர் எதிர்தொடுத்த- எதிரிலேஎதிரிலேசெலுத்தின, வாளி நெடு மழை- பெரிய அம்புமழைகள்,-ஒருவர் உடலத்தில் மூழ்கி முனைஉறஉருவு தொழில்- அற்று - ஒருவருடம்பில்தைத்துக்கூர்நுனி பொருந்த(அவவுடம்பை) ஊடுருவிச்செல்லுஞ் செயலில்லாமல், நூலின் முறைமையின் இருவர்உம் விலக்க- ஆயுதசாஸ்திரத்தின் முறைமைப்படி அவ்விரண்டுபேரும் விலக்குதலால், எதிர் எதிர் கடித்து - (இடைவழியிலே ஒன்றையொன்று) எதிரிலே எதிரிலே பற்றிக்கொண்டு, வானம் மறைய - ஆகாயத்தினிடம் மறையும்படி, ஓடி விலகின - விரைந்துமீண்டன; (எ-று.)*

*பகதத்தன் வீமன் என்ற இரண்டுபேரும் ஒருவரெய்த அம்பு மற்றொருவர் மேற்படாதபடி ஊக்கத்தோடு எதிரம்புகோத்துப் பொருதல் பற்றி, இருவ ரம்புகளும் இடையிலே ஒன்றையொன்று கௌவிக்கொண்டு கீழ்விழுந்திடுதலால், அப்போர் வெற்றிதோல்விகளாகிய பயனைப் பெறாதாயிற்றென்க. **பி-ம்** : அரிதென. (96)*

### *52.- இரண்டுகவிகள்- பகதத்தன் ஏறிவந்த யானையின் சிறப்பு.*

***மகரிகைமருப்புநாலுமுளவெனில்வலியகுணதிக்கில்வாரணமுமெதிர்.***
***நிகரலவிதற்குநாமமுலைசெயினிலையுடையசுப்ரதீகமிதன்***

***வலி,***
***பகரிலிபமெட்டுநாணுமெதிரெறிபடைகளுணர்வுற்ற***
***போரிலெரிவரு,***
***புகர்முககரக்கபோலமதகரிபொருதொழிலுரைக்கலாகுமளவதோ.***

*(இ-ள்.) மகரிகை- பூணையணிந்த, மருப்பு நால்உம்- நான்கு தந்தங்களும், இதற்கு -இவ்யானைக்கு, உள எனில்- உள்ளனவானால், வலிய குணதிக்கில் வாரணம்உம் -வலிமையையுடைய கீழ்திசை யானையான ஐராவதமும், எதிர் நிகர் அல - (இதற்கு)ஏற்றஒப்பாகாது; நாமம் உரை செயின் - (இதற்குப்) பெயர் இன்னதென்றுசொன்னால், நிலை உடைய சுப்ரதீகம் - உறுதி நிலைமையையுடைய சுப்பிரதீகம்(என்பதாம்); இதன் வலி பகரில் - இதன் வலிமையைக் கூறலுற்றால், இபம் எட்டுஉம்நாணும்- அஷ்டதிக்கஜங்களும் (தமக்கு இப்படிப்பட்ட*

*வலிமையில்லையே யென்று) வெட்கப்படும்; எதிர் எறி - எதிரிலே வீசுதற்குரிய, படைகள் - ஆயுதங்களை,உணர்வு உற்ற - (யாவரும்) அறிந்துபிரயோகிக்கிற, போரில் - யுத்தகளத்தில், எரிவரு - தீ எழுகிற, புகர்முகம் - செம்புள்ளிகளையுடைய முகத்தையும், கரம் -துதிக்கையையும், கபோலம் மதம்- கன்னங்களினின்று பெருகுகிறமதசலத்தையுமுடைய, கரி - (இப்பகதத்தன்) யானை, பொரு - போர்செய்கிற,தொழில்-, உரைக்கல் ஆகும் அளவதுஓ- (எவராலேனுஞ்) சொல்லுதற்குத்தக்கஅளவுள்ளதோ? (எ -று.)*

*மகரிகை - யானைக்கொம்பிற்பூண்; சுறாமீனின்திறந்தவாயின் வடிவமாகச்செய்யப்படுவது: மகரமென்பதனடியாப்பிறந்த காரணப்பெயர்; மகரம் - சுறாமீன். இனி, துதிக்கைமேல் எழுதப்படும் மகரிகாபத்திரமுமாம்; அது - சுறாமீன்வடிவமாக எழுதப்படுஞ் சித்திரரேகை; "மகரிகை தரித்த மதமா" என்றார், முதற்போர்ச்சருக்கத்தும். நான்குதந்தங்களையுடைய அந்த ஐராவதத்தினும் இரண்டுதந்தமுடைய இந்தச்சுப்பிரதீகத்துக்குக் குறைவு இரண்டு தந்தம் மாத்திரமே: வலிமைஅழகு உத்தமவிலக்கணம் அறிவு வெண்மை பாரந்தாங்குதல் உயர்ந்த வேந்தனையேந்தல் முதலிய சிறப்புக்களில் ஐராவதத்தினும் சுப்பிரதீகம் மேம்பட்டதுஎன்பது- முதல்வாக்கியத்துக்குக் கருத்து. உபமானத்தோடு உபமேயத்துக்கு உள்ளவித்தியாசத்தை விளக்கியதனால்,* **வேற்றுமையணி.** *'இதற்கு' என்பதை மத்திமதீபமாகஇரண்டு வாக்கியத்துக்குங் கூட்டுக. ஸுப்ரதீகம்என்ற வடசொல் - ஸு - நல்ல,ப்ரதீகம்- அவயவங்களையுடையது எனப் பொருள்படும். எரிவருபுகர். -அனற்பொறியை யொத்த செம்புள்ளிகளுமாம்; யானைமுகத்தில் செம்புள்ளிகளிருத்தல், உத்தமவிலக்கணம்: "தீயுமிழ் சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய்" என்றது காண்க. முன்னே கரம் என வந்ததனால், பின்னே 'கரி' என்றது- துதிக்கையுடையதென்னுங் காரணப் பொருள் குறியாது, யானை யென்னுமாத்திரமாய் நின்றது. கபோல மதகரி - வடசொல்தொடர்*. **பி-ம்** *:- வாரணமுமினி. நாமுமுரை செயின். படைகளுலவுற்ற. (97)*

***53. கரிகளையெடுத்துவானினிடையிடைகரநுதிகொடெற்று நீடுபிறைநிக,***
***ரிருபணைமருப்பினாலுமவரவரெதிரெதிருடைக்கு நேமியிரதமு,***
***முரனுடையசித்ரவால்கொடெருபடியொலியொடு.***

**புடைக்கும் வாசிவிழவிழ,**
**வரவகயமிட்டுவீழநடை பயிலடிகொடுதுகைக்கும்**
**வீரரணியுமே.**

*(இ-ள்.) (அவ்யானை),- கரம் நுதி கொடு - (தன்) துதிக்கையின் நுனியினால், கரிகளை எடுத்து - யானைகளை (உயர) எடுத்து, வானின் இடைஇடை - ஆகாயத்தினிடந்தோறும், எற்றும் - வீசியெறியும்; நீடு- நீண்ட, பிறை நிகர் - இளஞ்சந்திரனை யொத்த, இரு பணை மருப்பினால்உம்- பருத்த தந்தங்களிரண்டினாலும், அவர் அவர் எதிர் எதிர் - அவ்வவ்வீரர்களது எதிரிலே எதிரிலே, நேமி இரதம் உம்- சக்கரங்களையுடைய தேர்களையும், உடைக்கும்-; உரன்உடைய - வலிமையையுடைய, சித்ரம் வால்கொடு - அழகிய வாலினால், வாசி விழவிழ - குதிரைகள் மிகுதியாக விழும்படி, ஒலியொடு-ஓசையுடன், ஒரு படி புடைக்கும்- ஒருவிதமாய் அடிக்கும்; அரவு- (பூமியைத்தாங்குகிற) ஆதிசேஷன், அபயம் இட்டுவீழ- ( பார மிகுதியை ஆற்றாமல்) அபயம் வேண்டிக் கீழ்விழும்படி, நடைபயில்-நடத்தலைச் செய்கிற, அடி கொடு - கால்களால், வீரர் அணிஉம்- காலாள்வீரர்களதுகூட்டத்தையும், துகைக்கும்- மிதித்துத் துவைக்கும்; (எ -று.)*

*இப்பாட்டின் நான்கு வாக்கியங்களால், அந்தப்பகதத்தன்யானை பாண்டவரது நால்வகைச்சேனையையும் தன் உறுப்புகளால் அழித்தலை விளக்கினார். கரநுதி, சித்ரம்- வடமொழிகள். வால்- வால மென்னும் வடசொல்லின் விகாரம். யானைத்தந்தத்துக்குப் பிறையுவமை- வளைவு வெண்மை ஒளிகளாலென்க. ' அவரவர் எதிர் எதிர்' என்பதை முந்தினபிந்தின வாக்கியங்களுக்குங் கூட்டுக; அவ்வவ்வீரர் பார்த்தும் பரிகாரமொன்றுஞ் செய்யமாட்டாமல் நிற்க என்க. அபயமிடுதல் - பயப்படாதேயென்று வாக்குத்தத்தஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தல், அடைக்கலங்கொள்ளல். 'உரனுடைய*

*சித்திரவாலதிகொடொருபடிபுடைக்கும் வாசிவிழ விழ' என்ற பாடம், சந்தத்துக்குப்பொருந்தாது.* ***பி - ம்:*** *அணியையே.* *(98)*

### *54.- பகதத்தனாலும் அவன்யானையினாலும் தம்சேனை இளைத்ததுகண்டு தருமன் ஸ்ரீகிருஷ்ணனை நினைத்தல்.*

***அமர்செய்பக தத்த னாலு மவன்விடு மருவிமத வெற்பி னாலு***
***மணிகெழு,***
***தமபடையி ளைத்த தாக விரகொடு தருமனுணர் வுற்று வேறொர்***
***திசையினி,***
***லிமிழ்முரச ரற்று பூசல் புரிதரு மிளையவனடத்து தேரின்***
***வலவனை,***
***நிமலனைய னைத்து மான வொருவனை நினையினன்ம னத்தி***
***னோடு பரவியே.***

*(இ -ள்.) (இப்படி), அமர்செய்- போர்செய்கிற, பகதத்தனாலும்-, அவன் விடும்- அவன் ஏவின, அருவி மதம் வெற்பினால்உம்- மதநீரருவியையுடைய மலைபோன்ற யானையினாலும், அணி கெழு தம படை - அழகுமிக்க தம்முடைய சேனை, இளைத்தது ஆக - சோர் வடைய,- (அப்பொழுது), தருமன்-, விரகொடு உணர்வு உற்று-*

*நல்லுபாயமேற்பட ஆலோசித்து,- வேறு ஒர் திசையினில்- வேறொருதிக்கிலே, இமிழ்முரசு அரற்று பூசல் புரிதரும் - ஒலியையுடைய பேரிகைகள் ஆரவாரிக்கிற பெரும்போரைச் ( சஞ்சத்தகரோடு) செய்கிற, இளையவன் - (தன்) தம்பியான அருச்சுனன், நடத்து -ஏறிச்செல்கிற, தேரின்- இரதத்தின், வலவனை- சாரதியும், நிமலனை-குற்மற்றவனும், அனைத்துஉம் ஆனஒருவனை - எல்லாச் சராசரங்களின் வடிவமான ஒருத்தனுமாகிய கண்ணபிரானை, மனத்தினோடு பரவி- கருத்தினோடு துதித்து, நினையினன் - நினைத்தான் [தியானித்தான்]; ( எ-று.)*

*நிமலன்- தான் கருமசம்பந்தமில்லாதவனாதல் மாத்திரமே யன்றி, தனக்குச் சரீரமாகவுள்ள சராசரங்களின் வினைகளுந் தொடரப்பெறாதவன் "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்றபடி சகல சேதநாசேதநங்களின் உள்ளும் புறம்பும் எம்பெருமான் வாசியறக் கலந்துநிற்றலின்,' அனைத்துமான ஒருவன்' என்றார். 'அனைத்து' என்பது- சொல்லால் ஒருமையாயினும், பொருளால் பன்மைகுறிக்கும். 'தேரின் வலவனை, நிமலனை, அனைத்துமான வொருவனை' என்றவற்றால், எம்பெருமானது சௌலப்பியமும், பரத்துவமும், ஜகச்சரீரகத்வமும் விளங்கும், 'இமிர்முரசமெற்றுபூசல்' என்ற பாடம், சந்தத்துக்குப் பொருந்தாது; 'இமிர்சமுரமெற்று'என்றிருப்பின் பொருந்தும். விறலொடுணர்வுற்று என்ற பாடத்துக்கு- உறுதியாகஆலோசித்து என்க.* *(99)*

வேறு.

### *55.- சஞ்சத்தகரைவென்ற அருச்சுனனோடு தருமன்செய்தியை ஸ்ரீக்ருஷ்ணன்கூறுதல்.*

***நினைவுற்ற பொழுதெழுது முரசுற்ற கொடிநிருப னியமித்த***
***படித ரியலார்,***
***முனைமட்க வமர்பொருது செயமுற்றி யுவகைபெறு***
***முகிலொத்த வடிவினெடுமால்,***
***புனைவிற்கை யடுபகழி திசைசுற்று மறையநனி பொழிகொற்ற***
***விசயனுடனே,***
***வினைமுற்றி யுயர்தருமனுடனிற்றை யரியவமர் விளைவுற்ற***
***தெனவுரைசெய்தான்.***

*(இ-ள்.) நினைவு உற்ற பொழுது - (அங்ஙனம் தருமபுத்திரன்) தியானித்தவளவிலே,- எழுது முரசு உற்ற- எழுதப்பட்ட பேரிகைவடிவம் பொருந்தின,கொடி - துவசத்தையுடைய, நிருபன் - தருமபுத்திரன், நியமித்தபடி- கட்டளையிட்டபடி, தரியலார் முனை மட்க - பகைவர்கள் போரில் அழியும்படி, அமர் பொருது - போர் செய்து, செயம் முற்றி - வெற்றி மிக்கு, உவகை பெறு- மகிழ்ச்சி பெற்ற, முகில் ஒத்த வடிவின் நெடு மால் - மேகத்தை யொத்த திருமேனியையுடைய பெருமைக்குணமுள்ள கண்ணபிரான்,- கை- (தன் ) கையில், புனை - தரித்த, வில்- வில்லினின்று, அடு பகழி - கொல்லும் அம்புகளை, திசை சுற்றுஉம் மறைய- திக்குக்கள் முழுதும் மறையும்படி, நனிபொழி - மிகுதியாகச் சொரிகிற, கொற்றம் விசயனுடனே - வெற்றியையுடைய அருச்சுனனோடு,-' இற்றை - இப்பொழுது, வினை முற்றி உயர் தருமனுடன் - போர்தொழிலில் மிகப்பயின்று [தேறிச்] சிறந்த யுதிட்டிரனோடு, (பகைவர்க்கு)*

*அரிய அமர் உற்றது- பொறுத்தற்கரிய போர் நேர்ந்தது,' என - என்று, உரை செய்தான்- சொல்லியருளினான்; ( எ -று.)*

*கீழ் ஏழாம்பாட்டில் " கோத்தருமன் பணித்ததற்பின்" என்றதற்கு ஏற்ப, 'நிருபன் நியமித்தபடி' என்றார், அருச்சுனனுக்க நியமித்தது, அவன் சாரதியான கண்ணனுக்கும் அமையும், 'நியமித்தபடி பொருது' என்றதனால், கண்ணனது அடியார்க்கெளிமை பெறப்படும். அர்ச்சுனனது வடிவத்தில் ஆவேசித்துத் தொழில் செய்பவன் திருமாலே யாதலால், 'அமர்பொருது செயமுற்றி' எனப் போரும் வெற்றியும் கண்ணன்மேலும் ஏற்றிக் கூறப்பட்டன.* ***பி-ம்*** *: பகழிமழை,*

*இதுமுதல் பன்னிரண்டு கவிகள்- பெரும்பாலும் ஒன்ற மூன்று ஐந்தாஞ் சீர்கள்புளிமாங்காய்ச்சீர்களும், இரண்டு நான்காஞ் சீர்கள் கருவிளங்காய்ச்சீர்களும், ஆறுஏழாஞ் சீர்கள் புளிமாச்சீர்களுமாகிய* ***எழுசீராசிரியச் சந்தவிருத்தங்கள்.***
*இவற்றிற்கு'தனதத்த தனதனன தனதத்த தனதனன தனதத்த தனன தனனா' என்பதுசந்தக்குழிப்பு (100)*

### *56.- பகதத்தனைக்கொல்லவருகஎன்று ஸ்ரீக்ருஷ்ணன் அருச்சுனனிடங் கூறுதல்.*

**ஒருபத்தொடுறழொருபதுறழ்பத்தொடுறழொருபதுடையெட்டு**
**விருதருயிர்நீ,**
**தெரிவித்தபகழிகொடுமடிவித்துவலிமையொடுசிலை வெற்றியுற**
**வமர்செய்தாய்,**
**முரணற்றதிவணினியுன் னுயிரொத்த தமையனொடு முனைபுக்கு**
**விரைவினணுகா,**
**வரையொத்த களிறுடையபகதத்தனுயிர்கவரவருகிற்றி**
**நொடியிலெனவே.**

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ -ள்.) (கண்ணன் அருச்சுனனை நோக்கி), 'ஒருபத்தொடு உறழ் ஒருபது உறழ் பத்தொடு உறழ் ஒருபது உடை எட்டு விருதர்- எண்பதினாயிரம் வீரர்களது, உயிர்- உயிரை, நீ-, தெரிவித்த பகழி கொடு- (பெரியோரால்) அறிவிக்கப்பட்ட அம்புகளால், மடிவித்து - (இப்பொழுது) அழித்து, வலிமையொடு பலத்துடனே, சிலை- வில்வித்தையில், வெற்றிஉற- சயமுண்டாம்படி, அமர் செய்தாய்- போரைச்செய்தாய்; (ஆதலால்), இவண் - இவ்விடத்தில், முரன் அற்றது- (உனக்குப்) பகை ஒழிந்தது; இனி - இனிமேல், (நீ), விரைவின் - துரிதமாக, முனை புக்கு - போர்க்களத்தினுட் பிரவேசித்து, உன் உயிர் ஒத்த தமையனொடு அணுகா - உனது உயிரைப் போன்ற தமையனான தருமனுடனே சேர்ந்து, வரை ஒத்த களிறு உடைய பகதத்தன் உயிர் கவர - மலையைப்போன்ற யானையையுடைய பகதத்தனது உயிரை (அவனுடம்பினின்றும்) பறிக்கும் பொருட்டு, நொடியில் - இந்நொடிப்பொழுதிலே, வருகிற்றி - ( உடன்) வருவாய்,' என - என்று சொல்லி,- (எ -று.)-'*

*அணுகினான்' என அடுத்தகவியில் முடியும். அன்று சஞ்சத்தகரில் மடிவித்தவர் எண்பதினாயிர வீரரென்க.*

*உறழ்தல் - எண்கூட்டிப்பெருக்கல். பத்தோடு பெருக்கிய பத்து- நூறு, அதனோடு பெருக்கிய பத்து - ஆயிரம், அதனோடு பெருக்கிய பத்து - பதினாயிரம்:அதனையுடைய எட்டு - எண்பதினாயிரம். தெரிவித்த பகழி- (கிருபனும்துரோணனும் பரமசிவனும் கண்ணபிரானும்) கற்றக்கொடுத்த அஸ்திரசஸ்திரங்கள்.எக்காலத்தும் ஒருபடிப்பட நித்தியமாய் அழிவில்லாததான உயிருக்குமடிதல்- உடம்பினின்று நீங்குதல். விருது- வலிமை, வீரம், வெற்றி; அவற்றையுடையவர்-விருதர். **பி -ம்** : நிருபர். (101)*

### *57.- ஸ்ரீ க்ருஷ்ணன் அருச்சுனனோடு பகதத்தனை யணுகுதல்.*

**அரியொத்த பரிகடவிமனமொத்த விரதமிசையமரர்க்கு**
**முதல்வன்மகனோ,**
**டெரிபற்றிவருமனில மெனவெற்றி வரிவளையு மிதழ்வைத்தவ்**
**வொருநொடியிலே,**
**கிரிமுற்று மரிவதொரு கிளர்வச்ர னெனவுதய கிரியுற்ற**
**பரிதியெனவே,**
**கரிசுற்றும் வரவிகட கரடக் கைம்மலையில்வருகணை**
**விக்ரமனையணுகினான்.**

*(இ-ள்.) அரி ஒத்த (வேகத்தில்) வாயுவைப்போன்ற, பரி - குதிரைகளை, கடவி-செலுத்திக்கொண்டு, மனம் ஒத்த இரதமிசை மனத்தையொத்த தேரின் மீது, அமரர்க்கு முதல்வன் மகனோடு- தேவர்களுக்குத் தலைவனான இந்திரனுக்குப் புத்திரனாகிய அருச்சுனனுடன், எரி பற்றி வரும் அனிலம் என - நெருப்போடு தொடர்ந்து வருங் காற்றுப்போல, வெற்றி வரி வளைஉம் இதழ் வைத்து- சயத்துக்கு (அடையாளமாக)க் கோடுகளையுடைய தன் சங்கத்தையும் வாயில்வைத்து ஊதிக்கொண்டு, அ ஒரு நொடியிலே - அந்த ஒரு மாத்திரைப் பொழுதிலே, (கண்ணன்),- கிரி முற்றுஉம் அரிவது ஒரு கிளர் வச்ரன் என - மலைகளெல்லாவற்றையும் இறகறுப்பதொரு விளங்குகிற வச்சிராயுதத்தையுடைய இந்திரன் போலவும், உதயகிரி உற்ற பரிதிஎன - உதய பருவதத்தின் மேற் பொருந்தின சூரியன் போலவும்,- கரி சுற்றும் வர - யானைகள் (தன்னைச்) சுற்றிலும்வர, விகடம் கரடம் கை மலையில் வரு - களிமயக்கத்தையும் மதசலத்தையும்துதிக்கையயுமுடைய மலைபோன்ற யானையின் மீது வருகிற, கணை விக்ரமனை - அம்புதொழிலிற் பராக்கிரமத்தையுடைய பகதத்தனை, அணுகினான்- சமீபித்தான்; (எ- று.)*

*அரி - ஹரி; வடசொல்: (அகப்பட்டபொருள்களை) அடித்துக் கொண்டு வருவது என்று பொருள். ஏறியவீரரது உள்ளக்கருத்தை யொத்துச் செல்லுவ தென்பார், 'மனமொத்த இரதம்' என்றார்; மனோவேகம்போலச் செல்லுந் தேர் என்றலும் ஒன்று. ( திருமால் வீற்றிருக்கும் இடமாதல்பற்றி) இதய கமலத்தை யொத்த தேரென்றலும் அமையும். நெருப்பு- பகையழிக்கும் அருச்சுனனுக்கும், காற்று- அவனைத் தூண்டித் தொழில் செய்விக்குங் கண்ணனுக்கும் வினையுவமை. வடமொழி மகாபாரதத்திலும் இவ்வுவமை விவரித்துக் கூறப்பட்டுள்ளமை காண்க. அவ்வொருநொடியிலே - தருமன் நினைத்தவுடன் மிகவிரைவிலே என்றபடி. முன்றாமடி - யானை மீது வரும் பகதத்தனுக்கு உவமை. இந்திரன், ஐராவதயானையின்மேல்*

*ஏறிவருதல்பற்றி, உவமை கூறப்பட்டான். இந்திரன் செல்வ வாழ்க்கைபற்றியும், பரிதிதேககாந்தியும் பகையிருளொழிக்குந்தன்மையும் பற்றியும் உவமையாவர். வச்ரன்என்னும் பெயரால் இந்திரனைக் குறித்தலை, மேல் 65- ஆங் கவியிலுங் காண்க. **பி-ம்:** வச்ரமென, வச்ரியென, சக்ரனென, கணைவித்தகனை. (102)*

*58.- இதுவும் அடுத்த கவியும்- பகதத்தன் பொருது அருச்சுனனைத் தளர்வுறச் செய்தமை கூறம்.*

***அனிலத்தின் மதலையொடு வயிரத்து மலையுமுனையமர் விட்டு***
***முகிழ்நகைசெயாத,***
***வினியிற்றைய மரிலரிதெளிதொட்டியெதிர் பொருதலென***
***மத்தகரியின் மிசையான்,***
***மனமுற்று மழல்கதுவ மொழிமுற்றுமடி நிகரவலிபட்ட***
***சிலையைவளையா,***
***மினலொத்த கணைபலவும் வசையற்ற புகழுடைய***
***விசயற்குமிசை யுதவினான்.***

*(இ-ள்.) (அப்பொழுது), மத்தகரியின் மிசையான்- மதம் பிடித்த யானையின்மேலுள்ளவனான பகதத்தன், - அனிலத்தின் மதலையெடு - வாயுவின் புத்திரனான வீமனுடனே, வயிரத்து மலையும் - பகைமையோடு போர்செய்கிற, முனை அமர் - கொடியபோரை, விட்டு- ஒழித்து,- முகில் நகை செயா- அரும்புகிற புன்சிரிப்பைச் செய்து,-' இனி-, இற்றை அமரில்- இன்றைப் போரில் எளிது ஒட்டி எதிர் பொருதல்- சுலபமாகச் சபதஞ்செய்து (அவ்வாறே) எதிர்த்துப் போர் செய்தல்,அரிது - அருமையானது, ' என - என்று எண்ணி,- மனம் முற்றுஉம் - மனம்முழுவதிலும், அழல் கதுவ- கோபத்தீப்பற்றவும், மொழி முற்றுஉம்- (வீரவாதமான) சொற்களெல்லாம், இடி நிகர- இடிமுழக்கத்தை ஒத்திருக்கவும், வலி பட்ட சிலையை வளையா - உறுதி மிக்க வில்லை வளைத்த, மினல் ஒத்த கணை பலஉம் - மின்னலைப்போன்ற[விளங்குகின்ற] அம்புகளநேகங்களை, வசை அற்ற புகழ் உடைய விசயற்குமிசை- பழிப்பில்லாத கீர்த்தியையுடைய அருச்சுனன் மேலே, உதவினான் - பிரயோகித்தான்;*

*'தேவர்களை இருதிணையாகவுங் கூறலாம்' ஆதலால், இங்கே 'அனிலம்' என அஃறிணையாகக் கூறப்பட்டது. வைரம் என்னும் வடசொல், போலிபெற்றது. முனை அமர்- சிறந்த போருமாம்; முந்தின போ ரெனினுமாம். மின்னல்- தொழிலாகுபெயர். விசயற்கு மிசை - உருபுமயக்கமாக, அருச்சுனனது மேலே யென்க.* ***பி-ம்*** *: வயிரித்து. (103)*

***59. அவன்விட்டசுடுகணைகள்கொடிமற்கடமு நடுவணற***
***வெட்டியதிதவளமா,***
***கவனத்தின்முடுகியடுபரிகொத்தியுடலிலிடு***
***கவசத்தைமறையநுழையூச்,***
***சிவனுக்குமலரிலுறைபிரமற்குமுணர்வரியதிகிரிக்***
***கைவலவனையுமிச்,***
***சவனத்தின்மிகுதுயரமுறுவிக்கவவசமிகுதளர்வுற்றதனு***
***விசயனே.***

*இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்*

*(இ -ள்.) அவன் விட்ட - அப்பகதத்தன் பிரயோகித்த, சுடு கணைகள்- பகையழிக்கவல்ல அம்புகள்,- (அருச்சுனனது), மற்கடம்*

*கொடிஉம்- குரங்கின் வடிவமெழுதின துவசத்தையும், நடுவண் அற- நடுவிலே அறும்படி, வெட்டி - துணித்து, - அதி தவளம்- மிக வெண்மையானவையும், மா கவனத்தின் முடுகி அடு- மிக்க நடையில் விசைகொண்டு பொருந்துபவையுமான, பரி- குதிரைகளை, கொத்தி- பேதித்து,- உடலில் இடு கவசத்தை- உடம்பில் தரித்த கவசத்தை, மறைய- (முழுவதும்) மறையும்படி, நுழையூ- நுழைந்து, சிவனுக்குஉம்-, மலரில் உறை- தாமரை மலரில் வாழ்கிற, பிரமற்கு உம்- பிரமனுக்கும், உணர்வு அரிய - அறிதற்கு முடியாத, திகிரிகை வலவனைஉம்- சக்கரத்தையேந்துங் கையையுடைய (பார்த்த) சாரதியான கண்ணனையும், இ சவனத்தில்- இப்போரில், மிகு துயரம் உறுவிக்க- மிக்க*

*துன்பமடையச்செய்ய,- அவசம் மிகு தளர்வு உற்ற- தன்வசந் தப்புந்தன்மை மிகும்படியான தளர்ச்சியை யடைந்த, தனு விசயன்- விற்போரில்வல்ல அருச்சுனன்,- (எ-று.)-, 'தனதுசிலைகுனிவித்து' என அடுத்த கவியோடு தொடரும்.*

*மூன்றாம் அடியால், "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்" என்ற இரண்டுதன்மைகளும் நன்குவிளக்கப்பட்டன. வலவனையும், உம்- உயர்வுசிறப்போடு இறந்தது தழுவிய எச்சம். சவனம் என்பதை ஸவநம் என்ற வடசொல்லின்திரிபு என்க; வேள்வியென்று பொருளாம்: பொருதல் 'களவேள்வி' எனப்படுதல் காண்க. 'ஜவநம்' என்ற வடசொற்றிரிபு என்றால், வேகத்தால்மிக்க தென்று காரணப்பொருள்படும். மர்க்கடம், அதிதவளம், கவசம், அவசம் - வடசொற்கள். தநு - உடம்பையுடைய எனினுமாம். **பி - ம்** :- தவளவெங். சிவமுற்ற. வலவனையுமே. (104)*

### *60.- மூன்றுகவிகள்-அருச்சுனன் தன் பராக்கிரமத்தைக் காட்டியமைகூறும்.*

***உரமிக்க தனதுசிலைகுனிவித்துமதியின்வகிருவமிக்குமடு***
***பகழியால்,***
***வரமிக்கதவளநிறமதவெற்பையெதிர்கடவிவருவெற்றிய***
***வனிபதிநீள்,***
***கரமுற்றசிலைகவசமறவெட்டிவிடுகணைகள்கணைவிட்டு***
***விலகவவனும்,***
***சரம்விட்டொரயில்விசயனிரதத்தின்வலவன்மிசைத***
***மரத்தினுடனெறியவே.***

*(இ-ள்.) உரம் மிக்க - வலிமை மிகுந்த, தனது சிலை - தன் வில்லை, குனிவித்து - வளைத்து, மதியின் வகிர் உவமிக்கும்- சந்திரனது பிளப்போடு ஒப்புமைகூறப்படுகிற, அடு பகழியால் - அழிக்க வல்ல அர்த்தசந்திரபாணங்களால்-, வரம் மிக்க- மேன்மை.மிகுந்த, தவளம் நிறம்- வெண்ணிறத்தையுடைய, மதம் வெற்பை- மதத்தையுடைய மலைபோன்ற யானையை, எதிர் கடவி வரு- எதிரிற் செலுத்தி வருகிற, வெற்றி அவனிபதி - சயத்தையுடைய அரசனான பகதத்தனது, நீள் கரம் உற்ற - நீண்ட கையிற் பொருந்தின, சிலை- வில்லும், கவசம்- உடற்கவசமும், அற- துணிபடும்படி, வெட்டி- பிளந்து, விடு கணைகள்- (அவன் தன்மேல்) விடும் ஆயுதங்களை, கணை விட்டு- எதிரம்பு கோத்து, விலக- (அருச்சுனன்) விலக்க,- அவன்உன்- அப்பகதத்தனும், சரம் விட்டு- அம்பையொழித்து, ஓர் அயில்உம்- ஒரு வேலாயுதத்தை, விசயன் இரதத்தின் வலவன்மிசை- அருச்சுனனது தேர்ப்பாகனான கண்ணபிரான்மேல், தமரத்தினுடன்- ஆரவாரத்*

*தோடு, எறிய- வீச,-(எ-று.)-"அயிலதனை*** தறிவித்து" என வருங் கவியோடு தொடரும்.*

*உவமித்தல் - ஒத்தல் அவநீபதி- வடமொழித்தொடர்; பூமிக்குத் தலைவன். விலக=விலக்க. சந்தவின்பம் நோக்கிவந்தது, **பி-ம்** : அவனிபதிதன். அவன்மா.(105)*

***61. எறிகுற்ற வயிலசுரருயிர் செற்றவயிலதனையெதிர்முட்ட***
***விடுபகழியாற்,***
***றறிவித்துமகபதிதன்மகன் முக்கணிறைவனொடுசரி***
***யொத்துமுறுவல்புரியா,***
***வெறிமத்தகரடமுகபடமொத்தபுகர்கொண்முகவிகடக்கைம்***
***மலையணியெலா,***
***முறியத்தன்வரிவிலுமிழ்முனைபட்டபகழிமழைமுகில்***
***வற்கமெனமுடுகினான்.***

*(இ-ள்.) மகபதிதன் மகன் -இந்திரனுக்குக் குமாரனான அருச்சுனன்,- எறிகுற்றஅயில்- (பகதத்தன் கண்ணன்மேல்) எறிந்த ஆயுதமும், அசுரர் உயிர் செற்ற அயில்-(முன்பு) அசுரர்களது உயிரை அழித்த*

*வேலும் ஆகிய, அதனை- , எதிர் முட்டவிடு பகழியால்- எதிரிலே தாக்கும்படி பிரயோகித்த அம்புகளால், தறிவித்து -துண்டுபடச்செய்து,- முக்கண் இறைவனோடு சரி ஒத்து- மூன்று திருக்கண்களையுடைய தலைவனான சிவபிரானுடன் மிகவும் ஒத்து, முறுவல் புரியா -கோபநகை செய்து, வெறி- கோபாவேசத்தையும், மத்த கரடம்- மதநீர்கொண்டகபோலங்களையும், முகபடம் ஒத்த புகர்கொள் முகம்- முகபடாத்தைபோன்றசெம்புள்ளிகளைக் கொண்ட முகத்தையும், விகடம் - மதமயக்கத்தையும், கை-துதிக்கையையுமுடைய, மலை- மலைபோன்ற (பகதத்தன்) யானைகளின், அணிஎலாம்- வரிசைகள் யாவும், முறிய - அழியும்படி, தன் வரி வில் உமிழ்- தனது கட்டமைந்தவில்லினால் வெளிவிடப்பட்ட, முனைபட்ட பகழி மழை- கூர்மை மிக்கஅம்புமழையை, முகில் வற்கம் என- மேகக்கூட்டம்போல, முடுகினான்- விரைவிற்செலுத்தினான்; (எ- று.)*

*சிவபிரான் சிரித்துப் புரந் துடைத்ததனால்,' இறைவனோடு சரி யொத்து முறுவல் புரியா' என்றார். சரியொத்து- முழுவதும் ஒத்து எனக் கருத்துக் கொள்ளலாம். முகபடம் - யானைக்கு அலங்காரமாக முகத்தின்மேல் இடும் போர்வை.முகத்தின் மேல் உத்தம விலக்கணமாகிய செம்புள்ளிகள் நிறைந்திருத்தல், செந்நிறப்பட்டாடைபோர்த்தது போன்ற உள்ளதனால், 'முகபடமொத்த புகர் கொள் முகம்' எனப்பட்டது. அசுரர் - தேவர்க்கு எதிரானவர்; இச்சொல் பகைவருயிரைக் கவர்பவ ரென்றுங்காரணப் பொருள்படும்: அஸு - உயிர். முனைபட்ட - பகழி - போரில் மிகப்பயின்ற அம்பு எனினுமாம். எறி குற்றம் அயில் என்று பிரித்து - நீங்கிய குற்றத்தையுடைய [குற்றம் நீங்கிய] வேல் என்றும் பொருள் கூறலாம்.*
***பி -ம்*** *: பகழியிற். முகபட சித்ரபுகர்கொள். (106)*

***62. அணிகெட்டுமதகரிகள்கரமற்றுவிழமுதியசிரமற்றுவிழ***
***வருகுதாழ்,***
***மணியற்றவிழநெடியகுடரற்றுவிழமுறைகொள்வயிறற்று***
***விழவுடலெலாந்,***
***துணிபட்டு விழவிசிறு செவியற்று விழவலியதொடையற்று***
***விழமகரிகைப்,***
***பணிபெற்றபணைகளொடுபதமற்றுவிழவுழுதுபடுவித்தபல***
***பகழியே.***

*(இ-ள்.) மத கரிகள் - மதயானைகள், அணி கெட்டு- ஒழுங்கு கெட்டு, கரம் அற்று விழ- துதிக்கையறுந்துவிழவும், முதிய சிரம் அற்று விழ- பழமையான[முற்றின வலிய] தலை யறுந்துவிழவும், அருகு தாழ் மணி அற்று விழ - பக்கங்களில்தொங்குகிற மணிகள் அறுந்துவிழவும், நெடிய குடர் அற்று விழ - மலைக் குகையை யொத்த [உள்விசாலமான] வயிறு அறுந்துவிழவும், உடல் எலாம் துணி பட்டு விழ - உடம்புமுழுவதும் துண்டாகி விழவும், விசிறு செவி அற்று விழ- (எப்பொழுதும்) வேகமாக வீசுகிற காதுகள் அறந்த விழவும், வலிய தொடை அற்று விழ - வலிமையுடைய தொடை யென்னும் உறுப்புக்கள் அறுந்து விழவும், மகரிகை பணிபெற்ற பணைகளொடு- பூணாகிய ஆபரணத்தைத் தரித்த தந்தங்களுடன், பதம் - கால்களும், அற்ற- அறுபட்டு, விழவும், பல பகழி - (அருச்சுனனது) அநேக அம்புகள், உழுது- நன்றாகப்பாய்ந்து, படுவித்த - அழித்தன; (எ -று.)* ***பி -ம்:*** *உடல்களும். (107)*

***63. அப்போது பகதத்தன் திருமால் தந்திருந்த வேலை எறிய, ஸ்ரீக்ருஷ்ணன் அதனை மார்பிலேற்றல்.***

***பெயர்பெற்றகரிவயவர் பிணமிக்கவமரினிடைபிறகிட்டு***
***முறியுமளவே,***
***சயசக்ரதரனையிவன் வழிபட்டபொழுதுதருதழலுக்ரமுடைய***
***தொருவேல்,***
***வயமுற்ற சிலை விசயனுடலத்தினெறிவது தன்***
***வடிவத்திலுறவுதவினா,***

***னயர்வுற்றவுணர் வினலமென முத்தி முதல்***
***வனெனவருகுற்றரதவலவனே.***

*(இ-ள்.) (இங்ஙனம் எய்யப்பட்ட அருச்சுனனம்புகளால்), பெயர் பெற்ற கரி வயவர் - பிரசித்திபெற்ற யானை வீரர்கள், பிணம் மிக்க அமரினிடை- பிணங்கள்மிகுந்த அப்போர்க்களத்திலே, பிறகு இட்டு முறியம் அளவே - பின்னிட்டுஅழியும் அத்தருணத்தில்,- இவன்- பகதத்தன், சய சக்ரதரனை- வெற்றியையுடைய சக்ராயுதத்தை யேந்திய திருமாலை, வழிபட்ட பொழுது - (தான் முன்பு)பூசித்தகாலத்தில், தரு - (அப்பெருமானால் தனக்குக்) கொடுக்கப்பட்ட, தழல் உக்ரம்உடையது ஒரு வேல்- நெருப்புப்போலுங் கொடுமையுடையதொரு வேலாயுதத்தை,வயம் உற்ற சிலை விசயன் உடலத்தில் எறிவது- வெற்றிபொருந்தின வில்லையுடையஅருச்சுனனது உடம்பின்மேல் வீசியெறிய அவ்வேல், தன் வடிவத்திற் உற-(அவ்வருச்சுனனனுடம்பிற்படாமல்) தன் உடம்பிற்படும்படி[தன்மார்பிற்பொருந்துமாறுஏற்று],- முத்தி முதல்வன் என அருகு உற்ற - மோக்ஷத்துக்குத்தலைவனென்றுசொல்ல (அவ்வருச்சுனனது) சமீபத்திற் பொருந்திய, ரதம் வலவன்- தேர்ப்பாகனானஸ்ரீ கிருஷ்ணபகவான், அயர்வு உற்ற உணர்வின் நலம் என - மனக்கவற்சியிலுதவிய அறிவின் நற்பய னென்று சொல்லும்படி, உதவினான்- துணைசெய்தருளினான்; (எ-று.)*

*பகதத்தன் தனக்கு முன்பு திருமால் கொடுத்திருந்ததொரு வேற்படையை அப்பொழுது அருச்சுனனைக் கொல்லும்படி அவன் மார்பின்மேலெறிய, அதனைத் திருமாலின் அவதாரமாகிய கண்ண*

*பிரான் தன்மார்பில் ஏற்றுக்கொண்டன னென்பதாம். அயர்வு - மனக்கவற்சி யென்றபொருளதா தலை, "உலகுடன் பெறினுங் கொள்ளலரயர்விலர்" என்ற புறநானூற்றிலுங் காண்க. சக்ரதரன், உக்ரம் - வடசொற்கள் திரியாது நின்றன: திரித்துப் பாடமோதினால், சந்தவின்பம் கெடும். **பி-ம்** : அளவில் (108)*

***64.- பகதத்தன்வேல் ஸ்ரீகிருஷ்ணன்மார்பில் மாலையாய்விளங்கத் தேவர்கள்புகழ்தல்.***

***பருமித்தகளிறுவிடுபகதத்தனெறியுமுதுபகைசெற்றுவரு***
***கொடியவேன்,***
***மருமத்தினிடைமுழுகுபொழுதத்திலதுபுதியமணிவற்க***
***மிகுதொடையலாய்,***
***நிருமித்தபடிதனது புயவெற்பின்மிசையொளிரநிகரற்ற***
***கருணை வடிவைக்கருமத்தின்முதலையிமையவர்சித்தமொடுதொழுதுகரையற்ற***
***புகழுரைசெய்தார்.***

*(இ -ள்.) பருமித்த- பருமையுடைய, களிறு - யானையை, விடு - செலுத்துகிற,பகதத்தன் -, எறியும்- வீசிய, முது பகை செற்று வருகொடிய வேல் - பழமையானபகைவர்களை அழித்துவருகிற கொடுமையுடைய அந்தவேலாயுதம், மருமத்தினிடை முழுகுபொழுதத்தில்- (கண்ணபிரானது) மார்பினிடத்திலே அமுந்தியபொழுதில், அது-, நிருமித்தபடி- (அப்பெருமான்) நியமித்தபடி, புதிய மணிவற்கம் மிகு தொடையல் ஆய் - புதுமையான இரத்தினங்கள் மிக்கதொரு ஆரவடிவமாய், தனது புயம் வெற்பின் மிசைஒளிர - அவ்வெம்பெருமானது மலைகள் போன்ற தோள்களின்மேல் விளங்க, (அவ்வற்புதத்தைக் கண்டு), இமையவர்- தேவர்கள், நிகர் அற்ற கருணை வடிவை - ஒப்பில்லாத திருவருளின் மூர்த்தியானவனும், கருமத்தின் முதலை- (அவரவர்செய்த) வினைக்களுக்கெல்லாம் காரணமானவனும் ஆகிய கண்ணனை, சித்தமொடு - மனக்கருத்துடனே, தொழுது- வணங்கி. கரை அற்ற புகழ் - அளவில்லாத (அவனது) கீர்த்திகளை, உரைசெய்தார் -எடுத்துக்கூறித் துதித்தார்கள்;*

*திருமால் தந்த வேலாதலால், அது அப்பெருமானது திருவவதாரமான கண்ணபிரானை ஒன்றும் ஊறு செய்யமாட்டாது அவனது சங்கல்பத்தின்படி ஓர் ரத்தினஹாரவடிவமாக அவன்மார்பில் விளங்கிற்றுஎன்க. இங்ஙனம் அன்பனான அருச்சுனன்பக்கல்வரம்பு கடந்து கருணைசெய்ததுபற்றி,*

*'கருணை வடிவு' என்றார். பருமித்த - கல்லணையையுடைய எனினுமாம். இதுவரையிலும் எப்போரிலும் அவ்வேல் எறியப்பட்டாரைக் கொல்லாது தவறியதில்லையென்ற தன்மையை, இப்பாட்டில் 'முதுபகைசெற்றுவரு கொடியவேல்' என்றதனாலும், கீழ்ப்பாட்டில் ' தழலுக்ரமுடையதொருவேல் என்றதனாலும் விளக்கினார். திருமால் சகல சேதநாசேதநங்களின் உள்ளும்புறம்பும் இருந்துகொண்டு அவற்றைக்கொண்டு தொழில்செய்தலால், 'கருமத்தின்முதல்' என்றார்: இனி, ஊழ்வினைக்கும் முதற் காரணமானவனென்றும்; கேள்வி தவம் முதலிய சற்கருமங்களுக்கெல்லாம் தலைவனென்றும்; கருமத்திற்கேற்ற பயனையளிப்பவனென்றும் கூறலாம். (109)*

*65.- இதுமுதல் மூன்றுகவிகள்- குளகம்: இதுதான் பகதத்தனுயிரைக்கவர்தற்குச் சமயமென்று ஸ்ரீகிருஷ்ணன் படைகொடுக்க, விசயன் அது கொண்டு பகதத்தனைக் களிற்றுச்சேனையொடு வீழ்த்தியமை கூறும்.*

***இதுநிற்க யமனைநிகர்பகதத்தனுயிர்கவரவிதுபக்வமென***
***விசயனோடு,***
***தரத்தின் முழுதுலகுடிவைத்தபுயலுரைசெய்துறுதிக்கண்***
***விடுபகழிதா,***
***னிதயத்தினுடனருளவுயர்வச்ரன்மதலைதொழுதிருபொற்***
***கைம்மலர்கொடுகொளா,***
***வதிரத்தனெதிர்களிறு பொரவிட்டநொடியில***
***வனகலதினுருவவிடவே.***

*(இ-ள்.) இது நிற்க-; உத்ரத்தில் முழுது உலகு குட வைத்த புயல் - (தனது) திருவயிற்றிலே உலகமுழுவதையுந் தங்கவைத்த மேகம்போன்ற கண்ணபிரான், விசயனோடு - அருச்சுனனுடன், யமனை நிகர் பகதத்தன் உயிர் கவர இது பக்வம் என உரைசெய்து - யமனை யொத்த பகதத்தனது உயிரை வாங்குதற்கு இது தக்க பொழுது என்றுசொல்லி, உறுதிக்கண் விடு பகழிதான் - தவறாதவிதத்திலே பிரயோகிக்கபடுவதான அம்பை, இதயத்தினுடன் அருள- திருவுள்ளத்தோடு (அவனுக்குக்) கொடுத்தருள,- உயர் வச்ரன் மதலை - சிறந்த இந்திரனது புத்திரனானஅருச்சுனன், தொழுது- (கண்ணனை) வணங்கி, இரு பொன் கை மலர் கொடு-அழகிய தாமரைமலர் போன்ற (தனது) இரண்டு கைகளாலும், கொளா-(அந்தஅம்பைப்) பெற்றுக் கொண்டு,- அதிர தன் எதிர் களிறு பொர விட்டநொடியில் - அதிர்ச்சியுண்டாம்படி தன்எதிரிலே யானையைப் போர்செய்தற்குச்செலுத்தின சமயத்தில், அவன் அகலத்தின் உருவ விட- அப்பகதத்தனது மார்பில்ஊடுருவிச் செல்லும் படி (அதனைக்) பிரயோகிக்க,- (எ-று.)-"பகதத்தனும் பட்டுஅவனூர்ந்த பகடும்பட்டு" என் மேல் 67-ஆங் கவியோடு இயையும்.*

*இங்கே கண்ணன் கொடுத்தது, தனது நாராயணாஸ்திரம்; "விரிகடல் வண்ணன்றன் வெவ்வாளி யேவப், புரிகடல்சூழ் பூதலத்துப்பொங்கிக்- கரியுண், மலைதுமிக்கு மால்யானை மன்னு பகதத்தன், தலைதுமியப் போயிற்றே தான்" என்றபாரதவெண்பாவை அறிக. யமன் என்ற வடசொல்- (பிராணிகளை) அடக்குபவனென்று பொருள்படும். யமனுவமை, தவறாமற் கொல்லுதற்கு. "ஒருகையாற் கொள்ளார் கொடாஅர் குரவர்க்கு" என்ப வாதலால், இருகைகொடு கொண்டான்; இங்ஙனகொள்ளுதல், உபசாரம். 'இருபொற்கைம்மலர்கொடு' என்பதை,மத்திமதீபமாக தொழுது என்பதனோடுங் கூட்டலாம். இதயம் - மனதில் தோன்'றும்அன்புக்கு ஆகுபெயர். பொற்கை- பொன்னாபரணமணிந்த கையுமாம்.*
***பி - ம்** :பகழியொன்று. (110)*

***66. பரிதத்த வருமிரத மிசைதத்த வெதிர்முடுகு***
***பகதத்தனுடன் முழுதுநீ,***
***டெரிதத்தி யுகுவதென வுகுவித்த குருதிநதியிடைதத்த***
***வலிகெ முவுதோட்,***
***கிரிதத்த மகுடமொடு தலைதத்த வொருரசத***

***திரிதத்த விழுவ தெனவே,***
***கரிதத்த மறியலகை கடைதத்தி யுவகையொடு***
***களமுற்று நடந விலவே.***

*(இ -ள்.) பரி - குதிரைகள், தத்த - தாவிச்செல்ல, வரும் - வருகிற, இரதம்மிசை - (அருச்சனனது) தேரின்மேல், தத்த - பாயும்படி, எதிர் முடுகு - எதிரிலே (யானையோடு) விரைந்துவருகிற, பகதத்தன்- பகதத்தனது, உடல் முழுவதும்எம்- உடம்புமுழுவதிலும், நீடு எரி தத்தி உகுவது என - மிக்க நெருப்புப்பற்றிச் சிந்துவதுபோல, உகுவித்த - சொரிவித்த, குருதி நதி - இரத்தவாறு,இடைதத்த - அவ்விடத்திலே பெருகவும், வலி கெழுவு தோள் கிரி - பலம் மிக்கமலைகள் போன்ற தோள்கள், தத்த - ஒடியவும், மகுடமொடு தலை தத்த -கீரீடத்தோடு தலை சிதறவும், ஒரு ரசத கிரி தத்தி விழுவது என - வெள்ளிமலையொன்று முறிந்துவிழுவதுபோல, கரிதத்த - (வெள்ளை) யானை இறந்துவிழுவும், மறிஅலகை- (எதிர்ப்பட்டாரை) அகப்படுத்துந்தன்மையுள்ள பேய்கள், கடை தத்தி-அவ்விடத்தில் நெருங்கி, உவகையொடு - மகிழ்ச்சியுடனே, களம் முற்றுஉம்-போர்க்களம் முழுவதிலும், நடம் நவில - கூத்தாடவும், - (எ - று.)-" பகதத்தனும்பட்டு அவனூர்ந்த பகடும் பட்டு" என அடுத்த கவியோடு தொடரும்.*

*'தத்த' என ஒருசொல்லே பலவிடத்தும் வந்தது,* ***சொற்பின் வருநிலையணி.*** *'வினைப்பகுதிகள் வேண்டியபொருளை விளைக்கும்' என வடநூலார் கூறிய நியாயத்தால், இக்கவியில் 'தத்த' என்னுஞ்சொல்லுக்கு - சந்தர்ப்பத்திற்குஏற்பப் பல பொருள் உரைக்கப்பட்டது. ரஜதம், நடம் - வடசொற்கள்.* ***பி -ம்:*** *கெழுபுயக். (111)*

வேறு.

***67. பகதத் தனும்பட் டவனூர்ந்த பகடும் பட்டுப்புடைசூழச்***
***சிகரக் கிரிபோ லணிநின்ற சேனைக் களிறும்***
***பட்டமைகண்***
***டிகலிற்பொழிகார்வெஞ்சிலைக்கையிமையோர்தலைவன்***
***குமரனையும்***
***புகழ்தற் கரிய பாகனையும் புகழா ரில்லைப் பூபாலர்.***

*(இ-ள்.) (அருச்சுனன்னெய்த கண்ணனம்பினால்), பகதத்தனும்--, பட்டு - இறந்து, அவன் ஊர்ந்த பகடுஉம் - அவன் ஏறிச்செலுத்திய சுப்பிரதீக யானையும், பட்டு - இறந்து, புடை சூழ - (அவனது) பக்கங்களிற் சுற்றிலும், சிகரம் கிரி போல் -உச்சியையுடைய மலைகள்போல, அணி நின்ற - ஒழுங்கு படநின்ற, சேனைகளிறுஉம் - சேனையாகவுள்ள யானைகளும், பட்டமை - இறந்ததை, கண்டு - பார்த்து, - பூபாலர் - அரசர்கள்,- இகலின் பொழி - வலிமையோடு மழைபொழிகிற,கார் - காளமேகம்போன்ற, வெம் சிலை கை இமையோர் தலைவன் குமரனைஉம் -கொடிய வில்லை ஏந்திய கையையுடைய தேவராசகுமாரனான அருச்சுனனையும்,புகழ்தற்கு அரிய பாகனை உம் - துதிக்க முடியாத [அளவிறந்த மகிமையுடைய]பார்த்தசாரதியான கண்ணனையும், புகழார் இல்லை - கொண்டாடிப் பேசாதாரில்லை;(எ - று.)*

*இருதிறத்து அரசர்களிலும் எவரும் புகழாதவரில்லை: எல்லோரும் புகழ்ந்தனரென்பதாம். உபமேயமாகிய யானையின் மேல்தவிசைக் கருதி, உபமானமாகிய மலையை ' சிகரக்கிரி' என விசேடித்துக் கூறினார். கார் - இருவர்க்கும் உவமை; சிலைக்கு ஒப்பெனினுமாம். மனமொழிமெய்களுக்கு எட்டாதமாயவனாதலால், ' புகழ்தற்கரிய பாகன்' என்றார் இதனால், பகவானதுவாசாமகோசரத்வம் வெளியாம்.* ***பி -ம்*** *: புகழாதில்லை.*

*இதுமுதற் பதினாறுகவிகள்- கீழ்ச்சருக்கத்தின் முப்பத்துநான்காங்கவி போன்ற* ***அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள்.*** *(112)*

*68.- அப்போது காந்தாரர் கொல்வதாக அருச்சுனனைப் புடைசூழ்தல்*

***விருதுஞ்சஞ்பல்லியமுமேன்மேலதிரவிற்போரில்***
***பொருதின்றிவனைக்கொன்றன்றிப்போகோமென்னப்புடை***
***சூழ்ந்தார்***
***மருதுஞ்சகடும்விழவுதைத்தவலவன்கடவவாயுவெனக்***
***கருதும்புரவித்தேரூருங்கழற்காவலன்மேற்காந்தாரர்***

*(இ-ள்.) (அதன்பின்பு), காந்தாரார் - காந்தாரதேசத்து அரசர்கள், விருதுஉம்- பிருதாவளிகளும், சங்குஉம்-, பல் இயம்உம் -அநேக வாத்தியங்களும், மேல்மேல் அதிர - மிக அதிகமாகமுழங்க, 'வில் போரில் - வில்லினாற் செய்யும் யுத்தத்தில், இன்று - இன்றைக்கு, பொருது- போர்செய்து, இவனை - இவ்வருச்சுனனை, கொன்றுஅன்றி- கொன்றாலல்லாமல், போகோம்- விட்டுப்போகமாட்டோம்', என்ன - என்று(வீரவாதஞ்) சொல்லிக்கொண்டு,- மருதுஉம் சகடுஉம் விழ உதைத்த -மருதமரங்களும் வண்டியுங் கீழ்விழும்படி (திருவடியால்) உதைத்திட்ட, வலவன் -பாகனான கண்ணன், கடவ - செலுத்த,- வாயு என கருதும் - (விசையால்)காற்றென்று எண்ணத்தக்க, புரவி- குதிரைகளைப் பூட்டிய, தேர் - தேரின்மேல்,ஊரும் - ஏறிவருகிற, கழல் காவலன்மேல்- வீரக்கழலையுடைய அருச்சனராசன்மேல், புடைசூழ்ந்தார்- நாற்புறத்துஞ் சூழ்ந்துகொண்டார்கள்; (எ -று.)- விருது - வெற்றியைக்குறிக்கும் சின்னம் முதலிய ஊதுகருவிகளுமாம்.*
***பி -ம்** :விறற்போரில். (113)*

*69.- அருச்சுனனம்பால் சகுனிதனயரிருவர் இறத்தல்.*

***காந்துந்தறுகட்காந்தாரர்கடுவெங்கனல்போற்கண்சிவந்தங்***
***கேந்துஞ்சிலையாற்கணைமழைபெய்தெழிலிக்கணம்போரெல***
***திரூன்றிச்***
***சாந்தும்புழுகுங்கமழ்வாகுச்சகுனிதனயர்தலைபோரிற்***
***சேர்ந்தன்றிறந்தார்விடசெயனுஞ்செயனுமெனும்போர்ச்செயவீரர்.***

*(இ-ள்.) காந்தும்- கோபித்துவந்த, தறுகண்-அஞ்சாமைமையயுடைய, காந்தாரர்- காந்தாரதேசத்து அரசருள், சாந்துஉம் புழுகுஉம் கமழ் வாகு சகுனி தனயர்- சந்தனமும் கஸ்தூரிப்புழுகும் வாசனைவீசுகிற தோள்களையுடைய சகுனியின் புத்திரர்களான, விடசெயன்உம் செயன்எம் எனும் - வ்ருஷஜயன் ஜயன் என்னும் பெயருடைய, போர் செய வீரர் - போரில் வெற்றியையுடைய வீரர்கள், அன்று - அப்போது, கடு வெம் கனல்போல் - மிகக்கொடிய*

*நெருப்புப்போல, கண் சிவந்து- (கோபத்தாற்) கண்கள் சிவக்கப் பெற்ற, தலை போரில் - போர்க்களத்தின் முன்னிடத்தில், சேர்ந்து - சென்றுசேர்ந்து, அங்கு - அவ்வடத்தில், எழிலி கணம்போல்- மேகக்கூட்டம்போல, ஏந்தும் சிலையால் கணை மழை பெய்து- (கையில்) எடுத்த வில்லினால் அம்புமழையைச்சொரிந்து, எதிர் ஊன்றி-( அருச்சுனன்) எதிரில் நிலைத்துநின்று, இறந்தார்- (அவன் எய்த அம்புகளால்) அழிந்தார்கள்; ( எ -று.)*

*'கணமழை' என்ற **உருவகம்,** 'எழிலிக்கணம்போல்' என்ற **உவமை** க்கு அங்கமாகவந்தது, சகுனிக்கு இப்பெயர்களுடன் புத்திரர் இருவர் இருந்ததாக வியாசபாரதத்தால் தெரியவில்லை **பி-ம்** : கனல்போலவியக்கணப் போதில். சரமழை.எதிரூன்ற. விடசேனன். எனும்பேர். (114)*

*70.-கவிக்கூற்று: அருச்சுனன் வீரர் பலரையுங் கொன்றதைக் குறித்த பாராட்டு.*

***சஞ்தத்தகர்விண்குடியேறத்தானேயடர்த்தான்பகதத்தன்***
***விஞ்சைக்கடவுள்சிகரநிகர்வேழத்துடனேவிழப்பொருதான்***

**வஞ்சச்சகுனிமைந்தரையுமலைந்தான்விசயன்வடிக்கணையா**
**லெஞ்சப்பொருதநரபாலர்க்கிலக்கேதன்றங்கெண்ணுதற்கே.**

*(இ-ள்.) அன்று - அன்றைத்தினத்தில்,- விசயன்- அருச்சுனன், தான்ஏ - தானொருவனாகவே [பிறர்துணையில்லாமலே], சஞ்சத்தகர் விண்குடி ஏற - (அநேக) ஸம்சப்தகர்கள் வீரசுவர்க்கத்தில் சென்று தங்கும்படி, வடிகணையால் - கூர்மையான அம்புகளால், அடர்ந்தான் - அழித்தான்;( அன்றியும்), பகதத்தன்-, விஞ்சை கடவுள் சிகரம் நிகர் - வித்தியாதரராசனான குபேரனது மலையாகிய கைலாசத்தை யொத்த, வேழத்துடனே - வெள்ளை யானையுடனே, விழ- இறந்துவிழும்படி, பொருதான் - போர்செய்தான்; (மற்றும்), வஞ்சம் சகுனி மைந்தரைஉம்'- வஞ்சனையையுடைய சகுனியின் குமாரர்களையும், மலைந்தான்- அழித்திட்டான்; (ஆதலால்), எஞ்ச பொருத நரபாலர்க்கு - பகையழியும்படி போர்செய்தே (தருமன் முதலிய) அரசர்களுக்கு, அங்கு- எதிர்ப்பக்கத்தில், எண்ணுதற்கு- (ஒருபொருளாக) மதிக்கப்படுதற்கு, இலக்கு- ஏற்றகுறி, ஏது-யாது உள்ளது? (எ - று.)*

*அருச்சுனொருவனே இத்தனைபெயரை அன்றைக்கு அழித்திட்டனனென்றால், மற்றைத் தருமன் முதலியோர்க்கெல்லாம் எதிர்த்து அழித்திடுதற்கு ஏற்ற இலக்காவார்எவருமில்லை யென்பதாம். சுவர்க்கம் மேலிடத்திலுள்ளதாதல்பற்றி, 'குடியேற'எனப்பட்டது. சீவகசிந்தாமணியில் " விஞ்சைக்கிறைவன்" என்ற விடத்து, 'விஞ்சை-குணப்பண்பு பண்புடைப்பொருள்மேல் நின்ற ஆகுபெயர்' என உரைத்தார்நச்சினார்க்கினியர். வித்யாதரர் - பதினெட்டுத் தேவகணங்களுள் ஒருசாதியார்;இவர்களுக்கும் யக்ஷர்கந்தருவர் முதலிய மற்றஞ்சிலைவகையார்க்கும் குபேரன்அரசனாதலை, கீழ்ப்புட்பயாத்திரைச் சருக்கம், மணிமான்வதைச் சருக்கம்*

*இவற்றிற் கூறியவற்றாலும் அறிக. அவனுக்கு இடமான அளகாபுரி கைலாசமலையின் ஒருசாருள்ள தென்று புராணம் கூறும். சிகரம் என்ற மலையுச்சியின் பெயர்- இங்கே, மலைக்குச் சினையாகு பெயர். இனி, விஞ்சைக்கடவுள் சிகரம் என்பதற்கு- வித்யாதரர்களுக்கு இருப்பிடமான வெள்ளிமலை யென்றுங்கொள்ளலாம். ஈற்றடிக்கு- போர்செய்தது அழிந்த அரசர்மிகப்பலரென்று கருத்துக் கொள்வாருமுளர். (115)*

### *71.- இதுஇங்ஙன் நிற்க, மற்றொருபால் சகுனி தருமனுடனே போர்புரியப்புகுதல்.*

**இங்கிப்படிபோருடன்றெழுந்தசகுனியிவன்கையெரிகணையாற்**
**பங்கப்பட்டவரசொழியப்படாதவரசர்பலரோடுஞ்**
**சிங்கத்தனியேறெனச்செம்பொற்றேர்மேனின்றதருமனுடன்**
**புங்கப்படையாலமர்புரியப்புகுந்தான்மதுகைப்புலிபோல்வான்.**

*(இ-ள்.) இங்கு - இவ்விடத்தில் [அருச்சுனனெதிரில்], (நடந்த செய்தி), இ படி -இவ்விதமாம்! (மற்றொருபக்கத்தில்), போர் உடன்று எழுந்த- போர் செய்தற்குக்கோபித்துப் புறப்பட்ட, மதுகை புலி போல்வான் - (பராக்கிரமத்தில்) வலிமையுடையபுலியை யொப்பவனான, சகுனி-, இவன் கை எரிகணையால் பங்கப்பட்ட அரசுஒழிய படாத அரசர் பலரோடுஉம் - இவ்வருச்சுனனது கையாலெய்யப்பட்டஅழிக்கவல்ல அம்புகளால் அழிவடைந்த அரசர்கள் தவிர அழிவடையாத பலஅரசர்களுடனே (கூடி), தனி சிங்கம் ஏறு என செம்பொன் தேர்மேல் நின்றதருமனுடன் - ஒப்பற்ற ஆண்சிங்கம்போலச் சிவந்த பொன்மயமான தேரின்மீதுநின்ற யுதிட்டிரனுடனே, புங்கம் படையால் அமர் புரிய - அம்புகளாகியஆயுதங்களால் போர்செய்தற்கு, புகுந்தான் - சென்றான்; (எ-று.)*

*தருமனுக்கும் சகுனிக்கும் வலிமை முதலியவற்றில்உள்ள ஏற்றத்தாழ்வு தோன்ற,சிங்கத்தையும் புலியையும் உவமை கூறினார். பலரோடும்புகுந்தான் என்க. தனி நின்றஎன்றும் இயைக்கலாம். புங்கப்படை - அம்புகளின் தொகுதியுமாம்; தொகுதியாகியஆயுதங்களுமாம். (116)*

### *72.- தருமபுத்திரனை கணை தூவ, சகுனி இலக்காகாமற் பின்னிடுதல்.*

**சோரத்துடனீபொருதடர்த்தசூதன்றிவைமெய்துளைத்துருவும்**
**வீரப்பகழியுனையிவற்றால்வெல்வேனெனப்போர்வில்வாங்கி**
**யீரக்கருணைமுகத்தண்ணலெய்தானவற்றுக்கெட்டாமற்**
**பேரப்பேரத்தேர்கடவிப்பின்னிட்டவர்க்குமுன்னிட்டான்.**

*(இ-ள்.) (அதுகண்டு), ஈரம் கருணை முகத்து அண்ணல் - குளர்ச்சியான அருள் (வெளித்தோன்றும்) முகத்தையுடைய அரசனான யுதிஷ்டிரன், (சகுனியைப்பார்த்து),' நீ சோரத்துடன் பொருது அடர்த்த சூது அன்று - நீ வஞ்சனையோடு போர்செய்து வென்ற சூது போ ரன்று (இது)! இவை-, மெய் துளைத்து உருவும் வீரம் பகழி- உடம்பைத் துளைசெய்து ஊடுருவுகிற வலிமையையுடைய அம்புகள் [சூதாட்டம் ஆடும் பாசிகைகள் அல்ல]! உனை - (முன்பு என்னைச் சூதுகருவியால் வென்ற) உன்னை, இவற்றால் வெல்வேன் - (இப்பொழுது) இம்மோது கருவிகளால் சயித்திடுவேன்,' என - என்று*

*(வீரவாதங்), கூறி, போர்வில் வாங்கி - போருக்குரிய வில்லைவளைத்து, எய்தான்- (பல அம்புகளைப்) பிரயோகித்தான்; ( உடனே சகுனி), அவற்றுக்கு எட்டாமல் - அவ்வம்புகளுக்கு இலக்காகாதபடி, பேர பேர தேர் தடவி - பிற்படப் பிற்படத் (தன்)தேரை விசையோடு செலுத்திக் கொண்டு, பின் இட்டவர்க்கு முன் இட்டான் - புறங்கொடுத்தவர்களுள் முந்திச்சென்றவனானான்; (எ - று.)*

*'இது சூது போரன்று, மோதுபோர்: என் கையிலிருப்பவை பாசிகையல்ல, பகழிகள்' என்றது -* ***விலக்கணி ;*** *இதனை வடநூலார் ப்ரதிஷேதாலங்காரம் என்பர்;பிரசித்தமானதாகியும் அபிப்பிராயத்தோடு கூடியு மிருக்கின்ற விலக்கைச் சொல்லுதல்,இதன் இலக்கணம். இதில், அம்பிற் சூதின்தன்மையில்லாமை பிரசித்தமாக விருக்கவும்,' அன்று' என்னும் விலக்கு, நீ சூதாட்டத்தன்றி அம்பிற் சமர்த்தனல்லை யென்றும்இகழ்ச்சியை உட்கொண்டிருக்கின்றது. 'அவற்றிற்கு எட்டாமல்' என்றும்,'பின்னிட்டவர்க்கு முன்னிட்டான்' என்றுங் கூறினது- சமத்காரம். தருமனம்புகளுக்குஎட்டாமலிருக்கவும், முன்னிடவும்- இவையல்லது வேறு உபாயமில்லையென்றவாறு. (117)*

*73.- சகுனியுடனேவந்து தருமனுடன்பொருத அரசருள் அழிந்தவர்போக மற்றையோர் ஊர்புகுதல்.*

**உடனேவந்துபொருநிருபரொருவர்க்கொருவருதிட்டிரன்கை**
**விடநேர்கணையாலேவுண்டுவிளிந்தாரொழிந்தார்வெஞ்சமத்திற்**
**கடனேதமக்கென்றுூர்புகுந்தார்காலைச்செந்தாமரைமலர்ந்த**
**தடநேரென்னநிறம்பெற்றதப்போதந்தச்சமபூமி.**

*(இ-ள்.) உடனே- அச்சகுனியுடனே, வந்து-, பொரு- போர்செய்த நிருபர் - அரசருள், ஒருவர்க்கு ஒருவர்- ஒருவரினும் ஒருவர், உதிட்டிரன் கை விடம் நேர் கணையால் - தருமன் கையிலுள்ள விஷத்தையொத்த அம்புகளால், ஏவுண்டு - (மிகுதியாக) எய்யப்பட்டு, விளிந்தார் ஒழிந்தார் - இறந்தவர்கள் போக மிச்சமானவர்கள். வெம் சமத்தில்- கொடியபோரில், தமக்கு கடன் ஏ என்று- (புறங்கொடுத்தல்) தமக்கு முறைமையே யென்று கருதி, ஊர் புகுந்தார் -(தம்) ஊரையடைந்தார்கள்; அ போது - அப்பொழுது, அந்த சம பூமி - அந்த யுத்தகளம்,காலை செம் தாமரை மலர்ந்த தடம் நேர் என்ன - உதய காலத்திற் செந்தாமரைமலர் மலரப்பெற்ற தடாகம் ஒப்பென்னும்படி, நிறம் பெற்றது - விளக்கமடைந்தது; (எ - று.)*

*பலமுறை தோற்று ஓடிப் பழகிவிட்டதனால், நிருபர்புதுமை கருதி நாணாமல் தமக்குக் கடனேயென்று ஊர்புகுந்தன ரென்க. செந்தாமரைமலர்ந்த தடம், இரத்தத்தால் செந்நிறம் பெறுதற்கு உவமையாதலுமாம். இறந்த அரசர்களது இரத்தத்தோடு கீழ் விழுந்த முகங்களைச் செந்ததாமரைமலர்க ளென்னலாம். ஸமபூமி- (போர்செய்தற்கு ஏற்ப) மேடுபள்ளமில்லாமல் எங்குஞ் சமமாகவுள்ள குருக்ஷேத்திரமென்றலுமாம்.* ***பி -ம்*** *: எய்வுண்டு. (118)*

*74.- மற்றொருபக்கத்தில் துரோணன்முதலியோர் வீமனுடன் எதிரிடுதல்*

***ஆசாரியனுந்திருமகனுமடல்வேலங்கர்பெருமானுந்***
***தூசாருரகக்கொடிநெடுந்தேர்த்துரியோதனனுந்தம்பியரும்***

***வீசாநின்றமாருதம்போன்மேல்வந்தடுத்தவீமனுடன்***
***கூசாதெதிர்ந்துவெம்பகழிகோத்தார்விசும்பைத்தூர்த்தாரே.***

*(இ-ள்.) (மற்றொருபக்கத்தில்), ஆசாரியன்உம்- துரோணனும், திருமகன்உம்- (அவனது) சிறந்தகுமாரனான அசுவத்தாமனும், அடல்வேல் அங்கர் பெருமான்உம்- வலிமையையுடைய வேலாயுதத்தையுடைய அங்கதேசத்தார்க்குத் தலைவனான கர்ணனும், தூசுஆர் - சீலையிற்பொருந்தின, உரகம் - பாம்பின் வடிவத்தையுடைய, நெடுந்தேர்- பெரிய தேரையுடைய, துரியோதனனும்-, தம்பியர்உம் - (அவன்) தம்பிமார் பலரும்,- விசாநின்ற மாருதம் போல் மேல் வந்த அடுத்த வீமனுடன்- வீசுகிற பெருங்காற்றுப்போலத் தம்மேல் வந்து நெருங்கிய வீமசேனனுடனே, கூசாதுஎதிர்ந்து - கூச்சமில்லாமல் எதிரிட்டு, வெம் பகழி கோத்தார் - கொடிய அம்புகளைத் தொடுத்து, விசும்பை தூர்த்தார்- (அவற்றால்) ஆகாயத்தை நிறைத்தார்கள்; ( எ - று.)*

*இவர்களுக்கு வீமனை யெதிர்க்கவல்ல ஆற்றல் இன்மைதோன்ற 'கூசாது எதிர்ந்து' என்றார்: 'விசும்பைத் தூர்த்தார்' என்றதனால், அவர் எய்த அம்புகள் வீமனை ஒன்றுஞ் செய்யமாட்டாமை தொனிக்கும்; அத்தன்மையை அடுத்த கவியில் விளங்கக் காண்க. சிவபிரானது அருளாற் பிறந்த புத்திரனாதலால், அசுவத்தாமன் 'திருமகன்' எனப்பட்டான். இங்கே வேலைக்கூறி, மற்றையபடைகளையெல்லாம் உபலக்ஷணத்தாற் பெறவைத்தார்; இனி, பகையைத் தவறாது அழிக்கவல்லதொரு வேற்படையைக் கர்ணன் இந்திரனிடம் பெற்றுள்ளதனால், 'அடல்வே லங்கர்பெருமான்' என்றாரெனினுமாம். (119)*

*75.- பகைவரெய்த அம்புகள் வீமன்மேற்படாமல் சிதறினமை.*

**கெடுமோகெருடனுரகர்க்குக்கிரிவெஞ்சரபந்தனையரிகள்**
**அடுமோசக்ரபாணியுடனமருந்துவரோவசுரேசர்**
**நெடுமேருவின்முக்குவடொடித்தானேயப்புதல்வன்பேருடலிற்**
**படுமோதொடுத்தபகழிபருப்பதஞ்சேர்மழைபோற்பாறினவே.**

*(இ-ள்.) உரகர்க்கு - சர்ப்பராசர்க்கு, கெருடன்-, கெடும்ஓ- அழிவனோ? கிரிவெம் சரபந்தனை - மலையிலுள்ள கொடிய சரபத்தை, அரிகள்- சிங்கங்கள், அடும்ஓ - கொல்லமாட்டுமோ? அசுர ஈசர் - அசுரத்தலைவர்கள், சக்ரபாணியுடன் - சக்கராயுதத்தையேந்திய திருக்கையையுடைய திருமாலுடனே, அமர் உந்துவர்ஓ- போரை முடிக்க வல்லரோ? (அவைபோல),- நெடு- உயர்ந்த, மேருவின் - மேருமலையின், மு குவடு- மூன்று சிகரங்களை, ஒடித்தான்- ஒடித்தவனான வாயுவின், நேயம் புதல்வன் - அன்புள்ள புத்திரனான வீமனது, பேர் உடலில்- பெரிய உடம்பில், தொடுத்த பகழி - (பகைவர்) ஏவிய அம்புகள், படும்ஓ - தைக்கமாட்டுமோ? (மாட்டாமல்), பருப்பதம் சேர் மழை போல்- கல்மலைமேல் விழுந்த மழைத்துளிகள்போல, பாறின- (உள்ளிறங்குதலின்றி) வெளிச்சிதறின; (எ- று.)*

*வீமனைப் பகைவர் வெல்லமாட்டாமைக்குத் திருஷ்டாந்தங் காட்டியதனால்,* ***எடுத்துக்காட்டுவமையணி.*** *சரபம் - எட்டுக்கால்களை*

*யுடையதும், சிங்கத்தைக்கொல்லவல்லது மான தொரு மிருகவிசேடம்: இதனைப் பறவையென்பாரும் உளர். வீமனது மிக்கவலிமையை விளக்கும்பொருட்டு, அவனை 'நெடுமேருவின் முக்குவடொடித்தான் நேயப்புதல்வன்' என்றது;* ***கருத்துடையடை கொளியணி:*** *நான்காமவடி -* ***உவமையணி.*** *ஓகாரங்கள் - எதிர்மறை. (120)*

*76.- நான்குகவிகள் - எதிர்த்தவர்கள் அஞ்சுமாறும் புகழுமாறும் வீமன் தன்வலிமைகாட்டியதைக் கூறும்.*

***பொல்லாவவுணர்வைகியமுப்புரநீறெழவன்றரன்வளைத்த***
***வில்லாமென்னவலியவிறல்வில்லொன்றெடுத்துவிறல்வீமன்***
***எல்லாமன்னவருமூர்ந்தமெல்லாவிரதங்களுமிமைப்பின்***
***வல்லானெறிந்தபம்பரம்போற்சுழலும்படிகால்வளைத்தானே.***

*(இ -ள்.) (அப்பொழுது), வீறல் வீமன் - வலிமையுடைய வீமசேனன், பொல்லாஅவுணர் வைகிய - தீக்குணமுடைய அசுரர்கள் தங்கிய, மு புரம் - மூன்றுபட்டணங்கள், நீறு எழ - சாம்பலாம் படி, அன்று - அக்காலத்தில், அரன் வளைத்த - சிவபிரான் வளைத்த, வில் ஆம் என்ன - (மேருமலையாகிற) வில்லாகும் (இது) என்னும் படி, வலிய - வலிமையையுடைய, விறல் - வெற்றியைத்தருகிற, வில் ஒன்று -ஒரு வில்லை, எடுத்து-, -எல்லா மன்னவர்உம்ஊர்ந்த- எல்லாவரசர்களும் ஏறிவந்த, எல்லா இரதங்கள்உம்- தேர்களெல்லாம், இமைப்பின் -கண்ணிமைப் பொழுதிலே, வல்லான் எறிந்த பம்பரம் போல் சுழலும்படி - வல்லவன் சுழற்றியெறிந்த பம்பரம் போலச் சுற்றும்படி, கால் வளைத்தான் - (இரண்டு) கோடியையும் வணக்கினான்; ( எ -று.)*

***உவமையணி.*** *பொல்லா - பொல்லாமை என்ற எதிர்மறைப்பண்பின் அடி; இதற்கு உடன்பாடு - பொற்பு, அல்லது பொலிவு; (பொன் என்னுஞ் சொல் தொல்காப்பியவிதியால் ஈறுதிரிந்துநின்ற 'பொல்' என்பது- இவற்றில் பகுதியோ மெனஉய்த்துணர்க.) கால்- வில்லின் தண்டம். (121)*

***77. ஒன்றுமுதலாப்பலபகழியோரோர்தொடையிற்றொடுத்தேவி***
***யன்றுமுதன்மையுறமலைந்தவரசருடலந்தொறுமூட்டி***
***யின்றுமுதலாயோதனத்திலேறோமென்னும்படியாகக்***
***கொன்றுமுதற்பின்வருமுரகக்கொடியோன்மனமுங்***
***கொதிப்பித்தான்.***

*(இ -ள்.) (வீமன்),- முதல்- முதலில் ஒன்று முதல் ஆ பல பகழி - ஒன்று முதலாக அநேகம்அம்புகளை, ஓர் ஓர் தொடையில் தொடுத்து ஏவி - ஒவ்வொரு தொடுக்குந்தரத்திலே பிரயோகித்துச் செலுத்தி, (அவற்றை), இன்று முதல் ஆயோதனத்தில் ஏறோம் என்னும்படி ஆக - இன்றைத்தினம் முதல் [இனி] போரில்எதிர்த்திடோம்' என்று கருதும்படி, அன்ற முதன்மை உற மலைந்த அரசர் உடலம்தொறுஉம் மூட்டி -அப்பொழுது சிறப்பு பொருந்தப் போர்செய்த அரசர்களதுஉடம்பெல்லாம் உட்புகுவித்து, கொன்று- (அவர்களை) அழித்து, - பின்-பின்பு. வரும்உரகக்கொடியோன் மனம்உம் கொதிப்பித்தான் - வருகிற துரியோதனனது மனத்தை*

*யும் (தன்பெருமிதத்தால்) கொதிக்கச்செய்தான்; (எ -று.)- முதன்மை- முதலாந்தன்மை;முன்னிடுதல். ஊட்டி என்றும் பிரிக்கலாம். ஆயோதம் - வடசொல்.* ***பி -ம்:*** *முதன்மையுடன். (122)*

***78. கொதித்தானரசனெனவரிவிற்குனித்ததாரிளைஞர்குனித்தது***
***கண்டதிர்த்தான்***
***வீமன்றன்கணையாலறுத்தான்வில்லுமணிநாணும்***
***விதித்தான்வரினும்வீமனுடன் விற்போர்புரிதலரிதென்று***
***மதித்தார்தம்முனினைத்ததெல்லாமுடிக்குஞ்சமரவரிவில்லார்.***

*(இ -ள்.) அரசன் கொதித்தான் - என துரியோதனன் மிகக் கோபித்தா னென்று அறிந்து, இளைஞர்- (அவன்) தம்பிமார், வரிவில் குனித்தார்- (வீமனெதிரில்)கட்டமைந்த வில்லவளைத், தார்கள்; குனித்தது கண்டு- (அவர்) வளைத்ததைப்பார்த்து, வீமன் அதிர்த்தான்- ஆரவாரித்து, தன் கணையால்- தனது அம்புகளால்,வில்உம் அணி நாண்உம்- (அவர்கள்) வில்லையும்(அதிற்) பொருந்திய நாணியையும்,அறுத்தான்-; (அறுக்கவே), தன் முன் நினைத்தது எல்லாம் முடிக்கும் சமரம் வரிவில்லார் - தங்கள் தமையனான வல்ல போருக்குரிய கட்டமைந்த வில்லையுடையஅத்தம்பிமார்,*

*'விதி தான் வரின்உம் -(உலகத்தைப்) படைத்தவனான பிரமதேவன்தானே வந்தாலும், வீமனுடன் வில்போர் புரிதல் அரிது - (அவனுக்கும்) வீமனோடுவில்யுத்தஞ்செய்தல் முடியாது' என்ற மதித்தார் - என்று எண்ணினார்கள்; (எ - று.)-விதித்தான் - இன்னபடி நடக்க வேண்டுமென்று நியமித்த முதற் கடவுளுமாம். (123)*

***79. நின்றார்நின்றபடிகொடித்தேர்நிருபன்றனையுமிளைஞரையும்,***
***வன்றாள்வரிவிற்குருவினையுமைந்தன்றனையுங்கன்னனையும்,***
***பொன்றாழ்மார்பிற்பலபடைக்கைப்பூபாலரையுங்***
***கொல்லாமற்,***
***கொன்றான் வாயுகுமாரன்றன் கோலாகலவெங்***
***கொடுங்கணையால்.***

*(இ-ள்.) வாயு குமரன்- வீமன், தன் - தனது, கோலாகலம்- ஆரவாரத்தையுடைய, வெம் கொடு கணையால்- மிகக்கொடிய அம்புகளால், கொடிதேர் நிருபன் தனைஉம்- கொடி கட்டிய தேரிலுள்ள துரியோதனராசனையும், இளைஞரைஉம்-(அவனது) தம்பிமாரையும், வல் தாள் வரி வில் குருவினைஉம் - வலிய முயற்சியையும் கட்டமைந்த வில்லையு முடைய துரோணாசாரியனையும், மைந்தன்தனைஉம் - (அவன்) மகனான அசுவத்தாமனையும், கன்னனையும்-, பொன் தாழ் மார்பின் - பொன்னாரந் தொங்குகிற மார்பையும், பல படை கை- அனேக ஆயுதங்களை யேந்திய கைகளையுமுடைய, பூபாலரைஉம்- (மற்றை) அரசர்களையும், நின்றார் நின்ற படி - அவரவர் (திகைத்து) நின்றவாறே நிற்க, கொல்லாமல் கொன்றான்-; (எ - று.)*

*வல் தாள் - வலிய கழுந்துமாம். கோலாஹலம் - வடசொல் கொல்லாமல் கொன்றான்- பிராணாபாயமில்லாமல் மரணவேதனைப் படுத்தினன்: தன்னையொன்றும் வருத்தாதிருக்கத் தான் வருத்தினான் என்றலும் ஒன்று: "செய்யாமற்செய்தவுதவி" என்றாற் போல. 'நின்றார்நின்றபடி' என்பதை, (மதித்த தம்பிமார்) நின்ற வாறே திகைத்துநின்றா ரெனக் கீழ்க்கவியோடு தொடர்ச்சி யாக்குவாரும் உளர். (124)*

### *80.-எதிர்த்தவர் புறங்கொடுத் தோடுதல்.*

***இளைத்தடையப்பெருஞ்சேனையினிநாமொன்றுக்கீடாகோம்,***
***வளைத்தசிலையோடிவனிற்கமாயன்றன்னோ டவனிற்கத்,***
***துளைத்த கணையாற்றுரோணன்வலிதொலைத்தோனிற்***
***கமலைத்திவரைத்,***
***திளைத்தலரிதென்றக்களத்திற்பொன்றாவரசர்சென்றாரே.***

*(இ-ள்.) (பின்பு), அ களத்தில்- அப்போர்க்களத்தில், பொன்றா அரசர் - இறவாது சேடித்த அரசர்கள், 'பெரு சேனை அடைய- பெரிய சேனை முழுவதும், இளைத்தது- சோர்வடைந்து விட்டது; இனி - இனிமேல், நாம்-, ஒன்றுக்கு ஈடு ஆகோம் - ஒரு தொழிற்செய்தற்கும் வலியுடையமல்லோம்; வளைத்த சிலையோடு- வணக்கிய வில்லுடனே, இவன்- வீமன், நிற்க-, மாயன் தன்னோடு- கண்ணபிரானோடு, அவன் - அருச்சுனன், நிற்க,- துளைத்த கணையால் துரோணன்வலி தொலைத்தோன் - துளைசெய்த அம்புகளால், துரோணனது வலிமையை (முன்)ஒழியச்செய்து தருமன், நிற்க- இவரை மலைத்து திளைத்தல்- இவர்களை எதிர்த்துநெருங்குதல், அரிது - (எவர்க்கும்) முடியாது,' என்று - என்றுஎண்ணி, சென்றார்-(புறங்கொடுத்துப் பாசறைக்குப் ) போயினார்; (எ-று.)*

*ஒன்றுக்கு ஈடாகோம்- சிறிதும் போர்செய்யவல்லோமல்லோம் என்றபடி; ஓரம்புக்கேனும் எதிராகோம் எனினும் அமையும். 'வளைத்தசிலையோடு' என்றதற்கு இனமாக 'மாயன்தன்னோடு என்றதனால், ஆயுதம் வீரனுக்கு உதவுதல்போலக் கண்ணன் அருச்சுனனுக்கு உதவுந் தன்மை குறிப்பிக்கப்பட்டது.* ***பி-ம்*** *அக்கணத்தில். (125)*

### *81.- பாண்டவர் மகிழ்ச்சியோடு பாசறைசேர்தல்.*

***பெரும்பே ரறத்தின் றிருமகவைப் பிடிப்பானெண்ணி முடிப்பான்போற்,***
***பொரும்போ ரரசருடன் வந்தபொற்றேர் முனியும் புறம்போனான்,***
***பரும்பேருரகக் கொடி வேந்தன் பட்டான் மிகவும் பரிபவமென்,***
***றரும்போரரசர்களித்தாடவவருந்தம் பாசறையடைந்தார்.***

*(இ -ள்.) பெரு - பெருமைக்குணமுடைய, பேர் அறத்தின் திரு மகவை- சிறந்த தருமராசனது அழகிய குமாரனான யுதிட்டிரனை, பிடிப்பான் எண்ணி- (உயிரோடு) பிடித்துக்கொள்ளக் கருதி, முடிப்பான் போல் - (அவ்வாறு) நிறைவேற்றவல்லான்போல், போர் பொரும் அரசருடன் வந்த- போர்செய்யவல்ல (பல) அரசர்களோடு கூடிவந்த, பொன் தேர் முனிஉம் - அழகிய தேரையுடைய துரோணனும், புறம் போனான் - புறங்கொடுத்து (ப் பாசறைக்கு)ச் சென்றான்; பருபேர் உரகம் கொடி வேந்தன் - பருத்த பெரிய பாம்புக்கொடியையுடைய துரியோதனன், மிகஉம் பரிபவம் பட்டான்- மிகவும் அவமானமடைந்தான், என்ற - என்றகாரணத்தால், அருபோர் அரசர் - (செய்தற்கு) அரிய போரில்வல்ல (தன்பக்கத்து) அரசர்கள், களித்து ஆட - மிகமகிழ்ந்து கூத்தாட, அவர்உம்- அப்பாண்டவர்களும், தம் பாசறை அடைந்தார் - தமது படை வீட்டைச் சேர்ந்தார்கள்; (எ- று.)*

*மக -பண்பாகுபெயர். 'முடிப்பான் **போல்** ' என்றது, முடிக்க மாட்டாமை விளக்கிற்று. **பி -ம்** : பேரரசர். (126)*

*82.- சூரியாஸ்தமனவருணனை.*

***காரிற் குளிர்ந்து குழைந்தசெழுங் கானம் பூத்த தெனக்கவினிப்***
***பாரிற் பிறந்து சிறந்தவிதப் பன்மா நிறத்த பரியனைத்தும்***
***போரிற் புகுந்து மடிதற்குப் புறந்தந் தஞ்சிப் போவான் போற்***
***றேரிற் றுரகங் கொண்டோடிக் குடபா லடைந்தான் றினகரனும்.***

*(இ-ள்.) காரின் - மேகத்தால் [மழைவளத்தால்], குளிர்ந்து - குளிர்ச்சிபெற்று, குழைந்த- தளிர்த்த, செழு கானம்- செழுமையான காடு, பூத்ததுஎன - பூப்பூத்தது போல, கவினி - அழகுபெற்று, பாரில் பிறந்து - பூமியில் தோன்றி, சிறந்தவிதம் - சிறப்புப்பெற்ற வகையிற்சேர்ந்த, பல் மா நிறத்த - பல சிறந்த நிறங்களையுடைய, பரிஅனைத்தும் - குதிரைகளெல்லாம், போரில் புகுந்து மடிதற்கு-யுத்தத்தில் புகுந்து இறந்ததற்கு [இறந்தது கண்டு என்றபடி], அஞ்சி - பயந்து, புறந்தந்து - முதுகுகொடுத்து, தேரில் துரகம் கொண்டு - (தனது) தேரிற்பூண்ட குதிரைகளை (அழியாதபடி) உடன் கொண்டு, ஓடி போவான் போல்-, தினகரன்உம்- சூரியனும், குடபால் அடைந்தான்- மேற்குப் பக்கத்தைச் சேர்ந்தான்; ( எ -று.)*

*சூரியன் அஸ்தமித்ததற்கு, போரில் மிகப் பலவாகிய குதிரைகளெல்லாம் அழிதலைப் பார்த்துத் தன் குதிரைகளுக்கும் அழிவுண்டாகுமோ வென்று அஞ்சி முன்நில்லாமல் அக்குதிரைகளுடன் விலகிச் சென்றதாகக் காரணங் கற்பித்தார்; **ஏதுத்தற்குறிப்பேற்றவணி;** ஒவ்வொன்று ஒவ்வொரு நிறமும் ஒவ்வொன்றே பலநிறமும் உடையவனவா யிருத்தலும், வநாயு பாரசீகம் காம்போசம் பாஹ்லிகம் முதலிய தேசங்களில் பிறத்தலும், குதிரைகளுக்கு உத்தமவிலக்கணமாதலால், 'கானம்பூத்ததெனக்கவினிப் பாரிற் பிறந்து சிறந்த பன் மாநிறத்தபரி' என்றார்; "உருத்திகல் செய் புலி புளியங் கழுதை செந்நாயொண்பூசை நரியினுடன் கரியகாகம், தரித்தவழல் புகை நிறமும் புனையவாகித் தருக்கி மருத்தெனுங் கவனத்தன்மை யெய்தி விரித்தகதிர் வெண்டரளத் திங்கள் நீல மென் கமலத்தாது செழுங் கனகம் காயா, அரத்தமலர்நல்ல பசுங்கிள்ளைபோல அமைந்தவொளி தயங்கிய வங்கத்தவாகி" என்றதனாலும் குதிரைகளின் நிறங்கள் விளங்கும். கவினி - இறந்தகால வினையெச்சம். கவின் என்றது- அவயங்களின் அமைதி, நற்சுழிகளின் பொருத்தம் முதலியவற்றை. **பி - ம்:** கவினிற் சிறந்தவிந்த. (127)*

வேறு.

*83.- புறந்தந்த துரியோதனன் பக்கத்தார் துரியோதனனைச்சார்ந்து இறந்தவர்க்கு இரங்கி, பகதத்தன் வலிமையைக் கூறுபவராதல்.*

***அறந்தந்த மைந்தற்கும் வீமற்கும் விசயற்கு மபிமற்குமே***
***புறந்தந்த வயவீர ரெல்லாரு மரசன்பு றஞ்சார்பிருந்***
***திறந்தந்த யூகத்து வாராத மன்னர்க்கி ரங்காவழா***
***மறந்தந்த வேழத்து டன்பட்ட பகதத்தன் வலிகூறினார்.***

*(இ-ள்.) அறம் தந்த மைந்தற்குஉம்- தருமராசன் பெற்ற புத்திரனான யுதிட்டிரனுக்கும், வீமற்குஉம்-, விசயற்குஉம்- அருச்சுனனுக்கும், அபிமற்குஉம்ஏ - அபிமனுக்கும், (ஆக இந்நாலுபேருக்குமே), புறம் தந்த- முதுகு கொடுத்த, வய வீரர்எல்லார்உம் - வலிமையையுடைய (துரியோதனன் பக்கத்து) வீரர் யதாவரும், (சூரியன் அஸ்தமித்தபின்),- அரசன் புறம் சார்பு இருந்து - துரியோதனனது பின்பக்கத்திலே யிருந்துகொண்டு, இறந்து அந்த யூகத்து வாராத மன்னர்க்கு - (அன்றைத்தினம்) மரித்து அந்தக் கூட்டத்தில் வந்திடாத அரசர்களுக்காக, இரங்கா அழா - மனமிரங்கிப் புலம்பி, மறம் தந்த வேழத்துடன் பட்ட பகதத்தன் வலி கூறினார் - கொடுமை விளைக்கிற யானையோடு இறந்த பகதத்தனது பலத்தைப் பாராட்டி எடுத்துக் கூறினார்கள்; (எ - று.)*

*முன் இருக்க முகமில்லாமையால், புறஞ்சார் பிருந்தாரென்க: இனி, புறஞ்சார்பு - சுற்றிடமுமாம். ' அந்த யூகம்' என்றது - அப்பொழுது தாம் கூடிய கூட்டத்தை; இனி, யூகத்து இறந்தது என இயைப்பின், படைவகுப்பில் மரித்து என்க. இரங்குதல்- விசனப்படுதல். வழா மறம் என எடுத்து, தவறாத வலிமை யெனினுமாம். அறம்- அறக்கடவுள்; அஃறிணையாற் கூறியது.*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பதினொரு கவிகள் - பெரும்பாலும் ஐந்தாஞ்சீரொன்று மாங்கனிச்சீரும் மற்றை நான்கும் மாங்காய்ச்சீர்களுமாகிய நெடிலடிநான்குகொண்ட* ***கலிநிலைத்துறைகள்.*** *(128)*

*84.- சொன்னசொல்லை நிறைவேற்றாமைக்காகக் கர்ணன் துரோணனைப் பரிகசித்தல்.*

***மன்னர்க்குமன்னன்றன்முன்வைகுமுனிதன்னைமதியாமனீ***
***நென்னற்கலங்காமலுரைசெய்தவுரையின்றுநிலையானதே***
***கன்னப்பெயர்க்காளைமறையந்தணர்க்கென்னகட்டாண்மையுண்***
***டென்னச்சிரித்தான்வணங்காதவர்க்கென்றுமிடியேறனான்.***

*(இ-ள்.) (அச்சமயத்தில்), மன்னர்க்கு மனனன்தன் முன் வைகும் - ராஜராஜனான துரியோதனனுக்கு எதிரில் வீற்றிரந்த, முனி தன்னை- துரோணனை (ப்பார்த்து), (அவனை ஒரு பொருளாக மதியாமல்),- வணங்காதவர்க்கு என்றுஉம் இடி ஏறு அனான்- (தன்னை) வணங்காதவர்களுக்கு [பகைவர்களுக்கு] எப்பொழுதும் பேரிடிபோல் அழிவுசெய்பவனான, கன்னன் பெயர் காளை - கர்ணனென்னும் பெயருள்ள வீரன், 'நீ-, மதியாமல் - ஆலோசனையில்லாமல், நென்னல்- நேற்று, கலங்காமல்- கலக்கமில்லாமல்[உறுதியாக], உரை செய்த - (தருமனைப் பிடித்துக்கொடுப்பேனென்று) கூறின, உரை - சபதவார்த்தை, இன்று - இன்றைக்கு, நிலை ஆனது ஏ - உன்மையாய் நடந்தேறிற்றே! மறை அந்தணர்க்கு - வேதமோதுவதே தொழிலாகவுள்ள பிராமணர்க்கு, என்ன கட்டு ஆண்மை உண்டு - என்ன உறுதியான வீரமுள்ளது. என்ன - என்று (நிந்தையாகக்) கூறி, சிரித்தான்- (பரிகாசமாக) நகைத்தான்; (எ-று.)*

*கர்ணன் எப்பொழுதும் தன்னைத் தான் மேலாகநினைக்கும் பெருஞ் செருக்குடையவ னாதலால், இங்ஙனஞ் செய்தான். மதியாமல் என்ன என்று இயைத்துஉரைத்தலும் ஒன்று. நிலையானது என்றது,* ***பிறகுறிப்பு*** *வகையால், நிலைப்படாதுபோனதைக் குறிக்கும்; ஏ - இகழ்ச்சி. 'வணங்காதவர்க்கு என்றும் இடியேறனான்' என்பதை, அடுத்தபாட்டில் வரும் 'குரு' என்பதற்கு அடைமொழியாக்கி, குளகமாக்கொள்ளினும் அமையும். (129)*

*85.- இதுமுதல் ஏழு கவிகள் - துரோணன் கூறும் எதிர்மொழியைத் தெரிவிக்கும்.*

***தெருமந்தசிந்தைச்சிலைக்கைக்குருக்கண்சிவப்பேறவே***
***யுருமுந்திகைக்கக்கொதித்தங்கர்பதியோடுறக்கூறுவான்***
***கருமந்தவாவிற்றிறற்கன்னனேயல்லகழன்மன்னரிற்***
***றருமன்றன்முன்னிற்கவல்லார்கள்யாரித்தளந்தன்னிலே.***

*இதுவும். அடுத்த கவியும் - ஒருதொடர்.*

*(இ -ள்.) (அதுகேட்டு), தெருமந்த- கலங்கின, சிந்தை- மனத்தையுடைய, சிலைகை குரு- விற்பிடிக்குங் கையையுடைய துரோணன், கண் சிவப்பு ஏற - கண்கள்செந்நிறம் மிகவும், உரும்உம் திகைக்க - இடியும் அஞ்சித் திடுக்கிடவும், அங்கர்பதியோடு- அங்கநாட்டார்க்கு அரசனான கர்ணனுடன், கொதித்து - கோபித்து, உற கூறுவான்- பொருந்த உத்தரஞ் சொல்லுவான்:- கருமம் தவா - செய்யுந்தொழில் தவறாத, வில் திறல் - வில்வன்மையையுடைய, கன்னன்ஏ அல்ல- கன்னன்மாத்திரமே யல்லன்: இ தளந்தன்னில் - இந்தப்பக்கத்துச் சேனையிலுள்ள, கழல் மன்னரில் - வீரக்கழலையுடைய அரசர்களில், தருமன்தன் முன் நிற்க வல்லார்கள் யார் - யுதிட்டிரனது முன்னிலையில் (எதிர்த்து) நிற்கவாயினும் வல்லமையுடையார் எவர்?(எ - று.)*

*'கருமந்தவாவிற்றிறல்' என்ற அடைமொழிகளைக் கர்ணனுக்குத் துரோணன் கொடுத்தது, அவன் அங்ஙனம் தன்னைத் தானே கருதி நன்குமதித்துச் செருக்கிநிற்கிறானென்பதை வெளியிடுதற்கு; இகழ்ச்சியுமாம். உருமும், உம் - உயர்வுசிறப்பு. கன்னனே, ஏ- பிரிநிலையோடு உயர்வுசிறப்பு.* ***பி-ம்*** *: வன்றிறல்.(130)*

*86 .* ***இன்றல்லநாளைக்குமாநின்னவைக்கண்ணிருந்தோர்களிற்***
***சென்றல்லலுறமோதியறனமைந்தனைத்தங்கள்சிலையாண்மையால்***
***வென்றல்லதணுகாதவீரர்க்குவிடைநல்குவிறன்மன்னநீ***
***நன்றல்லவீரத்திலோரஞ்சொலுவதென்றுநனிசீறினான்.***

*(இ-ள்.) இன்று அல்ல- இன்றைக்கே அன்று; நாளைக்கு உம் ஆம் - நாளைக்காயினும் (தருமனைப்பிடிக்க முயலல்) ஆம்; விறல் மன்ன- வெற்றியையுடைய அரசனே! நின் அவைக்கண் இருந்தோர்களில்- உனது சபையிலுள்ளவர்களுள், சென்று- (எதிர்த்துப்) போய், அறன் மைந்தனை - தரும புத்திரனை, அல்லல் உற மோதி- துன்பமுண்டாம்படி தாக்கி, தங்கள் சிலை ஆண்மையால் - தங்கள் வில்லின் திறத்தால், வென்று அல்லது அணுகாத- சயித்தல்லது திரும்பிவராத, வீரர்க்கு-, நீ-, விடை நல்கு அனுமதி கொடுப்*

*பாய்; வீரத்தில் - பராக்கிரமவிஷயத்தில், ஓரம் சொலுவது - (ஒருவரை ஒருவர்) பக்ஷபாதமாக (நிந்தித்துப்) பேசுவது, நன்று அல்ல- நல்லதன்று, என்று- என்றுசொல்லி, நனி சீறினான்.- மிகக்கோபித்தான்; (எ -று.)*

*மன்ன- துரியோதனனை நோக்கிய விளி. இன்றல்ல நாளைக்குமாம்- நேற்றுச்சொன்னபடி இன்றைக்கு நான் தருமனைப்பிடிக்க முடியாமற் போய்விட்டாலும்,கர்ணன்போன்றவர் எவரேனும் இன்ற சபதஞ்செய்து அங்ஙனமே நாளைக்குநிறைவேற்றப்பார்க்கலாமென்றவாறு. நாளைக்கு மா எனப்பிரித்து, நாளைக்குஎன்பதை 'சென்று' என்பதனோடும், 'மா'என்பதை 'அவை'*

*என்பதோடும்இயைத்தலுமாம். சிலைக்கைக்குரு (85) சீறினான் (86) என இயையும். 'அல்ல' - ஒன்றன்பாலுக்கு வந்தது.* ***பி-ம்*** *: அறன்மன்னனை. (131)*

***87. வில்லாண்மை யாவர்க்கு மின்றென்றெனைப்போல***
***மிகுவஞ்சினஞ்,***
***சொல்லாம லறன் மைந்தனைப் போர்மலைந்துங்***
***கடோ வாணமையால்,***
***வல்லாரினிக்கொண்டு வம்மின்கள் வந்தாலிம்மண்***
***ணொன்றுமோ,***
***அல்லாதவுலகிற்குமிருநாலுதிக்கிற்குமவர்வீரரே.***

இதுமுதல் ஐந்து கவிகள் - ஒருதொடர்.

*(இ-ள்.) 'யாவர்க்குஉம்- (என்னையொழிய வேறு) எவருக்கும், வில் ஆண்மைஇன்று - வில்லின் திறமை இல்லை,' என்று-, எனை போல - யான் சபதஞ்செய்ததைப்போல மிகு வஞ்சினம் சொல்லாமல் - மிக்க சபதவார்த்தைகளைக் கூறாமலே,- வல்லார்- வல்லவர்கள் உங்கள் தோள் ஆண்மையால் - உங்களது புசபராக்கிரமத்தால், போர் மலைந்து - போர்செய்து, அறன் மைந்தனை- தருமபுத்திரனை, இனி-, கொண்டு வம்மின்கள் - பிடித்துக்கொண்டு வாருங்கள்; வந்தால் (அவ்வாறு) வந்தால்,- அவர்- அப்படிக் கொண்டு வருபவரே,- இ மண் ஒன்றும்ஓ - இந்தப்பூலோகமொன்றுக்கு மாத்திரமோ, அல்லாத உலகிற்குஉம்- மற்றையுலகங்களுக்கும், இரு நாலு திக்கிற்குஉம்- எட்டுத்திக்குக்களுக்கும், வீரர்- (சிறந்த) வீரராவர்; (எ-று.)*

*நான் நேற்றுச்சபதஞ்செய்து இன்று தவறிப்போனே னென்று இகழ வேண்டா; உங்களில் வல்லவர் எவரேனும் முந்திச் சபதஞ் செய்யாவிடினும், நாளைமுதல் என்றைக்காவது தருமனைப் பிடித்து வருக; வந்தால், அவனின் மிக்கவீரன் எவ்வுலகத்தினு மில்லை யென்பதாம். தான் தருமனை நாளையகப் படுத்துத் தரலா மென்று முந்தினநாட்சொல்லியதை, 'வில்லாண்மை வேறு யாவர்க்கும் இல்லை யென்று எண்ணிச் சபதஞ்செய்ததாகக் கண்ணன் கருதினானென்று உட்கொண்டு' வில்லாண்மையாவர்க்குமின்றென்று எனைப்போல மிகுவஞ்சினஞ் சொல்லாமல் என்றுநீட்டூரமாகத் துரோணன் கூறுகிறான்; இனி, 'என்னைப்போலயாவர்க்கும் வில்லாண்மையின்று' என்று பெருஞ்சபதம்பேசாமல் என இயைத்துக் கூறினுமாம், வல்லார் - வல்லவர்களே! என அண்மைவிளியுமாம்,* ***பி-ம்*** *: என்றனைப்போல. அவன் வீரனே.*
*(132)*

***88. எம்போலவரிவில்லெடுத்தெய்யயார்வல்லரெனும்வீரரும்***
***வெம்போரில்வந்தாலொரணுவுக்கு நில்லாதுவிளிகிற்பரால்***
***வம்போதியென்பேறுவல்லாண்மைபுனையந்தவில்லாளிகூர்***
***அம்போடிராமன்கையடலம்புமுவமிக்கிலதிபாவமே.***

*(இ-ள்.) 'எம்போல எம்மைப்போல, வரி வில் எடுத்து - கட்டமைந்தவில்லை யேந்தி, எய்ய- (அம்பு) செலுத்த, யார் வல்லர்- யாவர் வல்லமையுடையார்? [எவருமில்லை யென்றபடி],' எனும்- என்று (பெருமிதம்) பேசுகிற, வீரர்உம்-, வெம் போரில் வந்தால்- கொடிய யுத்தத்தில் வந்தால், ஓர் அணுவுக்கும்உம் நில்லாது - ஒர்அணுப்போலவாயினும் முன்நிற்கமாட்டாமல், விளிகிற்பர்- அழிந்திடுவர், ஆல்- ஆதலால், வம்பு ஒதி என் பேறு - வீண்வார்த்தை பேசி யாதுபயன்? வல் ஆண்மை புனை - வலிய பராக்கிரமத்தை ஆபரணமாகக் கொண்ட, அந்த வில் ஆளி - வில்வீரனான அத்தருமனது, கூர் அம்போடு கூர்மையையுடைய அம்புகளுடனே, இராமன் கை அடல் அம்புஉம் - ஸ்ரீராமபிரான்கையிலுள்ள வலிய அம்புகளையும், உவமிக்கில் - ஒப்புமை கூறினால், அதி பாவம் - மிக்க தீவினையாம்; (எ-று.)*

*போரில் வெற்றிதோல்விகள் ஒருதலையல்ல என்பது, முன்னிரண்டடியின் கருத்து.சிறிதும் மெய்யாகாது முழுப்பொய்யாகு மென்பார், அதனை வற்புறுத்துதற்கு 'அதிபாவம்' என உறுதி மொழியாற் கூறினார். இராமனென அடைமொழி கொடாமற் கூறினார், இராமர் மூவருள்ளுஞ்*

*சிறப்புடைய தசரதராமனையே குறிக்கும். தைடன் என்னும் வடமொழிப்பெயர்க்கு - தன்திறத்தில் யாவரும் மனங்களித்திருக்கப்பெற்றவ னென்பது பொருள்; சகல சற்குணங்களும் பொருந்தினவனென்பது கருத்து. ஆல்- விகாரம். அம்பும், உம்- உயர்வுசிறப்பு. இராமனம்பின் மகிமை, அதிப்பிரசித்தம்; அதனினுஞ் சிறந்தது தருமனம்பு எனப் புகழ்ந்து கூறியவாறு. (133)*

***89.** **கொத்தொத்ததொடையொத்தவளவொத்தசிறகொத்தகுதை***
***யொத்தவொன்,***
***றொத்தொத்து முனையோடு முனைதத்தி விழுமாறுடன்***
***றேவினான்,***
***றத்தொத்தபுரவித்தடந்தேர்ம னென்னோடு சாதித்ததும்,***
***வித்தொத்த தென்வாளியவன்விட்ட வடிவாளி***
***விளைவொத்ததே.***

*(இ-ள்.) கொத்து ஒத்த - திரட்சியில் ஒத்தவையும், தொடை ஒத்த - தொடுக்கும்வகையில் ஒத்தவையும், அளவு ஒத்த - அளவிலொத்தவையும், சிறகு ஒத்த - இறகில் ஒத்தவையும், குதை ஒத்த - அடியில் ஒத்தவையும் ஆகிய அம்புகளை, ஒன்று ஒத்து ஒத்து முனையோடு முனை தத்திவிழும் ஆறு- (யான் எய்த அம்புகள்) ஒவ்வொன்றோடும் பொருந்திப் பொருந்தி நுனியோடு நுனிபட்டு (அவை) விழும்படி, உடன்று ஏவினான்- கோபித்து (த் தருமன்) செலுத்தினான்: தத்து- தாவிச்செல்லுகிற, ஒத்த புரவி - (ஒன்றோடொன்று) ஒத்த ' குதிரைகளைப் பூட்டிய, தட தேர்- பெரிய தேரையுடைய, மன் - அத் தருமராசன், என்னோடு சாதித்ததுஉம் - மற்*

*றும் என்னோடு போர்செய்ததை ( க் கூறினால்), என் வாளி- யான் எய்தஅம்பு, வித்து ஒத்தது- விதையைப்போன்றது; அவன் விட்ட-, வடி வாளி - கூரிய அம்பு, விளைவு ஒத்தது- விளைச்சலைப் போன்றது; (எ - று.)*

*யான் ஒரம்பு எய்தால் அதற்கு எதிராக அவன் பல அம்புகளை எய்திட்டனனென்பதாம். ஒருவிதை பலவிதைகளுண்டாம்படி விளைதலின், வித்தையும்விளைவையும் உவமைகூறினார். தொடை என்பதற்கு - அம்பென்று பொருள்கூறினால், ஒத்த அளவு என எடுத்து- சாஸ்திரவிதியோடு ஒத்துள்ள[மாறுபடாத]அள வென்க. ஒத்த புரவி- நூல்முறைமைக்குத் தக்க குதிரை யெனினுமாம்.சாதித்தல்- தொடங்கியதைச் சோர்வின்றி நிறைவேற்றலுமாம். ஒத்தல் - உவமித்தலும்,பொருந்தலும். **பி - ம்** : குதையொத்தவந்து. (134)*

***90.** **வன்மைக்கு வயவீமன் வின்மைக்கு முகிலூர்தி***
***மகனன்றிவே,***
***றின்மைக்கு மாவிந்தை கிரிகன்னிகரியென்ப***
***ரெம்மன்னரும்,***
***வின்மைக்கும்வன்மைக்கு மிளையோரையனையாரை***
***மிக வெண்ணலாந்,***
***தன்மைக்குநிலையான தருமற்குநிகர்யார்***
***தனித்தெண்ணவே.***

*(இ-ள்.) 'வன்மைக்கு - வலிமையில், வய வீமன் - வெற்றியையுடைய வீமசேனனும், வின்மைக்கு - வில்லின்திறத்தில், முகில் ஊர்தி மகன்- மேகங்களை வாகனமாகவுடைய இந்திரனுக்குக் குமாரனான அருச்சுனனும், அன்றி - அல்லாமல், வேறு இன்மைக்கு- வேறு (எவரும் சிறந்தவர்) இல்லாமைக்கு, கிரி கன்னி- இமயமலையின்மகளான பார்வதியினமிசமான, மா விந்தை- சிறந்த துர்க்கை, கரி - சாக்ஷி,' என்பர் எ மன்னர் உம்- என்று எல்லா அரசரும் கூறுவர்; வின்மைக்குஉம்- வில்லின் திறத்திலும், வன்மைக்கு உம்- வலிமையிலும், இளையோரை அனையாரை - தம்பிமார்களான வீமஅருச்சுனர்களைத் தனித்தனியொக்கும் வீரரை, மிக எண்ணல் ஆம்- (உலகத்தில்) மிகுதியாகக் (குறித்துக்) கணக்கிடலாம்; தன்மைக்கு - (வின்மை வன்மை என்ற அவ்விரண்டு) தன்மைகளிலும், நிலை ஆன - உறுதிபெற்ற, தருமற்கு - யுதிட்டிரனுக்கு, தனித்து எண்ண- தனியேகுறித்துக் கணக்கிட,*

*நிகர் யார் - ஒப்பாகுபவர் யார்? [எவருமில்லை என்றபடி]; (எ - று)-* இது, துரோணன் தான் சொந்த அபிப்பிராயத்தை வெளியிட்டது.

*வீம அருச்சுனர்க்கு ஒப்புமை கிடைத்தல் கூடும்; தருமனுக்குக் கிடைக்காது என்க. முகில்ஊர்தி - அன்மொழித்தொகை; மேகங்களை இந்திரனுக்கு வாகன மென்றல், மரபு. போருக்குஉரியதேவதை துர்க்கை யாதலால், அவள் சாட்சியெனப்பட்டாள். விந்தியமலையில் வீற்றிருத்தல் பற்றி, துர்க்கைக்கு 'விந்தை' என்ற பெயர்; விந்த்ய வாஸிநீ' என்பர் வடமொழியாரும்: உமாதேவி தக்ஷகன்னிகையாயிருந்த உடம்பைத் துறந்து, தன்னை மகளாகப்பெரும் பொருட்டுப் பலநாளாகத் தவம்புரிந்துவந்த பர்வதராசனுக்குப் பெண்ணாகத்*

*தோன்றிப் பார்வதியென்று பெயர்பெற்றாள், தன்மைக்கு நிலை ஆன - குணத்திற்குஇடமான எனினுமாம். **பி -ம்:** வடவிந்தகிரி கன்னி. (135)*

***91. அதிர்வார்களதிர்மின்களதிரப்பொரும்போரிலறன்***
***மைந்தனோ***
***டெதிர்வார்களுண்டாகிலிக்கங்குல்சென்றாலினிக்***
***காணலாம்***
***முதிர்வாய்மையாலென்ன பயனென்று வெஞ்சாப***
***முனியேகினான***
***கதிர்வார்முடிக்கோவுமரசர்க்குவிடைதந்துகண்டுஞ்சினான்.***

*(இ-ள்.) அதிர்வார்கள் அதிர்மின்கள்- வீணாரவாரஞ்செய்பவர்கள் செய்யுங்கள்;அதிர பொரும் போரில்- நடுக்கமுண்டாம்படி செய்யும் யுத்தத்தில், அறன்மைந்தனோடு எதிர்வார்கள் - தரும புத்திரனோடு எதிர்க்கவல்லவர்கள், உண்டுஆகில் - உள்ளாரானால் இ கங்குல் சென்றால்- இவ்விராத்திரி கழிந்தால், இனி -பின்பு [நாளைமுதல்], காணல் ஆம்- (அவர்திறத்தைப்) பார்க்கலாம்: முதிர் வாய்மையால்- வரம்புகடந்த வாய்ப்பேச்சுமாத்திரத்தால், என்ன பயன்-? என்று - என்றுசொல்லிவிட்டு, வெம் சாபம் முனி- கொடிய வில்லில்வல்ல துரோணன், ஏகினான் - (தன்இடத்துக்குச்) சென்றான்; கதிர் வார் முடி கோஉம்- ஒளியையுடைய நீண்ட கிரீடத்தையுடைய துரியோதனனும், அரசர்க்கு - (கர்ணன் முதலிய) அரசர்களுக்கெல்லாம், விடை தந்து - (செல்ல) அனுமதிகொடுத்து, கண்துஞ்சினான் - தூங்கினான்; (எ - று.)*

*முன்னிரண்டடிகளோடு துரோணன் மறுமொழி முற்றுகின்றது. பின்னிரண்டடிகள் - அவ்வாறுகூறிய துரோணன் ஏக, யாவர்க்கும் விடை கொடுத்துத்துரியோதனன் துயின்றமையைத் தெரிவிக்கும். அதிர்வார்கள் அதிர்மின்கள் -வழுவமைதி. கதிர் - சூரியன்போன்ற என்றுமாம் **. பி- ம்** : யாவர்க்கும் விடைதந்து. (136)*

### *92.- பாண்டவர்கள் கண்துயிலுதல்.*

***மகதத்தரிற்சூரசஞ்சத்தகரிலுள்ளமகிபாலரும்***
***பகதத்தனுந்துள்ளியெதிர்வந்தகாந்தாரபதிமைந்தருந்***
***தகதத்தவெனவெங்களத்தூடுவிழவென்றதனுவேதியுஞ்***
***சுகதத்தமுறவோடவென்றோர்களுங்கண்டுயின்றார்களே.***

*(இ-ள்.) மகதத்தரில் - மகததேசத்துவீரரிலும், சூர சஞ்சத்தகரில்-வீரர்களான சஞ்சப்தகரிலும், உள்ள - சேர்ந்த, மகிபாலர்உம்- அரசர்களும், பகதத்தனும்-, துள்ளிஎதிர் வந்த காந்தாரபதி மைந்தர்உம்- மகிழ்ச்சியோடு கூத்தாடிக்கொண்டு எதிர்த்துவந்த காந்தாரதேசத்து அரசனான சகுனியின் பிள்ளைகள் இரண்டு பேரும், தகதத்தஎன வெம் களத்தூடு விழ - தகதத்தவென்னும் ஓசையுண்டாகக் கொடியபோர்க்களத்தில் இறந்து கீழ்விழவும்,- வென்ற தனுவேதிஉம்- பகைவெல்லுந்தன்மையுள்ள வில்வித்தை வல்ல துரோணனும், சுக தத்தம் உற ஓட - இன்பத்தையிழத்தலுண்டாகப்*

*புறங்கொடுத்தோடவும்,- வென்றோர்கள்உம்- சயித்த பாண்டவர்களும், கண் துயின்றார்கள் - நித்திரைசெய்தார்கள்;*

*மகிபாலரும் பகதத்தனும்...மைந்தரும் களத்தூடுவிழவும், தனுவேதியும் ஒடவும் வென்றோர்களும் என்க. தகதத்த - ஒலிக்குறிப்பு. பொருளை யிழந்தாரை ' தத்தஞ் செய்துவிட்டார்' என்னும் வழக்குப்பற்றி, 'சுகதத்தம் உற' என்பதற்கு - இவ்வாறு பொருள்கொள்ளப்பட்டது: இனி, இன்பத்தை அளித்தருளுதலுண்டாக எனினும் அமையும்; எதிரி இரங்கி உயிரோடுவிட்டு அபயப் பிரதானஞ் செய்தருளும்படி என்று கருத்து; பகைவர்க்கு வெற்றியின்பத்தைக் கொடுத்தல் பொருந்த என்றலுமொன்று. தனுவேதியும் என்பதற்கு- வில்லாயுதத்தையுடைய விசயனும் என்றும், 'சுகதத்தமுறவோடி' என்று பாடங்கொண்டு, தத்தம் - தம்தமக்கு, சுகம்உற-சுகமுண்டாக, ஓடி என்றும் கூறினாரு முளர். (137)*

### *93.- சந்திராஸ்தமனமும், மறுநாட் சூரியோதயமும்.*

***நிலையான வயவீர ருந்தேவ ராய்நின்ற நிலைகண்டுவெண்***
***கலையானி ரம்புஞ்செ ழுந்திங்க ளேகக்க டைக்கங்குல்வா***
***யலையாழி முழுநீல வுறைநின்று மாணிக்க மணியாழிபோ***
***லுலையாத வொளிகொண்ட கதிராயி ரத்தோனு***
***முதயஞ்செய்தான்.***

*(இ-ள்.) நிலைஆன வய வீரர்உம்- (போரிற்பின்னிடாமல்) நிலைபெற்ற வலிமையையுடைய வீரர்கள் பலரும், தேவர் ஆய்நின்ற- இறந்து தேவர்களாகி நின்ற, நிலை- நிலைமையை, கண்டு - பார்த்து, வெள் கலையால் நிரம்பும் செழு திங்கள்- வெண்ணிறமான அமிருத கிரணங்களால் நிறைந்துள்ள செழிப்பான சந்திரன், ஏக - அப்பாற் செல்ல [அஸ்தமிக்க],- கடை கங்குல் வாய் - அவ்விரவின்முடிவில், உலையாத ஒளி கொண்ட கதிர் ஆயிரத்தோன்உம் - அழியாதபிரகாசத்தைக் கொண்ட ஆயிரங்கிரணங்களையுடைய சூரியனும், அலை ஆழி முழுநீலம் உறைநின்று- அலைகளையுடைய கருங்கடலாகிய பெரிய நீலநிறமுள்ளஉறையினின்று, மாணிக்கம் மணி ஆழி போல்- மாணிக்க ரத்தினமயமானசக்கரம்போல, உதயம் செய்தான்- உதித்தலைச்செய்தான் [உதித்தான்]; ( எ -று.)*

*சந்திரன் தேவர்களுக்குத் தன்கலைகளாகிய அமிருதத்தை உணவாகக் கொடுக்குந்தன்மைய னாதலால், போரிலிறந்து தேவசரீரம் பெற்று வீரசுவர்க்கம்புக்கவர்க்கு விருந்திடும்பொருட்டுச் சென்றானென்று சந்திராஸ்தமநத்தை வருணித்தார்; **பயன்தற்குறிப்பேற்றவணி.** ஆழி- மோதிரமென்பாருமுளர். உறை - இங்கே, ஆபரணம் வைக்கும்கூடு. **மாணிக்கம்-** வடசொல்லின் திரிபு; செந்நிறமுள்ள இரத்தினம். (கருமாணிக்கம் என நூல்களில் வருவது, இல்பொருளுவமை.) பின் இரண்டடி - **உவமையணி.** கதிர் ஆயிரத்தோன் - ஸஹஸ்ரகிரணன். 'உறையின்று' என்ற பாடத்துக்கு- உறையில்லாமல் என்க. **பி -ம்:** அணியாழிபோல் , மணியாடி போல். (138)*

***பன்னிரண்டாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.***

## பதின்மூன்றாம் போர்ச்சருக்கம ்.

### *1.- கடவுள் வணக்கம்.*

***சங்கையி லாவகை யமபட ராலுயிர் தளர்பொழு தத்தருகே***
***மங்கையர் சூழவி ருந்தமு துள்ளம யக்கினும் யான்மறவேன்***

***கங்கையு நான்மறை யுந்துள வுங்கமழ் கழலிணை யுந்திருமா***
***லங்கையின் மீதொளிர் சங்கமு நேமியு மஞ்சன மேனியுமே.***

*(இ-ள்.) சங்கை இலா வகை - சந்தேக மில்லாதபடி[நிச்சயமாக], யம படரால் -யமனது வேலையாட்களால், உயிர்- (எனது) சீவன், தளர் பொழுதத்து- வருத்தமடையுங்காலத்தில, அருகுஏ- (எனது) சமீபத்திலே, மங்கையர் - இளம்பெண்கள் [உரியமகளிர்], சூழ இருந்து - சுற்றிலும் இருந்துகொண்டு, அழுது - புலம்பி, உள்ளம் மயக்கின் உம்- (என்) மனத்தை மயக்கமடைவித்தாலும்,- யான்-, - திருமால். திருமகள்கணவனான ஸ்ரீமகா விஷ்ணுவினது, கங்கைஉம் நால் மறைஉம் துளவுஉம் கமழ் கழல் இணைஉம்- கங்கா நதியும் நான்குவேதங்களும் திருத்துழாயும் பரிமளிக்கிற உபயதிரு வடிகளையும், அம் கையின்மீது ஒளிர் சங்கம்உம் நேமிஉம் - அழகிய திருக்கைகளின்மேல் விளங்குகிற சங்க சக்கரங்களையும், அஞ்சனம் மேனிஉம் - மைபோற்கரிய திருமேனியையும், மறவேன் - மறக்க மாட்டேன்; (எ-று.) - எப்பொழுதும் இடைவிடாது சிந்திப்பே னென்பதாம்.*

*இது- தியாநமென்னும் மனவணக்கம். மரணவேதனையொடு மாதர் பாசத்துக்கு உட்படுங்காலத்திலும் எம்பெருமானை மறவேனென்று தமது மனவுறுதியை விளக்கினார். உலகத்தில்பிறப்பெடுத்த உயிர் என்றைக்கேனும் ஒரு நாளில் இறத்தல் நிச்சய மாதலால், 'சங்கையிலாவகை' என்றார். சங்கையிலாவகை தளர்பொழுதத்து என்ற இயைப்பின்- அளவு இல்லாமல் துனபப்படும்பொழுது என்க. கங்கை கமழ்தல்- கங்காநதி தோன்றுதல். திருமால் திரிவிக்கிரமனாய் உலகமளந்த காலத்தில் மேலேசென்ற தொரு திருவடியைச் சத்திய லோகத்தில் பிரமன் தன்கைக்கமண்டலதீர்த்தத்தாற்கழுவிவிளக்க, அந்த ஸ்ரீபாததீர்த்தமே கங்கையாய்ப் பெருகிற் றென்பது, **கதை** . நான்மறைகமழ்தல் - வேதங்கள் இடைவிடாது துதித்தலும்,சரண மடைதலும்.*

*இதுமுதற் பத்தொன்பது கவிகள்- பெரும்பாலும் ஆறாஞ்சீரொன்று கூவிளங்காய்ச்சீரும், மற்றையைந்தும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட **அறுசீராசிரியவிருத்தங்கள்.** (139)*

### *2.- துரோணன் தருமனோடு வன்புடன்பொர எண்ணுதல்.*

***நஞ்சவியாளமுயர்த்தபதாகைநராதிபனேவலினால்***
***விஞ்சவரூதினிமன்னர்திரண்டனர்விசயனைமேலிடுவா***
***னெஞ்சவராலழிவுண்டதபோதனனெருநலினுங்கடுகிப்(னனே.***
***பஞ்சவர்கோ முதல்வன் றனைவன் பொடு படைபொர***
***வெண்ணி.***

*(இ-ள்.) நஞ்சம்- விஷத்தையுடைய, வியாளம்- பாம்பின் வடிவத்தை, உயர்த்த- உயரத்திலெழுதியுள்ள, பதாகை- கொடியையுடைய, நர அதிபன் - துரியோதனராசனது, ஏவலினால் - கட்டளையினால், வரூதினி மன்னர்- சேனைகளையுடைய அரசர்கள்(பலர்), விசயனை மேலிடுவான்- அருச்சுனனை வெல்லும்பொருட்டு, விஞ்ச திரண்டனர்- மிகுதியாக ஒருங்குகூடினார்கள்; அவரால்- அவ்வரசர்களால், நெஞ்சு அழிவுண்ட - மனம்வருந்திய, தபோதனன்- துரோணன், நெருநலின்உம் கடுகி - நேற்றையப்பொழுதினும் விரைந்து, பஞ்சவர் கோ முதல்வன்தனை- பாண்டவரைவருள் முந்தினவனான தருமராசனை, வன்பொடு - வலிமையோடு, படை பொர - ஆயுதங்களாற் போர்செய்ய, எண்ணினன் - கருதினான்; (எ -று.)*

*துரியோதனன்கட்டளையால் அநேக அரசர்கள் அருச்சுனனை வெல்லத் திரண்டது, 'நாங்கள், அருச்சுனன் தருமனுக்கு உதவியாகாதபடி தடுத்திடுகிறோம்; நீமுன் சொன்னபடி தருமனைப் பிடித்திடு, பார்ப்போம்' என்னுங் கருத்தை வெளியிட்டுத் துரோணனுக்கு வருத்தத்தை மூட்டுதலால், ' நெஞ்சு அவராலழிவுண்டதபோதனன்' என்றார். அவரால் - கர்ணன் முதலியோரால் எனினுமாம். பாண்டவரால் எனக்கொண்டு, முந்தினநாட் போரிற் பட்ட பரிபவத்தைக்குறித்தாகவும் உரைக்கலாம். நஞ்ச என எடுத்தால், குறிப்புப் பெயரெச்சமாம்.வ்யாளம்-வடசொல். கோமுதல்வனை - முதல்வனாகிய கோவையென்க. (140)*

### *3,-இலக்கணமைந்தன்முதலோர் படைவகுப்பில் வந்து நிற்றல்.*

***இலக்கணமைந்தனுமைந்துடைமன்னவனிளைஞருமெம்முனையுங்***
***கலக்குறவென்றகலிங்கருமுட்படுகாவலர்பற்பலருஞ்***
***சிலைக்கைவயம்பெறுசிந்துநராதிசெயத்திரதன்சிரமா***
***நிலக்கணெழுந்துகள்வானிடைசென்றிடநின்றனர்பேரணியே.***

*(இ-ள்.) இலக்கண் மைந்தன்உம் - லக்ஷ்ணகுமாரனும், மைந்து உடை மன்னவன் இளைஞர்உம்- வலிமையையுடைய துரியோதனன் தம்பிமாரும், எ முனைஉம் - எல்லாப்போர்களிலும், கலக்கு உற- (பகைவர்க்குக்) கலக்க முண்டாம்படி,வென்ற - (முன்பு) சயித்துள்ள, கலிங்கர்உம்- கலிங்கநாட்டு வீரரும், உள் படு -(என்னும் இவர்கள்) உள்ளிட்ட [இவர்கள்முதலான], காவலர் பல்பலர்உம்- மிகப்பலஅரசர்களும், சிலை கை வயம் பெறு- வில்லையேந்திய கையின் வலிமை பெற்ற,சிந்து நர ஆதி - சிந்துதேசத்துச் சனங்களுக்குத் தலைவனாகிய, செயத்திரதன்-ஜயத்ரதனை, சிரம் ஆ - (தங்களுக்குத்) தலைமையாகக் கொண்டு, நிலக்கண் எழும்துகள் வானிடை சென்றிட - (சேனைகளால்) பூமியிலே மேலெழுந்த தூளிஆகாயத்திற் செல்லும்படி, பேர் அணி நின்றனர் - பெரிய படைவகுப்பில் ஒருங்குநின்றார்கள்; (எ - று.) (141)*

### *4.- துரோணன் தன்சேனைகளைச் சக்கரவியூகமாக வகுத்தல்.*

***அக்கரம்யாவுமுணர்ந்தசிலைக்குருவாசுரர்சேனைநடுச்***
***சுக்கிரனார்நிகரென்னவகைப்படுதூசியின்மாமுறையே***

***யெக்கரமும்படை கொண்டெழு சேனையையெயில்கள்***
***வளைப்பனபோற்***
***சக்கரயூகம்வகுத்திரதத்திடைச்சயமுறநின்றனனே.***

*(இ -ள்) அக்கரம் யாஉம் உணர்ந்த- எல்லாஇலக்கணங்களையும் அறிந்த, சிலை குரு - வில்லாசிரியனான துரோணன், அசுரர் சேனை நடு - அசுரர்களது சேனையின் மத்தியில், சுக்கிரனார்- (அவர்களுக்குச்சேனைத்தலைவராய் நிற்கிற) சுக்கிராசாரியார், நிகர்- (தனக்கு) ஒப்பு, என்ன- என்று சொல்லும்படி, வகை படு தூசியின் மா முறைஏ - பிரிக்கப்படுகிற படைவகுப்பிற்குரிய சிறந்தமுறைமைப்படியே, எ கரம்உம் படை கொண்டு எழு சேனையை - கைகளிலெல்லாம் ஆயுதங்களேந்திக்கொண்டு (போருக்கு) எழுந்த சேனைகளை, எயில்கள் வளைப்பன போல்- மதில்கள் சூழ்வனபோல, (சுற்றிலும் இடைவிடாது சூழ்ந்திருக்கும்படி), சக்கரயூகம் வகுத்து- சக்கரவியூகமாக அணிவகுத்து, இரதத்திடை- தேரின்மீது, சயம்உற நின்றனன்- வெற்றியுண்டாக நின்றான்; ( எ-று.)*

*பதின்மூன்றாநாளில் துரோணன் **பதும** வியூகம் வகுத்ததாகவும் அதனுள் அபிமன் அகப்பட்டு இறந்ததாகவுமே பிரசித்தம்; இங்ஙனமே முதனூலாகிய வடமொழி வியாசபாரதத்திலு முள்ளது; பெருந்தேவனாரோ 'காலிங்கராசனையும் கௌசலேசுரனையும் வணிகரையும் சூரசேனரையும் சுற்று முற்றும் அதற்கு விளிம்பாக நிறுத்தி, லக்ஷ்ணகுமாரனையும் எழுபத்தாறாயிரந்தேராட்களையுந் துரியோதனனையும் நடுவண் நிறுத்தி, சயத்திரதனையும் பல பதினாயிரம் யுத்த வீரரையும் தூசிமுகத்தின்கண் நிற்பாராக்கிச் **சக்க** ர மென்னும் யூகம் வகுத்து' என்றார். **சக்கர** வியூகம் - சக்கரவடிவமாகச் சேனையை ஒழுங்குபட நிறுத்தல். நாற்புறத்தும் பயமுண்டாம்போது சக்கரவியூகம் வகுக்கத்தக்கதென்றும், அது எட்டுச்சுற்றுடன் ஒருவழியையே யுடையதென்றும், சுக்கிரநீதி கூறும்; அம் முறைமையை அறிந்து சமயோசிதமாகச் செய்த வல்லமைக்கு, சுக்கிரனையே உவமைகூறினார்: வடநூலிலும் இவ்வுவமை கூறப்பட்டுள்ளது.*

*அக்கரம்- அக்ஷரம்; எழுத்து: எனவே, அதனோடு ஒற்றுமையுடைய சொல்லும் அடங்கிற்று; இது- ஆகுபெயராய் இலக்கண நூலை யுணர்த்துதலை, "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும், கண்ணென்ப வாழுமுயிர்க்கு" என்றவிடத்திலுங் காண்க. இனி, அக்கரமென்பது - எல்லா நூலுக்கும் இலக்கணை யென்றலும் ஒன்று. ஏகாக்ஷரம், பஞ்சாக்ஷரம், ஷடக்ஷரம்*

*அஷ்டாக்ஷரம், துவாதசாக்ஷரம் முதலிய மந்திரங்களுமாம். அக்கரம்- அழியாப் பொருள் என்று கூறினாருமுளர், ஆசுரர்- அசுரர் என்பதன் நீட்டல். சுக்கிரன் - அசுரர்க்குக்குருவும், புரோகிதனும், பிரதான மந்திரியும், படைத்தலைவனுமாவன்; ஆர் என்னும் பலர்பால்விகுதி, சிறப்புப்பொருளது. கரம் - பக்கமுமாம். (142)*

***5.- தருமன் மாற்றாரெண்ணத்தையுணர்ந்து அருச்சுனனிடம் அதனைத்தெரிவித்துப் போர்க்களத்து உக்கிரமாக நடத்தல்.***

**ஒப்பறுபோரினில்வாகைபுனைந்தவுதிட்டிரனன்றடையார்**
**தப்பறவெண்ணியவெண்ணமுணர்ந்துதனஞ்சயனுக்குமுரைத்**

**தப்பறுகோடையில்வெங்கதிரோனெனவாகவநீடளவித்**
**துப்புறுசிந்தைமகீபர்வரூதினிசூழநடந்தனனே.**

*(இ-ள்.) ஒப்பு அறு - உவமையில்லாத, போரினில் - (முந்தின நாளை) யுத்தத்தில், வாகை புனைந்த - வெற்றி மாலையைச் சூடிய, உதிட்டிரன்-, அன்று -அன்றைக்கு, அடையார் - பகைவர்கள், தப்பு அற- தவறுதலில்லாதபடி, எண்ணிய -ஆலோசித்த, எண்ணம்- நினைப்பை, உணர்ந்து - (ஒற்றரால்) அறிந்து, தனஞ்சயனுக்குஉம் உரைத்து- (அதனை) அருச்சுனனுக்குங் கூறி, அப்பு அறு கோடையில் வெங்கதிரோன் என - சீர்வற்றிய கோடைக்காலத்துச் சூரியன்போல [மிக உக்கிரமாக], நீடு ஆகவம் அளவி - பெரிய போர்க்களத்தைச் சேர்ந்து, துப்பு உறு சிந்தை மகீபர் வரூதினி சூழ வலிமைமிக்க மனத்தையுடைய அரசர்களும் சேனைகளும் சுற்றிலும் வர, நடந்தனன்- வந்தான்; (எ-று.)- எண்ணம் - இரண்டாங்கவியிற் கூறியது.* ***பி -ம்*** *: ஆகவநீள்வரிவில். (143)*

***6.- பாண்டவரின் சேனை மிகுதி.***

**ஈரிருதேரினர்மூவகையானையரெண்ணறுமாமிசையோ**
**ரோரிருநாலுடையைபிருபூமியிலுள்ளபதாதருடன்**
**பாரிருநாலுகிசாமுகமும்படையோடுபரந்துவரும்**
**பேரிருமானவரூதினியின்றிரள் பேசுறலாமளவோ.**

*(இ -ள்.) ஈர் இரு தேரினர் - நால்வகைத் தேர்வீரர்களும், மூவகை யானையர் - மூன்றுவகை யானையின் மேலேறிய வீரர்களும், எண் அறு மா மிசையோர் - கணக்கற்ற குதிரைகளின்மே லேறிய வீரர்களும், ஓர் இரு நால் உடை ஐ இரு பூமியில் உள்ள பதாதருடன் - பதினெட்டுத் தேசங்களிலுள்ள காலாள்வீரர்களும் ஆகிய இவர்களோடு. பார் இரு நாலு திசாமுகம்உம் - பூமியின் எட்டுத் திக்குக்களினிடத்திலும், படையோடு பரந்து வரும் - ஆயுதங்களோடு பரவிவருகிற, பேர் இரு மானம் வரூதினியின் திரள் - பிரசித்தி பெற்றதும் பெரியதும் மானத்தைக்காப்பதுமான ( பாண்டவ ) சேனையின் கூட்டம், பேசுறல் ஆம் அளவுஓ - சொல்லுதற்கு ஏற்ற அளவுடையதோ? ( எ-று.)- அன்று; சொல்லவொண்ணாதபடி அளவிறந்தது என்பதாம்.*

*அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் எனத்* ***தேர்வீரர் நால் வகைப்*** *படுவர்.* ***அதிரதர்*** *- முழுத்தேரரசர்; அவராவார் - ஒருதேரில் ஏறிநின்று தம்தேர் குதிரை சாரதிகளுக்கு அழிவுவாராமற் காத்துப் பலவாயிரந் தேர்வீரரோடு எதிர்த்து வேறு துணையில்லாமலே போர் செய்து வெல்லும் வல்லமை யுடையார். அவரிற் சிறிது தாழ்ந்தவர் -* ***மகாரதர்*** *; இவர் பதினோராயிரந் தேர் வீரரோடு பொருபவர்.* ***சமரதர்*** *- ஒரு தேர் வீரனோடு தாமும் ஒருவராய் எதிர்க்க வல்லவர்.* ***அர்த்தரதர்*** *- அவ்வாறு எதிர்க்குமளவில் தம் தேர்முதலியவற்றை இழந்து போம்படியானர்; இவர் இருவர் சேர்ந்தால், ஒரு சமரதனுக்கு ஒப்பாவார். இனி, இரண்டுசக்கரம் நான்குசக்கரம் ஆறு சக்கரம், எட்டுசக்கரம் என்றார்போலத் தேரில் நான்குவகை கூறவுங் கூடும்.*

***மூவகையானை*** - கிரிசரம், நதிசரம், வனசரம் என்பன: "கிரிசரம் வனசரம் நதிசர மென்றிவை, நிலைபெறு நிலமென நிறுத்திசினோரே" என்ற பன்னிருபாட்டியலாலும், "கிரிசரம் வனசரம் நதிசரமடுத்துப், பெறுமே யானை பிறந்த நிலப்பெயர்" என்ற பிங்கலந்தை திவாகரங்களாலும் இலக்கண விளக்கவுரையாலும் அறிக; இவற்றுள், கிரிசரம் - மலையிற்பிறந்தது; நதிசரம்- யாற்றுச் சார்பிற் பிறந்தது; வனச்சரம்-காட்டிற்பிறந்தது. இனி, வேறும் யானையின் மூன்று வகை- **பத்ரம், மந்த்ரம், ம்ருகம்** என்பன: "இவற்றின் இலக்கணம் வருமாறு:- தேனின்நிறம் போன்றநிறமுள்ள தந்தமும் மிக்க வலிமையும் ஒத்தஅவயமும் வட்டமானவடிவமும் அழகியமுகமும் அவயவச்சிறப்பு முடையது, **பத்ரம்** . பருத்தவயிறும் சிங்கநோக்கும் பருத்ததோலுள்ள கழுத்து துதிக்கைகளும் நடுத்தரமான அவயமும் நீண்ட உடம்புமுடையது, **மந்த்ரம்** . பருத்ததல்லாத கழுத்தும் பருத்த காது துதிக்கைகளும் பருத்தகண்களும் குறுகியஉதடு குறிகளும் குள்ள வுடம்பு முடையது, **ம்ருகம்** . பத்ரத்துக்கு உயரம் ஏழு முழமும், நீளம் எட்டு முழமும், வயிற்றின் சுற்றளவு பத்து முழமுமாம்; மந்தரத்துக்கு இவ்வளவினும் ஒவ்வொரு முழம் குறைவும், ம்ருகத்துக்கு அதனளவினும் ஒவ்வொருமுழம் குறைவு மாகும்: பத்ரத்துக்கும் மந்த்ரத்துக்கும் நீளம் ஓரள வென்பதும் உண்டு. பத்ரத்தின் மதநீர் பசுமையாகவும், மந்த்ரத்தின் மதநீர் மஞ்சளாகவும், ம்ருகத்தின் மதநீர் கருமையாகவும் இருக்கும்.

இனி, 'எண்இருமா' என்ற பாடத்துக்கு - "மங்காளன் சாரங்கன் கங்காநீலம் மௌவழகன் கொங்காளன் சன்ன சம்பான், குங்குமச்சோரன் கரியான் நீலன் சாரன் குலவுமள்ளான் உரஞ்சிவந்தான் நல்லான் பொல்லான், தங்குகருங்காற்செம்பான் என்று கூறும் தன்மையுள்ள பன்னிறமும்புனைந்த சாதித், துங்கமிகும் பரியிவை" என்று திருவாதவூரர்புராணத்துக் கூறிய பதினைந்துவகையும், சீவகசிந்தாமணியுரையிலும் வைஷ்ணவசம்பிரதாயத்திலும் வழங்குகிற ' நம்பிரான்' என்னும் வகையும் என்ப.

ஓரிருநாலுடை யையிரு பூமி- எட்டு என்னும் எண்ணை இறுதியிலுடைய பத்தாகிய நாடுகள்; சிங்களம், சோனகம், சாவகம், சீனம் துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், குசலம் , திரவிடம் என்பன - **பதினெட்டுப் பாஷைவழங்குத்** தேயங்களாம். அன்றி, 'ஓரிருநாலுடை பையிருபூமி' என்பதற்கு - எட்டோடு பெருக்கியஏழாகிய ஐம்பத்தாறு தேசங்கள் என்றும் உரைக்கலாம். கீழ்ப்படை யெழுச்சிச்சருக்கத்தில் "ஐயிரண்டெண்பூமி" என்றது இங்ஙனமே இருபொருள்படும். இனி, பதினெட்டுதீவுக ளெனினுமாம். இப் **பாட்டு - எண்ணுவண்ணம்;** அது - எண்பயின்றுவருவது: "எண்ணுவண்ணமெண்ணுப்பயிலும்" **பி-ம்** : பதாதியுடன். (144)

### 7.- பாண்டவசேனை மகரவியூகமாக வகுக்கப்படுதல்.

**வருபடைதன்னைநிறுத்திவிதம்படமகரவியூகம்வகுத்**
**தொருபகல்யூகமுமிப்பகலுக்கினியாப்பலவென்றிடவே**

**குருபதியுந்திருமாலுமதிக்கவணிந்தடுகோளரிபோற்**
**றுருபதன்மைந்தனுநின்றனனந்தரதுந்துபிமீதெழவே.**

(இ-ள்.) துருபதன்மைந்தன்உம் - (பாண்டவசேனாபதியாகிய) துருபத குமாரனான திட்டத்துய்மனும் வரு படைதன்னை- (போருக்கு) வருகின்ற (தன் சேனையை, விதம் பட நிறுத்தி - ஒழுங்குபட நிற்கவைத்து, மகரவியூகம் வகுத்து - மகரவியூகமாக அமைத்து, 'இ பகலுக்கு - இந்நாளைவியூகத்துக்கு, இனி ஒரு பகல் யூகம் உம் - வேறு ஒரு நாளை யூகமும், ஒப்பு அல- ஒப்பாகமாட்டாது', என்றிட- என்று (கண்டவர்) கருதவும், குருபதிஉம் - குரு குலத்தலைவனான தருமனும், திருமால்உம் கண்ணனும், மதிக்க - நன்கு மதிக்கவும், அணிந்து -அணிவகுத்து, அடு கோள் அரி போல்- ( மற்றைவிலங்குகளை) அழிக்கவல்ல வலிய ஆண்சிங்கம்போல, அந்துர துந்துபி மீது எழ- ஆகாயத்தில் (தேவர்கள் கொண்டாடி முழங்குந்) துந்துபிவாத்தியம் மிக்குஒலிக்க, நின்றனன்- (தனது தலைமைதோன்ற) நின்றிட்டான்; (எ - று.)

*முன்னே பயகாரண முள்ளபொழுது மகரவியூகம் அமைக்கத் தக்கதென்றும், அது நான்குகால்களையும் நீண்டபருத்தமுகத்தையும் இரண்டுவாயையு முடைய தென்றும் சுக்கிரனார் கொள்கை. நிலவுலகத்தில் வியக்கத்தக்க செய்கையைக் கண்டால், தேவர்கள் வானத்தில் துந்துபிமுழக்குதல், இயல்பு. பெருந்தேவனார் பாரதவசனத்தில் மண்டல மென்னும் வியூகமென்று கூறியுள்ளது. (145)*

### *8.- அணிவகுத்துஇருசேனையும்நின்றபின் சஞ்சத்தகர் அருச்சுனனை அறைகூவ அவனேகுதல்.*

***இத்தகவாகவணிந்திருசேனையுமெதிர்முனையும்பொழுதின்***
***முத்தகவெண்குடைமன்னவனேவலின்முற்பகலின்படியே***
***மத்தகமாமுதலாகியநான்மைவரூதினிதன்னொடுசஞ்***
***சத்தகர்வந்தறைகூவவெகுண்டுதனஞ்சயனேகினனே.***

*(இ -ள்.) இ தகவு ஆக- இவ்விதமான, இரு சேனைஉம் - இருதிறத்துச் சேனைகளும், அணிந்து - அணிவகுக்கப்பட்டு, எதிர் முனையும் பொழுதில்,- முத்துஅகம் வெள்குடை மன்னவன் ஏவலின் - முத்துக்களைத் தன்னிடத்தேயுடைய ஒற்றை, வெண்கொற்றக்குடையையுடைய துரயோதனனது கட்டளைப்படி, முன் பகலின்படி ஏ- முந்தினநாளிற்போலவே, சஞ்சத்தகர்- சம்சப்தகர்கள், மத்தகம் மா முதல் ஆகிய- மஸ்தகத்தையுடைய யானை முதலான, நான்மை வரூதினி தன்னொடு - நால்வகைச்சேனைகளுடனே, வந்து- ( எதிரில்) வந்து, அறை கூவ - வலிவிற் போருக்கு அழைக்க, தனஞ்சயன் - அருச்சுனன், வெகுண்டு - கோபித்து, ஏகினன்- (அவர்களோடு போர்செய்யச்) சென்றான்; ( எ-று.)*

*தன்னைப் போருக்கு அழைப்பாரோடு தவறாமற்பொருதலை விரதமாகப் பூண்டவனாதலால், அருச்சுனன் இங்ஙனஞ் செல்பவனானான். சஞ்சத்தகர் அருச்சுனனைத் தனியே அழைத்துப்போனது*

*தென்திசையி லென முதனூலால் தெரிகிறது. மத்தக மா - மஸ்தகத்தையுடைய மிருகம்; எனவே, யானையாம். நான்மை என்றது - எண்ணையே உணர்த்திற்று. (146)*

### *9.- அருச்சுனன் அம்புமழைபொழிய, மாற்றார்சேனை யுடைதல்*

***மால்விடுதேர்மிசையான்வரிசாபம்வளைத்ததுமல்லிகல்வெங்***
***கோல்விடுபூசலும்வில்லுடனேபொழிகொண்டல்வியப்பெனலா***
***மேல்விடுதேர்களும்யானையும்வாசியும்வீரருமெய்யுருவக்***
***கால்விடுதாரையெழுஞ்சருகென்னவுடைந்தனர்கையறவே.***

*(இ-ள்.) மால் - திருமால், விடு - செலுத்துகிற, தேர்மிசையான் - தேரின்மீது உள்ளவனான அருச்சுனன், வரி சாபம் வளைத்ததுஉம்- கட்டமைந்த வில்லை வணக்கினதையும், மல் இகல் - வலிமையோடு பராக்கிரமித்துச் செய்த, வெம் கோல் விடு பூசல்உம்- கொடிய அம்புகளைப் பிரயோகிக்கிற போரையும், வில்லுடனே பொழி கொண்டல் வியப்பு எனல் ஆம்- இந்திரவில்லோடு (கூடி) மழை பொழிகிற காளமேகத்தின் அதிசயிக்கத்தக்க தன்மை யென்று சொல்லலாம்; மேல் விடு- அவன்மேல் ( எதிர்த்துச்) செலுத்தப்படுகிற, தேர்களும்-, யானைஉம்- யானைகளும், வாசிஉம் - குதிரைகளும், வீரர்உம் - காலாள்வீரர்களும், மெய் உருவ - (அவ்வம்புகளால்) உடல் துளைபட, கால் விடு தாரை எழும் சருகு என்ன- காற்றுவீசுகிற வேகத்தால் மேலெழுகிற உலர்ந்த இலைகள்போல, கை அற - செய்ததொழி லொன்று மில்லாமல், உடைந்தனர் - தோற்று அழிந்தனர்; ( எ-று.)*

*முதல்வாக்கியத்தில், காளமேகம் - அருச்சுனனுக்கும், இந்திரவில் - அவனது காண்டீவவில்லுக்கும், நீர்மழை - அம்புமழைக்கும், இரண்டாம் வாக்கியத்தில், காற்றின்வேகம்- அம்பின் வேகத்துக்கும், சருகு- சேனைக்கும் உவமையாம். தேர்களும் யானையும் வாசியும் வீரரும் உடைந்தனர் - அஃறிணையும் உயர்திணையும் எண்ணி, சிறப்பினால் உயர்திணைமுடி பேற்றன. இகல்பூசல் -*

*வினைத்தொகை. இனி, மல்லிகல்- ஒருபொருட்பன்மொழி யென்றலும் ஒன்று: மிக்கவலிமை யென்க. 'மல்லிகைவெங்கோல்' என்ற பாடத்துக்கு - (மன்மதனது மலரம்பு ஐந்தனுள் மோகத்தையுண்டாக்குகிற.) நவமல்லிகையம்புபோலக் கொடிய அம்பு என்க. தாரை - ஒழுங்குமாம்.* ***பி -ம்*** *: மெய்யுருவி.* *(147)*

### *10.- இதுவும் அது.*

***பட்டவரெத்தனையாயிரர்நின்றுபடாமலுயிர்ப்புடன்வென்***
***னிட்டவரெத்தனையாயிரரஞ்சலினேகுகவென்றமர்வாய்***
***விட்டவரெத்தனையாயிரர்தங்குலமேன்மையும்வெந்திறலுங்***
***கெட்டவரெத்தனையாயிரரன்றுகிரீடிதொடுங்கணையால்.***

*(இ-ள்.) அன்று - அப்பொழுது, கிரீடி தொடும் கணையால் - அருச்சுனன் எய்த அம்புகளால், பட்டவர் - இறந்த பகைவீரர் எதனை ஆயிரர் - மிகப்பலவாயிரந்தொகை யுடையார்; நின்று- ( எதிரில் நிலைத்து) நின்று, படாமல் - இறவாமல், உயர்ப்புடன்- உயிருடனே, வென் இட்டவர்- முதுகு கொடுத்தவர்கள், எத்தனை*

*ஆயிரர்-; அஞ்சலின் - (தாம்) பயப்படுதலால், ஏகுக என்று - நீங்கிச்செல்லுங்களென்று (அவனாற் சொல்லப்பட்டு), அமர்வாய் விட்டவர்- போரில் நீங்கினவர்கள், எத்தனை ஆயிரர் -; தம் குலம் மேன்மைஉம்- தங்கள்குலத்தின் பெருமையும், வெம் திறல்உம்- கொடிய வலிமையும், கெட்டவர் - அழிந்தவர், எத்தனை ஆயிரர்-?*

*அமர் வாய்விட்டவர் என எடுத்து, போரில் வாய்திறந்து சொல்லப்பட்டவர் எனினுமாம் ; அஞ்சுபவரை அழித்தல் நீதியன் றாதலால், அப்படிபட்டவர், உயிரோடுஓடிப்போங்களென்று சொல்லி அவனால் அருளோடு விடப்பட்டனரென்க; "அரிவையர் வெஞ்சம ரஞ்சுவோர் பெருங், குரவரென்றிவர்களைக் கோறல் பாவமே"எனக் கீழ் நிரைமீட்சிச்சருக்கத்தில் வந்தது காண்க.* ***கிரீடி*** *என்ற வடசொல்லுக்கு-கிரீட முடையவ னென்று பொருள்; இந்திரன் அருச்சுனனைத் தன் உலகத்துக்குஅழைத்துப்போன பொழுது, அங்குத் தன் ஆசனத்தில் அருத்தாசனங் கொடுத்துஅதிலிருக்க வைத்து, முன்பு தனக்குப் பிரமதேவன் தந்தருளியிருந்ததொரு இரத்தினகிரீடத்தைச் சூட்ட, அதனைத் தரித்ததுபற்றி, அருச்சுனனுக்கு 'கிரீடி' என்று பெயர்.'எத்தனையாயிரர்' என்பது பல முறை ஒரே பொருளில் வந்ததனால்,* **சொற்பொருட்பின்வருநிலையணி. பி-ம்** *: ஏகுவமென்று.* *(148)*

### *11.- படுகளச்சிறப்பு.*

***ஓரொருடம்பினிலாயிரமாயிரமுற்பலவாளிபடத்***
***தாரைபடும்படிபொழிமுகிலொத்தனர்சமர்முனையிற்றரியார்***
***மாரனையங்கமெரித்தருள்கண்ணுதல்வடிவமெனும்படியே***
***பாரொருபாதிசிவந்ததுமேனிபரந்தெழுசோரியினால்***

*(இ-ள்.) சமர் முனையில்- யுத்தகளத்தில், ஓர் ஓர் உடம்பினில் - (பகைவரது) உடம்புதோறும் ஆயிரம் ஆயிரம் - பல ஆயிரக்கணக்கான, உற்பலம் வாளி - கருங்குவளைமலர் போன்ற [கொல்லுந்தன்மையையுடைய] (அருச்சுனனது) அம்புகள், பட -தைத்தலால், தரியார் - (உடம்புமுழுவதும் புண்பட்டு இரத்தஞ்சொரிகிற) அப்பகைவர்கள், தாரை படும்படி பொழி முகில் ஒத்தனர்- நீர்ப் பெருக்கு இடைவிடாதிருக்கும்படி சொரிகிற மேகத்தைப் போன்றார்கள் ; பார்- அவ்யுத்தபூமி , மாரனை அங்கம் எரித்தருள் கண் நுதல் வடிவம் எனும்படிஏ - மன்மதனை உடம்பை யெரித்தருளிய நெருப்புக்கண்ணை நெற்றியிலுடைய சிவபிரானது திருமேனிபோல, மேனி பரந்து எழு சோரியினால் - (அப்பகைவர்) உடம்பினின்று வெளியெழுந்து பரவிய இரத்தத்தால், ஒரு பாதி சிவந்தது - (துரியோதனாதியர்சேனையுள்ள) ஒரு பாதியிடம் செந்நிறமாயிற்று;*

*உத்பலம் என்னும் வடசொல், திரிந்தது. மன்மதனது பஞ்சபாணங்களுள் நீலோற்பலமலராகிய அம்பு கொல்லுந்தன்மையதாதலால், அது அருச்சுனனம்புக்கு உவமை கூறப்பட்டது; "முழு* ***நீலம், கொல்லும்*** *மதனம்பின் குணம்" என்றது காண்க. சிவபிரானது அர்த்தநாரீசுவரவடிவத்தில், சிவரூபமாகவுள்ள வலப்பக்கம் சிவந்தும், உவமை ரூபமாகவுள்ள இடப்பக்கம் கறுத்தும் இருத்*

*தலால், 'கண்ணுதல் வடிவமெனும்படி ஒருபாதி சிவந்தது' என்றார்:* ***உவமையணி,*** *மாரன் என்ற வடசொல்லுக்கு - (ஆடவரையும் மகளிரையும் காதல்நோயால்) மரணவேதனைப்படுத்துபவனென்று காரணப் பொருள். கண்நுதல்- வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. சொரிவது - சோரியெனக்காரணப்பெயர்.*

**சிவவடிவம் இரண்டுதன்மைகலந்த விவரம்:-** *பிருங்கியென்னும் மகாமுனி பரமசிவனை மாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்யக் கண்ட பார்வதீதேவி, தன் பதியைநோக்கி 'முனிவன் என்னைப்பிரதக்ஷிணஞ்செய்யாமைக்கு ஏது என்ன?' என்றுவினவ, உருத்திரமூர்த்தி 'இஷ்டசித்திபெற விரும்புபவர் உன்னையும், மோக்ஷம்பெற விரும்புபவர் என்னையும் வழிபடுவர்' என்ன, அதுகேட்ட தேவி பெருமானோடு பிரியாதிருக்குமாறு தவம்புரிந்து வாமபாகம் பெற்றனரென்பது.(149)*

### *12.-மற்றொருபக்கத்தில் திருஷ்டத்யும்நன் துரோணன்மேல் வில் வளைத்தல்.*

***இந்திரன்மாமகனிங்கிவர்தம்முடனிம்முறைபோர்புரியச்***
***சந்திரசூரியமண்டலமொத்தணிதானையிரண்டுமுனைந்***
***துந்தியவேலையினுந்திகணாலுடையுந்திரதந்திடைபோ***
***யந்தணன்மேல்வரிசாபம்வளைத்தனனைவர்படைத்தலைவன்.***

*(இ-ள்.) இந்திரன் மா மகன் - தேவேந்திரனது சிறந்த குமாரனான அருச்சுனன், இங்கு-இவ்விடத்தில், இவர்தம்முடன் - இச்சஞ்த்தகவீரர்களுடனே, இமுறை- இவ்விதமாக, போர் புரிய - யுத்தஞ்செய்துகொண்டிருக்க, சந்திர சூரிய மண்டலம் ஒத்து அணி-சந்திரமண்டலத்தையும் சூரியமண்டலத்தையும் போன்று (எதிரெதிரில்) ஒழுங்குபடத் திரண்டுள்ள, தானை இரண்டும்உம் - இருநிறத்துச்சேனைகளும், முனைந்து - போர்கலந்து, உந்திய வேலையின்-தாக்கிய சமயத்தில்,-ஐவர் படை தலைவன் - பாண்டவர் சேனாதிபதியான திட்டத்துய்மன்,- உந்திகள் நால்உடை-நான்கு சக்கரங்களையுடைய, உந்து இரதத்திடை-உயர்ந்த தேரிலே, போய்,- அந்தணன்மேல் - துரோணாசாரியன் மேல், வரி சாபம் வளைத்தனன்-கட்டமைந்த வில்லை வளைத்துப் போர் செய்தான்: (எ - று.)*

*உந்தியென்பது உருளையாதலை "உந்தி தேருருளே யாறேயுவரி நீர்ச்சுழியே கொப்பூழ்" என்னும் நிகண்டினாலும் அறிக. உந்துதல்- உயர்ச்சி, செலுத்தல், தள்ளுதல். (150)*

### *13.-துரோணன் திருஷ்டத்யும்நனுடைய துவசத்தொடு கவசமழித்தல்.*

***நூலொடுசாபம்வளைத்தவன்மற்றிவனொய்தினுகைத்தவடிக்***
***கோலொடுகோன்முனையற்றுவிழத்தொடுகுனிசிலைநாணழியச்***
***சேலொடுசேல்பொருசீலமெனும்படிதேர்களிரண்டுமணிக்***
***காலொடுகால்பொரவன்றுவசத்தொடுகவசமழித்தனனே,***

*(இ-ள்.) மற்று - பின்பு, அவன் - துரோணன், நூலொடு சாபம் வளைத்து - தநுர்வேதமுறையோடு ஒப்ப வில்லை வளைத்து,*

*நொய்தின் உகைத்த - விரைவாகப் பிரயோகித்த, வடி கோலொடு- கூர்மையான அம்புகளால், இவன் - திட்டத்துய்மனது, கோல் - அம்புகள், முனை அற்று - நுனியறுந்து, விழ - கீழ்விழவும், தொடு- (கையில்) ஏந்திய, குனி சிலை - வளைந்த வில்லின், நாண்- நாணி, அழிய - துணிபடவும், சேலொடு சேல் பொரு சீலம் எனும் படிதேர்கள் இரண்டுஉம் மணி காலொடு கால் பொர - சேல்மீனோடு சேல்மீன் போர்செய்ய மொழுங்கு போலு மென்னும்படி, தன்தேரும் திட்டத்துய்மன் தேரும் அழகிய கால்களோடு கால்கள் தாக்க, வல் துவசத்தொடு கவசம் அழித்தனன் - (அத்திட்டத்துய்மனது) வலிய தேர்கொடியையும் உடற்கவசத்தையும் அழித்தான்:*

*நொய்தின் - அலட்சியமாக, எளிதாக, மென்மையாக எனவும் பொருள்கள் படும். கால் என்றது - தேரின் ஏர்க்கா லென்றேனும், முன்நிற்குந் தூண்களென்றேனும் சக்கர மென்றேனும் கொள்க. கோலொடு, ஒடு - கருவிப் பொருளது. சீலம் - வடசொல். (151)*

### *14.-கவிக்கூற்று: துரோணன் செய்த போரின் சிறப்பு.*

**அருமுனியாதிதிட்டனுமன் குலவாதியும்மந்தணனாம்,**
**பெருமுனிதானுமுடற்றியபோர்சிலர்பின்பொருதாருளரோ,**
**வொருமுனியேழ்கடலுங்கரமொன்றிலொடுக்கினன்மன்னனைமேல்,**
**வருமுனிவென்றனன்முனிவருடன்பொரவல்லவர்யார்புவிமேல்**

*(இ-ள்.) (முன்பு), அரு முனி ஆதி - (உலகத்தில்) அருமையான முனிவர்களுக்கு முதல்வனான, வதிட்டன்உம்- வசிட்டனும், மன் குலம் ஆதிஉம்- க்ஷத்திரியசாதியில்தோன்றிய சிறந்தவனான விசுவாமித்திரமகாமுனிவனும், அந்தணன் ஆம் பெரு முனிதான் உம்-பிராமணசாதியனான சிறந்த முனிவனாகிய பரசுராமனும், உடற்றிய - பெருங்கோபங்கொண்டுசெய்த, போர்-யுத்தம்போன்ற யுத்தத்தை, பின்- பின்பு, பொருதார் - செய்தவர், சிலர் உளர் ஓ - சிலபேராயினும் இருக்கின்றனரோ? [எவருமில்லை என்றபடி] ஒரு முனி - ஒப்பற்ற அகஸ்தியமகாமுனிவனொருவன், ஏழ்கடல் உம் - ஏழுசமுத்திரத்தையும், கரம் ஒன்றில் ஒடுக்கினன் - (தனது வலிமையால்) ஒருகையிலொடுங்கச்செய்தான்: (இப்பொழுது), மன்னனை - இராசனான திட்டத்துய்மனை, மேல் வரு முனி - எதிர்த்துவந்த முனிவனான துரோணன், வென்றனன் - சயித்தான்; (ஆதலால்), முனிவருடன் பொர வல்லவர் - முனிவர்களோடு போர்செய்யவல்லவர், புவிமேல் யார் - பூலோகத்தில் யாவர்உள்ளார்?*

*'திட்டத்துய்மனை முனி வென்றனன்' என்ற சிறப்புப் பொருளை (வேறுசில திருஷ்டாந்தங்களுங் காட்டி) 'முனிவருடன் பொரவல்லவர் யார் புவிமேல்' என்ற பொதுப்பொருளால் விளக்கியதனால்,* ***வேற்றுப்பொருள்வைப்பணி.*** *ஏழ்கடல்- உவர்நீர், கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின்மயமானவை.*

*அறிவு ஒழுக்கங்களில் ஒப்புயர்வின்மையை உணர்த்துதற்கு 'அருமுனி' என்றும்,* ***வசிஷ்டன்*** *பிரமனது குமாரனாய்ப் படைப்பின் தொடக்கத்தில் மற்றைமுனிவர்களுக்கு முந்தித் தோன்றியதனால்*

*'முனியாதி வதிட்டன்' என்றும், விசுவாமித்திரன் க்ஷத்திரியசாதியில் காதியென்னும் ராசருஷிக்குக் குமாரனாய்த் தோன்றினவனாயினும் தனதுஉத்பத்திக்குக் காரணமான சருவின் [சரு - ஒருவகைச் சோறு] பேதத்தால் பிராமணத்தன்மையைப் பெற்றுப் பின்பு பலகாலம் பெருந்தவம் புரிந்து பிரமவிருடியானதனால் அவனையும் முனிவர்களுட் சேர்த்துங் கூறினார்.*

*குசனென்னுஞ் சந்திரகுலத்து அரசனது குமாரனான காதியின் புத்திரியும் கௌசிகியென்னும் மறுபெயருடையவளுமாகிய சத்தியவதியை மணஞ்செய்து கொண்ட ருசீகனென்னும்முனிவன், அந்தத் தன் மனைவிக்கும் அவள் தாய்க்கும் அவரவர் சாதிக்கு ஏற்ற சிறந்த புத்திரசந்தாந முண்டாம்படி பிரமமந்திரத்தாலும் அரசமந்திரத்தாலும் இரண்டுசருக்களை யமைத்துக் கொடுத்தான்: அவற்றில், பிரமசருவைத் தாயும், அரசர்சருவை மகளுமாக அவர்கள் மாற்றி யுண்டு, அதற்கேற்றபடி கருக்கொண்டனர்; அதனை அப்பொழுது அவரவருடம்பினொளியால் அறிந்த ருசீகன், தன்*

*மனைவியைநோக்கி 'சருவை மாற்றி யுண்டகாரணத்தால், நீ கோபகுணமுள்ள பராக்கிரமசாலியான புத்திரனைப் பெற, உன் தாய் சாந்தகுணமடையும் புதல்வனைப் பெறுவள்' என்று கூற, அது கேட்டு வருந்திய சத்தியவதி கணவனைமிகப்பிரார்த்தித்து 'என் மகன் அங்ஙனமாகாதபடி அருள் செய்யவேண்டும்' என்று வேண்ட, முனிவன், அத்தன்மை புத்திரனுக்கு இலதாகவும் பௌத்திரனுக்கு உளதாகவும் அருள் செய்தனன்: ஆதலால் காதிமைந்தனான விசுவாமித்திரன் தவஞ் செய்தலாகிய அந்தணவொழுக்கத்தையும், ருசீகனதுமகனான ஜம்தக்நியின் குமாரனாகிய பரசுராமன் சினந்து போர்செய்யும் அரசவொழுக்கத்தையும் பூண்டன ரென வரலாறுகாண்க. இத்தன்மைகள், 'மனகுலவாதியும் அந்தணனாம் பெருமுனிதானும்' என்றவற்றாற் குறிப்பிக்கப் பட்டன.*

***விசுவாமித்திரன்*** *: பலவரசர்களைப் போரில் வென்றதன்றி, வேட்டைக்குச் சென்றபொழுது தனக்கும் தனதுசேனைக்கும் காமதேனுவைக் கொண்டு விசேஷமாக விருந்திட்டு உபசரித்த வசிட்டனுடன் அத்தெய்வப்பசுவைக் கவர்ந்துபோதற் பொருட்டாகப் பெரும்போர் செய்தவாறும். அப்போரில் வசிஷ்டன் தன்கைப்பிரமதண்டத்தை 'நீ எதிர்ப்பாய்' என்ற ஏவி விசுவாமித்திரன் விட்ட ஆயுதங்களை யெல்லாம் விழுங்குவித்து மற்றும் அவன் பிரயோகித்த பாசுபதாஸ் திரத்தைத் தான் விழுங்கி அவனைப் பங்கப்படுத்தினவாறும், உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையாற் கொழுத்துத்திரிந்து கொடுமையியற்றி வந்த க்ஷத்திரியவம்சங்கள் பலவற்றைப் பற்றறநாசஞ் செய்யும் பொருட்டு நாராயணாமிசமாய் அவதரித்த பரசுராமன், தனது தந்தையின் ஓமதேனுவைக்கவர்ந்து அவனைக்கொன்றிட்டதுகாரணமாக, (திக்குவிசயஞ்செய்த இராவணனைச் சிறையிலிட்ட) கார்த்த வீரியார்ச்சுனனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அழித்து, அக்காரணத்தாலேயே க்ஷத்திரியவம்சம் முழுவதன் மேலுங் கோபா வேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டவாறும், பிரசித்தம்.*

***அகத்தியன் கடலைக் கரத்திலொடுக்கிய கதை:-*** *இந்திரன் முதலிய தேவர்கள்,தம்பகைவனாகிய விருத்திராசுரன் மற்றும்பல அசுரர்களுடனே கடலில் ஒளித்துக்கொண்டபோது, அகத்தியமகா முனிவனை வந்து பிரார்த்திக்க, அம்முனிவரன், அக்கடலின் நீரைத் தனது ஒருகையால் முற்றும் முகந்துபருகியருளி, உடனே ஒளித்திருந்த அவ்வசுரரை இந்திரன் கொன்றபின், அவர்வேண்டுகோளின் படி மீண்டும் உமிழ்ந்தன னென்பதாம். (152)*

*15.- இருதிறத்துச் சேனையோரும் துரோணன்திறலைப் புகழ்தல்.*

***வந்தெதிர்முட்டுதலுந்தனதேரினைமாறுபடத்திருகிச்***
***சிந்தையுமானமும்வீரமும்விட்டொருசெயலறவென்னிடலுந்***
***தந்திரநாதனுடைந்தனனென்றிருதானையின்மன்னவரும்***
***அந்தணனாண்மையும்வன்மையும்வின்மையுமன்றுதுதித்தனரே.***

*(இ-ள்.) வந்து எதிர் முட்டுதலும் - (துரோணன்) வந்து எதிரில் தாக்கியவளவில், (திட்டத்துய்மன்), தனதேரினை மாறுபட திருகி - தன்னுடைய தேரைப் பின்னாகத் திருப்பிக்கொண்டு, சிந்தை உம் மானம்உம் வீரம்உம் விட்டு - எண்ணத்தையும் மானத்தையும் பராக்கிரமத்தையும் இழந்து, ஒரு செயல் அற - செய்யுந்தொழிலொன்று மில்லாமல், வென் இடலும் - புறங்கொடுத்தவளவிலே,- தந்திரநாதன் உடைந்தனன் என்று - (பாண்டவர்) படைத்தலைவன் தோற்றா னென்றுஅறிந்து, இரு தானையின் மன்னவர்உம் - இரண்டு சேனையின் அரசர்களும்,அன்று - அப்பொழுது, அந்தணன் - முனிவனான துரோணனது, ஆண்மைஉம் -பராக்கிரமத்தையும், வன்மை உம் - வலிமையையும், வின்மைஉம் - வில்தொழில்திறத்தையும் துதித்தனர் - புகழ்ந்து கொண்டாடினார்கள்; (எ-று.)- 'தனதேர்' - இங்கு வருமொழி ஒருமையாயிருக்கும் பொழுது 'அ' உருபு வந்தது.*
*(153)*

*16.- தருமபுத்திரன் திருஷ்டத்யும்நனைத் தழுவி முகமன்கூறுதல்.*

***வேதியன்விட்டசரங்களினொந்துவெரீஇவருமன்னவனைத்***
***தாதவிழ்பொற்றொடைமார்பிலணைத்துயர்தருமனுரைத்தருள்வான்***

***நீதவறிற்பினையார்நிலைநிற்பவர்நிருபர்சிகாமணியே***
***மோதியிளைத்தனையாறுகெனப்பலமுகமன்மொழிந்தனனே.***

*(இ-ள்.)* வேதியன் விட்ட சரங்களின் - துரோணன் எய்த அம்புகளால், நொந்து - வருந்தி, வெரீஇ வரும் - அஞ்சி ஓடிவருகிற, மன்னவனை - திட்டத்துய்மனை,- உயர் தருமன் - சிறந்த யுதிட்டிரன், தாது அவிழ் பொன் தொடைமார்பில் அணைத்து - பூந்தாதுகள் சிந்துகிற அழகிய மாலையைத் தரித்த மார்பிலேபொருந்தத் தழுவிக் கொண்டு, உரைத்தருள்வான்-கருணையோடு தைரியங் கூறுபவனாய்,- 'நிருபர் சிகாமணியே - அரசர்களுக்குத் தலைமேலணியும் இரத்தினம்போன்றவனே! நீ தவறின் - (துரோணனுக்குமுன்) நீயே பின்னிட்டால், பிணை யார் நிலைநிற்பவர் - வேறுயாவர் உறுதியாய் நிற்க வல்லார்? மோதி இளைத்தனை - போர்செய்து சோர்ந்தாய், ஆறுக - (அவ்விளைப்புத்) தணிவாயாக,' என - என்று, பல முகமன் மொழிந்தனன் - அநேக உபசார வார்த்தைகளைக் கூறினான் (எ -று.)

தாது - மகரந்தப்பொடி, நீ தவறின் - உன்னைவிட்டாலென்றுமாம். பின்னை - என்பது,வேறு என்றும் பொருளில் வந்தது. நிருபர்சிகாமணி-அரசர்கள் தலைமேல்வைத்துக்கொண்டாடத்தக்கவனென்றபடி. *(154)*

*17.-இதுமுதல்மூன்றுகவிகள்-ஒருதொடர்: 'நீசக்கரவியூகத்தைப்பிளந்து வெல்க' என்று அபிமனைத் தருமன்தழுவி விடைகொடுத்தனுப்பியமை கூறும்.*

***தன்னெதிர்மாமயிலோனெனநின்றதனஞ்சயன்மாமகவைப்***
***பொன்னெதிர்பேரொளியருள்வடிவாகியபூபதிவருதியென***
***நின்னெதிர்போரினினிற்பவர்வேறிலர்நேமிவியூகமுநீ***
***முன்னெதிராவமர்புரிபொழுதன்றிமுரண்குலையாதினியே.***

*(இ - ள்.)* (பின்பு), பொன் எதிர் - பொன்னையொத்த, பேர்ஒளி-மிக்க உடம்பினொளியையுடைய, அருள் வடிவு ஆகிய-கருணையின் வடிவமான, பூபதி - தருமராசன்,-தன் எதிர்-தனது எதிரில், மா மயிலோன் என நின்ற - சிறந்த மயிலைக்(கொடியும் வாகனமுமாக) உடைய முருகக் கடவுள்போல நின்ற, தனஞ்சயன் மா மகவை - அருச்சுனனது சிறந்த புத்திரனான அபிமனை, வருதி எனா - வா வென்று அழைத்து, 'நின் எதிர்-உனது எதிரில், போரினில் நிற்பவர் - யுத்தத்தில் நிற்கவல்லவர், வேறு இலர் -எவரு மில்லை; இனி-, நீ-, முன் எதிரா- முன்னே எதிர்த்துச்சென்ற அமர் புரி பொழுது அன்றி- போர் செய்யும்பொழுதில்லாமல், நேமி வியூகம் உம் - சக்கரவியூகமும், முரண் குலையாது - வலிமை யழியாது;' (எ - று.)-இப்பாட்டில், 'என' என்ற வினையெச்சம், மேல் பத்தொன்பதாம்பாட்டில் வருகிற "புல்லுக வென்றனன்" என்பதிலுள்ள 'என்றனன்' என்ற முற்றோடு முடியும்; இப்பாட்டின் பின் இரண்டடிமுதல் 19-ஆம் பாட்டில் "புல்லுக" என்பதுவரை - தருமன் அபிமனை நோக்கிக் கூறிய வார்த்தைகள்.

முருகன் - அபிமனுக்கு, இளமை அழகு பலம் பகைவெல்லும் பராக்கிரமம் சிவபிரான்ருள்பெற்றமை இவற்றில்உவமை. தருமன் செந்நிறமுள்ளவ னாதலால், 'பொன்னெதிர்பேரொளி' எனப்பட்டது; இனி, இத்தொடருக்கு- பிருகஸ்பதிபதியையோத்த சிறந்த ஞானமுடைய என்றும் பொருள் கொள்ளலாம். கருணைநிரம்பியவனென்றும், அக்குருணையின் அமைதி இவனது தோற்றங் கண்டமாத்திரத்திலே விளங்கு மென்றுங் கூறுவார், 'அருள்வடிவாகிய' என்றார். *(155)*

***18. என்னையழைத்துடனென்னலுடன்றுவென்னிட்டவில்லா***
***சிரியன்,***
***மன்னைவளைத்தொருசக்கரயூகம்வகுத்தெதிர் நின்றனனா,***
***னின்னையளித்ததராபதிதன்னையுநின்னையுமேமொழியப்,***
***பின்னையெடுத்தவிலோடெதிர்சென்றுபிளந்திடவல்லவர்யார்.***

*(இ-ள்.) 'நென்னல் - நேற்று, என்னை-, அழைத்து- (போருக்குக்) கூப்பிட்டு, உடன் -என்னுடனே, உடன்று-போர்செய்து, வென் இட்ட - புறங்கொடுத்த, வில் ஆசிரியன்- வில்லில்வல்ல துரோணாசாரியன், அக்கறுவையுட்கொண்டு இன்றைக்கு), மன்னை வளைத்து - (தன்சேனை) அரசர்களைச் சூழநிறுத்தி, ஒரு சக்கரயூகம்*

*வகுத்து-ஒப்பற்ற சக்கர வியூகமாக அணிவகுத்து, எதிர் நின்றனன்- எதிரில் (போருக்கு) நின்றான்; நின்னை அளிந்த - உன்னைப் பெற்ற, தராபதிதன்னைஉம் - அருச்சுனராசனையும், நின்னைஉம்ஏ- உன்னையும் ஆக உங்களிரண்டுபேரையும், ஒழிய-தவிர, எடுத்து விலோடு- ஏந்திய வில்லுடனே, எதிர் சென்று-எதிரிற் போய், பிளந்திடவல்லவர் - (அந்தவியூகத்தை) சிதைத்திடவல்லவர், பின்னை யார்- வேறு யாவர் உளர்? (எ - று.)*

*'அபிமந்யு அருச்சுனன் கிருஷ்ணன் (கிருஷ்ணனது குமாரனான) பிரத்யும்நன்இந்நால்வரு மொழிய வேறு ஐந்தாமவனொருவன் பதும வியூகத்தைப் பிளக்கவல்லானல்லன்' என்று வியாசபாரதங் கூறுகிறது. உடல் - விரைவில் என்றுமாம்: இதனை 'வென்னிட்ட' என்றதனோடு கூட்டலுமாம். ஆல் - சுற்றுலா.*
***பி-ம்:-*** *என்னை வளைத்திட. (156)*

***19.- புல்லுக வென்றனன் மார்புற வன்பொடு புல்லியி மைப்***
***பொழுதிற்,***
***செல்லுக வென்றனன் வன்சம ரத்திடை சென்றுமிகப்***
***பகையைக்.***
***கொல்லுக வென்றனன் னின்புய மேவரு கொற்றவை***
***தன்னருளால்,***
***வெல்லுக வென்றன னன்றுது ரோணனை வென்ற***
***பெருந்தகையே.***

*(இ-ள்.) 'புல்லுக - (என்னை வந்து) தழுவுவாயாக,' என்றனன்-என்று சொல்லி,- அன்று துரோணனை வென்ற பெருந்தகை- முந்தின நாளில் துரோணனைச் சயித்த பெருமைக்குணமுடைய தருமன், மார்பு உற அன்பொடு புல்லி - (அபிமனை) மார்பிலே பொருந்தப் பிரீதியோடு அனைத்துக்கொண்டு, இமை பொழுதில் செல்லுக என்றனன் - 'மிகவிரைவில் செல்லுவாயாக' என்றுங் கூறினவனாய், 'வன் சமரத்திடை சென்று-கொடியபோரிற்போய், பகையை மிக கொல்லுக - பகைவர்களை மிகுதியாகக் கொல்லுவாயாக,' என்றனன்-என்றுங்கூறி. 'நின்புயம்-உனது தோள்களில், மேவரு- பொருந்திய, கொற்றவைதன் - துர்க்காதேவியின், அருளால்-, வெல்லுக- (பகை) வெல்வாயாக,' என்றனன் - என்றுங் கூறினான்: (எ - று.)*

*போருக்கு உரிய தேவதை துர்க்கையாதலாலும், அவளருளே வெற்றிக்குக் காரண மாதலாலும், 'கொற்றவைதன்னருளால் வெல்லுக' என்றான். வீரம் தோளின்திறமையா லுண்டாதலால், வீர மகளாகிய அவனைத் தோளின் மேல் தங்குகிறவளாகக் கூறுதல் கவிசமயம். 'கொற்றவை' என்னும் பெயருக்கு - வெற்றியைத் தருபவ ளென்று காரணப்பொருள் கூறலாம். (157)*

வேறு.

***20.-மூன்றுகவிகள் - அபிமன் யுத்தசன்னத்தனாய்ச் சென்றமை கூறும்.***

***மூத்த தாதைதன் னேவ லிற்கழன் முளரி கைதொழு துரனுறச்***
***சேர்த்த நாணுடை வில்லன் வெய்யதெ ரிந்த வாளியன்***
***முதுகுறக்***
***கோத்த தூணியன் வாண்மு தற்பல கொற்ற முற்றிய***
***படையினன்***
***பார்த்தன் மாமக னிரத மீதுயர் பரிதி யாமென வேறினான்.***

*(இ-ள்.) பார்த்தன் மா மகன்-அருச்சுனனது சிறந்த புத்திரனான அபிமன், மூத்ததாதைதன் ஏவலின்-(தனது) பெரிய தந்தையான தருமனது கட்டளைக்கு இணங்கி, கடில் முளரி கை தொழுது-(அவனது) தாமரை மலர்போன்ற பாதங்களைக் கைகூப்பிவணங்கி, உரன் உற சேர்த்த-வலிமை பொருந்தக்கட்டிய, நாண் உடை - நாணியையுடைய, வில்லன் - வில்லை யுடையவனும், தெரிந்த-ஆராய்ந்தெடுத்த, வெய்ய வாளியன் - கொடியஅம்புகளை யுடையவனும், முதுகு உற கோத்த- (தனது) முதுகிற் பொருந்த மாட்டிய, தூணியன் - அம்பறாத்தூணியை யுடையவனும், வாள் முதல் - வாள் முதலான, பல-அநேகமான, கொற்றம் முற்றிய - வெற்றி மிக்க, படையினன் - ஆயுதங்களை யுடையவனுமாய், இரதம் மீது - (தனது) தேரின்மேல், உயர்பரிதி ஆம் என - சிறந்த சூரியன்போல, ஏறினான்-(எ - று.)*

*கழல் முளரி - முன்பின்னாகத் தொக்க உவமத்தொகை: தொடர்ச்சி தோன்றக் கூறாமையின் உருவகமாக்கி யுரைத்தற்கு இங்கே இயைபு இன்று முளரி - முட்களையுடைய அரியை [அரையை] யுடையது எனவேற்றுமைத்தொகையன் மொழியாகிய காரணப்பெயர் சூரியனுவமை - விரைந்தோடுஞ் சிறந்த தேர்மீது ஏறுதற்கும், விளக்கத்துக்கும், பகையிருளொழித்தற்குமாம்.*

*இதுமுதற் பத்தொன்பது கவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள்மாச்சீர்களும், மற்றையான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட **எழுசீராசிரியவிருத்தங்கள்.***

***21. வீரவார்கழல்கழலின்மீதுவிளங்கமார்பினில்வெண்ணிலா***
***வாரமாலைதுலங்கமாசுணவலயம்வாகுவிலழகெழச்***
***சேரவானமதிருளகற்றுமிரண்டுசெஞ்சுடரென்னவெ***
***சாரமாமணிகுண்டலங்கள்வயங்கமௌலிதயங்கவே.***

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ-ள்.) வீரம் - பராக்கிரமத்துக்கு அறிகுறியான, வார்-நீண்ட, கழல் - கழலென்னும் அணி, கழலின்மீது - பாதத்தின் மேல், விளங்க- பிரகாசிக்கவும், மார்பினில்-, வெள் நிலா வெண்ணிறமான 'சந்திரகாந்திபோன்ற ஒளியை வீசுகிற, ஆரம் மாலை - முத்துமாலை, துலங்க - அசைந்துவிளங்கவும், மாசுணம் வலயம் - பாம்பின்வடிவந்தோன்றத் தொழில்செய்யப்பட்டுள்ள வளை, வாகுவில்-தோள்களில், அழகு ஏழ - அழகோடுவிளங்கவும், வானம் அது -ஆகாயத்தில், சேர-ஒருசேர, இருள் அகற்றும்- இருட்டைப் போக்குகிற, இரண்டு செம் சுடர் என்ன - இரண்டு சிவந்த சூரியர்கள் (இருந்தாற்) போல, சாரம் மா மணி குண்டலங்கள்-சிறந்த பெரிய இரத்தினம்பதித்த குண்டல்மென்னும் காதணிகள், வயங்க - விளங்கவும், மௌலி,-கிரீடம், தயங்க - பிரகாசிக்கவும்,- (எ-று.)- "தேர் செலுத்தினான்"(22) எனமுடியும்.*

*மூன்றாமடி - **இல்பொருளுவமை.** வானமது, அது - பகுதிப் பொருள்விகுதி, செஞ்சுடர் என்பதை - அடையடுத்த பண்பாகு பெயரென்றாவது, பண்புத்தொகையன்மொழி யென்றாவதுகொள்க*

*சாரம் ஆம் அணி யென்று பதம்பிரித்துப் பொருள் கொள்ளலாம். விளங்க, துலங்க, ஏழ வயங்க, தயங்க என ஒரு பொருள் குறித்த பலசொற்கள் வந்தது - **பொருட்பின்வருநிலையணி.***

***22. இனஞ்செய் கேண்மைகொடு ருபதேயனு மெண்ணில்***
***கோடிமகீபருங்***
***கனஞ்செய்தூரியமெழவெகுண்டெறிகாலெனும்***
***படிகைவரத்.***
***தினஞ்செய்நாதனடாவுதேர் நிகர்தேர் விரைந்து***
***செலுத்தினான்.***

***றனஞ்சயன்றலைநாண் முயன்றதவம்பலித்தன தன்
மையான்.***

*(இ-ள்.)* தனஞ்சயன் - அருச்சுனன், தலைநாள் - முற்காலத்தில் [பூர்வசந்மத்தில்], முயன்ற - ஊக்கத்தோடு செய்த, தவம்-, பலித்து அன- (இங்ஙனம்) பயன்பட்டாற் போன்ற, தன்மையான் - சிறந்ததன்மையையுடைய குமாரனான அபிமன்,-இனம் செய் உறவாகச் செய்கிற, கேண்மை - சினேக குணத்தை, கொள் - கொண்ட, துருபதேயன்உம்-துருபதபுத்திரனான திட்டத்துய்மனும், எண் இல் கோடி மகீபர்உம்- அளவிறந்த கோடிக்கணக்கான அரசர்களும், கனம் செய் தூரியம் எழ- பெருமைசெய்கிற வாத்தியங்கள் முழங்க, வெகுண்டு எறி கால் எனும்படி - கோபித்து வீசுகிற பெருங்காற்றென்று (உவமை) சொல்லும்படி, கை வர - பக்கங்களில் (உதவியாய்) வர,-தினம் செய் நாதன் நடாவு தேர் நிலர் தேர்-நாளை யுண்டாக்குகிற தலைவனான சூரியன் செலுத்துகிற தேவர் யொத்த (தன்) தேரை, விரைந்து செலுத்தினான் - துரிதமாகச் செலுத்தி வந்தான்: (எ - று.)

சூரியன்தேர் - ஓய்வின்றி விரைந்து செல்லுதற்கு உவமம், தவஞ்செய்திருந்தாலன்றி இப்படிப்பட்ட அருமையான உத்தம புத்திரனைப் பெறுதல் கூடாதென்பார், 'தவப்பயனன்ன தன்மையான்' என்றார்; "மகன்றந்தைக்குஆற்று முதவியிவன்றந்தை, யென்னோற்றான் கொல்மெலனுஞ்சொல்" என்றது காண்க: ஒழுக்கங்களிலும், பலபராக்கிரமங்களிலும் மிகச்சிறந்தவனென்க. நட்பு மிக்க அன்பை விளைத்துச் சுற்றத்தார்க்குஉரிய உரிமையை உண்டாக்குதலால், 'இனஞ்செய்கேண்மை' எனப்பட்டது. கனம்செய் தூரியம் - மேகவொலியைச்செய்கிற தூரியமுமாம்: அவை, முரசம் முதலியன.*(160)*

### *23.-அபிமன் அம்புகளைச் சக்கரவியூகத்துள்ள வீரரின்மீது ஏவுதல்.*

**ஓதைகொண்டணிநின்றசக்கரயூகமன்னருரந்தொறுங்
கோதைதங்குகரத்தில்வில்லுதைகூரவாளிகுளிக்கவே
சீதைகொண்கனுமேவலாருயிர்தென்புலத்திடுதன்பெருந்
தாதையுந்தரமெனவிமைப்பிடைதாவுதேரினனேவினான்.**

*(இ-ள்.)* தாவு தேரினன்-தாவிச்செல்லுந் தேரையுடைய அபிமன்,-ஓதை கொண்டு-ஆரவாரத்தைச் செய்துகொண்டு, சக்கர யூகம்-சக்கரயூகத்திலே, அணி நின்ற- ஒழுங்காய் நின்ற, மன்னர் பகையரசரின், உரம்தொறுஉம்-மார்பிலெல்லாம்,- கோதைதங்கு- நாணி பூட்டிய, கரத்தில் வில்-(தன்) கைவில்லினால், உதை- தள்ளப்படுகிற, கூரவாளி - கூர்மையுள்ள அம்புகள், குளிக்க- மூழ்கும்படியும்,- சீதை கொண்கன்உம் -சீதையின் கணவனான

இராமபிரானும், மேவலார் உயிர் தென் புலத்து இடு - பகைவர்களின் உயிரைத் தெற்குத்திக்கில் [யமலோகத்தில்] செலுத்துகிற, தன் பெரு தாதைஉம் - தனது சிறந்ததந்தையான அருச்சுனனும், தரம் என-(தனக்கு) ஒப்பென்று சொல்லுமாறு,- இமைப்பிடை - கணப்பொழுதிலே, ஏவினான் - பாணப்பிரயோகஞ்செய்தான்: (எ- று.)

கோதை தங்கு கரம் - உடும்புத்தோலாலாகிய முன்னங்கைச் சட்டைதங்கிய கரமுமாம்: கோதா - வடசொல். சீதை - ஸீதா என்னும் வடசொல்லின் திரிபு: இதற்கு- கலப்பையுழுசாலென்று முதலிற் பொருள்: சனகமகாராசான் கேள்விக்காகச்சாலையுழுதபோது, பிராட்டி பூமிதேவியின்மகளாய்க் கலப்பையுழுபடைச் சாலிற் காணப்பட்டதனால், சீதையென்று திருநாமம்; இது - இடவாகுபெயரின்பாற்படும். *(161)*

### *24.- அபிமனம்பினால் சக்கரவியூகத்துஅணி சிதறுதல்.*

**அச்சுதப்பெயர்மாதுலன்புகலரியமந்திரமன்பினோ
டுச்சரித்தொருநொடியினிற்பலகோடிபாணமுடற்றினான்**

***எச்சிரத்தையுமெப்புயத்தையுமிடைதுணித்தலினடையமுன்***
***வச்சிரத்தவனுரைசெய்சக்கரமாறிலாவணிபாறவே.***

*இதுவும், மேற்கவியும் - குளகம்.*

*(இ-ள்.) அச்சுதன் பெயர் மாதுலன் புகல்-அச்சுதனென்னும் ஒரு திருநாமத்தையுடைய (தன்) மாமனான கண்ணபிரான் (தனக்கு) உபதேசித்துள்ள, அரிய மந்திரம் - அருமையானதொரு மந்திரத்தை, அன்பினோடு உச்சரித்து - பக்தியோடு சொல்லி, ஒரு நொடியினில் - ஒருமாத்திரைபொழுதிலே. பலகோடி பாணம்- அநேகங்கோடி அம்புகளை, உடற்றினான் - பெருங்கோபத்தோடு பிரயோகித்தான்;(அவைகள்), எ சிரத்தைஉம்-(பகைவரது) தலைகளெல்லாவற்றையும் எ- புயத்தையும்உம்-தோள்களெல்லாவற்றையும், இடைதுணித்தலின் - நடுவிலே துண்டித்தலால்,-வச்சிரத்தவன் முன் உரைசெய்-வச்சிராயுதமுடைய இந்திரன் முன்பு உபதேசித்துள்ள, சக்கரம் - சக்கரவியூகத்தினது, மாறு இலா அணி - ஒப்பில்லாத ஒழுங்கு, அடைய பாற-முழுவதுஞ் சிதைய,-(எ - று.) 'பற்றினான்' என அடுத்த கவியில் முடியும்.*

*முன்னிரண்டடியிற்குறித்தது, வைஷ்ணவாஸ்திரம். 'முன் வச்சிரத்தவனுரைசெய்சக்கரம் என்றதனால், சக்கரவியூகத்தின் உபதேசபரம்பரை இந்திரனிடத்தினின்று வந்ததென்று தெரிகிறது. 'என்பது, ஸ்ரீவாசுதேவன் பக்கல் பெற்றதோர் அஸ்திரத்திரத்தினையுச் சரித்து..................சக்கரயூகத்தைப் பிளந்து உள்புக்கு' என்றது, பெருந்தேவனார் பாரதம். மாதுலன் - மாதாவினுடன்பிறந்தவன். மாறு இலா - மாறுபடுதலில்லாத எனினுமாம் பாற உடற்றினானென முத்தகமுமாம். (162)*

### *25.-அபிமனைத் துரோணன் எதிர்த்துத்தோற்றல்.*

***மல்லலம்புயவபிமன்வெஞ்சரமழையனைத்தையுமாலெனப்***
***பல்லவெங்கணைகொடுவிலக்கிமுனைந்துவந்தெதிர்பற்றினான்***

***வெல்லவந்ததுரோணமாமுனிவிறலழிந்ததுகுருவெனுஞ்***
***சொல்லழிந்ததுவில்லழிந்ததுதேரழிந்ததுதொடைகளால்.***

*(இ-ள்.) மல்லல், - வலிமையையுடைய, அம்-அழகிய, புயம்- தோள்களையுடைய, அபிமன் - அபிமந்யுவினது, வெம் சரம் மழை அனைத்தைஉம்-கொடிய அம்புமழை முழுவதையும், (துரோணன்) மால் என-கண்ணபிரான் போல, பல்ல வெம் கணை கொடு விலக்கி-பலவாகிய கொடிய (தன்) அம்புகளைக்கொண்டு தடுத்து, முனைந்து வந்து-கோபித்து வந்து, எதிர் பற்றினான் - எதிரில் தகைந்தான்; தொடைகளால்- (அப்பொழுது அபிமனெய்த) அம்புகளால், வெல்ல வந்த துரோண மா முனி- சயிக்கவந்த துரோணசாரியனது, விறல்-பராக்கிரமம் - அழிந்தது-; குரு எனும் சொல்- ஆசிரியனென்னும் புகழ், அழிந்தது-; வில் அழிந்தது-; தேர் அழிந்தது-, (எ - று.)*

*இந்திரனது அம்புமழையை மலைகொண்டு தடுத்த க்ருஷ்ணனையொப்ப, 'மாலென'என்றார், பல்லம் வெம் கணைஎனப்பிரித்து- பல்லமாகிய வெவ்வியகணையெனினுமாம்.*
*(163)*

### *26.- பின்புஎதிர்த்த அசுவத்தாமன் அபிமன்கணையில் மூழ்குதல்.*

***தந்தைவென்னிடுமுன்னர்முப்புரதகனனேநிகர்மகன்மிகச்***
***சிந்தைகன்றிவெகுண்டுதேரொடுசென்றுகால்வளைசிலையினா***
***லுந்துகின்றசிலீமுகம்பலபகைமுகங்களிலுருவவே***
***முந்தினானவனப்புமாரியின்முழுகினானுடன்முற்றுமே.***

*(இ-ள்.) (இவ்வாறு யாவும் அழிந்து), தந்தை வென் இடு முன்னர் - (தனது) பிதாவான துரோணன் புறங்கொடுக்கு முன்னே, மு புரம் தகனன்ஏ நிகர் மகன் - திரிபுரசங்காரஞ்செய்திட்ட சிவபிரானையே போன்ற புத்திரனான அகவத்தாமன், வெகுண்டு-கோபித்து, சிந்தை மிக கன்றி - மனம் மிகவெதும்பி,*

*தேரொடு சென்று- (தன்) தேருடன்போய், கால் வளை சிலையினால் - கழுந்து வளைந்த (தன்) வில்லினால், உந்துகின்ற-பிரயோகிக்கிற, சிலீமுகம் பல - அநேகம் அம்புகளால், பகை முகங்களில்- பகைவர்களது முகங்களிலே, உருவ-துளைத்துச் செல்லும்படி, முந்தினான்-போரில் முற்பட்டு, (உடனே), அவன் அம்பு மாரியின் - அந்த அபிமனது அம்புமழையில், உடல் முற்றுஉம் முழுகினான் - (தனது) உடம்பு முழுவதும்மூழ்கப்பெற்றான்: (எ-று.)*

*சிவாநுக்கிரகத்தாற் பிறந்த குமார னாதலால், அவனுக்குச் சிவபிரானையே உவமைகூறினார். புரதஹநன் - வடமொழித்தொடர், 'கால்வளைசிலை' என்பதற்கு - பாதத்தால்' ஒருகோடியை அழுத்தி வளைக்கப்பட்ட வில்லென்றுமாம். 'முழுகினான்' என்ற வினைக்கு ஏற்ப, 'அப்புமாரி'என்பது - நீர்மழை யென்றும் பொருள்படும்; தொனி. அம்பு, அப் என்ற வடசெற்கள், நீரின்பெயராம். (164)*

### *27.-கன்னன் அபிமனையெதிர்த்துப் பின்னிடுதல்.*

***கன்னனென்றுல கெண்ணும்வீரனு மொய்ம்புடன்பலகணைகள்வான்,***
***மின்னொழுங்கொருகோடியென்னநிறுத்திமெய்யுறவீசி***

***னான்அன்னவன்பகழிக்குலங்களநேகமோகரமாகையா,***
***லென்னவெஞ்சமமினிநமக்கெனவேறுதேருடனேகினான்.***

*(இ-ள்.) (பின்பு), கன்னன் என்று உலகு எண்ணும் வீரன் உம்-கர்ணனென்று பெயர்பெற்று உலகத்தாரால் (கௌரவமாக) எண்ணப்படுகிற பராக்கிரமசாலியும் மொய்ம்புடன்-வலிமையோடு, பல கணைகள் - அநேக அம்புகளை, வான் மின் ஒழுங்கு ஒரு கோடி என்ன,-ஆகாயத்திற்காணப்படும் மின்னலின் வரிசைகள் மிகப்பல போல, நிறுத்தி-வில்லில் தொடுத்து, மெய்உற வீசினான்- (அபிமனது) உடம்பிற்படும்படிபிரயோகித்தான்; (ஆயினும்), அன்னவன் பகழி குலங்கள் அநேகம்மோகரம் ஆகையால் - அவ்வபிமனது அம்புக் கூட்டங்கள் மிக உக்கிரமாயிருத்தலால்,-இனி நமக்கு வெம் சமம் என்ன என - 'இனிமேல் நமக்கு (அவனோடு) கொடிய போர் செய்யும் ஆற்றல் யாது உள்ளது? என்று (கருதி), ஏறு தேருடன் ஏகினான் - (நான்) ஏறிவந்த தேரொடு பின் சென்றான்; (எ - று.)*

*ஒருகோடி - மிகப்பலவாகிய எண்ணிற்கு ஒன்று எடுத்துக் காட்டியவாறு. வில் முதலிய ஆயுதங்கள் அழிந்தமை தோன்ற, 'ஏறுதேருடன் ஏகினான் என்றார், வேறு எனப் பதம்பிரித்தல், மோனைத்தொடைக்குச் சிறவாது. (165)*

### *28. கிருபனும் கிருதவர்மனும் எதிர்த்து, அபிமனுடைய ஒருதொடுப்பிலே வெருவியோடுதல்.*

***கிருபமாமுனிதானுமேதககிருதவன்மனுமோர்புறத்***
***திருவாரண்மையுநிலைபெறும்படிசென்றுதூவினரேவினால்***
***ஒருவனேயிவனிவனெடுத்ததுமொருசராசனமம்பிலே***
***வெருவியோடினர்தங்களோரிருவில்லுமற்றுவெறுங்கையே,***

*(இ-ள்.) கிருபன் மா முனி தான்உம் - சிறந்த கிருபாசாரியனும், மேதகு கிருதவன் மன்உம்-மேன்மை பொருந்திய கிருதவர்மாவென்னும் யதுகுலத்தரசனும், ஓர் புறத்து-ஒரு பக்கத்தில், இருவர் ஆண்மை உம் நிலை பெறும்படி, சென்று- (எதிர்த்துச்) சென்று, ஏவினால் தூவினர்- அம்புகளால் பொழிந்தார்கள் - (அப்பொழுது), இவன் ஒருவன்ஏ - (எதிர்ப்பவன்) இவ்வபிமந்யு ஒருத்தனேதான்: இவன் எடுத்ததுஉம் ஒரு சராசனம் - இவன் (கையில்) ஏந்தினதும் ஒரு வில்தான்; (அங்ஙனம் இருந்தும்), அம்பிலே- (இவனது) அம்புகளாலே, (அவ்விரண்டு பேரும்), தங்கள் ஓர் இரு வில்உம் அற்று - தங்களது வில்லிரண்டும் அறுபட்டு, வெறு கை-ஆயுதமில்லாத கைகளையுடையவராய், வெருவி ஓடினர்-அஞ்சிஓடிப் போனார்கள்:(எ- று.) (166)*

*29.-அபிமனால் சகுனியின் மகன் முதலோர் இறந்துவிழ, மற்றையாவரும் நடுங்கி யோடுதல்.*

***சகுனியுந்திருமகனுமற்றுளதமருமேலிடுதானையோ டிகனெடுங்களம்வென்றுகொள்குவமென்றுவந்தெதிரணுகினார்***

***மகன்விழுந்தனன்மார்பின்மூழ்கியவாளியொன்றினின்மற்றுளார் மிகநடுங்கியொடுங்கியோடினர்வீழுமன்னர்கள்வீழவே.***

*(இ-ள்.) (அதன்பின்), சகுனியும்-, திருமகன்உம்- (அவனது) சிறந்த புத்திரனும். மற்று உள தமர்உம் மற்றுமுள்ள உறவினர்களும். மேல் இடு தானையோடு - மேலெழுந்துவருகிற சேனையுடனே, நெடு இகல் களம் வென்று கொள்குவம் என்று- 'பெரிய போர்களத்தில் (பகைவனைச்) சயித்துக் கைப்பற்றுவோம்' என்று கருதி, எதிர்வந்து அணுகினார்- எதிரில் வந்து நெருங்கினார்கள்; (உடனே அவர்களுள்), மகன் -சகுனிபுத்திரன், மார்பில் மூழ்கிய வாளி ஒன்றினில்- (தன்) மார்பில் முழுவதும்புதைந்தஓரம்பால், விழுந்தனன் - இறந்து கீழ்விழுந்தான்; வீழும் மன்னர்கள் வீழ - (போர்வெல்ல) விரும்பிவந்த அரசர்கள் இறந்துவிழ, மற்று உளார்- மற்றும் (இறவாது)உள்ளவர்கள், மிக நடுங்கி ஒடுங்கி ஓடினர்- (அச்சத்தால்) மிகநடுக்கமுற்று வலிமைகுன்றி ஓடிப்போனார்கள்:*

*சகுனிமகன் உலூகனென்றும், அவனைச் சகதேவன் கொன்றானென்றும் வியாசபாரதத்தால் தெரிகின்றது. மேலிடுதானை-சிறப்புப்பெற்ற சேனையெனினுமாம். 'மார்பில்மூழ்கிய வாளி ஒன்றினில் என்பதைப் பிந்தினவாக்கியத்துக்குங் கூட்டுக. வீழ்தல் என்பது - விரும்புதலாதலை "தாம் வீழ்வார்மென்றோள் துயில்" எனத் திருக்குறளிலுங் காண்க. இனி, 'வீழுமன்னர்கள் வீழ' என்பதற்கு - இறக்கும் அரசர்கள் தவிர என்றும் பொருள் கொள்ளலாம். (167)*

*30.-விகன்னன் முதலியோர் பொரவர, அபிமன் அவர்களை அவமதிப்புப்படச்சொல்லி விடுத்தல்.*

***வின்முகந்தெழுவாளிவாளிவிலக்கவந்தவிகன்னனுந் துன்முகன்றலையாகமற்றுள துணைவருஞ்சமர்துன்னினார் நன்முகம்பெறுவிசயன்மைந்தனுநானுமக்கெதிரன்றுநீர் பின்முகம்படவோடியின்றுயிர்பிழையுமென்றுரைபேசினான்.***

*(இ - ள்.) (அதன்பின்), வில் முகந்து எழு - வில்லினாற் கொள்ளப்பட்டு வெளிப்படுகிற, வாளி - (தன்) அம்புகள், வாளி விலக்க-(அபிமனது) அம்புகளைத் தடுக்கும்படி, வந்த-, விகன்னன்உம்- விகர்ணனென்பவனும் துன்முகன் தலை ஆக - துர்முகனென்பவன் முதலாக, மற்று உள துணைவர்உம் - இன்னுமுள்ள துரியோதனன் தம்பிமார்களும், சமர் துன்னினார்-போரில் நெருங்கினார்கள்; (நெருங்க), நல் முகம் பெறு - அழகிய முகத்தைப் பெற்ற விசயன்மைந்தன்உம்- அருச்சுனனது புத்திரனான அபிமனும், (அவர்களை நோக்கி), 'நான் உமக்கு எதிர் அன்று-நான் உங்களுக்குச் சமமானவனல்லன் [மிகமேம்பட்டவன்] நீர்-நீங்கள், பின் முகம் பட ஓடி- முகம்பிற்படும்படி [முதுகுகாட்டி] விரைந்து சென்று, இன்று- இப்பொழுது, உயிர் பிழையும்- சீவித்திடுங்கள்,' என்று-, கூரை பேசினான்-வார்த்தை சொன்னான்: (எ - று.)- நான் உமக்கு எதிர் அன்று, 'அன்று' என்னும் எதிர்மறைப் பொதுக்குறிப்புமுற்று-இங்கே தன்மையொருமைக்கு வந்தது. (168)*

*31.-மற்றுமுள்ள பலரும் அபிமனுக்குத் தோற்றேகுதல்.*

***மற்றுமற்றுமுனைந்துவந்துமலைந்தவெஞ்சினமன்னர்மெய்ம் முற்றுமுற்றுமிவன்கைவாளிகண்முனைபுதைந்திடமூழ்கலா***

***லிற்றவிற்றபடைக்கலங்களுமெய்த்தவெய்த்தபதாதியு***
***மற்றவற்றவிதங்கொள்வாகமுமாகியேகினரடையவே.***

*(இ-ள்.) மற்றும் மற்றும் - இன்னும் இன்னும், முனைந்த வந்து - உக்கிரங்கொண்டுவந்து, மலைந்தபோர்செய்த, வெம் சினம் மன்னர் - கொடிய கோபத்தையுடைய அரசர்கள், மெய் முற்றுஉம் முற்றுஉம் - (தங்கள்) உடம்பு முழுவதிலும் இடைவிடாமல், இவன் கை வாளிகள்-இவ்வபிமன் கையம்புகள், முனை புதைந்திட நுனியழுந்தும்படி, மூழ்கலால் - தைத்து ஊடுருவுதலால், இற்ற இற்ற படைக்கலங்கள்உம் - மிகத்துணிபட்ட ஆயுதங்களையும், எய்த்த எய்த்த பதாதிஉம் - மிகஇளைத்த காலாள்களையும், அற்ற அற்ற விதம் கொள் வாகம்உம் ஆகி-மிக அறுபட்ட யானை குதிரை தேர்என்ற இவற்றில் வகைகளையு முடையவர்களாய், அடைய ஏகினர்-எல்லோரும் ஓடிப்போனார்கள்; (எ-று.)*

*வாஹம் - தாங்குவதெனக்காரணப்பொருள்படும்.* ***பி - ம்:*** *விதங்களாகியும் (169)*

### *32.-அபிமன் தனியே சக்கரவியூகத்துள் இவ்வாறு கடும்போர்புரிய வீமன் தருமனிடத்து வருத்தத்தோடு கூறத்தொடங்குதல்.*

***இளையவன்றனிமதலைதெவ்வரிளைக்கவிப்படியிகல்செயத்***
***தளையவிழ்ந்தவலங்கன்மீளிசமீரணன்றிருமதலைபோய்***
***வளையவன்சிலைமன்னவன்கழன்மலர்வணங்கிவணங்கலா***
***ருளையவந்தமர்முடுகிநின்றமைகண்டுசோகமொடுரைசெய்தான்.***

*(இ-ள்.) இளையவன் தனி மதலை - தம்பியான அருச்சுனனுடைய ஒப்பற்ற புத்திரனான அபிமன், தெவ்வர் இளைக்க-பகைவர்கள் சோர்வடையும்படி, இ படி இகல் செய-இவ்வாறு போரைச் செய்ய,- தளை அவிழ்ந்த-(அரும்புகளின்) முறுக்கு விரிந்த. அலங்கல்-போர்மாலையைத் தரித்த, மீளி - சிறந்தவீரனாகிய, சமீரணன் திருமதலை-வாயுவினது சிறந்த புத்திரனான வீமன், வணங்கலார் - பகைவர்கள் பலர்,வளைய-(தன்னைச்) சூழ்ந்து கொள்ள, (சகாய மில்லாத அபிமனொருத்தனே), உளைய - (அவர்களெல்லோரும்) வருந்தும்படி, வந்து-(எதிர்த்துச்) சென்று, அமர் முடுகி நின்றமை- போரை உக்கிரமாகச் செய்துநின்றதன்மையை, கண்டு-,- சோகமொடு-(துணையில்லாத)அபிமனுக்குச் சோர்வுண்டாகுமே யென்ற) துன்பத்துடனே, போய்-(தருமனிடம்) சென்று, வல் சிலை மன்னவன் - வலிய வில்லினையுடைய அத்தருமராசனது. கழல் மலர்-தாமரை மலர்போன்ற திருவடிகளை, வணங்கி - நமஸ்கரித்து, உரைசெய்தான்-(சிலவார்த்தைகள்) சொல்பவனானான்: (எ - று.)-அவற்றை, அடுத்த கவிமுழுவதிலும். அதற்கடுத்தகவியின் முதலிலும் காண்க.*

*ஸமீரணன் என்ற வடசொல்லுக்கு - நன்றாகச் சஞ்சரிப்பவனென்று பொருள் 'வணங்கலார் உளைய வந்து அமர்முடுகிநின்*

*றமை' என்பதற்கு - பகைவர்கள்பலர் அபிமன் வருந்தும்படி வந்து போரைக் கொடுமையாகச்செய்து நின்ற தன்மையை யென்று உரைப்பாரு முளர். (170)*

### *33.-வீமன் தருமனை நோக்கிக்கூறுவது.*

**தோலநேகமநேகநேமிதுரங்கமங்களநேகநீள்**
**வேலநேகமநேகம்வாள்வரிவில்லநேகவிதம்படக்**
**காலநேகமெழுந்ததொத்தமராடுகின்றகளத்திடைப்**
**பாலனேகடிதேகிவெம்முனைபயிலுவானொருபாவமே.**

*இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.*

*(இ-ள்.)* 'தோல் அநேகம்-பல யானைகளும், அநேகம் நேமி - பல தேர்களும், துரங்கமங்கள் அநேகம் - பல குதிரைகளும், நீள் வேல் அநேகம் - நீண்ட பல வேல்களும், அநேகம் வாள்-பல வாள்களும், வரிவில் அநேக விதம்-கட்டமைந்த பலவகை விற்களும், பட - பொருந்த, கால் அநேகம் எழுந்தது ஒத்து-பலதிசைக் காற்றுக்களும் கிளர்ந்துவீசுவது போன்று, அமர் ஆடுகின்ற-போர்செய்கிற களத்திடை-யுத்தகளத்திலே, பாலன்ஏ - இளங்குமரனான அபிமனொருவனே, கடிதுஏகி-விரைவிற்சென்று, வெம்முனை பயிலுவான் - கொடியபோரைச் செய்து பொருந்துவான்: ஒரு பாவம்ஏ- (இங்ஙனம் அவனைத் தனியே பகைவர்சேனாசமூகத்தினிடையில் போருக்கு விட்டுப் பார்த்திருப்பது) ஒப்பற்ற பெரும்பாவமேயாம்: (எ-று.)

களிற்றுத்தானை தேர்த்தானை பரித்தானை வேற்றானை வாட்டானை விற்றானை என்ற அறுவகைச்சேனைகளும், இப்பாட்டின் முதலிரண்டடிகளிற் குறிக்கப்பட்டன. கால் அநேகம் - எட்டுத் திக்குகளினின்றும் விசும் பலவகைக்காற்றுகள்; இனி, சப்தமருத்துக்களுமாம். அவற்றின் பெயர் - ஆகவம், பிரவகம், சம்வகம், உத்வகம், விவகம், பரிவகம், பராவகம் என்பன: இவ்வெல்லாக்காற்றுக்களும் உகாந்தகாலத்தில் ஒருங்கு எழுந்து உலகையழிக்கும் நேமி- சக்கரம்; இது - சினையாகுபெயராய், தேரைக்குறித்தது, பட என்பதற்கு- அழியஎன்றும் உரைக்கலாம். பாலனே, ஏ - பிரிநிலை, பாவமே, ஏ - தேற்றம். *(171)*

*34.-தருமனிடம் விடைபெற்றுக்கொண்டு வீமன் அபிமனுக்குத் துணையாகும் பொருட்டுச் செல்லுதல்.*

**எனக்குநீவிடைநல்குகென்றவனிருபதந்தொழுதியாரினுந்**
**தனக்குநேர்தனையல்லதில்லெனவெல்லவல்லதொர்தண்டினான்**
**மனக்குநேர்வருதேரினன்பலமண்டலீகருமன்னருஞ்**
**சினக்குழாமுறுசேனையும்புடைசூழவன்றெதிர்செல்லவே.**

*(இ-ள்.)* 'எனக்கு-, நீ-, விடை நல்குக- (அபிமனுக்குத் துணைசென்று போர்செய்ய) அனுமதிகொடுப்பாயாக,' என்று- என்றுசொல்லி(த்தருமனைப் பிரார்த்தித்து), அவன் இரு பதம் தொழுது - அவனது உபயதிருவடியை வணங்கி, தனக்கு நேர்- தனக்குச் சமானம், தனை அல்லது - தன்னையேயன்றி, யாரின்உம்

இல்- (வேறு மனிதர் தேவர் முதலிய) யாவருள்ளும் இல்லை, என-என்று சொல்லும்படி, வெல்ல வல்லது ஓர் தண்டினான் பகைவரைச் சயிக்கவல்லமையையுடையதொரு (சத்துருகாதிநியென்னுங்) கதாயுதத்தையுடைய வீமன், மனக்கு நேர்வரு தேரினன்- (தன்) மனத்துக்கு ஒத்த தேரின்மேலேறினவனாய், பலமண்டலீகர்உம் - அநேக சிற்றரசர்களும், மன்னர்உம்-அரசர்களும், சினம் குழாம் உறு சேனைஉம் - கோபத்தையுடைய கூட்டமாகப்பொருந்திய சேனைகளும், புடைசூழ - பக்கங்களிற் சூழ்ந்துவரும்படி, அன்று - அப்பொழுது, எதிர்சொல்ல - எதிர்த்துச்செல்ல,- (எ - று.)-'சக்கரமண்டலம் ஈயை ஒத்தது'என அடுத்த கவியோடுமுடியும். தொழுதியாரினும் - குற்றயலிகரம். *(172)*

*35.-வீமன்செல்லச் சக்கரவியூகச்சேனை பொலிவிழந்து சிதறுதல்*

**சாயையொத்தெழுசேனையோடெதிர்தடவிமன்குலவடவியிற்**
**றீயையொத்துவிளங்குமாருதிசென்றுமண்டியதிசையெலா**
**மாயையொத்தொருவடிவுமின்றிவகுத்தசக்கரமண்டலம்**
**ஈயையொத்ததுகலுழனொத்தனனீறிலாவரியேறனான்.**

*(இ-ள்.)* மன் குலம் அடவியில் - பகையரசர்களது கூட்டமாகிய காட்டிலே, தீயைஒத்து-(அதனை யெரித்து அழிக்கும்) நெருப்பைப் போன்று, விளங்கும் - பிரகாசிக்கிற, மாருதி-வாயுபுத்திரனான வீமன்,-சாயை ஒத்து எழு சேனையோடு- நிழலையொத்து (விடாதுகூடப்புறப்பட்டு) வருகிறசேனையுடனே, எதிர் தடவி - எதிரிலே (வீரர்களைத்)தேடிக்கொண்டு, சென்று மண்டிய-போய்

நெருங்கின, திசை எலாம் - பக்கங்களிலெல்லாம். வகுத்த சக்கர மண்டலம்- (துரோணனாற்) பகுத்தமைக்கப்பட்டுள்ள சக்கரவியூகம், மாயை ஒத்து ஒரு வடிவுஉம் இன்றி-மாயையைப் போன்று ஒரு வடிவமுங் காணப்படாதபடி, ஈயை ஒத்தது - ஈக்கூட்டம்போலச் சிதறிற்று: (சிதற), ஈறு இலா அரி ஏறு அனான் - அழிவில்லாத ஆண்சிங்கத்தைப்போன்ற வீமன், கலுழன் ஒத்தனன் - கருடன்போன்று எதிரற்று விளங்கினான்; (எ - று.)

சிதறிய எதிரிகள் கூட்டத்துக்குப் பறவைகளுள் எளியதாகிய ஈயை உவமைகூறியதற்குஏற்ப, அவற்றைச் சிதறடித்த வீமனுக்குப் பறவைகளுள் வலியதாகிய கருடனைஉவமைக்கூறினார், 'ஈறிலா அரியேறு' என்றது, திருமாலின் திருவவதாரமானநரசிங்கமூர்த்தியையுமாகும், மாயை - உள்ளதை இல்லாததாகவும், இல்லாததைஉள்ளதாகவும், ஒன்றை மற்றொன்றாகவும் அற்புதங்காட்டும் மந்திரசக்தி. மண்டலம் -வட்டமாகத்திரண்ட படை. (173)

### 36. - கலிங்கர் முதலிய வீரர் வீமனோடு பொருதல்.

**கலிங்கர்சோனகர்மகதர்கன்னடர்கங்கர்கொங்கணர்கௌசலர்**
**தெலுங்கராரியர்துளுவர்பப்பரார்சீனர்சாவகர்சிங்களர்**
**குலிங்கர்மாளவர்களமரொட்டியாகுகுரர்கொப்பளர்கூபகர்**
**புலிங்கசாலமெனச்சதாகதிபுதல்வனோடுறுபோர்செய்தார்.**

(இ-ள்.) (அதுகண்டு), கலிங்கர் சோனகர் மகதர் கன்னடர் கங்கர் கொங்கணர் கௌசலர் தெலுங்கர் ஆரியர் துளுவர் பப்பரர்

சீனர் சாவகர் சிங்களர் குலிங்கர் மாளவர் களமர் ஒட்டியர் குகுரர் கொப்பளர் கூபகர்- இந்நாட்டுவீரர்கள், புலிங்க சாலம்என - தீப்பொறிகளின் கூட்டம்போல, சதாகதி புதல்வனோடு - வாயுபுத்திரனான வீமனுடன், உறு போர் செய்தார் - மிக்கபோரைச்செய்தார்கள்; (எ - று.)

போசம்என்பதுதவிரப் போசலமென்று ஒருதேசம் கூறப்படுதல்போல, கொப்ப மென்பது தவிரக் கொப்பளமென்பது ஒருநாடு போலும். இப்பாட்டில் முதல்மூன்று அடிகள் - அடைமொழியின்றிவந்தது ஒர் அழகாம். (174)

### 37.-வீமனுடன்வந்த பலமன்னர் சக்கரவியூகத்திலிருந்த வீரர்களை வெட்டுதல்.

**பொருதபற்பலபாடைமன்னவர்பொன்னிலங்குடிபுகுதவே**
**விருதவித்தகனுடன்வரும்பலபாடைமன்னவர்வெட்டினார்**
**ஒருதிறத்தவலீமுகங்களுறுக்கியோடியுடன்றநா**
**ணிருதர்பட்டதுபட்டிறந்தனர்நேமியுட்படுநிருபரே.**

(இ-ள்.) பொருத - (எதிர்த்துப்) போர்செய்த, பல்பலபாடை மன்னவர் - (துரியோதனன்சேனையிலுள்ள) பலபல பாஷைகளைப் பேசும் அரசர்கள், பொன் நிலம் குடிபுகுத- பொன்னுலகமான தேவலோகத்திலுள்ள வீரசுவர்க்கத்திற் குடியேறும்படி, - விருதன் வித்தகனுடன் வரும் பல பாடை மன்னவர் - வீரனும் அறிவுடையவனுமான வீமனுடன்வந்த அநேகபாஷைபேசும் (பலதேசத்து) அரசர்கள், வெட்டினார் - துணித்தார்கள்; (துணிக்கவே), நேமியுள்படும் நிருபர் - சக்கரவியூகத்திற் பொருந்திய (துரியோதனனைச் சார்ந்த) அரசர்கள்,- ஒரு திறந்த வலிமுகங்கள் உறுக்கி ஓடி உடன்ற நாள் - ஓரேவிதத் தன்மையுடையனவான (இராமனுடன் சென்ற) குரங்குகள் சினங்கொண்டு ஓடிப்போர் செய்த காலத்தில், நிருதர் பட்டது-அரக்கர்கள் அடைந்த துன்பத்தை, பட்டு-(தாம்) அடைந்து, இறந்தனர்-; (எ - று.)

*வலீமுகம் - வடசொல்: தோற்சுருக்கங்கொண்ட முகமுள்ளதென்று காரணப்பெயர்.* ***பி- ம்:*** *ஒருதலத்து. ஒருதிறத்து, வலீமுகங்கொடு, சிலீமுகங்கள். (175)*

### *38.-வீமன் தண்டுகொண்டு சக்கரவியூகத்தைப் பிளத்தலைத் துரியோதனன் காணுதல்.*

***மண்டு கொண்டலின் மிகவ திர்ந்தும ருத்தின்மைந்தனுருத்தெழுந்***
***தண்டு கொண்டுவி யூக மாகிய சக்க ரத்தையு டைத்தலால்***
***விண்டு கொண்டுமு ருக்கு மாருதி மீள வந்தன னாமெனக்***
***கண்டுகொண்டனன்வெஞ்சினக்கனனின்றுகாய்தருகண்ணினான்.***

*(இ-ள்.) மருத்தின் மைந்தன் - வாயுபுத்திரனான வீமன்,- மண்டு கொண்டலின்- நெருங்கிய காளமேகம்போல, மிக அதிர்ந்து, மிகுதியாக ஆரவாரித்து, உருத்து- கோபித்து, எழும் தண்டு கொண்டு - உயர்ந்த (தனது) கதாயுதத்தால், வியூகம் ஆகிய சக்கரத்தை உடைத்தலால் - சக்கரவியூகத்தை உடைத்ததனால், வெம்*

*சினம் கனல் நின்று காய்தரு கண்ணினான் - பொடிய கோபாக்கினி நிலைபெற்றுமூண்டெரிகிற கண்களையுடையவனான துரியோதனன்.- 'விண்டு கொண்டு முருக்கும் - மலைகளைப்பறித்தெடுத்து (அவற்றால் பகையை) அழிக்கிற, மாருதி - வாயுகுமாரனான அநுமான், மீள வந்தனன் ஆம் - திரும்பவும் (போருக்கு)வந்தான்போலும் என - என்று, கண்டுகொண்டனன் - அறிந்துகொண்டான்:(எ-று.)*

*கதைகொண்டு கொடுமையாகப்போர்செய்து பகையையழிக்கிற வலிமைமிக்க தம்பியான வீமனைக்கண்டு, மலைகொண்டு கொடுமையாகப் போர்செய்து பகையையழித்த வலிமைமிக்க தமையனான அநுமன் வந்திட்டானோ என்று துரியோதனன் கருதினான். முன்திரேதாயுகத்தில் இராமபிரானது தூண்டுதலால் அரக்கரை யழித்தற்கு வந்தமைபோல, துவாபரமாகிய இப்பொழுது கண்ணபிரானது தூண்டுதலால் அரசரையழித்தற்கு வந்தனனென்று கருதினானென்பது, 'மீள' என்றதனால் விளங்கும். விண்டு - விஷ்ணு என்னும் வடசொல்லின்சிதைவாய், வியாபித்ததெனப்பொருள்படும்; எனவே மலைக்காயிற்று. 'வெஞ்சினக்கனல்நின்றுகாய்தருகண்ணினான்' என்பது துரியோதனனாதலை, மேல் 41-ஆங் கவியில் 'புயங்ககேது' என வருவதனால் அறிக. வியூகமாகிய சக்கரம் - சக்கரவியூகம், (176)*

*வேறு.*

### *39. - வீமன் வருவதுகுறித்துத் தன்சேனையரசரைநோக்கித் துரியோதனன் கூறுதல்.*

***நபமுகின்மு ழங்கி யேறி யிடிவிட நடுநடுந டுங்கி மாயு மர***
***வென,***
***வுபரியெழு கின்ற சீயம் வரவர வுடையுமிப சங்க மோடு***
***வனவென,***
***வபிமனொரு வன்கை யேவி னமபடை யடையநெளி***
***கின்ற தாய பொழுதினில்,***
***விபினமிசை மண்டு தீயொ டனிலமும்விரவுமியல் பந்த***
***வீம னணுகிலே.***

*இது முதல் நான்குகவிகள் - குளகம்.*

*(இ-ள்.) - நபம் - ஆகாயத்திற்சஞ்சரிக்கிற, முகில் - மேகம், முழங்கி - ஆராவரித்து, ஏறி -மேல்நின்று, இடிவிட - இடியிடித்தலால், நடுநடுநடுங்கி - அளவில்லாத அச்சங்கொண்டு, மாயும்-இறக்கிற, அரவு என - பாம்புகள்போலவும்,- உபரி எழுகின்ற-மேலே பாயுந்தன்மையுள்ள, சீயம்-சிங்கம், வரவர - அடுத்தவருதலால், உடையும் - வலிமை குலைகிற, இப சங்கம் - யானைக்கூட்டங்கள், ஓடுவன என- ஓடுபவைபோலவும்,-அபிமன் ஒருவன் கை ஏவின் - அபிமந்யு ஒருத்தனது கையம்புகளால், நம படை அடைய - நம்முடைய சேனை முழுவதும், நெளிகின்றது ஆய-மிகவருந்துகிறதான, பொழுதில் - இச்சமயத்தில்,-அந்த வீமன் அணுகில் - அந்த வீமசேனனும் (அவனுக்குத் துணையாகநெருங்கிச்) சேர்ந்தால், (அது), விபினம்மிசை மண்டு தீயோடு - காட்டிற் பற்றியெரிகிற நெருப்புடனே, அனிலம்உம் விரவும் - காற்றுங் கலக்கிற, இயல்பு - தன்மையாம்; (எ - று.)*

*நபம் - வடசொல். நபமுகில் என்பதற்கு கார்காலத்துமேகமென்று பொருள்கொள்ளுதலும் பொருத்தம்; ஆவணிமாசத்தைக்*

*குறிக்கின்ற **'நபா;'** என்னும் வடசொல், நபம் எனச்சிதைந்து, இலக்கணையாய், கார்காலத்தை உணர்த்தும்; ஆவணிபுரட்டாசி மாதங்கள் வர்ஷாகால மாதலால், உபரி,இபஸங்கம், விபிநம் - வடசொற்கள். ஒருசிங்கத்தைக்கண்டு யானைகள் பலவும் வலிஅழிதல், பிரசித்தம். ஏவின் - ஐந்தாம்வேற்றுமை விரி: ஏ - முதல்வேற்றுமை.*

*இதுமுதல், பன்னிரண்டு கவிகள் - கீழ்ச்சருக்கத்தின் 45ஆங் கவிபோன்ற **எண்சீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தங்கள்.** 'தன தனன தந்த தான தனதனதனதனன தந்த தான தனதன' என்பது, இவற்றிற்குச் சந்தக்குழிப்பாதலால், இச்சந்தம்சிறிது வேறுபட்டது. (177)*

### *40.-துரியோதனன் தன்சேனையோரை நோக்கி வீமஅபிமன்னுக்களைப் பிரித்துப் பொருதாலே எளிதில்வெல்லலாமென்று உபாயம் கூறுதல ்.*

***சகுனியுடன் விந்துபூரிமுதலியதரணிபரடங்கவேகிமகபதி,<br>மகன்மகனொடிங்குறாதபடி யெதிர்வளைமின்வருகந்தவாகன்<br>மதலையைவிகனனுமடங்கல்போலு மிளைஞரும் விருதர்பலருந்<br>துரோணன் மதலையு,<br>மிகன்மலையிலிந்த நாழிகையிலிவரிருவரையும் வென்று<br>கோறலெளிதரோ.***

*(இ-ள்.) 'விந்துபூரி முதலிய - விந்துபூரி யென்பவன் முதலான, தரணிபர் அடங்க- அரசர்களெல்லோரும், சகுனியுடன் - சகுனியுடனே, ஏகி-சென்று, வரு கந்தவாகன் மதலையை- எதிர்த்து வருகிற வாயுகுமாரனான வீமனை, மகபதி மகன் மகனொடு இங்கு உறாதபடி - இந்திரகுமாரனான அருச்சுனனது புத்திரனாகிய அபிமனுடன் இவ்விடத்துச் சேராதபடி, எதிர்வளைமின் -எதிரில் வளைத்துக்கொள்ளுங்கள்: (அங்ஙனம்வளைய), விகனன்உம் - விகர்ணனும், மடங்கல்போலும் இளைஞர்உம்-சிங்கம்போன்ற, (மற்றைத்) தம்பிமார் பலரும், விருதர்பலர்உம்- (மற்றும்) அரசர்கள் அநேகரும், துரோணன் மதலைஉம்- அசுவத்தாமாவும்இகல் மலையில்- (அபிமனுடன்) போர்செய்தால், இந்த நாழிகையில் - இவ்வொருநாழிகைப்பொழுதிலே, இவர் இருவரைஉம் - (வீமன் அபிமன் என்னும்) இவர்இரண்டுபேரையும், வென்று கோறல் - சயித்தலும் கொல்லுதலும், எளிது -எளியதாம்; (எ - று.) அரோ ஈற்றசை; தேற்றமுமாம்; 'இடைச் சொற்கள்இடத்துக்கேற்றபடி பல பொருள்தர உரியன',*

*விந்து, பூரி என இரண்டுபேராக எடுத்தால், பூரி என்பது-பூரிசிரவா என்னும் அரசனைக் குறிக்கும்; இங்ஙனம் ஒருபெயரின் ஒரு பகுதி அப்பெயர்முழுவதையும் உணர்த்துதலை வடநூலார் ' **நாமைகதேஸே நாமக்ரஹணம்'** என்பர், பூரிஸ்ரவஸ் என்பவன், அதிரதத்தலைவரில் ஒருவன்; பூரி எனவும் ஓர் அரசன் உண்டு. மகபதிமகன் மகன் - இந்திரனது பேரன். தரணிபர் அடங்க எதிர் வளைமின் - இடவழுவமைதி. (178)*

*41.-துரியோதனன்மொழி கேட்டவீரர். இருவரோடும் பொரமுடுகுதல்.*

***எணவுயர்புயங்கசேதுவுரைசெயவினைவிடைகொண்டுவீரரனைவரு முனைடடவணிந்துகாலமுகிலெனமுரசினமுழங்கவோடியெதிரெதிர்***

***கனலெனவெகுண்டுசேனைபலபலகசரததுரங்கராசியுடன்வர வனிலகுலமைந்தனானபதியொடுமபிமனொடும்வந்துபோரின் முடுகவே.***

*(இ-ள்.) என - என்று, உயர் புயங்க கேது - உயர்ந்த பாம்புக்கொடியையுடைய துரியோதனன், உரை செய - கட்டளைகூற, வீரர் அனைவர்உம் - போர்வீர ரெல்லோரும், இவனை விடை கொண்டு - இத்துரியோதனனிடம் அனுமதிபெற்று, காலம் முகில் என - கார்காலத்து மேகம்போல, முரசுஇனம் முழங்க - வாத்திய வகைகள் ஆரவாரிக்க, ஓடி- விரைந்துசென்று, முனைபட அணிந்து- போர்களத்திலே பொருந்த ஒழுங்குபட நின்று, கனல் என வெகுண்டு - அக்கினிபோலக் கோபாவேசங்கொண்டு, சேனை பல பல- மிகப்பலவாகிய சேனைகள், கச ரத துரங்க ராசியுடன் வர- யானை தேர் குதிரைகளின் கூட்டத்துடனே வர, அனில குலம் மைந்தன் ஆன பதியொடும்உம் - வாயுவின் சிறந்த புத்திரனும் (வீரர்க்குத்) தலைவனுமான வீமனுடனும், அபிமனொடுஉம் - அபிமந்யுவுடனும், எதிர் எதிர் வந்து - எதிரிலே எதிரிலே வந்து,போரில்முடுக- யுத்தத்தில் நெருங்க,-(எ - று.)-'வாயுமதலை வாளி உதையினன்' எனஅடுத்த கவியோடு குளகமாய் முடியும்.*

*உயர்தல் - சிறத்தலும், மேலிருத்தலும். காலமுகில்-யுகாந்த காலத்து மேகமுமாம்; காளமேக மென்றலுமாம், முரசு-இங்கே, வாத்தியப்பொது. 'குலமைந்தன்'என்றதில், குலம் என்பது-சிறப்பு பொருளது. (179)*

*42.- இதுவும், மேற்கவியும்-தன்னுடன் எதிர்த்தாரை வீமன் அழித்தல் கூறும்.*

***விழிமலர்சிவந்துகோலமதிநுதல்வெயர்வரவிரண்டுதோளுமுறை முறை,***
***யழகுறவிளங்கமூர னிலவெழவணிமகர குண்டலாதிவெயிலெழ,***
***முழவினொடுசிங்கநாதமெழவெழமுடுகியெதிர்சென்று மோதி யவரவ,***
***ரெழில்வடிவ மெங்கும் வாளியுதையின னிரதமிசை நின்ற வாயுமதலையே.***

*(இ-ள்.) இரதம்மிசை நின்ற வாயு மதலை-தேரின்மேல்நின்ற வீமன்,-விழி மலர் சிவந்து- தாமரைமலர்போலுங் கண்கள் (கோபத்தாற்) செந்நிறம் பெற்று, கோலம் மதி நுதல் - அழகிய சந்திரன் போன்ற நெற்றியில், வெயர் வர-(கோபாவேசத்தால்) வேர்வை யுண்டாகவும், இரண்டு தோளும்-, முறைமுறை-மாறிமாறி(ப்புடைபருத்து) (பூரித்து), அழகு உற விளங்க - அழகுமிக விளங்கவும், மூரல் - புன்சிரிப்பின், நிலவுஎழ - வெள்ளொளி வீசவும் அணி மகர குண்டல(ம்)ஆதி-அழகிய மகரகுண்டலம்முதலிய ஆபரணங்களின், வெயில் -சூரியகாந்திபோன்ற சிவந்த ஒளி, எழ- வெளித்தோன்றவும், முழுவினொடு-வாத்தியகோஷத்துடனே, சிங்க நாதம் - சிங்ககர்ச்சனை போன்ற (தன்) கனைப்பொலியும், எழ எழ- மிகுதியாகத் தோன்றவும்,முடுகி எதிர் சென்று-வேகமாக எதிரிற் போய், மோதி-தாக்கி, அவர் அவர் எழில்வடிவம் எங்கும்உம்-அந்தந்தப் பகைவீரரது அழகிய உடம்பு முழுவதிலும், வாளிஉதையினன்-அம்புகளைச் செலுத்தினான்; (எ - று.)*

*இங்கே, 'மதி' என்றது. அஷ்டமீ திதியிலுள்ள பாதிச்சந்திரனை; அதுவே நெற்றிக்குவடிவத்திலும் ஒளியிலும் உவமையாம். **பி - ம்** : நிலவுடன். (180)*

*43.* **மணிமுடிசிரங்களோடுதறிபடவலயமொடணிந்ததோள்க டறிபட,**
**வணிகழலொடுந்துதாள்கடறிபடவயிலொடுகரங்களான தறிபட,**
**நணியவிரதங்கள் சாயவிவுளிக ணடுவறவளைந்த சாபமுதலிய,**
**துணிபடவழிந்துமீளநடவினர்துவசபுயகன்பதாதிநிருபரே.**

*(இ-ள்.) (வீமனம்புகளால்), சிரங்கள் - தலைகள், மணி முடியோடு- இரத்தினகிரீடத்தோடு, தறிபட - துணிபடவும், அணிந்த தோள்கள்-அழகிய புயங்கள்,வலயமொடு-வளைகளுடனே, தறிபட- துணிபடவும், உந்து தாள்கள்- உயர்ந்தகால்கள், அணி கழலொடு - அழகிய வீரக்கழலுடனே, தறிபட - துணிபடவும்,கரங்கள் ஆன- கைகளானவை, அயிலொடு-(ஏந்திய) வேலுடனே, தறிபட-துணிபடவும், நணிய - அருகில் வந்த, இரதங்கள்-தேர்கள், சாய-அழியவும், இவுளிகள்-குதிரைகள், நடுஅற - (உடம்பின்) நடுவிலே அறுபடவும், வளைந்த சாபம் முதலிய-வளைந்த வில் முதலிய ஆயுதங்கள், துணிபட-துண்டுபடவும், அழிந்து-, துவசபுயகன் பதாதி நிருபர் - கொடியிற் பாம்பையுடைய துரியோதனனுடையசேனையரசர், மீள நடவினர் - பிற்படச் சென்றார்கள்;(எ - று.)*

*உந்து தாள் - (அவரவரைச்) செலுத்துங்கால் எனினுமாம். ஆன, முதலிய- பெயர்கள், கரங்களான என்பதில், 'ஆன' என்பது- முதல்வேற்றுமைச் சொல்லுருபு. பதாதி-இங்கே, சேனைப்பொது.*

### *44.- தன்னுடன் எதிர்த்தாரை அபிமன் அழித்தல்.*

**விசயன்மகனுந் தன்மீதுவரும்வரும் விருதருடலங்கள் யாவு நிரைநிரை,**
**தசைகுருதி யென்பு மூளையிவை யிவைதரணிமிசைசிந்தி வேறுபடவிழ,**
**வசையவிரதங்கடாவிவளைதருமணிசிலையுமம்புமாகி முனைமுனை,**
**திசைதொறுநடந்து சீறரவியெதிர்திமிர படலங்களான வடையவே.**

*(இ-ள்.) விசயன் மகன்உம் - அபிமந்யுவும்,-தன்மீது வரும் வரும்-தன்மேல் மிகுதியாக வருகிற, விருதர்-வீரர்களது, உடலங்கள் யாஉம்-உடம்புகளெல்லாம், நிரைநிரை-வரிசை வரிசையாய், தசை குருதி என்பு மூளை இவை இவை தரணிமிசை சிந்தி-சதை இரத்தம் எலும்பு மூளை என்னும் இவற்றையெல்லாம் தரையிற் சொரிந்து, வேறு பட-(உயிர்) வேறாகி நீங்க, விழ-இறந்துகீழ் விழும்படி, அசைய இரதம் கடாவி- அசைந்துசெல்லும்படி தேரைச்செலுத்தி,-வளைதரும் அணி சிலைஉம் அம்புஉம் ஆகி - வளைந்த அழகிய வில்லும் அம்பும் (கைகளில்) உடையனாய்,- முனைமுனை திசைதொறுஉம் நடந்து - போர்க்களத்தில் (அவரவர்) எதிர்க்கிற இடந்தோறும் சென்று, சீற-கோபித்துப் போர்செய்ய,-அடைய (அவ்வெதிரிகள்கூட்டம்) எல்லாம், ரவி எதிர் திமிர(ம்) படலங்கள் ஆன-சூரியன்முன் இருட்கூட்டம்போல ஆயின; (எ- று.)*

*மாற்றர்கூட்டங்கள் இருந்துவிடமுந் தெரியாதபடி மிகவிரைவில் மிகஎளிதில் அழிந்தன என்க. எழுவகைத்தாதுக்களுள் இங்*

*குக் கூறப்படாத தோல், மச்சை, சுவேதநீர் என்பன 'இவையிவை' என்பதனாற் குறிக்கப்பட்டன. ஆன-முற்று; உவமவுருபு. (182)*

### *45.-இருவரெதிரிலும் தன்படைபின்னிட, கண்ட துரியேதனன் சினந்து சைந்தவனிடம் சொல்லலுறுதல்.*

***இருவரெதிரும்பொறாமன்முடுகியவிருபடையுநொந்துமீளவவ
னிபன்,
வெருவொடுதளர்ந்துபோனநிருபரைமிகவசைமொழிந்து
போதநகைசெய்து,
கருகிமுகநெஞ்சுகோபவனல்கொடுகதுவிநயனங்கள்சேயநிறமுற,
வருகுவருசிந்துராசதிலகனொடபரி மிதமின்சொலாகவுரை
செய்தான்.***

*(இ-ள்.) முடுகிய - வேகமாக எதிர்த்துச்சென்ற, இருபடை உம்-தன் சேனையின் பகுப்பு இரண்டும், இருவர் எதிர்உம்-(வீமன் அபிமன் என்னும்) இரண்டுபேரின் எதிரிலும், பொறாமல்-(அவரவரம்பின் கொடுமையைப்) பொறுக்கமாட்டாமல், நொந்து - வருந்தி, மீள-பின்னிட,-(அதுகண்டு). அவனிபன் - துரியோதனராசன்,-வெருவொடு தளர்ந்து போன நிருபரை-அச்சத்தோடு சோர்ந்து ஓடிய அரசர்களை, மிக வசை மொழிந்து-மிகவும் நிந்தையாகப் பேசி, போத நகை செய்து -மிகவும் (இகழ்ச்சியாகச்) சிரித்து,-நெஞ்சு கோபம் அனல்கொடு கதுவி-மனம் கோபாக்கினியாற் பற்றப்பட்டு, முகம் கருகி-(அதனால்) முகங் கறுத்து, நயனங்கள் சேய நிறம் உற-கண்கள் சிவந்தநிற மடைய,-அருகு வரு சிந்துராசதிலகனொடு-(தன்) பக்கத்தில் வருகிற சிந்துதேசத்து அரசனும் திலகம் போலச் சிறந்தவனுமான சயத்திரதனுடன், இன் சொல் ஆக- இனிய உபசாரமொழியாக, அபரிமிதம்-அளவில்லாத பல வார்த்தைகளை, உரைசெய்தான் - சொல்லினான்; (எ - று.)- துரியோதனன் இன்சொலாக வுரைசெய்ததை மேல் மூன்று கவிகளிற் காண்க.*

*நயனம், ஸிந்துராஜதிலகன், அபரிமிதம் - வடசொற்கள், சேய- குறிப்புப்பெயரெச்சம்.* ***பி-ம்*** *: உரைசெய்தே. (183)*

*46.-மூன்றுகவிகள்-சைத்தவனைநோக்கித் துரியோதனன்புகழ்ந்து அபிமனை உயிர்கவர்வதற்குச் செய்யவேண்டுவது இன்னதெனத் தெரிவித்தலைக் கூறும்.*

***மறனுடையைசெம்பொன்மேருறிரிகிகர்வலியுடையைவென்றி
கூருமரசிய.
லறனுடையைபஞ்சபாணனெனவடிவழகுடையை
நின்றசேனையரசரி.
னிறனுடையைதிங்கள்சூடிவியனதிநிறைபுனல்
பரந்துலாவுமவுலியர்.
திறனுடையமன்றனாறுமலரடிதெளிவொடு
பணிந்தஞானமுடியினை.***

*ஏழுகவிகள் -ஒருதொடர்.*

*(இ - ள்.) '(நீ), மறன் உடையை - பராக்கிரமமுடையாய்; செம்பொன் மேரு கிரி நிகர் - சிவந்த பொன்மயமான மகாமேரு மலையையொத்த, வலிஉடையை- வலிமையை உடையாய்: வென்றி கூரும்-வெற்றி மிக்க, அரசு இயல் அரசாட்சியையும், அறன் - தருமத்தையும், உடைய-;பஞ்சபாணன் என - ஐந்து அம்புகளையுடைய மன்மதன்போல, வடிவு அழகு உடையை -உடம்பின்*

*அழகையுடையாய்; நின்ற சேனை அரசரில்-(இங்கு) நின்ற சேனையிலுள்ள அரசர்களுள், நிறன் உடையை--மேன்மையையுடையாய்: திங்கள் சூடி-சந்திரனைத் தரித்து, வியன் நதி நிறை புனல் பரந்து உலாவும்-ஆகாச(கங்கா) நதியினது நிறைந்தநீர் பரவித் தளும்பப்பெற்ற, மவுலியர் - திருமுடியையுடைய பரமசிவனது, திறன்உடைய-மகிமையையுடைய, மன்றல் நாறும் மலர் அடி - பரிமளம் வீசுகிற தாமரைமலர்போன்ற திருவடிகளை, ஞானம் தெளிவோடு பணிந்த- தத்துவஞானத்துக்கு உரிய தெளிவோடு வணங்கிய, முடியினை-சிரத்தையுடையாய்; (எ - று.)*

*அரசியல்- சேனை, குடிகள் செல்வம், மந்திரி, நண்பர், அரண் என்னும் ஆறுஇராசாங்கமுமாம். இனி, அரசியலறன்-அரசியல் ஆறில் அறநிலையறம் அறநிலைப்பொருள், அறநிலையின்பம் என்னும் மூன்றுமாம்: மற்றவை - மறநிலையறம், மறநிலைப்பொருள்,மறநிலையின்பம் என்பன. அவையாவன:-நான்கு சாதியாரும் தம்தம் வருணவொழுக்கத்திற் பிறழாது நிலைபெறப் பாதுகாத்தல்- அறநிலையறம்; நல்நெறியில் நின்று தம்தம் நிலையினால் முயற்சி செய்து பெறும் பொருள்-அறநிலைப்பொருள்; குலமும் ஒழுக்கமும் குணமும் பருவமும் ஒத்த கன்னிகையை அக்கினிசாட்சியாக விவாகஞ்செய்து அவளோடு கூடிவாழ்தல் - அறநிலையின்பம்; நிரைமீட்டுப் பகைவென்று செஞ்சோற்றுக் கடன்கழியாதாரைத் தண்டித்துக் குறைவறச் செய்தல் - மறநிலையறம்; பகைவர் பொருளும் திறைப்பொருளும் குற்றஞ்செய்தோரைத் தண்டித்தலால் வரும் பொருளும் சூதில் வெல்பொருளும் - மறநிலைப்பொருள்; ஏறு தழுவியும், வில்லில்தொடுத்த அம்பினாற்குறியெய்தும், பொருள்கொடுத்தும், வலிந்தும் மகளிரைக்கொண்டு மணஞ்செய்தல் - மறநிலையின்பம். திருவடிக்குத் திறன்-தன்னைச்சரண மடைந்தார்க்கு வேண்டியவேண்டியாங்கு எய்துவிக்கும் வல்லமை. தெளிவு - ஐயந்திரி பில்லாமை. (184)*

***47. வயவிசயனின்றதேர்கடவிவரும்வலவன்மருகன்றனோடு***
***வரைபுரை,***
***புயமுடையதண்டவீமனுறிலிருபொருநரையுமின்று***
***பூசல்பொரவரி,***
***தயலிவரகன்றுபோகிலமர்பொரவறவுமெளிதுண்டு***
***பாயநுதலெரி,***
***நயனனருள் கொன்றை மாலைதனை யிவர்நடுவிடி.***
***லிரண்டுபாலுமகல்வரே.***

*(இ-ள்.) 'வயம்-வெற்றியையுடைய, விசயன்-அருச்சுனன், நின்ற-பொருந்திய, தேர் - தேரை, கடவிவரும் - செலுத்திவருகிற, வலவன் - சாரதியான கண்ணனுக்கு,மருகன்தனொடு-மருமகனான அபிமனுடனே, வரை புரை புயம் உடைய-மலையையொத்த தோளையுடைய, தண்டம்-கதையில்வல்ல, வீமன்-, உறில்-கூடிவிட்டால், இரு பொருநரைஉம்-(இந்த) இரண்டு போர்வீரரையும் இன்று பூசல்பொர அரிது - இப்பொழுது (எதிர்த்துப்) போர்செய்ய முடியாது; இவர் - இவ்விரண்டுபேரும், அயல் -வெவ்வேறு இடத்தில், அகன்று போகில் -(தனித்தனி) விலகிச்சென்றால், அமர் பொரஅறஉம் எளிது - (இவர்களோடு) போர்செய்ய மிகவும் எளியதாம்; உபாயம் உண்டு - (அவ்வாறு இவர்களைக் கூடாமற் செய்*

*தற்கு) ஓர் உபாயம் உள்ளது; (அது யாதெனில்), -நுதல் எரி நயனன்-நெற்றியில் நெருப்புக்கண்ணையுடைய சிவபிரான், அருள் - (உனக்குக்) கொடுத்தருளிய, கொன்றை மாலைதனை-கொன்றைப்பூ மாலையை, இவர் நடு இடில் - (வீமன் அபிமன்யுஎன்ற) இந்த இரண்டுபேர்களுக்கு மத்தியிற் போகட்டால், இரண்டு பால்உம்அகல்வர்-(அதனைத்ததாண்டி ஒருவரோடொருவர் சேராமல் இவர்) இரண்டுபக்கங்களிலும் பிரிந்துசெல்வாரகள்;' எ - று.) ஏ-தேற்றம்.*

**நுதலெரிநயனனருள் கொன்றைமாலையென்பதிலடங்கிய கதை;-**
*பாண்டவர் வனவாசஞ்செய்கையில் ஒருநாள் வேட்டைக்குப்போயிருந்த சமயம் பார்த்துச் சயத்திரதன் சென்று ஆச்சிரமத்தில் தனித்திருந்த திரௌபதியை வலியக்கவர்ந்து தேரெற்றிக்கொண்டுசெல்ல, பின்பு மீண்டுவந்து செய்தியுணர்ந்த பாண்டவருள் வீமன் சினந்து தருமன்கட்டளையால் அருச்சுனனோடும் எதிர்த்துச்சென்று பொருது தன்வலியால் அவனை முடிபிடித்திழுத்துத் தரையில்தள்ளிக் கைகால்களால் அடித்தும் உதைத்தும் வலியடக்கி உயிருடன் பற்றிக்கொண்டு திரௌபதியையும் மீட்டுத் தருமனிடங் கொண்டு வந்து 'இவனைக்கொன்றிடுவதே ஏற்ற தண்டனை' என்றுகூற, அதற்குத் தருமன் 'பெருங்குற்றமுடையனாயினும் நெருங்கின சுற்றத்தானாகிய இவனைக் கொன்றிடின், நம்முடையதங்கை துச்சளைக்கு அமங்கலியம் உண்டாகும்: ஆதலால், அங்ஙனஞ் செய்யவேண்டா; வேறு வகையாகப் பங்கப்படுத்தி உயிருடன் விடுவதே தகுதி' என்றுகருணையுடன் கூற, அத்தமையனார்கட்டளையைக் கடக்கமாட்டாத வீமன்*

*அச்சந்தவனை ஐங்குடுமிவைத்து அம்பாலே தலையைச் சிரைத்துக் கழுதையின்மேலேற்றிப் பரிபவப்படுத்தி அனுப்பிவிட, அங்ஙனம் அவமானப்பட்ட சிந்துராசன் பாண்டவரைக் கொல்லுமாறு வரம் பெறும்பொருட்டு இமயகிரியிற்சென்று தவஞ்செய்து பரமசிவனைத் தியானித்துப் பலநாள் பிராயோபவேசமாகக் கிடக்க,, பிரதியக்ஷமான சிவபிரான் 'ஸ்ரீகிருஷ்ணசகாயரான அப்பாண்டவர்களைக் கொல்லுதலும் வெல்லுதலும் உன்னா லாகுவதன்று: பெரும்போரில் ஒரு நாள் அருச்சுனனொழிந்தோரைத் தகைவதற்கே யாகும்' என்று தனது கொன்றைப்பூ மாலையையும், பகைவெல்லவல்லவொரு கதாயுதத்தையும் அன்போடு கொடுத்தருளினனெனக் காண்க. 'தான் முன்னம் வீமசேனனால் அபசயப்பட்ட அவமானந் தீரவேண்டிப் பரமேசுவரனை நோக்கித் தபசுபண்ண, ஆங்கு அவனும் பிரசந்நனாய் 'உன் அபிப்ராயம் ஏன்?' என்றலும், 'பாண்டவரைச் சயஞ்செய்யுமாறு எனக்கு அருள்செய்வாயாக' என்றலும், 'சக்கரபாணிசகாயராகிய பாண்டவரை வெல்லவரிது; மற்றவரை ஒருகால் மானபங்கப்படுத்தி' என்று தன்சடாமகுடத்துக் கொன்றை மாலையைப் பிரசாதிப்ப, பெற்றுப் போந்த அக்கொன்றைமாலையால், வீமசேனன் துணைபுகுதாது விலக்கியிட்டான் சயத்திரதன்' என்று பெருதேவனார் கூறியவாறு உணர்க. (185)*

***48.** அரன்முடியணிந்ததாமமிதுவெனவடிகொடுகடந்துபோக*
***வெருவுவர்,***
***பரவைநிகர் நம்பதாதியவனிபர் பலருடன் வளைந்து***
***கோலியமரிடை,***
***வரமுறவணங்குநாளி வருள்செய்து மனமகிழ***

***மங்கைபாகனுதவிய,***
***வுரனுடையதண்டினாலிவ்வபிமனையுயிர்கவர்த***
***லின்றுசாலவுறுதியே.***

*(இ-ள்.) 'அரன் முடி அணிந்த தாமம் இதுஎன - சிவபிரான் திருமுடியில் தரித்த மாலை இதுவென்று, அடி கொடு கடந்து போகவெருவுவர் - (வீமனும் அபிமனும் தமது) கால்களால் (அதனைத்) தாண்டிச்செல்ல அஞ்சுவார்கள்; (அச்சமயத்தில்) பரவைநிகர் நம்பதாதி-கடல்போன்ற நமது சேனையிலுள்ள, அவனிபர் பலருடன்- அரசர்கள் அநேகருடனே, வளைந்து கோலி-இடைவிடாமற் சூழ்ந்து, அமரிடை- போரில், வரம் உற வணங்கு நாளில் மங்கைபாகன் அருள் செய்து மனம் மகிழ உதவிய உரன் உடைய தண்டினால்-வரம்பெறும்படி வணங்கியகாலத்தில் சிவபிரான் கருணைசெய்து மனம்மகிழ (உனக்கு)க்கொடுத்த வலிமையுள்ள கதாயுதத்தால், இஅபிமனை உயிர் கவர்தல்- இந்தஅபிமந்யுவைக் கொல்லுதல், இன்று சால உறுதிஏ-இப்பொழுது மிகநன்மைதரும் உபாயமாம்;' (எ -று.)*

*மங்கைபாகன் - உமாதேவியை (இட)ப்பக்கத்தி லுடையவன், எப்பொழுதும் மங்கைப்பருவத்தையே உடைமையால், உமாதேவி 'மங்கை' எனப்பட்டாள். உறுதி- காரியவாகுபெயர். ஏ தேற்றம்.*

*49.-சயத்திரதனும் துரியோதனன் கூறிய உபாயத்தைச்செய்ய உடன் பட்டு, சிவபெருமானருளிய கொன்றைமாலையை யெறிதல்.*

***எனவிவன்மொழிந்தபோ திலவனிவனிணையடி வணங்கியாது***
***நினைவினி,***
***யுனதுநினைவெஞ்சிடாம லபிமனையுயிர்கவர்வ னென்று***
***தேறவுரைசெய்து,***
***கனகதருமன்றன் மாலையெனவொளிர்கடியிதழி***
***யந்தண்மாலை பரமனை,***
***மனனுறவுணர்ந்து, நாவினிகழ்தரு மறையொடுவளைந்து***
***விழவெறியவே.***

*(இ-ள்.) என -என்று, இவன் -துரியோதனன்-மொழிந்த போதில்- சொன்னபொழுதிலே,-அவன்-சயத்திரதன், இவன் இணை அடி வணங்கி- துரியோதனனது, உபயபாதத்தை நமஸ்கரித்து, 'யாது நினைவு-(வேறு)என்ன எண்ணம்உள்ளது? (ஒருசிந்தையும் பட வேண்டுவதில்லை); இனி- இப்பொழுதே, உனதுநினைவு எஞ்சிடாமல்-உன்கருத்துக்குக் குறையுண்டாகாதபடி, அபிமனை உயிர்கவர்வன்-அபிமந்யுவைக் கொல்வேன்,' என்று-, தேற -(துரியோதனன்) மனந்தெளியும்படி, உரைசெய்து-சொல்லி,-(சயத்திரதன்),-பரமனை - (எல்லாரினுஞ்) சிறந்த சிவபிரானை, மனன் உற உணர்ந்து - மனத்திலே பொருந்தத் தியானித்து, கனக தரு-பொன் மயமான கற்பகவிருட்சத்து மலர்களினாலாகிய, மன்றல் - பரிமளமுள்ள, மாலைஎன - மாலைபோல, ஒளிர் - விளங்குகிற, கடி - வாசனையையுடைய, அம் - அழகிய, தண் - (தேனினாற்) குளிர்ந்த, இதழி மாலை - கொன்றைப்பூமாலையை, நாவில் நிகழ்தரு மறையொடு - நாக்கில் உச்சரிக்கப்படுகிற மந்திரத்துடனே, வளைந்து விழ எறிய- (அபிமன்தேரைச்) சூழ்ந்துவிழும்படிவிசிப் போகட,-(எ-று.)- "எறிதொடையல்வளைந்து சூழவருதலும்" என அடுத்தகவியோடு தொடரும்.*

*பொன்னுலகமாகிய சுவர்க்கத்தில் உள்ளனயாவும் பொன்மயமாதலால் 'கனகதரு' எனப்பட்டது. கனகத்தை மலருக்கு அடையாக்கினுமாம்: கொன்றைமலர் பொன்னிறமாதலால், கனகதருமலரோடு உவமிக்கப்பட்டதென்க. இதழி-நிறைந்த இதழ்களையுடையதெனக் காரணப்பெயர்போலும். மறை-மறைக்கப்படுவது என மந்திரத்துக்குக் காரணக்குறி; "மந்த்ரம்யத்நேந கோபயேத்" [மந்திரத்தை முயற்சியால்மறைக்கவேண்டும்] என்பது, விதி. (187)*

*50.-வென்றுமீளுகையில்,சிவபிரான்மாலை குறுக்கிட, அபிமன் கடவாது பகையைமுறியடித்து மடிவதாகத்துணிந்துபொருதல்.*

***எறிதொடையல் சங்க பாணிமருமக னிகலுமமர்வென்று மீளு***
***மளவையி,***
***னெறியிடைவி ளங்கிவாள கிரியென நிமிர்வுறவளைந்து***
***சூழ வருதலு,***
***மறிவுடனி றைஞ்சி யாதி பகவன தணிமுடிய லங்க***
***லாகு மடையலர்,***
***முறியவினி மண்டு போரி லமர்செய்து முடிதுமென வந்து***
***மீள மூடுகவே.***

*(இ-ள்.) எறி தொடையல்-(சயத்திரதனால்) வீசப்பட்ட அம் மாலை, சங்கபாணி மருமகன் இகலும் அமர் வென்று மீளும்அளவையில்-சங்கத்தைக் கையிலுடைய கண்ணனுக்கு மருமகனான அபிமன் எதிர்த்துச்செய்த போரில்செயித்து (வீமனுடன் சேர்தற்கு)த் திரும்புமளவில், நெறியிடை - வழியிலே, விளங்கி - பிரகாசித்து, வாள கிரி என - சக்கரவாளமலைபோல, நிமிர்வுஉற - விளக்கம் பொருந்த, சூழ வளைந்துவருதலும் - சுற்றிலுஞ் சூழ்ந்து பொருந்தியிட,-(அதுகண்டு அபிமன்), அறிவுடன்இறைஞ்சி - (இது இறைவனதுமாலையென்ற) அறிவோடு வணங்கி, 'ஆதி பகவனதுஅணி முடி அலங்கல் ஆகும்- முதற்கடவுளான சிவபிரானது அழகிய திருமுடியில்தரித்த மாலையாகும்; (இதனைத் தாண்டிடுதல் தகுதியன்று): (ஆதலால்), இனி-,மண்டுபோரில் - நெருங்கிய யுத்தத்தில், அடையலர் முறிய-பகைவர் அழிய, அமர் செய்து-போர் செய்து, முடிதும்-இறப்போம்,' என-என்றுஎண்ணி, மீள வந்து முடுக - திரும்பிவந்து போர்செய்யத்தொடங்க,-(எ - று.)-"இதழித்தொடைவிலங்கியது" என்மேல் 52-ஆங் கவியோடு முடியும். **பி - ம்** : நெறியிடைவிலங்கி.*

*சக்கரவியூகத்தினிடையில் தனியனாய் அகப்பட்டுக்கொண்ட தனக்கு வேறுஎவரும் துணையில்லாமையாலும், அவ்வியூகத்தினின்று மீண்டுவருதற்குத் தான் முழுவதும் வழியறியாமையாலும், அபிமன்முடிவோமென்று கருதினான். சக்கரவாளமலை - பூமியைச் சூழ்ந்த கடலைச்சுற்றிலும் கோட்டைமதில்போலச் சூழ்ந்துள்ள தொரு பருவதமென்ப. ஆதிபகவன்- இருபெயரொட்டு. (188)*

வேறு.

*51.- மூன்றுகவிகள்-அம்மாலையைக் கடத்தற்கு அஞ்சி வீமன்வெளிநின்றமை கூறும்.*

***பரிசனகு மாரன்விடு, மெரிகணைக ளான்முடுகு***
***தரியலர்ப தாதிபடை நெரியவரு காலையிலே.***

*(இ-ள்.) பரிசன குமாரன்-வாயுகுமாரனான வீமன், விடும்-(தான்) பிரயோகிக்கிற, எரி கணைகளால்- உக்கிரமான அம்புகளால், முடுகு தரியலர் பதாதி படை -விரைந்துபோர்செய்த பகைவர்களது சேனைக்கூட்டம், நெரியவரு காலையிலே-சிதையமீளுகிற பொழுதிலே,-(எ - று.)-" என்று குறுகலும் என வருங் கவியோடுஇயையும்.*

*எரிகணை - பகைவரையழிக்கும் அம்பும், விளங்குகிற அம்பும், நெருப்பில் வைத்து வடிக்கப்பட்ட அம்புமாம்: வினைத்தொகை. பதாதிபடை - நிலைமொழி வடமொழியாதலின், இயல்பு.*

இதுமுதல் இருபத்தெட்டுக் கவிகள் - பெரும்பாலும் இரண்டு சீர்களும் விளங்காய்ச்சீர்களாகியகுறளடி நான்குகொண்ட **வஞ்சித் துறைகள்.** இவற்றிற் சிறுபான்மை மாச்சீர்களும் வந்துள்ளன. *(189)*

***52. விறலபிமனின்றகள, முறுதுமினியென்றுநனி***
***குறுகலும்விலங்கியது, நறையிதழியந்தொடையே.***

*(இ-ள்.) 'விறல் - வெற்றியையுடைய அபிமன்-, நின்ற- பொருந்தின, களம் - இடத்தை, இனி - இப்பொழுது, உறுதும்- (நாம்) அடைவோம்,' என்று-என்று எண்ணி, (வீமன்), நனி குறுகலும் - மிகச்சமீபித்தவளவிலே,-நறை-வாசனையுடைய,அம்- அழகிய, இதழிதொடை - கொன்றைப்பூமாலை, விலங்கியது -குறுக்கிட்டது;(எ-று.)*

*நறை - தேனுமாம்; இதனை 'ஐ' விகுதிபெற்ற பண்புப்பெயரென்னலாம் ஈற்று ஏகாரத்தை இங்குப் பிரிநிலை யென்னலாம். (190)*

***53. இன்றமரின்யாருமுயிர், பொன்றிடினுமீசனணி***
***கொன்றைகடவேனெனமுன், னின்றனனராதிபனே,***

*(இ-ள்.) (அதுகண்டு), நர அதிபன் -வீமராசன், 'இன்று-இன்றைக்கு, அமரின் போரில், யார்உம் - எல்லோரும், உயிர்பொன்றிடின்உம் - உயிரழிவாரானாலும்,(யான்), ஈசன் அணி கொன்றை - சிவபிரான் தரித்த கொன்றைப்பூமாலையை, கடவேன் - தாண்டமாட்டேன்,' என - என்றுகருதி, முன் நின்றனன்-முன்னே நின்றுவிட்டான்: (எ - று.)*

*இங்ஙனங் கூறியதனால், வீமனது சிவபக்தி மிகுதி விளங்கும். கொன்றை - அதன் மலர்மாலைக்கு இருமடியாகுபெயர். (191)*

***54.- அபிமனுக்குத் தான் உதவாமைக்கு வீமன் நொந்து கூறலுறுதல்.***

***முந்துவடிவாளமரின், வந்தணுகுவான்மதலை.***
***நிந்தனைகொலாமிதென, நொந்துசிலகூறினனே.***

*(இ-ள்.) 'முந்து - சிறந்த, வடி வாள் அமரின் - கூர்மையான ஆயுதங்களைக்கொண்டு செய்யும்போரில், வந்து அணுகுவான் - வந்துநெருங்கியுள்ளவன், மதலை-குமாரனான அபிமன்: இது-அவனுக்கு யான் உதவியாகாத) இத்தன்மை, நிந்தனை ஆம்-பழிப்புக்குக் கார*

*ணமாம்,' என - என்று எண்ணி, நொந்து- வருந்தி, (வீமன்), சில கூறினன் - சில(கோபவார்த்தைகளைக்) கூறுபவனானான்; (எ - று.) - அவற்றை, நோக்கி மேல்மூன்றுகவிகளிற் காண்க.*

*நிந்தனை இது-காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. கொல்- அசை.*
***பி-ம்:** முந்தமுடிவானமரில். (192)*

*55.- மூன்றுகவிகள் - வீமன் நொந்து கூறியமையைத் தெரிவிக்கும்.*

***இந்தமதுமாலையிடை, தந்தபிமனாருயிரை***
***யுந்தியிடவோவெளிது. சிந்துபதிசேவகமே.***

*(இ-ள்.) சிந்து பதி சேவகம்-சிந்துதேசத்தரசனது வீரம்,- இந்த மது மாலை இடைதந்து- தேனையுடைய இக்கொன்றைப்பூ மாலையை நடுவிலே போகட்டு, அபிமன் ஆர் உயிரை உந்தியிடஓ- (தனிப்பட்ட) அபிமந்யுவின் அருமையான உயிரைப் போக்கிவிடுதற்கோ (வல்லது)? எளிது - (அவ்வீரம்) எளிமையையுடையது: (எ - று.)-எளிமை - இகழப்படுந்தன்மை; தாழ்வு தருமயுத்த மாகவன்றி வேறுசூழ்ச்சிசெய்து கடவுள்மாலையைக் குறுக்கிடுவித்துத் துணையில்லாதபடி தனிப்படுத்திக் கொல்லமுயலுதல் பழிக்கத் தக்க தென்றதாம். (193)*

***56. விரகுபடவெப்பொழுது, முரணமர்தொடக்கும்வலி***
***யுரகதுவசற்கொழிய, வரசரிலெவர்க்குளதோ.***

*(இ-ள்.) 'எப்பொழுதும்-, விரகு பட-வஞ்சனையாக, முரண் அமர் தொடக்கும் - மாறுபட்ட போரைத் தொடங்கிச்செய்கிற, வலி-வலிமை, உரக துவசற்கு ஒழிய - பாம்புக்கொடியனான துரியோதனொருவனுக்கே தவிர, அரசரில் எவர்க்கு உளதுஓ- அரசர்களில் வேறுயார்க்கேனும் உள்ளதோ? (எ- று.)*

*'உரகதுவசன்'-கொடுமையை விளக்குகிற சாபிப்பிராயவிசேடியம்: **கருத்துடையடைகொளியணி: பரிகராங்குராலங்காரம்.** (194)*

***57. தன்மகனையுஞ்சமரில், வன்மையொடுகொன்றொழிய***
***மன்முனைதிரண்டிடினு, மென்மகனிறந்திடுமோ.***

*(இ-ள்.) மன் - (பல) அரசர்கள், முனை - போர்க்களத்தில், திரண்டிடின் உம் -கூட்டம்கூடி எதிர்த்துப்போர்செய்தாலும், என் மகன் - எனது புத்திரனான அபிமன்,தன் மகனைஉம் சமரில் வன்மையோடு கொன்றுஒழிய - அத்துரியோதனனுக்குக்குமாரனான இலக்கணனையும் போரில் வலிமையாற் கொன்றாலன்றி, இறந்திடும்ஓ -இறந்திடுவானோ? (எ - று.)- **பி - ம்** : மடிந்திடுமோ.*

*இங்ஙனம் கூறியதனால் அபிமனது பல பராக்கிரம விஷயத்தில் வீமனுக்கு உள்ள நம்பிக்கை வெளியாம் தம்பிமகனிடத்தில் அபேதமாகவுள்ள அபிமானத்தால், 'என்மகன்' என்றான். 'தன் என்றது படர்க்கை யாதலால், இங்கே, துரியோதனனைக் குறித்தது; (இது, வடமொழியில் ஸர்வநாம சப்தங்களுள் ஒன்றாம்.) மன் - சாதிப்பெயராய், இராசசமூகத்தை உணர்த்தியது. (195)*

*58. - வீமன் அக்கொன்றைமாலையைக்கடவாது வணங்கிச்செல்லுதல்.*

***என்றிதழிமாலைதனை, நின்றுதொழுதன்பினொடு***
***சென்றனனிடிம்பனைமுன், வென்றதிறல்வீமனுமே.***

*(இ-ள்,) இடிம்பனை - இடிம்பாசுரனை, முன் வென்ற-முன்பு சயித்த [கொன்ற], திறல்-வலிமையையுடைய, வீமனும்-, என்று- என்றுசொல்லி, இதழி மாலைதனை அன்பினொடு நின்று தொழுது- கொன்றைப்பூ மாலையைப் பக்தியோடு எழுந்து நமஸ்கரித்து, சென்றனன் - மீண்டுசென்றான்; (எ - று.)*

*தேரில்வீரர்வீற்றிருத்தல் இயல்பாதலின், 'நின்றுதொழுது' எனவேண்டிற்று. (196)*

### *59.- மாலைகடவாத அபிமன் பகைநடுவில் உக்கிரத்தேசொடு நிற்றல்.*

***மாலைகடவாமல்வரு, பாலனரசர்க்குநடு***
***வேலைவடவைக்கனலி, போலொளிரநின்றனனே.***

*(இ-ள்.) மாலை கடவாமல் - கொன்றைமாலையைக் கடக்க மாட்டாமல், வரு- மீண்டுவந்த, பாலன் இளையவனான அபிமன், அரசர்க்கு நடு - பகையரசர்களுக்கு மத்தியில், வேலை வடவை கனலி போல் - கடலின்மத்தியில் படபாமுகாக்கினிபோல, ஒளிர நின்றனன்- விளக்கமாக நிலைநின்றான்; (எ-று)*

*பகையரசர் குழாத்தினிடையில் அகப்பட்டுள்ள அபிமனொருவன் தானே அக்கூட்டமுழுவதையுஞ் செருக்கடக்கவல்லனாந் தன்மைக்கும், தேககாந்திமிகுதிக்கும், கடலிடையுள்ள வடவையனலை உவமைகூறினார். (197)*

### *60.- இரண்டுகவிகள் - அர்த்தரதரான எதிரிகள் அம்புமழை பொழிதலைக்கூறும்.*

***யாளியெனநின்றவய, மீளியைவளைந்துபல***
***வாளிகள்பொழிந்தனர்கள், கூளிகண்டஞ்செயவே.***

*(இ-ள்.) யாளி என நின்ற-யாளியென்னும் மிருகவிசேஷம்போல (மிகவலியனாய்) நின்ற, வய மீளியை - வெற்றியையுடைய வீரனான அபிமனை, (பகையரசர்கள்), வளைந்து-சூழ்ந்துகொண்டு, கூளிகள் நடம் செய-பேய்கள் கூத்தாட, பல வாளிகள் - அநேக பாணங்களை, பொழிந்தனர்கள்-; (எ - று.)*

*அபிமனை 'யாளி' என்றதற்கு ஏற்ப, பகையரசரை யானையென்னாமையால்,* **ஏகதேசவுருவகம்** *. பி-ம்: மீளிமிசைவந்துபல. (198)*

***61. பற்பலருமர்த்தரதர், விற்பலவணக்கியெதிர்***
***சொற்பொலியப்பகழி, சிற்சில தொடுத்தனரே.***

*(இ - ள்.) பல் பலர்உம் அர்த்தரதர் - மிகப்பலரான அர்த்தரத வீரர்கள்; வில்பல வணக்கி-(தம்தம்) விற்கள் பலவற்றை வளைத்து, எதிர் - அபிமனெதிரில், சில்சில - சிலசிலவாகிய, சொல் பொலி வய பகழி - புகழ் விளங்குகிற வலிய அம்புகளை, தொடுத்தனர் - பிரயோகித்தார்கள்; (எ- று.) (199)*

### *62.- எய்த அம்புகளைவிலக்கி அபிமன் பகைநையப் பலகணை சிந்துதல்.*

***பெய்கணையடங்கவிவ, னெய்கணைவிலக்கியிட***
***மொய்கணையனந்தமவர், மெய்கணையவுந்தினனே.***

*(இ-ள்.) பெய் கணை அடங்க - (அவர்கள்) சொரிந்த அம்புகளையெல்லாம், இவன் எய் கணை - இந்தஅபிமனெய்த அம்புகள், விலக்கியிட-(இவன்மேல் வந்திடாதபடி இடையிலே) தடுத்துவிட,*

*(பின்பு இவன்), மொய் அனந்தம் கணை - நெருங்கின அளவில்லாத அம்புகளை, அவர் மெய்கள் நைய - அந்த அர்த்தரதர்களது உடம்புகள் வருந்தும்படி, உந்தினன் - செலுத்தினான் : (எ-று.)-ந +அந்தம் = அநந்தம்: எல்லை யில்லாதது. (200)*

***63.- மூன்றுகவிகள் - கன்னனை அபிமன் பொருது வென்றமை கூறும்.***

***கன்னனுமடங்கலபி, மன்னுவுமுடன்றுமுனை***
***முன்னிரதமுங்கடவி, மன்னமர்தொடங்கினரே.***

*(இ-ள்.) (பின்பு), கன்னன்உம் - கர்ணணும், மடங்கல் அபிமன்னுஉம்- ஆண்சிங்கம்போன்ற அபிமந்யுவும், உடன்று- கோபித்து, முனை முன் இரதம்உம் கடவி - போர்களத்தின் முன்னிடத்தில் தேரைச்செலுத்துதலுஞ்செய்து, மன் அமர் தொடங்கினர் - பெரிய போர்செய்யத் தொடங்கினார்கள்: (எ - று.) (201)*

***64. அங்கர்பதிதேரிலிவன், வெங்கணைகணாலுவிட***
***மங்குலெனநாலுதுர, கங்களும்விழுந்தனவே.***

*(இ-ள்.) அங்கர் பதி தேரில்-அங்கநாட்டார்க்கரசனான கர்ணனது இரதத்தின்மேல், இவன்-அபிமன், வெம் கணைகள் நாலுவிட- கொடிய நான்கு அம்புகளைச் சொரிய, (அதனால்), நாலு துரகங்கள்உம்- (அக்கன்னது தேர்க்) குதிரைகள் நான்கும், மங்குல் என- உம்- (அக்கன்னனது தேர்க்) குதிரைகள் நான்கும், மங்குல் என - மேகங்கள்போல, விழுந்தன - (இறந்து கிழ்) விழுந்தன-: (எ - று.)*

*வெள்ளைக்குதிரைகளாதலால், நீர்கொள்ளாத வெள்ளைமேகம் உவமையென்க: இவ்வாறே வியாசபாரதத்திலுங் கூறியுள்ளது. (202)*

***65. தொடுத்தசிலைகோலியவ, னெடுத்தசிலையுங்கொடியு***
***நடுத்தறியவெட்டிமுனை, கெடுத்தனனனந்தரமே.***

*(இ-ள்.) அனந்தரம் - பின்பு, (அபிமன்), தொடுத்த சிலை கோலி - பிடித்த வில்லை வளைத்து, (எய்த அம்புகளால்), அவன் எடுத்த சிலைஉம் நடு தறிய வெட்டி - அக்கன்னன் ஏந்திய வில்லையும் (அவனது கச்சைக்) கொடியையும் நடுவிலே முறியும்படி துணித்து, முனை கெடுத்தனன்-(அவனது) போரை அழித்தான்:(எ - று.)*

*தொடுத்த - அம்பு தொடுக்குந்தன்மையுள்ள எனினுமாம்; இனி, சிலை கோலித்தொடுத்த என மொழிமாற்றி, வில்லை வளைத்துத் தொடுத்த அம்புகளால் என்றலுமொன்று: இவ்வுரைக்கு, தொடுத்த - பலவின்பாற்பெயர். (203)*

***66. - இதுவும், மேற்கவியும் - குளகம்: துரியோதனன் தம்பிமார் பொருது தோற்றமை கூறும்.***

***இரவிமகனேகுதலு, மரவதுசன்றுணைவர்***
***விரவினர் விளைந்துதம. புரவியணிதேர்படவே.***

*(இ-ள்.) (இங்ஙனம் தோற்று), இரவி மகன் ஏகுதலும்- சூரியபுத்திரனான கர்ணன் சென்ற வளவில், - அரவ துவசன் துணைவர்- பாம்புக்கொடியனான துரியோதனனது தம்பிமார், விளைந்து விரவினர் - மிகுயாகச் சூழ்ந்து,-தம புரவி அணி தேர் பட-தங்களுடைய குதிரைகள் பூட்டிய தேர் அழிய,-(எ-று.)- "கணைதைக்க முதுகிட்டனர்" என அடுத்த கவியில் முடியும. 'அரவதுவசன்'- சந்தவின்பம் நோக்கியஇயல்பு. (204)*

***67.   விட்டவிரதத்தினொடு, வட்டவரிவிற்குரிசி***
***றொட்டகணைதைக்கவவர், கெட்டுமுதுகிட்டனரே.***

*(இ-ள்.) வட்டம் வரி வில் குரிசில் - வளைவான கட்டமைந்த வில்லையுடைய அபிமன், தொட்ட - தொடுத்த, கணை - அம்புகள், தைக்க - தைத்தலால், அவர்- அத்துரியோதனன் தம்பிமார், கெட்டு- தோற்று, விட்ட இரதத்தினொடு - விட்ட தேருடனே (தேரை நீங்கியவர்களாய்), முதுகு இட்டனர்- புறங்கொடுத்தார்கள்;(எ-று.)*

*மோனைக்குப் பொருத்தமாக, விட்ட விரதத்தினொடு எனப் பிரித்து, தாம் வென்றே மீளுவோ மென்னும் விரதத்தை விட்டவர்களாய் எனினுமாம்: ஒடு- மூன்றனுருபு, அடைமொழிப்பொருளது, வட்டம் - வருத்தம்: வடசொல். (205)*

**68. - மூன்றுகவிகள் - துரோணனும் குமாரனும் அபிமனையெதிர்த்துத் தோற்றவை கூறும்.**

***சுகனிகர்துரோணனொடு, மகன்விசயன்மைந்தனெதிர்***
***முகனமரில்வந்துபுர, தகனனெனநின்றனரே.***

*(இ-ள்.) சுகன் நிகர் துரோணனொடு-சுகமுனிவனை யொத்த துரோணனும், மகன்-(அவன்) மகனான அசுவத்தாமனும், விசயன் மைந்தன் எதிர் - அருச்சுனபுத்திரனான அபிமந்யுவின் எதிரில், முகன் அமரில்-முற்போரில், புரதகனன்என-திரிபுரமெரித்த பரமசிவன் போல, வந்து நின்றனர்,-(எ - று.)*

*சுகன் - வேதவியாச புத்திரன்; அவ்வியாசபகவானினும் மேம்பட்ட அறிவொழுக்கங்களையும்; வைராக்கியத்தையும் உடையவன்: பகவானது அமிசமானவன்; பரமபாகவதர்களில் ஒருத்தன்; பாகவத புராண சரித்திரத்தைப் பரீக்ஷித்து மகாராசனுக்குக் கூறியவன்: கிளியினிடமாகப் பிறந்ததனாலும். கிளிமூக்கையுடைமையாலும், சுகனெனப் பெயர். இவனைத் துரோணனுக்கு உவமைகூறினது,ஞானசீலங்களின் மேன்மைக்கு. எதிர் முகன்-எதிர்முகத்தில் என்றுமாம்.புரதகனனுவமை, உக்கிரத்தன்மையில். (206)*

***69.   நிற்குநிலைநின்றுறுவரி, விற்களும்வளைத்தா***
***ருற்கைகளினூறுபல, பொற்கணைதொடுத்தார்.***

*(இ-ள்.) (எதிர்த்துவந்த அவ்விரண்டுபேரும்), நிற்கும் நிலை நின்று - (தாம்) நிற்றற்கு உரிய நிலையிலே நின்று, வரி விற்கள்உம் வளைத்தார் - கட்டமைந்த (தம்) விற்களையும் வளைத்து, உற்கைகளின் - அனற்கொள்ளிகள் போல, நூறு பல பொன் கணை - பல நூற்றுக்கணக்கான அழகிய அம்புகளை, தொடுத்தார்-; (எ - று.)*

*நிலை - யுத்தத்தில வில் வளைத்து அம்பினை யெய்வார்க்கு உரிய நிலை, உற்கை - உல்கா என்னும் வடமொழியின் திரிபு. நூறு என்பதை வினைத் தொகையாகஎடுத்தால், அழிக்கிற எனப்பொருள்; இனி, மோனைப் பொருத்தத்திற்காக ஊறு எனப்பதம் பிரித்தால், அச்சொல் - இடையூறு, கொலை, தழும்பு, தீமை, பரிசம் எனப்பொருள்படும்: அவற்றைச் செய்யவல்ல என்க. (207)*

***70.   வருகணைவிலக்கியெதிர், பொருகணைகளாலே***
***யொருவனொரிமைப்பொழுதி, லிருவரையும்வென்றான்.***

*(இ-ள்.) ஒருவன் - தனியனான அபிமன், எதிர் பொரு கணைகளால் - (தான்)எதிரில் எய்கிற அம்புகளால், வரு கணை விலக்கி - (தன்மேல்) வருகிற (துரோணஅசுவத்தாமரது) அம்புகளைத் தடுத்து, ஓர் இமை பொழுதில் - ஒரு மாத்திரைப்பொழுதிலே, இருவரைஉம் வென்றான்-; (எ - று.)*

*71.- துரோண அசுவத்தாமர் புறங்கொடுத்தமை.*

**தேர்முகமிழந்துமிரு, கார்முகமிழந்தும்**
**போர்முகமிழந்துமவர், நேர்முகமிழந்தார்.**

*(இ-ள்.) அவர் - அவ்விரண்டுபேரும்,- (அபிமனம்புகளால்), தேர் முகம் இழந்துஉம்- தேராகிய இருப்பிடத்தை யிழந்தும், இரு கார்முகம் இழந்துஉம் - இரண்டுவிற்களையும் இழந்தும், போர்முகம் இழந்துஉம்-போர் செய்யுந்தன்மையை யிழந்தும், நேர் முகம் இழந்தார்-(அவனுக்கு) எதிர்முகமாக இருத்தலையும் இழந்தார்கள் (புறங்காட்டிப் போயினர் என்றபடி); (எ - று.)-தேர் முகம் - தேர்முதலியனவும், போர்முகம் - போர்க்களமுமாம். (209)*

*72.- துன்முகன் பொருது முடிதறிதல்*

**துன்முகனுமன்றமரின். முன்முனமர்செய்தே**
**வன்மிகமறிந்ததென, நன்முடிதறிந்தான்,**

*(இ-ள்.) அன்று-அப்பொழுது, துன்முகன்உம்-துர்முகனென்பவனும் அமரில்- போர்களத்தில், முன் முன் அமர் செய்து-முந்தி முந்தி வந்து போர்செய்து, வன்மிகம்மறிந்தது என - புற்றுச் சரிந்ததுபோல, நல்முடி தறிந்தான் - (அபிமனம்பால் தனது)அழகிய கிரீடம் அழியப்பெற்றான்; (எ - று.)*

*வன்மிகம் - வல்மீகமென்னும் வடசொல்லின் திரிபு. துர்முகன் துரியோதனன் தம்பியாதலாலும், அவனை அபிமன் கொன்றனனென்றால் நூற்றுவரையுங்கொல்வே னென்ற வீமன்சபதம் பொய்க்குமாதலாலும், மேல் இவனை வீமன் கொல்வதனாலும், 'முடிதறிந்தான்' என்பதற்கு - இவ்வாறு பொருள் கொள்ளப்பட்டது. துர்*

*முகனென வேறோரரசனுள னெனக்கொண்டால், தலைதுணிபட்டு விழுந்தா னென்னலாம். (210)*

*73. - நான்குகவிகள் - அபிமனோடு சல்லியனும் அவன் மகனும் பொருகையில் மகனிறக்கத் தந்தை புறங்கொடுத்தமை கூறும்.*

**சித்திரவில்வீரனெனு, மந்திரர்பிரானும்**
**புத்திரரிலாதியுரு, மித்திரனும்வந்தார்.**

*(இ-ள்.) சித்திரம் வில் வீரன் எனும் - அழகிய வில்லில் (சிறந்த) வீரனெனப்படுகிற, மத்திரர் பிரான்உம்-மத்திரதேசத்தார்க்கு அரசனான சல்லியனும், புத்திரரில்-(அவனது) மக்களுள், ஆதி - முதல்வனான, உருமித்திரன்உம் - உருமித்திரனென்பவனும், வந்தார் - (எதிர்த்து) வந்தார்கள்; (எ - று.)*

*துணைவரோடும் புத்திரரோடும் போர்புரி சேனையோடும், மத்திரபதி சுயோதனன் சூழ்ச்சியால் அவனுக்குப் படைத்துணையாயினான் ஆதலால், சல்லியபுத்திரனும் துரியோதனன்பக்கத்தவ னாவன்.*

*74.* **வந்தபிமனோடமரின், முந்தியிருவோருஞ்**
**சிந்துகணைமாரிகளி, னந்தரமடைத்தார்.**

*(இ-ள்.) வந்து-, அபிமனோடு-, அமரில் முந்தி-போரில் முற்பட்டு, இருவோர்உம் - அவ்விரண்டுபேரும், சிந்து கணை மாரிகளின் - (தாம்) சொரிந்த அம்புமழைகளால்,அந்தரம் அடைத்தார் ஆகாயத்தை மறையச்செய்தார்கள்; (எ-று.) -* ***பி - ம்*** *: மறைத்தார். (212)*

***75. அவரவரெடுத்தவிரு, தவருநடுவெட்டா***
***விவர்கணைவிலக்குவன, கவர்கணைதொடுத்தான்.***

*(இ-ள்.) (உடனே அபிமன், தன் அம்புகளால்), அவர் அவர் எடுத்த இரு தவர்உம்- இவ்விரண்டுபேரும் எடுத்துவந்த இரண்டு விற்களையும், நடு வெட்டா - நடுவிலேதுண்டித்து, இவர் கணை விலக்குவன - இவர்களது அம்புகளைத் தடுப்பனவான,கவர் கணை (பகைவருயிரைக் கவரவல்ல அம்புகளை, தொடுத்தான்-(இவர்கள்மேற்)பிரயோகித்தான்; (எ-று.)-கவர்கணை - நுனியிலே பிளப்புள்ள அம்பும், ஒன்றுபலவாகும் அம்புமாம். (213)*

***76. மைந்தனொருவாளியினி, லந்தரமடைந்தா***
***னொந்துபலவாளியொடு, தந்தைபுறகிட்டான்.***

*(இ-ள்.) (அப்பொழுது), மைந்தன் - சல்லியபுரத்திரன், ஒரு வாளியினில் - (அபிமனது)அம்புஒன்றால், அந்தரம் அடைந்தான்- வீரசுவர்க்கஞ் சேர்ந்தான் [இறந்தான்]:(பின்பு), தந்தை - அவன் தந்தையான சல்லியன், நொந்து- (புத்திரசோகத்தால்)வருந்தி, பல வாளியொடு- (தன்மேல் தைத்த) அநேக பாணங்களுடனே,புறகுஇட்டான் - முதுகுகொடுத்தான்; (எ - று.) (214)*

***77.- அபிமனது உறுதிநிலைமைகண்ட மகாரதர்பலர் உடைந்துபோதல்.***

**வென்றபிமன்வாளமரி, னின்றநிலைகண்டே**
**யொன்றுபடமாவிரதர், சென்றனருடைந்தே.**

*(இ-ள்.) (இவ்வாறு), அபிமன்-, வாள் அமரில்-ஆயுதங்களைக் கொண்டு செய்யும்போரில். வென்று- (அவர்களைச்) சயித்து, நின்ற-, நிலை-உறுதிநிலையை, கண்டுஏ- பார்த்தமாத்திரத்தாலே, மர இரதர்- மகாரதவீரர் (பலர்), ஒன்றுபட- ஒருசேர,உடைந்து சென்றனர்-அழிந்துபோயினர்; (எ - று.)*

*வாளமர் கொடியபோர் எனவுமாம். மோனைக்கும் இடத்திற்கும் ஏற்ப, 'வில்லமரில்'எனப் பாடங்கொள்ளுதல், சிறக்கும். (215)*

***78. கவிக்கூற்று: அபிமனாலடிபட்டவர் மிகப்பலரெனல்.***

**கெட்டவர்க ளின்னரென, முட்டவுரைக் கொண்ணா**
***பட்டவரநேகரிவன், விட்டகணையாலே.***

*(இ-ள்.) இவன் விட்ட கணையால்ஏ - அபிமன் எய்த அம்புகளாலே, பட்டவர்- இறந்தவர், அநேகர்- பலர்; கெட்டவர்கள்- தோற்று ஒழிந்தவர்கள், இன்னர் என - இவ்வளவின ரென்று முட்ட உரைக்க ஒண்ணா-முழுவதும் சொல்லமுடியாது; (எ-று.)*

*உரைக்க என்னும் வினையெச்சமே தொழிற்பெயர்ப்பொருளதாய், ஒண்ணா(து) என்னும் ஒருமைமுற்றுக்கு எழுவாயாம்: இனி, 'உரைக்கொண்ணார்' எனப்பாடமிருப்பின்நலம். கெட்டார்- காணாது போனவரொனினுமாம். (216)*

*வேறு.*
***79. - இரண்டுகவிகள் - சக்கரவியூகத்தைப்பிளந்துநடுநிற்கும்***
***அபிமனைக் குறித்த வருணனை.***

**முற்சக்ரயூகம் பிளப்புண்டபின் முன்பி னோடும்**
**பொற்சக்ரமென்ன வெறித்தாமம்பொலிந்து சூழ**

***விற்சக் ரமாக மணித்தேரினின் மீது நிற்பான்***
***கற்சக் ரமாக நடுவூர்செங் கதிரொ டொத்தான்.***

*(இ-ள்.) சக்ரயூகம் - (துரியோதனனது) சக்ரவியூகம். முன் பிளப்புண்டபின்-(தன் அம்புகளால்) முன்னிடம் பிளக்கப்பட்ட பின்பு, முன்பினோடுஉம்- வலிமையுடனே, வெறி தாமம்- வாசனையையுடைய வெற்றிமாலை, பொன் சக்கரம் என்ன- பொன்வட்டம் போல, பொலிந்து சூழ-(தன்கழுத்தைச்) சுற்றிலும் விளங்க, வில்சக்ரம் ஆக-(கையிற்பிடித்த) வில் வட்டமாக வளைந்திருக்க, மணி தேரின்மீது- மணிகள்கட்டிய தேரின்மேல், நிற்பான்-(சக்கரவியூகத்தின் மத்தியில் தனியே) நின்றுவிளங்குபவனான அபிமன், கல் சக்ரம் ஆக சக்கரவாளமலை சூழ்ந்துநிற்க, நடுஊர்- (அதன்) நடுவிடத்தில் [ஆகாயத்திற்] செல்லுகிற, செம் கதிரொடு - சிவந்தகிரணங்களையுடைய சூரியனை, ஒத்தான்- எ - று.)*

*பொற்சக்ரம் - வட்டமாகிய பொன்னாரம். 'வெறித்தாமம் பொலிந்து சூழ' என்பதற்கு- பரிமளமுடைய (சிவனது) கொன்றைப்பூமாலை (தன்னைச்) சுற்றிலும் விளங்கஎன்றும் உரைக்கலாம். கதிரொடுஒத்தான்-மூன்றாமுருபு இரண்டாம்வேற்றுமைக்குஉரிய ஒப்புப்பொருளில் வந்தது; உருபுமயக்கம். **பி-ம்:***
*மொய்ம்பினோடும். எறிதாமம்.கற்சக்ரநாகம்.*

*இதுமுதல் ஐந்துகவிகள்-பெரும்பாலும் மூன்றாஞ்சீ ரொன்று புளிமாங்கனிச்சீரும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய நெடிலடி நான்குகொண்ட **கலிநிலைத்துறைகள்.** (217)*

***80. வடாதுதுந்தெனாதும்பரராசர்வகுத்தநேமிக்***
***குடாதுங்குணாதுமவற்றுட்படுகோணநான்கும்***
***விடாதுந்துதேரின்மிசையெங்கும்விராயபோது***
***சடாதுங்கமௌலிப்புரசூதனன்றன்னையொத்தான்.***

*(இ-ள்.) பர ராசர்-பகைவரான அரசர்கள், வகுத்த- அமைத்த, நேமி - சக்கரவியூகத்தில், வடாதுஉம்- வடக்குப்பக்கத்திலும், தெனாதுஉம்-தெற்குப் பக்கத்திலும்,குடாதுஉம்-மேற்குப் பக்கத்திலும், குணாதுஉம்-கிழக்குப்பக்கத்திலும், அவற்றுஉள்படு-அந்நான்கு பெருந்திசைகளின் இடையிற் பொருந்திய, கோணம் நான்கும்உம்-(தென்கிழக்கு தென்மேற்கு வடமேற்கு வடகிழக்கு என்னும்) நான்கு மூலைத்திசைகளிலும், எங்கும்உம்-(ஆக) எல்லா விடத்திலும், விடாது உந்து தேரின்மிசை - விடாமற் செலுத்துந் தேரின்மேல் விராயபோது-(போர்க்குப்) பொருந்திய பொழுதில், (அபிமன்), சடாதுங்கம் மௌலி- (கபர்த்த மென்னுஞ்) சடையையுடைய உயர்ந்த முடியையுடைய, புரசூதனன் தன்னை-திரிபுர மெரித்தபரமசிவனை, ஒத்தான்-; (எ - று.)*

*அளவிறந்த பகைவர்கூட்டத்தின்மத்தியில் அஞ்சாது வீரத்தோடுநின்று தானொருவனே தொழில்செய்தற்குப் பரமசிவன் உவமம். பரராஜர், கோணம், ஜடாதுங்கமௌலி, புரஸூதநன்-வட சொற்கள், வடாது-வடக்கிலுள்ளது; இது- மரூஉமொழி-மற்றை மூன்றையும் அங்ஙனமே காண்க. விராய- விராவு என்னும் பகுதி,ஈறுதொக்கது. (218)*

*81,-அபிமன் வென்றமைக்கு நாணித் துரியோதனன் அவன்மீது பல்லாயிரவர்சூழத் தன்மகனைச் செலுத்துதல்.*

***வின்மைந்துகொண்டுதகுவோர்தமைவென்றவீர***
***னன்மைந்தனுக்குமுதுகிட்டானரென்றுநாணி***
***மன்மைந்தரெண்ணில்பதினாயிரர்வந்துசூழத்***
***தன்மைந்தனையுமுடனேவினன்சர்ப்பகேது.***

*(இ-ள்.) 'வில் மைந்துகொண்டு - வில்லின் வலிமையால், தகுவோர்தமை வென்ற-(நிவாதகவசர் காலகேயர் என்னும்) அசுரர்களைச் சயித்த, வீரன்- பராக்கிரமசாலியானஅருச்சுனனுடைய, நல்*

*மைந்தனுக்கு-சிறந்த புத்திரனான அபிமனுக்கு, முதுகுஇட்டனர்- (தன்சேனையார்) புறங்கொடுத்தார்கள்,' என்று- என்றகாரணத்தால், நாணிவெட்கப்பட்டு,-சர்ப்ப கேது- பாம்புக்கொடியனான துரியோதனன்,-எண்ணில்பதினாயிரர் மன்மைந்தர் வந்து சூழ- அளவிறந்த பதினாயிரக்கணக்கானஇராசகுமாரர்கள் சுற்றிலும் வர, தன் மைந்தனைஉம்- தன்மகனான இலக்கணனையும்,உடன் ஏவினன்-விரைவில் எதிர்செலுத்தினான்; (எ-று.)-தகுவர்.*
*(219)*

*82.- இரண்டுகவிகள் - வந்துபொருத யாவரும் முதுகிட்டமை கூறும்.*

***மேல்வந்தவேந்தன்மகனும்பலவேந்துமூழிக்***
***கால்வந்துவேலைக்கடறன்னைக்கலக்குமாபோல்***
***நூல்வந்தகொற்றச்சிலையாசுகநொய்தினேவி***
***மால்வந்தகைக்குன்றனையானைமுன்வந்துசூழ்ந்தார்.***

*(இ-ள்.) ஊழி கால் - பிரளயகாலத்துப் பெருங்காற்று, வந்து-, வேலை கடல்தன்னை - கரையையுடைய கடலை, கலக்கும் ஆ போல் - கலங்கச்செய்யும் விதம்போல, (சேனாசமூகத்தைக் கலங்குவிக்கும்படி), நூல் வந்த - தநுர்வேதமுறைப்படி பொருந்தின கொற்றம் சிலை - வெற்றியையுடைய வில்லினாலெய்யப்படுகிற, ஆசுகம் - அம்பை, நொய்தின் ஏவி - (எதிரிகள்மேல்) விரைவாகச் செலுத்தி, மால் கைவந்த குன்று அனையானை-திருமாலாகிய கண்ணனது கையிற் (குடையாகப்) பொருந்திய கோவர்த்தனமலையை யொத்தவனானஅபிமனை, மேல் வந்த வேந்தன் மகன்உம்- எதிர்த்து வந்த துரியோதனகுமாரனானஇலக்கணனும், பல வேந்துஉம்-(மற்றும்) பல அரசர்களும், முன்வந்து சூழ்ந்தார்-எதிரில்வந்து வளைந்து கொண்டார்கள்; (எ - று.)*

*ஊழிக்கால்-அபிமனுக்கும், வேலைக்கடல்-பகைவர்சேனைக்கும் உவமை. கலக்குமாபோல் ஏவிஎன்க. இந்திரனேவலால் எல்லா மேகங்களுஞ் சூழ்ந்தும் கண்ணனெடுத்த கோவர்த்தனகிரியை யாதொன்றும் ஊறுசெய்ய மாட்டாமைபோல, துரியோதனனேவலால் மிகப்பல அரசர் சூழ்ந்தும் அபிமனை யாதொன்றுஞ் செய்யமாட்டாமையின். இவ்வுவமை கூறினார். (220)*

***83. முன்முன் புமுந்திப் பலரேவிய மூரிவாளி***
***தன்முன் புதூவு மலர்போலிரு தாளில் வீழ***
***வின்முன் புடையோ னொருவில்லின்வி சித்த வம்பாற்***
***பின்முன் புபட்ட பலகோடிபி றங்கு சேனை.***

*(இ-ள்.) பலர் - அநேகவீரர்கள், முன் முன்பு முந்தி - (ஒருவரினும் ஒருவர்) முன்பாக விரைந்துமுற்பட்டு, ஏவிய-பிரயோகித்த, மூரி வாளி-வலிமையையுடைய அம்புகள், தன் முன்பு- அவ்வபிமனதுஎதிரில், தூவும் மலர்போல்-தூவிய பூக்கள்போல, இரு தாளில் வீழ-இரண்டு பாதங்களிலும் வந்துவிழுந்திட,- (அப்பொழுது), வில் முன்பு உடையோன் வில்லின்வலிமையையுடைய அபிமன்-ஒரு வில்லின்-(தனது) வில் ஒன்றைக்கொண்டு, விசித்த- இழுத்துவிட்ட, அம்பால்- அம்புகளால், பலகோடி பிறங்கு சேனை-அநேக கோடிக்கணக்காண விளங்குகிற பகைவர்சேனைகள், பின் முன்பு பட்ட-பின்முன்னாகப் புறங்கொடுத்தழிந்தன; (எ-று.)*

*கீழ் அபிமனுக்குச் சிவபிரானை உவமை கூறிப்போந்தனராதலால், இங்கு, அவன்மேலெய்யப்பட்ட அம்புகளுக்கு மலர்களை உவமை கூறினார். இருதாளில் தூவுமலர்போல் என மொழிமாற்றினுமாம். பின்முன்புபடுதல்-மார்பு பின்பும் முதுகு முன்னுமாக மீளுதல். (221)*

வேறு.

### *84.- வென்றஅபிமன் புலிபோன்று மேற்செல்லுதல்.*

***அரவு யர்த்தவன் மதலையொ டடலுடை யரசர் புத்திர ரனை***
***வரு மெழுபரி,***
***யிரவி பொற்கதிர் தெறுதலி னிரிதரு   மிருளெனத்***
***திசை திசைதொறு முதுகிட,***
***வுரனு டைப்பணை முழவுறழ் திணிபுய னொருச மர்த்தனு***
***மொருதனி யிரதமும்,***
***விரவி முற்பொரு களமழ குறும்வகை விறல்வ யப்புலி***
***யெனவெதிர் முடுகவே.***

*(இ-ள்.) அரவு உயர்த்தவன் மதலையொடு-பாம்புக்கொடியை உயர எடுத்த துரியோதனனுக்குக் குமாரனான இலக்கணனுடன் (வந்த), 'அடல்உடை அரசர் புத்திரர் அனைவர்உம்- வலிமையையுடைய (மற்றைய) இராசகுமாரர்களெல்லோரும்,- எழுபரி இரவி-ஏழு குதிரைகளையுடைய சூரியனது, பொன் கதிர்-பொன்னிறமான அல்லது அழகிய கிரணம், தெறுதலின் - அழித்தலால், இரிதரும்- சிதறியோடுகிற, இருள் என - இருள்போல, திசை திசைதொறும்- எல்லாத்திக்குக்களிலும், முதுகு இட- புறங்கொடுத்தோடும்படி,-உரன் உடை-வலிமையையுடைய, பணை-பருத்த, முழவுஉறழ்- மிருதங்கமென்னும் வாத்தியத்தை (வடிவத்தில்) ஒத்த, திணிபுயன் - வலியதோள்களையுடைய, ஒரு சமர்த்தன்உம்-அசகாயசூரனான அபிமனொருத்தனே, ஒருதனி இரதம்உம் வீரன்- ஒப்பற்ற (தன்) ஒருதேரின்மீது பொருந்தி, முன் பொரு களம்அழகு உறும் வகை எதிரிற் போர்செய்கிற யுத்தகளத்தின் இடம் அழகுமிகும் படி,விறல் வயம் புலி என- வெற்றியையும் வலிமையைமுடைய புலிபோல, எதிர் முடுக-எதிர்த்துநெருங்க. (எ - று)- "இளையவித்தகன் எதிருறவருதலும்" (85) என இயையும;ுளகம்.*

*பெருந்திசையும் கோணத்திசையு மெனத் திசை இருவகைப் படுதலால். 'திசைதிசைதொறும்' என்றார் மூன்றாம்அடியில், உம்மைகள் இரண்டும் - இழிவுசிறப்பாய், தனித்திருக்குந்தன்மையைக் காட்டும். இவற்றில் குற்றெழுத்துக்கள் பயின்றுவந்தது,* ***குறுஞ்சீர்வண்ணம்;*** *இவற்றில்வந்த சில ஐகாரங்களும் குறுக்கமாதலால், குற்றெழுத்தோ டொக்கும்.*

*இதுமுதல் ஏழு கவிகள் - ஒன்று ஐந்தாஞ் சீர்கள் புளிமாச்சீர்களும், இரண்டு ஆறாஞ் சீர்கள் கூவிளச் சீர்களும், மற்றைநான்கும் கருவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்* ***ட எண்சீராசிரியச் சந்தவிருத்தங்கள்.*** *' தனன தத்தன தனதன தனதன தனன தத்தன தனதன தனதன' எனச் சந்தக் குழிப்புக் காண்க. (222)*

### *85.-ஆறுகவிகள் - அப்போது எதிர்ப்பட்ட இலக்கணகுமாரனொடுபொருது அபிமன் அவனது தலையைத்துணித்தமை கூறும்.*

***வளையமுத்துதிர்விழியுடைவரிசிலைமதனன் மைத்துனனவனிபர்***
***பலரையு,***
***மிளையெனப்புறமிடவமர்பொருதபினிளையவித்தகனெதி***
***ருறவருதலு,***
***முனையெயிற்றிளநிலவெழவகல்வெளிமுகடுடைப்ப***
***தொர்நகைசெய்துகடவின,***
***னுளைவயப்பரியிரதமுமிரதமுமுரனொடொத்தினவுருள்களு***
***மொடியவே.***

*(இ-ள்.) வளைய - சுற்றிலும், முத்து உதிர் - முத்துக்கள் சிந்துகிற, விழி உடை-கணுக்களையுடைய, வரி சிலை - கட்டமைந்த (கரும்பு) வில்லையுடைய, மதனன் -மன்மதனுக்கு, மைத்துனன் - அத்தைமகனான அபிமந்யு,- இளை என - மேகம்போல, அவனிபர் பலரைஉம் புறம் இட அமர் பொருதபின்-அரசர்கள் அநேகரையும்முதுகு கொடுக்கும்படி போர் செய்த பின்பு, இளைய வித்தகன்-*

*இலக்கணகுமாரன்,எதிர் உற வருதலும்- எதிரிற் பொருந்த வந்தவளவில்,-முளை எயிறு-முளைத்துள்ளபற்களின், இள நிலவு-இளமையான சந்திரகாந்திபோன்னற வெள்ளொளி, எழ -வெளித்தோன்றும்படி, அகல் வெளி முகடு உடைப்பது ஓர் நகை செய்து-பரந்த(அண்டகோளத்தின்) மேல்முகட்டை (அதிர்ச்சியால்) உடையச்செய்வதானஒருபெருஞ் சிரிப்பைச் செய்து, கடவினன் -(அவன் மேல் தன் தேரைச்)செலுத்தினான்; (செலுத்தவே), உளை வய பரி இரதம்உம் இரதம்உம்-பிடரிமயிரையுடைய வலிய குதிரைகளையுடைய இருவர்தேர்களும், உருள்கள்உம் உடைய-சக்கரங்களும் உடையும்படி, உரனொடு ஒத்தின-வலிமையோடு (ஒன்றையொன்று) தாக்கின; (எ - று.)*

*சிறந்தகரும்பினின்று முத்துப் பிறக்குமென்பது நூற்கொள்கை யாதலால், கரும்புவில்லை 'வளையமுத்துதிர்விழியிடை வரிசிலை' என்றார், 'வளையமுத்துதிர்' என்பதற்கு-தான் வளைதலால் முத்தைச்சொரிகிற எனினுமாம். விழி என்பது- கண்ணை உணர்த்த, அது-கணுவைக் குறிக்கும்; இங்ஙனம் குறித்தல், வடநூலில் **'லக்ஷிதலக்ஷணா'** எனப்படும்: தமிழ் நூலில் ஆகுபெயரிலக்கணத்திலாவது, பிறகுறிப்புவகையிலாவது இது அறிந்து அடக்கத்தக்கது: (திவ்வியப் பிரபந்தத்தில், பக்தியை "எட்டினோடிரண்டு" [பத்து] என்றும், சிந்தாமணியில் புத்திசேனனை "திங்கள் [மதி] விரவியபெயரினான்" என்றுங் கூறியவை இத்திறத்தன.)*

*அத்தை மைந்தனை 'மைத்துனன்' என்பது, முற்காலவழக்கு; பாண்டவர்களைக் கண்ணனுக்கு 'மைத்துனன்மார்' என்று பலவிடத்திலும் கூறுதல் காண்க. இங்கே, **'மதனன்' என்றது. மன்மதனது** அமிசமான **பிரத்யும்நனை.** சிவபிரான் மன்மதனை யெரித்த காலத்தில் அம்மன்மதன் மனைவியான ரதீதேவி மிகவருந்திப்பரமசிவனைச் சரணமடைந்து பலவாறு பிரார்த்திக்க, அக்ககடவுள் அவளுக்கு மாத்திரம் அவன் ரூபமுடையவனாகவும், மற்றையோர்க்கு, ரூபமில்லாதவனாகவும் இருக்கும்படி அருள்செய்ய, அவ்விரதி 'எண்கணவன் என்னை உருவமுடையவனாய் மீளவும் கூடுங்காலம் எப்பொழுது?' என்று வினாவ, 'பூமிபாரநிவ்ருத்தியின் பெருட்டுத் திருமால் கண்ணனாகத் திருவவதரிக்கையில், அப்பிரானுக்குக் குமாரனாய்க் காமன் தோன்றி நின்பால் கூடுவன்' என்று சிவபெருமான் அருளிச்செய்திருந்தான்: அதன்படி பின்பு கண்ணனுக்கு மனைவியும் திருமகளின் திருவவதாரமுமான ருக்மிணிப்பிராட்டியினிடம் மன்மதன் பிரத்யும்நனென்னுங் குமாரனாகத் தோன்றினானென வரலாறு காண்க. பிரத்யும்நனது தந்தையான கிருஷ்ணனுக்கு உடன்பிறந்தவளான சுபத்திரையினிடந் தோன்றினமைபற்றி, அபிமன், மதனன்மைத் துன்னாவன். 'வளையமுத்துதிர்விழி' என்ற சொற்போக்கில், முற்*

*றும் முத்துப்போன்ற நீர்த்துளி சிந்துகிறகண்கள் என ஒருபொருள் தொனிக்கும். கரும்புவில்லை 'வளையமுத்துதிர்விழியுடை வரிசிலை' என்றும், அபிமனை 'மதனன் மைத்துனன்' என்றும் சுற்றுவழியாற் சொன்னது- **'பர்யாயோக்தம்'** என்னும் அலங்காரம்: தமிழில், **பிறிதினவிற்சியணியெனப்படும்;** கருதிய பொருளை அதற்குரியவிதத்தாற் கூறாது மற்றொருவிதத்தாற் கூறுவது அது.*

*"மங்குலு மிளையு மாலு மம்புதமும், விண்டுவு மென்றிவை மேகப் பெயரே" என்ற பிங்கலந்தையால், இளையென்பது மேகமாதல் அறிக. இனி, 'இளையோன்' என்பதற்கு-சுற்றுவேலியை அழித்தல்போல் எனினுமாம்; "இளைபுய விளமை வேலி தலைக்காவ லிவை நாற்பேரே" என்ற நிகண்டினால், இதன் பலபொருள்களும் விளங்கும். இங்கே, மேகம்-அம்பு மழைபொழிதற்கு உவமை. இளையவித்தகன் - வித்தகவிளையவனெனன மொழி மாறுக; இது -லக்ஷண குமார னென்பதற்கு ஒரு பரியாயப் பெயராக நின்றது. **பி -ம்** : உடையவே. (223)*

***86. ரகுகுலத்தவனிளவலுநிசிசரரிறையளித்தருளிளவலுமிரு***
***வரு***
***நிகரெனத்துணைவிழிகடைநிமிர்தரநெறிகடைப்புருவமு***
***மிகமுரிதர,***
***முகிலிடித்தெனவெழுகடல்களுமிகமொகுமொகுத்தெனவனி***
***லமுமனலமு,***

***முகமுடித்தெனமுறைமுறைபலபலவுரையெடுத்தன***
***ரொருவரொடொருவரே.***

*(இ-ள்.) ரகு குலத்தவன்-ரகுவென்னும் அரசனது வமிசத்திலவதரித்த இராமபிரானுக்கு, இளவல்உம்-தம்பியான இலக்குமணனும், நிசிசரர் இறை- இராக்கதர்க்கு அரசனான இராவணன், அளித்து அருள் - பெற்று அன்போடு வளர்த்த, இளவல்உம்-இளங்குமரனான இந்திரசித்தும், நிகர் - (தமக்கு) ஒப்பு, என-என்று (கண்டவர்) சொல்லுபடி, இருவர்உம்-(அபிமன் இலக்கணன் என்னும்)இரண்டுபேரும், துணை விழி-(தம்தம்) கண்களிரண்டும், கடை நிமிர்தர- (கோபத்தால்) நுனி விழிக்கவும், புருவம்உம்-புருவங்களும், நெறி கடை-நெறித்த நுனியையுடையனவாய், மிக முரிதர- மிகவும் முரிபடவும் முகில் இடித்து என- மேகங்கள் இடித்தாற் போலவும், எழு கடல்கள்உம் மிக மொகுமொகுத்து என-ஏழு கடல்களும் மிகவும் ஒலித்தாற் போலவும், அனிலம்உம் அனலம்உம் உகம் முடித்து என- காற்றும் நெருப்பும் உகாந்தகாலத்தில் (உலகத்தை) முடிக்க எழுந்தாற்போலவும், ஒருவரொடு ஒருவர்-ஒருத்தரோடு ஒருத்தர், முறைமுறை-மாறிமாறி, பலபல உரை எடுத்தனர் - அநேகம் வீரவாதங்களைக் கூறத்தொடங்கினார்கள்; (எ-று.)- அவற்றைமேல் இரண்டு கவிகளிற் காண்க.* ***பி - ம்:*** *அனிலமுமனிலமும்.*

*சூரியகுலத்தில் ரகுவென்பவன் திக்குவிசயஞ்செய்து பிரசித்தி பெற்ற ஓரரசனானதலால், அவன்மரபிற் பிறந்த ஸ்ரீராமனை 'ரகுகுலத்தவன்' என்றார்; 'ராகவன்என்ற ஒரு திருநாமமுங் காண்க. மேல், கொல்பவனான சிறந்த அபிமனுக்குஇலக்குமணனும், கொல்லப்படுபவனான கொடிய இலக்கணனுக்கு இந்திரசித்தும்உவமையெனக் காண்க: இதில், அயோக்கியனான இராவணன் துரியோதனனுக்கு*

*ஒப்புமையாதலும் ஏற்கும். விழிகடை நிமிர்தர் 'கோபத்தோடு கடைக்கண்களால் உறுக்கிவிழித்துப்பார்த்தல். நெறி கடைப் புருவம் மிகமுரிதல் - கோபத்தாற் புருவத்தை மிகுதியாக நெறித்தல். மொகுமொகுத்தல் - ஈரடுக்கு ஒலிக்குறிப்பு; இரட்டைக் கிளவி.*
*(224)*

***87. ஞெலிமரத்தினுமனனெரியெழவெழநிருபர்விட்டனகசரத***
***துரகமு,***
***மெலிவெழப்பிறகிடவுநின்னொருதனிவிறல்குறித்திரதமு***
***மெதிர்கடவினை,***
***யொலிபடுத்தெதிர்வரின்விரிசுடரெதிருலவுவிட்டி***
***லினுயிரழிகுவையென,***
***வலியுறுத்தினனவனிபன்மதலையைவலியவச்***
***சிரன்மதலைதன்மதலையே.***

*(இ-ள்.) ' ஞெலி மரத்தின்உம் - அரணிக்கட்டையினின்று உண்டாவதனினும், மனன் எரி எழ எழ-மனத்தில் கோபாக்கினி மிகுதியாக உண்டாக, நிருபர் - அரசர்கள், விட்டன-(எதிர்) செலுத்தினவையான, கச ரத துரகம்உம் - யானைகளும் தேர்களும் குதிரைகளும் (எல்லாம்), மெலிவு எழ - தளர்ச்சிமிக, பிறகு இடஉம்- பின்னிட்டுஓடவும், (நீ), நின் ஒரு தனி விறல் குறித்து-(துணையில்லாமல்) தனிப்பட்ட நின் ஒருத்தனது வலிமையை நன்குமதித்துக்கொண்டு, இரதம்உம் எதிர் கடவினை - தேரையும் (என்) எதிரிற் செலுத்தினாய்; (இங்ஙனம்), ஒலி படுத்து எதிர் வரின் - ஆரவாரத்தை மிகுதியாகச்செய்து எதிரில்வந்தால், விரி சுடர் எதிர் உலவு விட்டிலின்- பரவியெழுகிற விளக்கி னெதிரிற்பட்ட விட்டிலென்னுஞ்சிறுபறவை போல உயிர்அழிகுவை - இறப்பாய், என-என்று, அவனிபன் மதலையை - துரியோதனராசன்மகனான இலக்கணனை (நோக்கி), வலிய வச்சிரன் மதலைதன் மதலை -வலிமையையுடைய வச்சிராயுதத்தையுடைய இந்திரனது மகனான அருச்சுனனுடைய புத்திரனாகிய அபிமன், வலி உறுத்தினன்-வலிமையோடு உறுத்திக்கூறினான்: (எ-று.)-இது -* ***அபிமனுடைய வீரவாதம்.***

*ஞெலிமரம் - தீக்கடைந்தெடுக்கப்படும் மரம்; "அரணி ஞெலி கோல் ஞெகிழிதீக்கடைகோல்" என்பது பிங்கலந்தை; "தீயைத்தரு கோலே ஞெலிகோ லென்ப" என்றநிகண்டுங் காண்க. விட்டில்- பறந்து விளக்கில் வீழ்ந்து அழிவதொரு செந்து. (225)*

***88. இவனுமப்பொழுதெதிரொலியெனநனியிகலருச்சுனன்மத லையையுனதுயி., ரவனிபர்க்கெதிர்கவருவனொருநொடியளவையிற் பொருதெனமுனையணுகினன், சிவன்வளைத்தபொன்மலையினும்வலியினசிலைவளைத் தனரிருவருமெறிதரு, பவனன்மைக்கடல்வடவையைமுனிதருபவனமொத்ததுபடுகள முழுதுமே.***

*(இ-ள்.) இவன்உம் - இலக்கணனும், அப்பொழுது-, எதிர் ஒலி என - பிரதித்தொனிபோல, நனி - மிகுதியாக, இகல் அருச்சுனன் மதலையை-வலிய அருச்சுனனுக்குக் குமாரனான அபிமனை (நோக்கி), '(யான்), பொருது - போர் செய்து,ஒருநொடி அளவையில்- ஒருகைந் நொடிப்பொழுதினுள்ளே, உனது உயிர் - உன்உயிரை, அவனிபர்க்கு எதிர்- அரசர்களெதிரில், கவருவன் - வாங்கிவிடுவேன்,' என- என்று (வீரவாதஞ்) சொல்லிக்கொண்டு, முனை அணுகினன்-*

*எதிரிற் சமீபித்தான், (பின்பு), இருவர்உம், இந்த இரண்டுபேரும் சிவன் வளைத்த பொன் மலையின்உம் வலியின் சிலை வளைத்தனர்-சிவபிரான் (முன்பு ஒருகால் வில்லாக) வணக்கிய பொன்மயமான மகாமேருகிரியினும் வலிமையையுடைய (தம்) வில்லை வளைத்துப் பொருதார்கள்: (அச்சமயத்தில்), படு களம்முழுவதும்-அப்போர்க்களம் முழுவதும், எறிதரு பவனன்-வீசுகிற காற்று, மை கடல் வடவையை முனிதரு-கரியகடலிலுள்ள படபாமுகாக்கினியைச் சினந்து எழுப்புகிற, பவனம்-காற்றை, ஒத்தது-; (எ - று.)*

*தன்னைநோக்கி அபிமன் கூறியவாறே இலக்கணன் தான் அவனைநோக்கிக் கூறினா னென்பதை, 'எதிரொலியென'என்ற உவமையால் விளக்கினார், பவநம்- வடசொல். ஏறிதருபவனன் மைக்கடல்வடவையை முனிதரு பவன மொத்தது- போர்க்களம் மிகக் குழப்பமடைந்தது என்றவாறாம். எரிகிற நெருப்பைக் காற்று மிகுவித்த வியல்பு. பவநம்-இடத்தையென்று கூறுவாருமுளர். **பி - ம்:** வடவையின். முனிதருபருவம். (226)*

***89. துரகதத்துடல்கெழுமினசிலகணைதுவசமற்றிடவிரவினசில கணையிருவர் நெற்றியுமெழுதினசிலைகணையிருபுயத்திடைசொருகின சிலகணை யரணியொத்தெரிகதுவினசிலகணையகன் முகட்டையு முருவினசிலகணை, முரணிலக்கணகுமரனுமபிமனு முடிகியிப்படி முரணமர்புரியவே***

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ-ள்.) (இருவரும் ஒருவர்மேல்ஒருவர் எதிர்த்து எய்த அம்புகளுள்), சில கணை-சிலஅம்புகள், துரகதத்து உடல்-(எதிரியின்) தேர்க்குதிரைகளின் உடம்பில், கெழுமின-நிறைந்தன; சிலகணை-, துவசம் அற்றிட - கொடிஅறும்படி, விரவின - கலந்தன; சிலகணை-, இருவர் நெற்றிஉம்- இரண்டுபேரது நெற்றியிலும், எழுதின- பதிந்தன; சிலகணை,- இரு புயத்திடை இரண்டு தோள்களிலும், சொருகின - தைத்தன;சிலகணை-, அரணி ஒத்து அரணிக்கட்டைபோன்று, எரி கதுவின-தீயை உண்டாக்கின, சிலகணை-, அகல் முகட்டைஉம்-பரந்த ஆகாயத்தின் மேலிடத்தையும், உருவின-ஊடுருவிச்சென்றன; முரண்- வலிமையையுடைய, இலக்கணகுமாரனும்*

*அபிமனும்-, முடுகி-முனைந்து, இ படி-இவ்வாறு, முரண் அமர் புரிய-கொடும்போரைச்செய்ய,-(எ-று.) -"கணை *** முழுகின' என அடுத்தகவியோடு முடியும்; இனி, இச்செய்யுளைக் குளகமாக்காமல் 'அமர்புரிய'என்பதை, 'கெழுமின' என்பது முதலியவற்றோடு முடித்தலும் ஒன்று. அரணி - தீக்கடைகோல்.*

***90. மழைமு கிற்குல நிகர்திரு வடிவினன் மருகன் முட்டியு***
***நிலையுமெய் வலிமையு,***
***மழகு றத்தொடு கணைகுரு பதிமக னவயவத்தினி***
***லடைவுற முழுகின,***
***கழல்க ளற்றன விருதொடை நழுவின கவச மற்றது***
***கரமலர்புயமுடன்,***
***முழுதுமற்றன வொளிவிடுநவமணி முகுட மற்றது***
***முகிழ்நகை முகனொடே.***

*(இ-ள்.) மழை - மழையைப்பொழிகிற, முகில்-காளமேகத்தின், குலம்-இனத்தை, நிகர்-ஒத்த, திருவடிவினன்-(கரிய)*

*திருமேனியையுடைய கண்ணனுக்கு, மருகன்-மருமகனான அபிமன், முட்டிஉம்-(வில்லைப்பிடிக்குங்)கைப்பிடியும், நிலைஉம் - நிற்கிறநிலைமையும், மெய் வலிமைஉம்-தேகபலமும், அழகு உற - அழகாகப் பொருந்த, தொடு-எய்த, கணை-அம்புகள்,குரு பதி மகன்-குருகுலத் தலைவனான துரியோதன புத்திரனாகிய இலக்கணனது,அவயவத்தினில்-உடம்பின் உறுப்புக்களில், அடைவு உற - பதியும்படி, முழுகின -முழுவதுந் தைத்தன; (அவற்றால், அவனது), கழல்கள்- கால்கள், அற்றன -அறுப்புண்டன; இரு தொடை - இரண்டு தொடைகளும், நழுவின - கீழ்விழுந்தன;கவசம்-உடற்கவசம், அற்றது-அறுபட்டது: கரம் மலர் - தாமரைமலர்போன்ற கைகள்,பயமுடன்-தோள்களுடனே, முழுதும் அற்றன - முழுவதும் அறுபட்டன; ஒளிவிடுஒளியைவீசுகிற, நவமணி - நவரத்தினங்களைப் பதித்த, முகுடம் -கிரீடம், முகிழ்நகை முகனொடே -அரும்புகிற (புன்) சிரிப்பையுடைய முகத்துடனே, அற்றது-; (எ-று.)*

*முட்டி-முஷ்டி யென்னும் வடசொல்லின் திரிபு, நவமணி - கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம்' முத்து, வைடூரியம். வைரம் என்பன. முகுடமெனினும் மகுட மெனினும் ஒக்கும். 'முகிழ்நகை முகன் என்றதனால், போரில் இலக்கணனுக்கு இருந்த உற்சாகம் விளங்கும். முகன் முகுடத்தொடு அற்றது என உருபுபிரித்துக்கூட்டி யுரைக்க. (228)*

வேறு.

### 91. - புதல்வனிறந்ததுகேட்டுத் துரியோதனன் கண்ணீர்வடித்து வெம்பி துரோணன் முதலியவரோடு சில கூறலுறுதல்.

**இலக்கண குமரன் வெங்கா னெரித்தவன் குமர னேவா**
**லலக்கணுற் றாவி மாய்ந்தா னமரிடை யென்று கேட்டுக்**
**கலக்கணீர்சொரிய நின்று கண்ணிலி குமரன் வெம்பி**
**வலக்கணேர் முனிவ ரோடு மன்னவ ரோடுஞ் சொல்வான்.**

*(இ-ள்.) (இவ்வாறு), 'இலக்கணகுமரன்-, வெம் கான் எரித்தவன் குமரன் ஏவால்-கொடிய காண்டவவனத்தை எரியச் செய்திட்ட அருச்சுனனுக்குப் புத்திரனானஅபிமன்யுவின் அம்புகளால், அமரிடை-போரில், அலக்கண் உற்ற- துன்பமடைந்து,ஆவி மாய்ந்தான் - உயிரொழிந்தான்', என்று கேட்டு - என்று கேள்விப் பட்டு, கண்இலி குமரன் - பிறவிக்குருடனான திருதராட்டிரனுக்குப் புத்திரனான துரியோதனன்,கலம் கண் நீர் சொரிய நின்று- மிக்க கண்ணீர் வடிய நின்று, வெம்பி - தாபங்கொண்டு, வலக்கண் நேர்-(தனக்கு) வலக்கண்ணையொத்த, முனிவரோடுஉம்-(துரோணன்*

*கிருபன் முதலிய), அந்தணர்களுடனும், மன்னவரோடுஉம்-அரசர்களுடனும், சொல்வான் - (ஒருவார்த்தை) சொல்பவனானான்; (எ - று.)-அதனை அடுத்த கவியிற் காண்க.*

*கிருஷ்ணனும் அருச்சுனனும் ஒருநாள் பூம்பந்து விளையாடுகையிலே, அக்கினிபகவான் மிகப்பசித்து அந்தணவடிவங் கொண்டு வந்து 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணாத*

*படியாய் நிலவுலகத்திலிருக்கின்ற காண்டவவனமென்னும் பூஞ்சோலையை அதிலுள்ளசராசரங்களுடனே எனக்கு விருந்திடவேண்டும்' என்று வேண்ட, கிருஷ்ணஅருச்சுனர்கள் அங்கேபுக்கு ஒதுங்கி யிருக்கின்ற அசுரர் முதலிய துஷ்டர்களைஅழித்தருள வேண்டுமென்னும் நோக்கத்தால், ' நீ இதனைப் புசி' என்று இசைந்துஅளிக்க, உடனே நெருப்புப்பற்றி யெரித்ததென்பது. ( **கதை).***

*அங்ஙனம்எரிக்கையில்,இந்திரன் சினந்து பெய்வித்த பெருமழையைச் சரக்கூடுகட்டித் தடுத்தும், கோபித்துத்தேவர்கூட்டத்துடன் வந்து பொருத இந்திரனைப் புறங்கொடுத்தோடச்செய்தும்.அவ்வனத்தினின்று தப்பியோடுகிற பிராணிகளை அம்பெய்து கொன்று தழலில்விழுத்தியும் பலவாறு உதவிபுரிந்தமையால், அருச்சுனன் **'வெங்கானெரித்தவன்** 'எனப்பட்டான்.*

*கலம் - ஒரு முகத்தலளவு; பன்னிரண்டுமரக்கால் கொண்டது: இதனை இங்கு, மிகுதியை விளக்குதற்கு எடுத்துக்கூறினார். "கண்ணிற்சிறந்த வுறுப்பில்லை" என்றபடிகண் சிறந்த உறுப்பாதலால், சிறந்த அங்கமாகியவ ரென்றற்குக் கண்ணை உவமைக்கூறினார். ஆடவர்க்கு வலக்கண் சிறத்தலால். அதனைக் குறித்தார். இனி, வலக்கண் என்பதற்கு- மேன்மையையுடைய கண்ணென்றல். பொருத்தம;ு "இடக்கணாகவலக்கணாக விரண்டு மொக்கும்" எனக் கீழ்ச்சஞ்சயன்றூதுசருக்கத்தில் வந்தது காண்க.*

*இதுமுதற் பதினாறு கவிகள் கீழ்ப் பதினொன்றாம்போர்ச்சருக்கத்தின் முதற்கவிபோன்ற **அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள்** .*

### *92.-துரியோதனன் 'என்மைந்தனைக் கொன்றவனைக்கொல்லாவிடின் இவ்வரசு முதலியன வேண்டா' எனல்.*

***மன்னவர்மைந்தரோடென்மைந்தனைக்கொன்றமைந்தன்***
***றன்னையுமிமைப்பிற்சென்றுசயமுறச்செகுத்திலீரேற்***
***பின்னையிவ்வரசும்வேண்டேன்பெருமிதவாழ்வும்வேண்டே***
***னென்னுயிர்தானும்வேண்டேனென்றனனிராசராசன்.***

*(இ-ள்.) 'மன்னவர் மைந்தரோடு-(பல) ராசகுமாரர்களுடனே, என் மைந்தனை - என்மகனான இலக்கணனையும். கொன்ற-, மைந்தன் தன்னைஉம்-அருச்சுனன் புத்திரனான அபிமந்யுவையும், இமைப்பில் - கண்ணிமைப்பொழுதிலே. (நீங்கள்).சென்று-, சயம் உற-வெற்றியுண்டாக, செகுத்திலீர் ஏல்-பகையழித்திடீராயின், பின்னை-பின்பு. (யான்). இ அரசுஉம் வேண்டேன்-இந்த அரசாட்சியையும் விரும்பேன்: பெருமிதம் வாழ்வுஉம் வேண்டேன் - பெருந்தன்மையையுடைய இன்ப வாழ்க்கையையும் விரும்பேன்; என் உயிர் தான்உம் வேண்டேன்-என்று உயிரையும் விரும்பேன், 'என்றனன்-என்று(தன்சேனைவீரர்களை நோக்கிக்) கூறினான்: இராசராசன் - துரியோதனன்; (எ - று.)- **பி-ம்** : கொன்றுசயமுற. (230)*

### *93.- அபிமனைக் கொல்வதாக அவர்கள் சபதஞ்செய்தல்.*

***தனித்தனியரசரெல்லாந்தாளிணை பணிந்துபோற்றிப்***
***பனித்துயிர்பொன்றிவீழப்பார்த்தன்மாமகனையின்னே***

**குனித்தவின்னிமிராவண்ணங்கொடுஞ்சமர்க்கொன்றிலேமே**
**லினித்தனுவென்றுபோரிலெடுக்கிலேமிறைவவென்றார்.**

*(இ-ள்.) (அதுகேட்டு, அரசர் எல்லாம்-, தனி தனி-, தாள் இணைபணிந்து- (துரியோதனனது) உபயபாதத்தை வணங்கி, போற்றி - துதித்து, 'இறைவ-அரசனே! பனித்து உயிர் பொன்றி வீழ- (உடம்பு) நடுக்கமுற்று உயிரொழிந்து கீழ்விழும்படி, பார்த்தன் மா மகனை-அருச்சுனனுக்குச் சிறந்த புத்திரனான அபிமனை, இன்னே- இப்பொழுதே, குறித்த வில் நிமிரா வண்ணம்-வளைத்தவில் வளைவு மாறாமல், கொடுசமர்-கொடிய போரில், கொன்றிலேம் ஏல் -(நாங்கள்) கொன்றிடோமாயின், இனி-பின்பு, தனு என்று போரில் எடுக்கிலேம்-வில் என்று யுத்தத்தில் ஏந்துவோமல்லோம்,'என்றார் - என்று சபதங் கூறினார்கள்: (எ - று.) (231)*

*94.- இரண்டுகவிகள் - அசுவத்தாமன் துரோணன் முதலியோர்பலர் திரண்டுவளைந்து, அபிமன்மீது கோடிக்கணக்காக அம்புபொழிதலைக்கூறும்.*

**குன்றவில்லவனையொக்குங்குமரனும் பகைகளாறும்**
**வென்றவின்முனியுமற்றும்வேந்தராயருகுதொக்கு**
**நின்றவில்விருதர்யாருநிருபன்மாமதலையாவி**
**பொன்றவில்வளைத்தோன்றன்னைப்புலிவளைந்தென்னச்சூழ்ந்தார்**

*(இ-ள்.) குன்றம் வில்லவனை ஒக்கும் - மேருமலையை வில்லாகக்கொண்ட சிவபிரானைப் போன்ற, குமரன்உம் - துரோணபுத்திரனான அகவத்தாமனும், பகைகள் ஆறுஉம் வென்ற-உட்பகையாகிய ஆறு குற்றங்களையும் சயித்த, வில்முனிஉம்-வில்லில்வல்ல துரோணாசாரியனும், மற்றும்-, வேந்தர் ஆய்- அரசர்களாய், அருகுதொக்கு நின்ற-பக்கத்திற் கூடி நின்ற, வில் விருதர் யார்உம்-வில் வீர ரெல்லோரும், நிருபன் மா மதலை ஆவி பொன்ற வில் வளைத்தோன்தன்னை- துரியோதனராசனது சிறந்த குமாரனான இலக்கணனது உயிர் ஒழியும்படி வில்லை வளைத்துப் பொருத அபிமனை, புலி வளைந்து என்ன சூழ்ந்தார் - புலிகள் சூழ்ந்துகொண்டாற் போலச் சூழ்ந்து கொண்டார்கள்; (எ - று.)*

*பகைகள் ஆறு-காமம், கோபம், லோபம், மோகம,் மதம், மாற்சரியம் என்பன; வடநூலார் 'அரிஷட்வர்க்கம்' என்பர். இவற்றை வெல்லுதல் - இவை தன்னிடம் உண்டாகாதபடி விலக்குதல். புலி வளைந்தென்ன-புலியைச் சூழ்ந்தாற்போல எனினும் அமையும்.*
*(232)*

***95.*** **போரொருமுகத்தாலன்றிப்பொருப்பொன்றிற்புணரியேழுங்**
**காரொருமுகமாய்மொண்டுகணக்கறப்பொழியுமாபோற்**
**றேரொருவளையமாகச்சென்றுதிண்சிலைகள்கோலி**
**யோரொருவீரர்கோடியாசுகமுடற்றினாரே.**

*(இ-ள்.) கார் - மேகங்கள், புணரிஏழ்உம்- ஏழுகடல்களின் நீரையும், மொண்டு- முகந்து எடுத்துக்கொண்டு. பொருப்பு ஒன்றில்-ஒருமலையின்மேல், ஒரு முகம் ஆய்- ஒரே தன்மையாய், கணக்கு அற பொழியும் ஆபோல் - அளவில்லாமல் மழைபொழியும் விதம்*

*போல, போர் - அப்போரில், ஒரு முகத்தால் அன்றி -ஒரு முகமாக வல்லாமல் [பலமுகங்களாக]. தேர் ஒரு வளையம் ஆக சென்று - (அபிமனது) தேரைச் சுற்றிலும் ஒரு வளையம்போலப் போய்ச் சூழ்ந்துகொண்டு, திண் சிலைகள் கோலி- வலிய (தம்தம்) விற்களை வளைத்து, ஓர் ஒரு வீரர் - ஒவ்வொரு (பகை) வீரரும், (அபிமன்மேல்), கோடி ஆசுகம் உடற்றினார்-கோடிக்கணக்கான அம்புகளைப் பெருங்கோபத்தோடு செலுத்தினார்கள்: (எ - று.)*

*எவ்வளவு மழை பொழிந்தாலும் அதனால் மலை கலங்காதவாறு போல, அபிமன் கலங்காநிலைமைய னென்பதை உவமையால் விளக்கினார். புணரி - (ஆறுகளோடு) புணர்வதுஎனக் காரணப்பெயர்; புணர்தல்-கலத்தல். (233)*

*96.- நான்குகவிகள் அபிமன்கடுமையாகப்பொரப் பலரும் ஆவிமாள, சகுனிதுச்சாதனன்முதலியோர் முதுகுகொடுத்தோடினமை கூறும்.*

***தரணிபரெய்தவெய்தசரங்களைச்சரங்களாலே***
***முரணறவிலக்கிப்பாதமுடியளவாகவந்தக்***
***கரணமும்புலனுமெய்யுங்கலங்கியக்கணத்தில்யாரு***
***மரணமென்றுன்னவல்வில்வளைத்தனன்வளைவிலாதான்.***

*(இ-ள்.) வளைவு இலாதான்-(பகைவர்க்கு) வணங்குத லில்லாதஅபிமன், தரணிபர் எய்தஎய்த சரங்களை-அரசர்கள்(தன்மேல்) மிகுதியாக எய்த அம்புகளை, சரங்களால்ஏ-(தன்) அம்புகளாலே, முரண் அற - வலிமைகெட, விலக்கி - தடுத்து,- பாதம் முடி அளவு ஆக - கால் முதல் தலைவரையில், மெய்உம்- உடம்பும், புலன்உம்- உறுப்புக்களும், அந்தக்கரணம்உம் - மனமும், கலங்கி-, யார்உம் - எல்லாவீரரும், அ கணத்தில் -அந்தக்ஷணத்திலே, மரணம் என்று உன்ன- (தந்தமக்கு)அழிவென்று நினைக்கும்படி, வல் வில் வளைத்தனன் - வலியவில்லை வளைத்துப்பொருதான்; (எ - று.)-முரண் அற - மாறுபடுதலில்லாமல் எனினுமாம்: நேராகஎன்றபடி (234)*

***97.- ஆகவந்தன்னின்முந்தமனுலகுலத்தரசன்பட்டான்***
***கேகயன்குமரன்மாய்ந்தான்கிருபன்வில்லொடிந்துமீண்டான்***
***மாகதத்குரிசிலோடுமகுடவர்த்தனரநேகர்***
***நாகமுற்றனர்கள்கோடிநரபதிகுமார்வீழ்ந்தார்.***

*(இ-ள்.) (அப்பொழுது அபிமன் அம்புகளால்), 'ஆகவந்தன்னில்- போரிலே, முந்த-முன்னே, மனு குலத்து அரசன் மனு சக்கரவர்த்தியின் குலத்திற் பிறந்த அரசன்,பட்டான்-இறந்தான்: கேகயன் குமரன்-கேகயதேசத்தரசனுக்குக் குமாரன், மாய்ந்தான்.இறந்தான்; கிருபன் - கிருபாசாரியன், வில் ஒடிந்து-, மீண்டான்- புறங்கொடுத்துச்சென்றான்; மாகதம் குரசிலோடு - மகததேசத்து அரசனுடனே, மகுடவர்த்தனர் அநேகர்- அநேகம் மகுடவர்த்தனராசர்கள், நாகம் உற்றனர்கள்- வீரசுவர்க்க மடைந்தார்கள்; கோடி - கோடிக்கணக்கான, நரபதிகுமார் - இராசகுமாரர்கள், வீழ்ந்தார்- இறந்து விழுந்தார்கள்; (எ - று.)- **பி -ம்** : வீந்தார்.*

*மரித்தா ரென்ற ஒரு பொருளை, பட்டான், மாய்ந்தான், நாக முற்றனர்கள், வீழ்ந்தார் என்ற பலசொற்களால் குறித்தது **-பொருட்பின்வருநிலையணி.** கிருபன் கௌதமமுனிவனது பௌத்திரன்; சரத்துவந்தமுனிவனது குமாரன்; துரோணன் மனைவியாகிய கிருபியினுடன் பிறந்தவன்: கௌரவ பாண்டவர்க்கு முதல் வில்லாசிரியன். நாணற்காட்டிற் பிறந்திருந்த முனிமக்களை வேட்டைக்கு வந்த சந்தனுமகாராசன் பார்த்துக் கிருபையினால் பரிக்கிரகித்ததனால். கிருபனென்றும் கிருபியென்றும் பெயருண்டாயின வென விஷ்ணுபுராணத்தால் அறிக. வைவகவதமநுகுலத்தவனான கோசலன் பெயர் பிருகத்பல னென்றும், கேகயன்பெயர்பிருகத்க்ஷத்ரனென்றும், மாகதன் பெயர் அசுவகேது வென்றும் முதனூலால்தெரிகிறது. (235)*

***98.- சிலையழிந்தவரநேகர்தேரழிந்தவரநேகர்***
***தலையழிந்தவரநேகர்காளழிந்தவரநேகர்***
***நிலையழிந்தவரநேகர்நெஞ்சழிந்தவரநேகர்***
***துலையழிந்தவரநேகர்தோளழிந்தவரநேகர்.***

***(குறிப்புரை** .)சிலை - வில். தாள் - கால். நிலை - உடம்பு; உறுதிநிலைமையுமாம். துலை -வலிமை: இது - நிறைக்கோலின்பெயர்: இலக்கணையால், பாரமெனப் பொருள்பட்டு வலிமையென்னுங் கருத்தில் வந்ததுபோலும்: ஒப்பு என்றாரு முளர். (236)*

***99.- இனைவருஞ்சகுனிமைந்தரெழுவருந்துணைவருள்ளா***
***ரனைவருமாவிமாளவமரழிந்தவனும்போனான்***

**துனைவரும்புரவித்தேர்த்துச்சாதனன்றுணைவரோடு**
**முனைவருமளவிற்பாலன்முனைவெரீஇமுதுகுதந்தான்.**

*(இ-ள்.) இனைவு அரு - வருந்துதலில்லாத, சகுனிமைந்தர் எழுவர்உம் - சகுனியின் குமாரர் ஏழுபேரும், துணைவர்உள்ளார் அனைவர்உம்-(அவனுக்கு) உடன்பிறந்தவராயுள்ளவ ரெல்லோரும், ஆவி மாள - உயிரொழிய, அவன்உம்- சகுனியும், அமர் அழிந்து போனான் - போரில் தோற்றுச் சென்றான்: துனைவரும் - விரைந்து செல்கிற, புரவி-குதிரைகளைப்பூட்டிய, தேர்-தேரையுடைய, துச்சாதனன்- துணைவரோடு- (தன்) தம்பிமாருடனே, முனை வரும் அளவில்-எதிரில் வந்தமாத்திரத்தில், பாலன் முனை வெரீஇ- இளங்குமாரனான அபிமனது போருக்குஅஞ்சி. முதுகு தந்தான்-: (எ-று.)- **பி-ம:** அம்பால் முகம்வெரீஇ. (237)*

### *100.- துரியோதனன் சொல்லக் கர்ணன் அபிமனுடன் பொரச் செல்லுதல.*

**காவலருடைதல்கண்டுகன்னனையரசன்பார்த்துக்**
**கேவலமல்லவிப்போர்கிரீடிவந்திவனைக்கூடில்**
**நீவலையாகிற்சென்றுநேர்மலைந்தடர்த்தியென்னக்**
**கோவலன்மருகன்றன்னைக்குறுகினன்கொடையான்மிக்கோன்.**

*(இ-ள்.) காவலர் - (இந்த) அரசர்கக்ளெல்லோரும், உடைதல்-*

*(அபிமன் முன்) அழிதலை, கண்டு-பார்த்து, அரசன்-துரியோதனன். கன்னனை பார்த்து- கர்ணனைநோக்கி, 'கிரீடி வந்து இவனை கூடில்- அருச்சுனன் வந்து இவ்வபிமனைக் கூடிவிட்டால், (பின்பு) இபோர், கேவலம் அல்ல - இந்தப் போர் (வெல்ல) எளிதன்று: (ஆதலின் விரைவிலே.) நீ வலை ஆகின் சென்று நேர் மலைந்து அடர்த்தி - நீ வல்லவனாவையானால் (எதிரிற்) சென்று போர் செய்து (இவ்வபிமனை) அழிப்பாய்,' என்ன-என்றுசொல்ல, (அப்படியே), கொடையால் மிக்கோன் - ஈகைத்தொழிலாற்சிறந்த கர்ணன், கோவலன் மருகன் தன்னை குறுகினன் - கண்ணன்மருமகனான அபிமனைச் சமீபித்தான் எ - று.) (238)*

### *101. கர்ணனுந் தோற்றுப் போதல்.*

**மன்முரிகுவவுத்திண்டோள்வாசவன்பேரன்றன்னோடு**
**அன்முரியிரவிமைந்தனருஞ்சமர்விளைத்தகாலைச்**
**சென்முரிந்தென்னவேறுதேர்முரிந்தெடுத்தவாகை**
**வின்முரிந்துள்ளந்தானுமிகமுரிந்துடைந்துமீண்டான்.**

*(இ-ள்.) மன் - அரசர்கள், முரி- அழிதற்குக்காரணமான, குவவுதிண் தோள்- திரட்சியையுடைய வலிய தோள்களையுடைய, வாசவன் பேரன்தன்னோடு - இந்திரனது பௌத்திரனான அபிமனுடனே, அரு சமர் விளைத்த காலை - (செய்தற்கு) அரியபோரை மிகுதியாகச்செய்தபொழுது, அல்முரி இரவி மைந்தன் - இருள் அழிந்தற்குக் காரணமான சூரியனுக்குப் புத்திரனான கர்ணன், செல்முரிந்து என்ன- மேகம் மிகச்சிதைந்தாற்போல, ஏறு தேர் முரிந்து- (அபிமனம்புகளால் தான்) ஏறியிருந்த தேர் உடைந்து, எடுத்த வாகை வில் முரிந்து-(கையிற்பிடித்த) வெற்றியைத்தருகிற வில் முரிபட்டு, உள்ளம் தான்உம் மிக முரிந்து- மனமும் மிகக்கலங்கி, உடைந்து- தோற்று, மீண்டான் - திரும்பினான் [புறங்கொடுத்தான்]: (எ-று.)*

*மன் என்பது- அரசச்சாதியை யுணர்த்திற்று. மல் முரி எனப் பிரித்து, மற்போர்த்தொழிலிற் சிரமப்பட்ட என்றும், மற்போர்வீரரை அழிக்கவல்ல என்றும் பொருள்கொள்ளலும் அமையும். விரைந்து செல்லுதலிலும். பெரிய வடிவத்திலும், மேகத்துக்குத் தேர் உவமை.*
*(239)*

### *102.- கர்ணன் அபிமனை மீண்டும் எதிர்த்துத் தோற்றல்.*

***தேறினான்றேறித்துச்சாதனன்றருஞ்செம்பொற்றேரி***
***னேறினான்மீளவில்லுமெரிகணைபலவுங்கொண்டு***
***தூறினானபீமன்செங்கைத்தொடைகளாலெதிர்த்தலஞ்சி***
***மாறினான்முகமுந்தேரும்வரிவில்லுமழிந்துமன்னோ.***

*(இ-ள்.) (அஞ்சிப்புறங்கொடுத்த கர்ணன், பின்பு), தேறினான்- மனந்தைரியப்பட்டான்; தேறி- தைரியப்பட்டு, துச்சாதனன் தரும் செம் பொன் தேரின்- துச்சாதனன் கொடுத்த சிவந்த பொன்மயமான தேரில், ஏறினான் - ஏறிக்கொண்டு, வில்உம் எரிகணை பலஉம் கொண்டு- வில்லையும் அழிக்கிற அநேக பாணங்களையும் எடுத்துக்கொண்டு, மீள-மறுபடியும், தூறினான்- (அவ்வம்புகளைச்)*

*சொரிந்து, அகிமன் செம் கை தொடைகளால் - அபிமந்யுவின் சிவந்த கையால் விடப்பட்ட பாணங்களால் முகம்உம் தேர்உம் வரிவில்உம் அழிந்து- (தன்னுடைய)முகமும் தேரும் கட்டமைந்த வில்லும் அழிபட்டு, எதிர்த்தல் அஞ்சி மாறினான் - அவனெதிரில்நிற்றற்கும் பயந்து புறங்கொடுத்தான்; (எ - று.)-மன் ஓ - ஈற்றசை.*

*வில்லுங்கொண்டு எரிகணைபலவும் தூறினான் என்றும், தேரும் வரிவில்லும் அழிந்து முகமும் மாறினான் என்றும் மொழி மாற்றி யுரைப்பினும் அமையும். தூறுதல்-சிதறுதல். எதிர்த்தல்- பொருதலுமாம். (240)*

### *103.- துரியோதனன் தூண்டச் சென்ற கர்ணன் தோற்று மீண்டும் அபிமனோடுபொரச் செல்லுதல்.*

***தூண்டினன்மேலாளாகித்துனைபரித்தடந்தேர்தூண்டி***
***மீண்டனன்காலளாகிவிளிந்தனன்றெளிந்துமீளத்***
***தாண்டினபரித்தேர்தேடிச்சாபமுந்தேடிநெஞ்சாற்***
***பூண்டனன்பொருவான்றன்கைப்பொருகணைப்புயங்கம்போல்வான்.***

*(இ-ள்.) தன் கை - தனதுகையிலுள்ள, பொரு கணை-போர்ச்செய்கிற அம்பின் வடிவமான, புயங்கம்- நாகத்தை, போல் வான்-ஒப்பவனான கர்ணன், (இங்ஙனம்), தூண்டினன்-(துரியோதனனால்) தூண்டப்பட்டவனாய், மேல் ஆள் ஆகி-(தேரின்) மேல்நிற்கும் வீரனாய், துனை பரி தட தேர் தூண்டி - விரைந்து செல்லுகிற குதிரைகளைப் பூண்ட பெரிய தேரை (முன்னே) செலுத்திவந்து, (உடனே)அம்புகளால் யாவும் அழிந்து), கால் ஆள் ஆகி மீண்டனன்- (வாகனமின்றிக்)கால்களால்நடக்கும் வீரனாய்த்திரும்பி, விளிந்தனன்- தோற்றழிந்தான்; (அங்ஙன்தோற்றவன்), தெளிந்து-மனந்தைரியப்பட்டு, மீள- மறுபடி, தாண்டினபரி தேர் தேடி - தாவிச்செல்லுந்தன்மையனவான குதிரைகளைப் பூண்ட தொரு தேரைத்தேடி,(அதன்மேலேறி), சாபம்உம் தேடி-வில்லொன்றையுந் தேடியெடுத்துக்கொண்டு,பொருவான் - போர் செய்யுந்தொழிலை, நெஞ்சால் பூண்டனன் -மனத்தினால் ஏற்றுக்கொண்டான்; (எ-று.)-போர்செய்யச் சித்தனானான் என்பதாம். **பி-ம்:** விழுந்தனன்றெளிந்து.*

***'தன்கைப்பொருகணைப்புயங்கம்' என்றது. கர்ணன்கையிலுள்ள நாகாஸ்திரத்தை: அதன் வரலாறு;-** காண்டவதகநகாலத்தில் அவ்வனத்தினின்று ஓடுகிற பிராணிகளை அருச்சுனன் அம்பெய்துகொன்று அத்தழலிலே விழுத்தி வருகிறபொழுது, தக்ஷகனென்னும் நாகராசனதுமனைவி தன் குழந்தையான அசுவசேநனென்னுஞ் சிறுநாகத்தைத் தன்வாய்க்குள் மறைத்து வைத்துக்கொண்டு அங்கிருந்து ஆகாயமார்க்கத்தில் எழும்ப, அதுகண்டு பார்த்தன் தன் பாணத்தால் அந்த நாககன்னியின் தலையைத் துணிக்க. உடம்பு நெருப்பிலும் தலை வெளியிலுமாக விழுந்தது; அப்பொழுது அதன் வாயிலிருந்த நாககுமரான் வால்மாத்திரம் அறுப்புண்டு பிழைத்து எழுந்து, தன் தாயைக்கொன்ற அவன்மீது கறுக்கொண்டு, அவனுக்குப் பகைவன் யாரோன்று*

*விசாரித்து, அவனைக் கொல்லும்பொருட்டு அஸ்திரவடிவமாகக் கர்ணனை அடைந்தன னென்பதாம்.*

*அந்தநாகத்தைக் கர்ணனுக்கு உவமைகூறினது, கறுவுடைமைக்கும் கொடுமைக்கும் என்க. முன்னிரண்டடி-அநுவாதமென்னலாம்.*

### 104.- கர்ணனம்புகளால் அபிமன்யுவின் தேர்முதலியன அழிதல்.

**விற்குனத்திரவிமைந்தன்விடும்விடுங்கணைகள்பட்டுப்**
**பற்குனன்மைந்தன்றிண்டேர்ப்பரிகளும்பாகும்பட்டு**
**முற்குனித்தெய்தவில்லுமுரிந்ததுமூரித்தேரு**
**நிற்குநன்னிலைமைகுன்றிநேமியுநெரிந்ததன்றே.**

*(இ-ள்.) (இவ்வாறு), இரவி மைந்தன் - கர்ணன், வில் குனித்து - வில்லை வளைத்து, விடும் விடும் - மிகுதியாகச் சொரிகிற, கணைகள் - அம்புகள், பட்டு - தைத்ததனால், பற்குனன் மைந்தன் - அருச்சுனபுத்திரனான அபிமனது, திண் தேர் பரிகள்உம்-வலிய தேரிற்பூட்டிய குதிரைகளும், பாகுஉம் - சாரதியும், பட்டு - அழிய, முன் குனித்து எய்த வில்உம்- முன்னே வளைத்து அம்பெய்து கொண்டிருந்த(அவன்கை) வில்லும், முரிந்தது - ஒடிந்தது; மூரிதேர் உம்- வலிமையையுடையதேரும், நிற்கும் நல் நிலைமை குன்றி நிற்றற்குரிய நல்ல உறுதிநிலைமைகுறைபட்டு,நேமிஉம் நெரிந்தது- சக்கரங்களுஞ் சிதையப்பெற்றது; (எ - று.)-அன்று, ஏ -ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.*

*பட்டு என்பது - இரண்டிடத்திலும், பட வென்னுஞ் செயவெ னெச்சத்தின் திரிபு: முன்னே காரணப்பொருளதும், பின்னேஉடனிகழ்ச்சிப்பொருளதும் எனக் காண்க. அபிமன்தேர் கோங்குமரக் கொடியையுடைய தென்றும் அவன்தேர்ப்பாகன் சுமித்திர னென்றும் வடநூலால் தெரிகிறது. தேர்நேமி நெரிந்தது - சினைப்பெயர் முதல்வினையைக்கொண்ட வழுவமைதி. (242)*

### 105.- தேரையிழந்த அபிமன் வாளேந்தித் தரையி லிழிதல்.

**தன்னையத்தனயன்செய்ததாழ்வெலாந்தனயன்றன்னைப்**
**பின்னையத்தந்தைசெய்துபின்னிடாதசைந்துநிற்ப**
**முன்னையபுரவித்தேருமொத்தவெஞ்சிலையுமின்றி**
**மின்னையொத்திலங்கும்வாளோடவனிமேல்விரைந்துபாய்ந்தான்.**

*(இ-ள்.) தன்னை அதனயன் செய்த தாழ்வு எலாம்-(தந்தையாகிய) தன்னைப் பிள்ளையாகிய அவ்வபிமன் (முன்னே) செய்த தோல்விகளையெல்லாம், பின்னை- பின்பு, அ தந்தை - அந்தத்தந்தையாகிய கர்ணன், தனயன் தன்னை செய்து - பிள்ளையாகிய அவ்வபிமனை (அடைய)ச் செய்து, பின் இடாது-(முன்போலப்) புறங்கொடாமல், அசைந்துநிற்ப-மகிழ்ச்சிகொண்டு முன்நிற்க, (அபிமன்), முன்னைய புரவி தேர்உம் மொய்த்த வெம் சிலைஉம் இன்றி - முன் இருந்த குதிரைபூண்ட தேரும் வலிமையுடைய கொடிய வில்லும் இல்லாமல், மின்னை ஒத்து இலங்கும் வாளோடு- மின்னலைப் போன்று விளங்குகிற வாளுடனே, அவனிமேல் - தரையில், விரைந்து பாய்ந்தான் - துரிதமாய்க் குதித்து இழிந்தான்; (எ - று.)*

*தன்னை அத்தனயன் செய்த தாழ்வு - தேரையும், வில்லையும் இழத்தல்; கீழ்101, 102,103,-ஆங் கவிகளைக் காண்க. 'தனயன்*

*தன்னை' என்பதை உருபுமயக்கமாகத் தனயனுக்கு என்றுங் கொள்ளலாம். தந்தை - பெரிய தந்தை. தனயன்-தம்பியின் மகன். கர்ணன் அபிமன்முன் பலமுறைபின்னிட்டதனைக் கருதி, இங்கே*

*'பின்னிடாது' என்றார். அசைந்து- களிப்பினாற் கூத்தாடி யென்க. இனி, அசைந்து பின்னிடாது நிற்ப என மொழிமாற்றினுமாம்; இவ்வுரைக்கு, அசைதல்-சோர்தல் உன்னயப்புரவித்தேரு மொத்தஎன்ற பாடத்திற்கு, உன்னயம் - அசுவசாஸ்திரமென்பர். (243)*

### *106.- அபிமன் வாளோடு பரிசையேந்தி மண்டலம் பயிற்றுதல்.*

***வாளொடு பரிசை யேந்தி மண்டலம் பயிற்றி யிற்றை***
***நாளொடு துறக்க மெய்த நயந்தன னின்ற வீரன்***
***றோளொடு புரையுஞ் செம்பொன் மேருவைச் சுடரோனாகக்***
***கோளொடு சூழ்வ தென்னச் சுழற்றினான் குமர ரேறே.***

*(இ-ள்.) இற்றை நாளொடு - இன்றைத்தினத்துடனே [இன்றைத்தினத்திலே என்றபடி],துறக்கம் எய்த - இறந்து வீரசுவர்க்கத்தையடைய, நயந்தனன் நின்ற - விரும்பிநின்ற,வீரன்-பராக்கிரமசாலியான, குமார் ஏறு - இராசகுமாரர்களுக்குச் சிங்கம்போன்றவனான அபிமன்,-வாளொடு பரிசை ஏந்தி- (வலக்கையில்) வாளையும் (இடக்கையில்) கேடகத்தையும் எடுத்துக் கொண்டு, மண்டலம் பயிற்றி - மண்டலமாகச் சுற்றிவருதலைச் செய்து,-தோளொடு புரையும் - (தனது) தோளோடு ஒத்த, செம் பொன் மேருவை-சிவந்த பொன்மயமான மேருமலையை, சுடரோன்-சூரியன். நாகம் கோளொடு- பாம்பின் வடிவமான (கேதுவென்னுங்) கிரகத்துடனே, சூழ்வதுஎன்ன- சுற்றுவது போல, சுழற்றினான்-(கேடகத்தையும் வாளையும் கைகளாற்) சுழற்றினான். (எ - று.)*

*கேடகம் - எதிரிகள் எறியும் ஆயுதங்களைத் தன்மேற் பட வொட்டாமல் தடுப்பதொரு கருவி. மண்டலம்பயிற்றுதல்-வட்டமாகவருதல். இடசாரி,வலசாரி, மண்டலம், நடநம், பவுரி [தானே சுழலுதல்] என்பன-வீரர்க்குஉரிய கதிவிசேஷங்களாம். 'தோளொடு புரையும்மேரு' எனப் பிரசித்த உபமானத்தை உபமேயமாகவும் உபமேயத்தை உபமானமாகவும் மாற்றிக்கூறியது, **எதிர்நிலையணி;** வடநூலார் **'பிரதீபாலங்காரம்'** என்பர். மேரு-சலியாத அபிமனுடம்புக்கும், சூரியமண்டலம் - வட்டவடிவான பரிசைக்கும் நாகக்கோள்-கொடிய வாளுக்கும் உவமை யெனக் காண்க. கோள்- க்ரஹமென்னும் வடசொல்லின் பொருள்கொண்டது; (காலத்தை அளந்து) கொள்வ தென்று பொருள்: பகுதிநீண்ட பெயர். குமரர் ஏறு- மிருகங்களுள் அரசாகிய சிங்கம் போல, இராசகுமாரர்களுள் சிறந்தவனென்க; அல்லது, பகையரசகுமாரரான யானைகளுக்குச் சிங்கம்போன்றவனெனக் கொள்ளினுமாம். (244)*

வேறு.

### *107.- முன்பு தோற்றோடிய நிருபர்*

***அப்பொழுது ஒரு சேர அபிமன்மேல் நெருங்குதல்.***
***தேர்போனது பரிபோனது சிலைபோனது சிறுவன்***
***போர்போனதி னிச்சென்றமர் புரிவோமென நினையாக்***

***கார்போனனி யதிராவிதழ் மடியாவெறி கடல்வாய்***
***நீர்போலுடன்மொய்த்தார்வெரு வுற்றோடிய நிருபர்.***

*(இ-ள்.) (அப்பொழுது), வெருவு உற்று ஓடிய நிருபர் - (முன்பு) அச்சம் மிக்குஓடிப்போன அரசர்கள், 'சிறுவன் - சிறு பிள்ளையான அபிமானது, தேர்-, போனது-ஒழிந்தது: பரி-தேர்க் குதிரை, போனது-; சிலை-வில், போனது-; போர்- (அவனது)யுத்தம், போனது-; இனி சென்று அமர் புரிவோம் - இனிமேல் (நாம் தைரியமாகப்)போய்ப் போர்செய்வோம்,' என நினையா என்று எண்ணி, கார் போல் நனி அதிரா -மேகம்போல மிகுதியாக ஆராவரித்து, இதழ் மடியா - (கோபத்தால்) உதட்டைக்கடித்துக் கொண்டு, ஏறி கடல்வாய் நீர் போல் - அலைவீசுகிற கடலில் யாற்று நீர்கள்(ஒருங்குவந்து விழுதல்) போல, உடன் மொய்த்தார் - ஒரு சேர (அபிமன்மேல்வந்து) நெருங்கினார்கள்; (எ - று.)- அபிமனுக்குக் கடலுவமைகூறியதனால், அவனதுகம்பீரத்தன்மை விளங்கும். பி-ம்: வெருவுறவோடிய.*

*இதுமுதற் பத்துக்கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் மாங்கனிச்சீர்களுமாகிய* ***கலிவிருத்தங்கள்.*** *(245)*

### *108.- எதிர்த்துவந்த துச்சாதனகுமாரனை அபிமன் தலையறுத்தல்.*

***துச்சாதனன்மகன்மன்னர்தொழுந்துச்சனியென்னும்***
***நச்சாடரவனையானினிநானேபழிகொள்வே***
***னிச்சாயகமொன்றாலெனவெய்தானவன்முடியோ***
***டச்சாயகம்வடிவாள்கொடறுத்தானடலபிமன்.***

*(இ-ள்.) துச்சாதனன் மகன் - துச்சாதனனது புத்திரனான, மன்னர்தொழும்- அரசர்களால் வணங்கப்படுகிற, துச்சனிஎன்னும்-துச்சனியென்று பெயர் கூறுப்படுகிற, நஞ்சு ஆடு அரவு அனையான்-விஷத்தையுடைய படமெடுத்து ஆடுகிற பாம்புபோலக் கொடிய வீரன், 'இனி-இப்பொழுது, நானே - யான் ஒருவனே, இ சாயகம் ஒன்றால்-இந்த ஓரம்பினால், பழி கொள்வேன்-(அபிமனைக்கொல்லுதலாகிய) பழியை ஏற்றுக்கொள்வேன் (தவறாமற் கொல்வேன்), என - என்று (வீரவாதஞ் செய்துகொண்டு), எய்தான்-(அபிமன்மேல் ஓரம்பைப்) பிரயோகித்தான்; (உடனே), அடல் அபிமன் - வலிமையையுடைய அபிமந்யு, அவன் முடியோடு - அந்தத் துச்சனியில் தலையுடனே, அ சாயகம் - அந்த அம்பையும், வடி வாள்கொடு அறுத்தான் - கூரிய (தன்) வாளினால் அறுத்திட்டான்; (எ - று.)*

*துச்சனியென்பது - துச்சாதனியென்பதன் திரிபுஆக இருக்கலாம். துச்சாசனனதுமகன் சயசேன னென்று பெருந்தேவனார் பாராதத்தால் தெரிகிறது. விரைவுதோன்ற, முடியை முன்னும் சாயகத்தைப் பின்னுங் கூறினார். பழிகொள்ளுதல் - இலக்கணனைக் கொன்றதாகிய அவன் செய்த பழிக்கு எதிர்ப்பழிவாங்குதலுமாம். பழிகொள்ளுத லென்ற சொல்லின் தகுதியால், தேர் முதலியவற்றை யிழந்த வீரனைக் கொல்லுதல் பழிப்பாமென்பது, தோன்றும் நானே,ஏ- பிரிநிலையோடு, தேற்றம்.(246)*

### *109.- மூன்றுகவிகள்- எதிர்த்தஅபிமன் வாளால் மும்முறைவென்று துரோணனை நகைத்தமை கூறும்.*

***துரியோதனன்மகனும்பொருதுச்சாதனன்மகனும்***
***புரியோதனமுனைவென்றமைபுரிவின்முனிகருதா***
***வரியோமெனுமறையாலடலம்பாயிரமெய்தான்***
***வரியோலிடுகழலானவைவாள்கொண்டுதுணித்தான்.***

*(இ-ள்.) துரியோதனன் மகன்உம் - துரியோதனனுக்கு மகனான இலக்கணனையும், பொரு துச்சாதனன் மகன்உம் - போர் செய்த துச்சாதனனுக்கு மகனான துச்சனியையும், புரி யோதனம் முனை - போர்செய்கிற யுத்தகளத்தில், வென்றமை - (அபிமன்கொன்று) சயித்ததை, புரி வில் முனி-கட்டமைந்த வில்லில்வல்ல துரோணாசாரியன், கருதா-எண்ணி, அரி ஓம் எனும் மறையால்- 'ஹரி! ஓம்' என்று தொடங்கிச் சொல்லப்படுகிற வேதமந்திரத்தைக் கொண்டு, அடல் அம்பு ஆயிரம் எய்தான்-வலிமையுடைய ஆயிரம் பாணங்களைத் தொடுத்தான்; (தொடுக்க), வரி ஓல் இடு கழலான்-அழகிய ஒலித்தல் செய்கிற வீரக்கழலையுடைய அபிமன், அவை - அந்த அம்புகளையெல்லாம், வாள் கொண்டு துணித்தான்- வாளினால் துண்டித்தான்; (எ - று.)*

*புரிவின் முனி என எடுத்து, அவர்கள்பக்கல் அன்பையுடைய முனிவனெனினுமாம்; புரிவு- அன்பு, இன்- சாரியை. அரிஓம் - திருமாலேபிரணவப்பொருள் என்பதைக்குறிக்குமென்ப. (247)*

***110. சொரியுங்கணைமழையேவுதுரோணாரியன்வில்லும்***
***பரியுங்கடவிரதத்தொடுபாகும்பலபலவாய்***

***முரியும்படிவடிவாள்கொடுமோதாவமர்காதா***
***விரியுஞ்சுடரெனநின்றனன்விசயன்றிருமகனே.***

*(இ-ள்.) (அதுவுமன்றி), விசயன் திரு மகன் - அபிமன்,- சொரியும் கணை மழைஏவு-பொழிகிற பாணவர்ஷத்தைச் செலுத்துகிற, துரோண ஆரியன் - துரோணசாரியனது, வில்உம்-, பரிஉம்- தேர்குதிரைகளும், கடவு இரதத்தொடு - செலுத்துப்படுகிற தேருடனே, பாகுஉம் - சாரதியும், பல பல ஆய் முரியும்படி - அநேகந் துண்டுகளாய் அழியும்படி, வடி வாள் கொடு மோதா- கூரிய வாளாயுதத்தால் வீசி, அமர் காதா - போரை (உக்கிரமாக)ச் செய்து. விரியும் சுடர் என நின்றனன்- (நெடுந்தூரம்) பரவுகிற (மிக்க) ஒளியையுடைய சூரியன்போல (விளக்கமுற்று) நின்றான்; (எ - று.) (248)*

***111. ஒருக்காலழிதேரன்றியுமுருளாழிகொடேர்மே***
***லிருக்கால்வரமுக்கால்வரவெக்காலுமழித்தே***
***பெருக்காறணைசெய்தொத்தவிர்பிள்ளைப்பிறையனையான்***
***செருக்கானகைசெய்தான்வரிசிலையாசிரியனையே.***

*(இ-ள்.) ஒரு கால் அழி தேர் அன்றிஉம்- ஒருதரம் தேரழிந்தது மாத்திர மல்லாமல்,உருள் ஆழி கொள் தேர்மேல் - உருளுந்தன்மையுள்ள சக்கரங்களைப் பூண்டவேறு தேரின் மேல், (துரோணன் ஏறிக்கொண்டு), இருகால் வர முக்கால் வர -இரண்டாந்*

*தரம் மூன்றாம்தரம் (மீண்டுமீண்டு) வர, எ காலும் அழித்து-எல்லா முறையிலும் (அத்துரோணனைத்) தோற்கடித்து, பெருக்கு ஆறு அணை செய்து ஒத்து- யாற்றுநீர்ப் பெருக்குக்கு அணை செய்தாற் போன்று, (அவனைத் தடுத்து),-அவிர் விளங்குகிற, பிள்ளை பிறை அனையான் - இளஞ்சந்திரனையொத்த அபிமன்,- செருக்கால்-வீரக்களிப்பினால், வரி சிலை ஆசிரியனை - கட்டமைந்த வில்லில் வல்லதுரோணனை (நோக்கி), நகை செய்தான்- (இகழ்ச்சிதோன்றச்) சிரித்தான்: (எ - று.)*

*"மூன்றாறுருபெண்" என்ற சூத்திர விதிப்படி ஒருகால், இருகால் என இயல்பாகவரவேண்டியவை, இங்கு, சந்தவின்பத்திற்காக வலிமிக்குநின்றன. (249)*

***112. -துரோணன் அபிமனது வலக்கையை வாளோடும் வீழ்த்துதல்.***

***முன்னுஞ்சுருதியினாலுயர்முனிவீரனைமுனியாப்***
***பின்னும்பனிவரைபோலொருபெருந்தேர்மிசைகொள்ளா***
***மன்னுஞ்சிலைகுனியாமுனைவடிவாளொடுகையு***
***மின்னும்பிறைமுகவாளியின்விழும்படிவிட்டான்.***

*(இ-ள்.) முன்னும்- (யாவராலும் சிறந்ததாகக்) கருதப்படுகிற, கருதியினால் - வேதங்களில் வல்லவனாதலால், உயர் - சிறந்த, முனி - துரோணன், வீரனை முனியா- (தன்னைப் பரிகசித்த) அபிமனைக் கோபித்து, பின்உம் - மீண்டும், பனி வரை போல் - பனிமயமான இமயமலைபோன்ற, ஒரு பெரு தேர்மிசை-ஒரு பெரிய தேரின் மேல், கொள்ளா - ஏறிக்கொண்டு, மன்னும் சிலை குனியா - பெரிய (தன்) வில்லை வளைத்து, முனை வடி வாளொடு கைஉம்-(அபிமனது) கூரிய வடிக்கப்பட்ட வாளுடன் வலக்கையும், மின்னும் பிறை முகம் வாளியின் - விளங்குகின்ற அர்த்தசந்திரபாணத்தால், வீழும்படி - துணிந்து கீழ்விழும்படி, விட்டான் - (அதனைப்) பிரயோகித்தான்; (எ-று.)- மலையரசனாதலின், இமயத்தை எடுத்துக்கூறினார் (250)*

***113.-வாள் வீழ அபிமன் நின்றமை.***

***பேணாருயிர்பருகும்பசிபெட்பப்பகுவாய்வெங்
கோணாகமுலாவந்ததெதிர்கொடுநாவெறிவதுபோற்
பூணார்கடகக்கையொடுபுகர்வாளமுமண்மே
னீணாகர்வியக்கும்படிவிழமீளியுநின்றான்.***

*(இ-ள்.) பேணார் உயிர் பருகும் - பகைவர்களது உயிரைக் குடிக்க வேண்டுமென்ற, பசி-, பெட்ப-மிக, பகுவாய் வெம் கோள் நாகம் - திறந்த வாயையும்கொடிய வலிமையையுமுடைய சர்ப்பம், உலா வந்து - உலாவிவந்து, எதிர் கொடு -எதிரிற் பெருந்தி, நா எறிவது போல்-நாக்கை வெளிநீட்டுவதுபோல,- கடகம் பூண்ஆர்கையொடு - கடகமென்னும் ஆபரணம் பொருந்தின கையுடனே, புகர்வாளம்உம் - பளபளப்பையுடைய வாளாயுதமும், மண்மேல் - தரையிலே, நீள் நாகர்வியக்கும்படி விழ - உயர்ந்த தேவலோகத்தவர்கள் ஆச்சரியப்படும்படி (துணிந்து)வழ, மீளிஉம் - அபிமனும், நின்றான் - (சலியாது) நின்றான்; (எ - று.)*

*எளிதில் கவர்ந்துகொள்ளுதல் தோன்ற. **'உயிர்பருகும்'** என்றார், துஷ்டஜந்துக்கள் பெரும்பாலும் வாய்திறந்துகொண்டேயிருத்தல், இயல்பு, உலாவருதல்-புறப்பட்டு உல்லாசமாக வெளி வருதல். பாம்பு- நீண்ட அபிமன் கைக்கும், நாக்கு- வாளுக்கும்உவமை. கைக்குக் கடகம், இயற்கையடைமொழி. (251)*

***114. - ஒற்றைக்கையோடு பொர நிற்கும் அபிமன் வருணனை.***

***இருதோள்களினொருதோண்முனியிகல்வாளியின்விழவு
மொருதோள்கொடுபொரநிற்பதொர்மதவாரணமொத்தான்
கருதோகையொடளகாபதிதனயோர்கதிபெறமுன்
மருதோரடியிணைசாடியமாயன்றிருமருகன்.***

*(இ-ள்.) அளகாபதி தனயோர் - அளகாபுரிக்கு அரசானான குபேரனுக்குப் புத்திரராகிய (நளகூபரன் மணிக்கிரீவன் என்னும்) இருவரும், கருது ஓகையொடு- மனத்துக்கொண்ட மகிழ்ச்சியுடனே, கதி பெற - நற்கதியை யடையும்படி, முன் - முன்பு [இளமையில்], மருது-(இரட்டை) மருதமரங்களை, ஓர் இணை அடி சாடிய- ஒப்பற்ற உபயபாதத்தால் முறித்துத்தள்ளின, மாயன்- ஆச்சரிய சக்தியையுடைய கண்ணனுக்கு, திரு மருகன்-சிறந்த மருமகனான அபிமன்,- இருதோள்களின்-(தனது) இரண்டுதோள்களில், ஒரு தோள்-, முனி இகல் வாளியின் - துரோணனது வலிய அம்பினால், விழஉம்- துணிந்துவிழவும், (சலியாமல்),-ஒரு தோள் கொடு- ஒருகையைக்கொண்டு, பொர-போர்செய்ய, நிற்பது-நிற்பதான, ஓர் மதம் வாரணம் - ஒருமதயானையை, ஒத்தான்-;(எ-று.)-துதிக்கையொன்றே யுடைமையின், யானையைஉவமை கூறினார். தனயோர்-தநயர்; விகாரம். (252)*

***115.- தேருருளையைச் சக்கரப்படையாகக்கொண்டு அபிமன் பொருதல்.***

***தன்மாதுலன்முதனாளுரைதருமந்திரமொன்றா
லென்மாமணியுருளொள்றினையெறிசக்கரமாக்கிக்
கன்மாரிவிலக்குங்கிரியெனமேல்வருகருதார்
வின்மாரிவிலக்காவதுகொடியாரையும்வீழ்த்தான்.***

*(இ-ள்.) (பின்பு அபிமன்), தன் மாதுலன் - தனக்கு மாமனான கண்ணன், முதல்நாள்- முன்னொருகாலத்தில், உரைதரு- (தனக்கு) உபதேசித்தருளிய, மந்திரம் ஒன்றால் -ஒருமந்திரத்தால், எல் மா மணி உருள் ஒன்றினை - பிரகாசத்தையுடைய சிறந்தஇரத்தினம் பதித்த (தன்) தேர்சக்கர மொன்றையே, எறி சக்கரம் ஆக்கி - (பகைவர்களைத்) துணிக்கிற சக்கராயுதமாகச் செய்து, அதுகொடு- அந்த ஆயுதத்தால், கல் மாரி விலக்கும் கிரிஎன-(இந்திரன்பொழிவித்த) கல்மழையைத்தடுத்திட்ட கோவர்த்தனமலைபோல, மேல் வரு கருதார் வில்மாரி விலக்கா-தன்மேல்(எதிர்த்து) வருகிற பகைவர்களின் வில்லினாற் சொரிந்த அம்புமழையைத் தடுத்து, யாரைஉம் வீழ்த்தான் - எல்லோரையும் அழித்துத்தள்ளினான்:*

*'இவ்வகை துரோணாசாரியனால் தோளறுப்புண்டு மற்று அதற்குத் துளங்காது மானத்தேரின்மணியாழியை மற்றைக்கையாற்*

*பறித்துக்கொண்டு சக்கரபாணியிடைத் தான் பயின்ற அபியோகத்தினால் ஆங்கு அதனை அபிமந்திரித்து அங்குலிப்படுத்தி அந்தரத்திடைத் திரித்துவிடுதலும்' என்பதுபாரதவெண்பாவின் உரைநடை அது கொடியாரையும்-உகரம் இகரமாயிற்று. (253)*

### *116.- அபிமன் போர்த்திறமைகண்டு துரியோதனன் மனம்புழுங்குதல்.*

**ஒருகையினி லுருணேமிகொ டோடித்திசை தோறும்**
**வருகையற வெறிவானுயர் வனமாலியை யொத்தான்**
**இருக்கையொரு வரைமண்ணிலி றைஞ்சாமுடி யிறைவன்**
**பொருகையற வபிமன்பொரு போர்கண்டு புழுங்கா.**

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ-ள்.) ஒருகையினில் - (தனது) கையொன்றிலே, உருள்நேமி கொடு- தேர்ச்சக்கரமாகிய சக்கரத்தை யெடுத்துக்கொண்டு, திசை தோறும்உம் ஓடி - எல்லாத்திக்குகளிலும் சுழன்று, வரு கை அற - பொருந்தின படைவகுப்பு அழிய, எறிவான் - துணிப்பவனான அபிமன், உயர் வனமாலியை ஒத்தான் - சிறந்த வநமாலையையுடைய (சக்கரபாணியான) திருமாலைப் போன்றான்; (அப்பொழுது), இரு கை ஒருவரை மண்ணில் இறைஞ்சா முடி இறைவன் - தன்இரண்டு கைகளைக்கொண்டு [அஞ்சலிசெய்து] ஒருத்தரையும் பூமியில் வணங்காத சிரசையுடைய மன்னனான துரியோதனன்,- பொருகை அற - (எவரும் எதிர்த்துப்) போர்செய்த லில்லாதபடி, அபிமன் பொரு-அபிமந்யு செய்கிற, போர்-யுத்தத்தை, கண்டு-, புழுங்கா-மனங்கொதித்து,-(எ-று.)-"சயத்திரதனையழையென" என்று மேற்கவியோடு தொடரும்.*

*கை - படைவகுப்பு- வநமாலீ என்ற வடமொழித்திருநாமம்- வநமாலையையுடையவனென்று பொருள்படும்; வநமாலை - ஒருவகைமாலை: இது - திருமாலுக்கு உரியது. சக்கரத்தைக் கையிலேந்திய அபிமனுக்கு, வியாசரும் சக்கரபாணியையே உவமைகூறினார். (254)*

வேறு.

### *117. துரியோதனன் சயத்திரதனையழைக்க அவன்வருதல்.*

**ஒருவ னம்படைத் தலைவர்க ளெவரையு மொருகை**
**கொண்டடற் றிகிரியின்விழவெதிர்.**
**பொருவ தென்கொலிச் சிறுவனொடொருபடி பொழுது**
**சென்றதெப்பொழுதமர் முடிவது,**
**வெருவருந்திறற் றரணிபர் களிலிவன் விளிய வென்றிடத்**
**தருமவ ரிலரினி,**
**யருளு டன்சயத் திரதனை யழையென வவனும் வந்துபுக்**
**கனனொரு நொடியிலே.**

*(இ-ள்.) ஒருவன் - (இந்தஅபிமன்) ஒருத்தன், நம் படை தலைவர்கள் எவரைஉம் -நமது சேனையிலுள்ள சிறந்தவீரர்களெல்லோரையும், அடல் திகிரியின் விழ-வலியசக்கரத்தால் துணிந்து விழும்படி, ஒருகை கொண்டு-ஒருகையைக் கொண்டே, எதிர்பொருவது - எதிரிற் போர்செய்வது, என்கொல் - என்ன சாமர்த்தியமோ?இசிறுவனொடு-இந்தச் சிறுபிள்ளை யொருத்தனுடனே, ஒரு படி பொழுது சென்றது -இன்றையொருநாளைப் பொழுது*

*முழுவதும் பெரும்பாலும் கழிந்துவிட்டது; எ பொழுது அமர் முடிவது - (இனி) எப்பொழுது போர் முடியும்? (இங்குள்ள). வெருவரும் திறல் தரணிபர்களில்- அஞ்சும்வலிமையையுடைய அரசர்களுள், இவன் விளிய வென்றிட தகுமவர்- இவ்வபிமன்இறக்கும்படி சயிக்கத்தக்கவர், இலர் - (எவரும்) இல்லை: (ஆதலால்), இனி-,அருளுடன்-கருணையோடு, சயத்திரதனை அழை-,'என- என்று (துரியோதனன்துரோணனை நோக்கிக்) கூற, (அங்ஙனமே துரோணனால் அழைக்கப்பட்டு),அவன்உம்-அச்சயத்திரதனும், ஒருநொடியில் வந்து புக்கனன்- ஒருநொடிப்பொழுதிலே வந்து சேர்ந்தான்; (எ - று.)*

*சேனைமுழுவதுக்குந்தலைவனாகிய துரோணனொழியக் கிருபன் கர்ணன் முதலியோரும் சேனையின் ஒவ்வொருபகுதிக்குத் தலைவராதலால், 'நம்படைத்தலைவர்கள்'எனப்பட்டார். கீழ் யாவரும் அபிமனுக்கு அஞ்சித் திசைதோறும் ஓடியதனால், 'வெருவரும்' என்ற அடைமொழி, தரணிபர்களுக்குக் கொடுக்கப்பட்ட தென்னலாம். 'அருளுடன் அழை' என்றதனால், துரோணனை நோக்கித் கூறினனென்பது பெறப்படும்; இனி, அன்போடு (ஒருவனைநோககித் துரியோதனன்) கூற எனக் கருத்துக்கொள்ளினுமாம்.*

*இதுமுதல் பதினான்கு கவிகள்- இச்சருக்கத்தின் 84-ஆம் கவிபோன்ற* ***எண்சீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தங்கள்;*** *ஆயினும், 'தனன தந்தனத் தனதன தனதன தனன தந்தனத் தனதன தனதன' என இவற்றிக்குச் சந்தக்குழிப்பு வேறுபடும்.*
*(255)*

### *118.- சிவபிரான் கதைகொண்டு அபிமனைச் உயிர்கவருமாறு சயத்திரதனுக்குச் சொல்ல அவன் விடைபெற்றுப்போதல்.*

***அருகுநின்றகொற்றவர்களுமவரவரரியதிண்டிறற்குமரரும
மரிலுன்,
மருகனும்படப்பொருதனன்மகபதிமகன்மகன்றனைப்பசு
பதியருளிய,
வுருகெழுங்கதைப்படைகொடுகவருதியுயிரையென்
றெடுத்துரைசெயவரசனை,
யிருகையுங்குவித்தருளுடன்விடைகொளுமெழில்கொள்சிந்துவுக்
கொருதனிமுதல்வனே.***

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ-ள்.) (வந்துபுக்க சயத்திரதனை நோக்கித் துரியோதனன்), 'அருகு நின்ற- சமீபத்தில் எதிர்த்துநின்ற, கொற்றவர்கள்உம்-அரசர்களும், அவர் அவர்-அந்தந்த அரசரின், அரிய திண் திறல்குமார்உம்- அருமையான கொடிய வலிமையையுடைய குமாரர்களும், உன் மருமகன்உம்-உனக்கு மருமகனான இலக்கணனும், அமரில்- யுத்தத்தில், பட-அழியும்படி, பொருதனன்-போர்செய்தவனான மகபதி மகன் மகன் தனை-இந்திரனது பௌத்திரனாகிய அபிமனை, பசுபதி அருளிய- சிவபிரான்(உனக்குக்) கொடுத்தருளின, உரு கெழும் கதை படைகொடு-அச்சம் விளங்குகிற கதாயுதத்தால், உயிரை கவருதி- உயிரைவாங்குவாய்,' என்று எடுத்து உரை செய-என்று தொடங்கிச் சொல்ல, (அதற்கு உடன்பட்டு), அரசனை - துரியோதனனை,*

*இரு கைஉம் குவித்து-இரண்டு கைகளையுங் கூப்பித்தொழுது, அருளுடன் விடை கொளும்- (அவனுடைய) கருணையுடனே அனுமதிபெற்றுப்போன, எழில் கொள்- அழகைக்கொண்ட, சிந்துவுக்கு ஒரு தனி முதல்வன்-சிந்துதேசத்துக்கு ஒப்பற்ற தனியரசனான சயத்திரதன்,-(எ - று.)- "உரைசெய்து *** எடுத்தனன்" என மேற்கவியில் முடியும். முதல்வன் விடைகொளும்என முடித்தலுமாம்.*

இவன்மனைவிக்கு மருமகனாகவே இவனுக்கும் மருமகனெனப் பட்டான். பசுபதிஎன்ற வடமொழித்திருநாமம் -இடபத்துக்குத் தலைவனென்றும் உயிர்களுக்குத்தலைவனென்றும், பொருள்படும். "உருவுட்காகும்" என்பது, தொல்காப்பியம். *(256)*

### *119. - சயத்திரதன் தேரை விரையச் செலுத்துமாறு சொல்லிச் சிவபிரானைத் தியானித்து ஒருகதையை யெடுத்தல்.*

***உரகவெங்கொடித்தரணிபனலமருமுளமகிழ்ந்திடக்கதிபல படவரு,***
***துரகதம்பிணித்தணிகொளிரதமிசைதுவசமுந்தொடுத்தடலுடை வலவனை,***
***விரைவுடன்செலுத்துகவெனவரைசெய்துவிழிசிவந்துசிற்றிள மதிபுனைதரு,***
***கரகவண்புனற்சடைமுடியவனடிகருதிநின்றெடுத்தனனொரு கதையுமே.***

*(இ-ள்.) உரகம் - பாம்பையெழுதிய, வெம் - பயங்கரமான, கொடி - துவசத்தையுடைய,தரணிபன் - துரியோதனராசனது, அலமரும் உளம் - கலங்கிய மனம், மகிழ்ந்திட-மகிழ்ச்சியையுடைய, (சயத்திரதன்), 'கதி பலபட வரு - அநேகவகைக்கதிகள்பொருந்த வருகிற, துரகதம் - குதிரைகளை, பிணித்து - பூட்டி, அணி கொள்-அழகைக்கொண்ட, இரதம்மிசை-தேரின்மேல், துவசம்உம் தொடுத்து - கொடியையும்நாட்டி, விரைவுடன் செலுத்துக - வேகமாக (த்தேர்) செலுத்துவாய்' என - என்றுஅடல் உடை வலவனை உரைசெய்து - வலிமையையுடைய (தன்) சாரதியை(ப்பார்த்து)க் கூறி,-விழி சிவந்து-(கோபத்தாற்) கண்சிவந்து,-சிறு இள மதிபுனை தரு-சிறிய இளஞ்சந்திரனைத் தரித்த, கரகம் கண் புனல்-(பிரமன்கைக்) கமண்டலத்தினின்று உண்டான சிறந்த கங்கை நீரையுடைய, சடை முடியவன் - சடைமுடியையுடையசிவபிரானது, அடி - திருவடிகளை, கருதி நின்று - தியானித்துநின்று, ஒரு கதைஉம் எடுத்தனன்-ஒப்பற்ற கதாயுதத்தையும் எடுத்துக்கொண்டான்; (எ - று.)*

*பலகதி - ஐவகைநடை; அவை -"விக்கிதம் வற்கிதம் வெல்லுமுபகண்டம், மத்திமஞ்சாரியோ டைந்து" என்பன. ஆஸ்கந்திதம், தோரிதகம், ரேசிதம், வல்கிதம், புலுதம்-எனவும்படும்; இவற்றுள், நிச்சலமாக அதிவேகமும் அதிமந்தமு மாகாமல் சமமானகதி-ஆஸ்கந்திதம்; அதனினும் அதிகமாய்ச் சதுரமான கதி-தோரிதகம்; தாளகதியுடன்வட்டமிட்ட கதி - ரேசிதம்; வேகத்தினால் முன்னங்கால்களைத்தூக்கி வரும் நடை-வல்கிதம்; அவ்வளவு வேகமாகவும் சமமாகவும் போகுகை - புலுதம்: இனி, வேகமும்மெதுவுமின்றிச் சமமான நடை - ஆஸ்கந்திதம், வேகமான சமத்காரமுள்ள நடை-தெளரிதகம், கோணலில்லாத நேர்நடை-ரேசிதம், நாலுகாற்பாய்ச்*

*சல்- வல்கிதம், குதித்துக்குதித்துப்போதல்-புலுதம்என்றும் கூறு வாருமுளர். இனி மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வாநரகதி, விருஷபகதி என்பனவுமாம். இவை- **பஞ்சகதி** யெனவும், பஞ்சதாரையெனவும்படும். இவற்றோடு பஞ்சளி, முரளி, சுடால வலநம் என்னும் நான்குங் கூட்டி **நவகதி** கூறுதலும் உண்டு. கரகம் - வடசொல். பரிசுத்திக்காகச் சலபாத்திரத்தை எப்பொழுதும் கையில் வைத்திருத்தல், வைதிக ரியல்பு. கங்கைப் புனலுக்கு வண்மை -தன்னில் ஒருகால்மூழ்கியவர்க்கும் அருவினையொழித்து உயர்பத மருளுவது. (257)*

### *120. - அபிமனும் திகிரியையொழித்துக் கதாயுதத்தைக்கொண்டு கர்ச்சித்தல்.*

***மறலிதண்டேனக்கொலைபுரிதொழின்மிகவலியதண்டுகைக் கொளுமளவினிலிவன்,***
***விறல்புனைந்தகைத்திகிரியையொழியமுன்வினையழிந்துபற் றலர்முதுகிடவிழு,***
***திறல்விளங்குபொற்கதைகொடுவிரைவொடு திருகிநின்கதைக்***

**கிதுகதையெனவுரை,**
**யுறவிளம்பியப்பொருகளமுழுவதுமுருமெறிந்ததொத்**
**துவகையொடதிரவே..**

இதுவும், மேற்கவியும் -குளகம்.

*(இ-ள்.) மறலி தண்டு என - யமனது தண்டாயுதம்போல, கொலைபுரி தொழில் மிகவலிய- கொலைசெய்யுந்தொழிலிலே மிகவும்வலிமையையுடைய, தண்டு- கதாயுதத்தை,கை கொளும் அளவினில்-(அந்தச்சயத்திரதன்) கையிலெடுத்துக்கொண்டவளவிலே,-இவன்-அபிமன், விறல் புனைந்த கை திகிரியை ஒழிய-வெற்றியைக்கொண்டதன்கையிலுள்ள சக்கராயுதத்தை நீங்க(வீட்டு),- முன் - முன்னே[பலபோர்களில்],பற்றலரர் - பகைவர்கள், வினை அழிந்து- போர்த்தொழிலை யொழிந்து, முதுகுஇட -புறங்கொடுக்கும்படி, விழு - (அவர்கள்மேல்) விழுந்தன்மையதான, திறல் விளங்கு -வலிமைமிக்க, பொன் கதை கொடு - அழகியதொரு கதாயுதத்தை யெடுத்துக்கொண்டு, விரைவோடு திருகி - வேகமாகச் சுழற்றி, நின் கதைக்கு இது கதைஎன-'உனது கதாயுதத்துக்கு (ஏற்ற) கதாயுதம் இது' என்று, உரைஉற விளம்பி -விரவாதத்தை மிகுதியாகச் சொல்லி, அ பொரு களம் முழுவதுஉம்-அந்தப்போர்க்களம் முழுவதிலும், உரும் எறிந்தது ஒத்து - இடியிடித்தாற்போன்று,உவகையொடு அதிர-உற்சாகத்தோடு கர்ச்சிக்க,- (எ - று.)- "இருவரும் உடற்றினர்"என மேற்கவியில் முடியும்.*

*மறல் - கொலைத்தொழில்; அதனையுடையவன், மறலி, மறலிதண்டு- காலதண்டம்.*
*(258)*

*121.- அபிமன் சயத்திரதன் இருவரும் பொருதல்.*

**சினவுசிங்கமொத்திருவருமுறைமுறைதிருகிவெஞ்செருப்புரி**
**தலினெழுமொலி,**
**கனல்வளைந்துகட்டனிலமுமெறிதருகடலதிர்ந்**
**தெனக்கனமதிர்வனவென,**
**மினல்பரந்தெழத்திசைகளின்முடிவுறவெடிகொடண்டபித்தியு**
**முடைதரவெழ,**
**மனமழன்றுபொற்கிரிநிகர்தமபுயவலிமைகொண்டுடற்றினர்**
**வயமலியவே.**

*(இ-ள்.) சினவு சிங்கம் ஒத்து- கோபித்து (இரண்டு) சிங்கங்கள் போன்று, இருவர்உம்-(அபிமன் சயத்திரதன் என்னும்) இரண்டு பேரும், முறை முறை திருகி- மாறிமாறி(க்கதை) சுழற்றி, வெம் செரு புரிதலின்-கொடிய போரைச் செய்தலால், எழும் -உண்டான, ஒலி-ஓசை,-கனல் வளைந்து கட்டு- காலக்கினியாற் சூழ்ந்து எரிக்கப்பட்டு,அனிலம்உம் எறி தரு-காற்றும் வீசப்பெற்ற, கடல்-, அதிர்ந்து என- முழங்கினாற்போலவும், கனம்-மேகங்கள், அதிர்வன என-முழங்குவனபோலவும்,- மினல் பரந்து எழு-மின்னல் பரவிக் காணப்படுமாறும், திசைகளின் முடிவு உற - திக்குக்களின் எல்லையை அளாவ, வெடி கொடு-வெடித்தலைக் கொண்டு, அண்ட பித்திஉம்-அண்டகோளத்தின் சுவர்களும், உடைதர-உடையுமாறும்,-எழ- மிக்கொலிக்க,-மனம் அழன்று-மனங்கொதித்து, பொன் கிரி நிகர் தம் புயம் வலிமைகொண்டு-மேருமலையை யொத்த தங்கள் தோள்களின் வலிமையினால், வயம் மலிய - வெற்றி மிக, உடற்றினர்-போர் செய்தார்கள்; (எ - று.) பி-ம்: கட்டனிலமும். வெடிகொள்.*

*ஒலிஎழ என இயையும். மின்னல்பரந்துஎழுதலும் அண்ட பித்தியுடைதலும், ஆரவாரமிகுதிபற்றிய அதிர்ச்சியாலாகும். (259)*

*122.-அபிமன் வெற்றிபடக் கதாயுத மெறிந்தமை.*

***உரியசிந்துவுக்கரசனதிருபுயமொடியவென்புநெக் குடன்முரி தரவுட,***
***னெரியவெங்குடர்க்கொடிநெடுவளையமுநிமிரவன்றொ டைப் புடைமிடைநடையுற,***
***வரியகண்கனற்பொறியெழமணிமுடியழகழிந்துபொற்பிதிர் படவுதிர்பட,***
***வெரியெழுஞ்சினத்தொடுதனதொருகையினிலகுதண்ட மிட்டிகலுடனெறியவே.***

*இதுமுதல் நான்கு கவிகள் - குளகம்.*

*(இ-ள்.) சிந்துவுக்கு உரிய அரசனது - சிந்துதேசத்துக்கு உரிமையையுடைய அரசனான சயத்திரதனது, இரு புயம் - இரண்டு தோள்களும், ஒடிய - ஒடியவும், என்பு நெக்கு - எலும்புகள் நொருங்கி, உடன் முரிதர - உடனே பின்னப்படவும், உடல் நெரிய-உடம்பு நசுங்கவும், வெம் குடர் நெடு கொடி வளையம்உம் -கொடிய குடலாகிய நீண்ட கொடிச்சுற்றும், நிமிர-(அத்தன்மைநீங்கி) நீட்சியடையவும், வல் தொடை புடை-வலிய தொடைகளினிடம், மிடை நடை உற- (ஒன்றோடொன்று) நெருங்கிய தோற்றத்தையடையவும், அரிய கண்- அருமையான கண்களினின்று, கனல் பொறிஎழ-தீப்பொறி கிளம்பவும், மணி முடி-இரத்தினங்கள் பதித்த கிரீடம், அழகு அழிந்து-, பொன் பிதிர்பட உதிர்பட - பொற்பொடிகள் மயமாக உதிரவும், (அபிமன்), எரி எழும் சினத்தொடு - தீப்பற்றி யெழும்படியான கோபத்துடனே, தனது ஒரு கையின் இலகு தண்டம் இட்டு-தனது ஒன்றாகிய கையிலே விளங்குகிற கதாயுதத்தை வீசி, இகலுடன் எற்றிய - வலிமையோடுதாக்க,- (எ - று.)- "சிந்துவுக்கரசனுங் கதையெறிய" என அடுத்த கலியோடு தொடரும். **பி - ம்:** முரிதரவுரம்.*

*'சிந்துவுக்கரசனது' என்பதை, என்பு முதலிய ஆறனொடுங் கூட்டுக. தொடைப்புடை - தொடைகள் மோதுகின்ற என்றலும் ஒன்று. இப்பாட்டில் டகரம் பலவிடத்துவந்தது, **'விருத்தியநுப்பிராசம்'** என்னுஞ் சொல்லணி; அதாவது- எழுத்துஒன்றேனும் பல வேனும் இடையிட்டுப் பல்கால் வருவது. (260)*

***123.- சயத்திரதன் கதாயுதத்தால் எதிர்தாக்கினமை.***

***வசையறும்புகழ்க்குருகுலதிலகனைமருதிரண்டொடித்தவர்திரு மருகனை,***
***விசயன்மைந்தனைப்பணைமுகின்மிசைவருவிபுதர்தங்குலத் ததிபதிபெயரனை,***
***யசைவில்வன்றிறற்பகைமுனைநிருபரையடைய வென்றகட்டழகுடையபிமனை,***
***யிசைகொள்சிந்துவுக்கரசனுமொருகதையிருகைகொண்டெடுத்தி கலுடனேறியவே.***

*(இ-ள்.) வசை அறும்-பழிப்பு இல்லாத, புகழ் - கீர்த்தியையுடைய, குரு குலதிலகனை - குருவென்னும் அரசனது குலத்துக்கு நெற்றித்திலகம் போல அழகுசெய்பவனும், மருது இரண்டு ஒடித்தவர் திரு மருகனை - இரட்டைமருதமரங்களை முறித்த கண்ணபிரானுக்குச் சிறந்த மருமகனும், விசயன் மைந்தனை - அருச்சுனனுக்குப் புத்திரனும், பணை முகில்மிசை வரு - பருத்த மேகமாகிய வாகனத்தின்மேல் வருகிற, வீபுதர்தம் குலத்து அதிபதி - தேவர்களுடைய கூட்டத்துக்குத் தலைவனான இந்திரனுக்கு, பெயரனை - பௌத்திரனும், அசைவு இல்-சோர்தலில்லாத, வல் திறல்- கொடியவலிமையையுடைய, பகை நிருபரை அடைய-பகைவர்களான அரசர்களையெல்லாம், முனை-போரில், வென்ற - சயித்த, சுட்டு அழகு உடை - நிறைந்த அழகையுடையவனு மாகிய, அபிமனை - அபிமந்யுவை, இசை கொள் சிந்துவுக்கு அரசன்உம் - கீர்த்தியைக்கொண்ட சிந்து தேசத்துக்கு அரசனான சயத்திரதனும், ஒரு கதை இரு கைகொண்டு எடுத்து - ஒப்பற்ற (தன்)*

*கதாயுதத்தை இரண்டு கைகளாலும் எடுத்து, (அதனால்), இகலுடன் எறிய - வலிமையோடு தாக்க,- (எ-று.)- "களிறனையவன ◌்*** முதுகுகண்டபின்" என வருங்கவியோடு தொடரும். (261)*

### *124,- அபிமன் கதாயுதத்தால் தன் தேர்முதலியன அழிக்க, சயத்திரதன் சிவபிரானளித்தகதாயுதங்கொண்டு பூமியிற் குதித்துப் பொருதல்.*

***கரமிழந்து மற்றொருகரமிசை யொருகதைகொள் வெஞ்சினக்***
***களிறனையவனிவ,***
***னிரதமுந்தகர்த்துறுகதியுடன்வருமிவுளியுந்துணித்தெதிர்***
***முனைவலவனை,***
***முரணுடன்புடைத்தணிதுவசமும்விழமுதுகுகண்டபிற்சரபம***
***தெனும்வகை,***
***யரன்வழங்குபொற்கதையுடனவனியிலவனுமுன்குதித்தடலுடன்***
***முனையவே.***

*(இ - ள்.) கரம் இழந்து-(முன்னே) ஒருகையை யிழந்து, மற்று ஒரு கரம்மிசை - மற்றொருகையில், ஒரு கதை கொள் - ஒரு கதாயுதத்தை யேந்திய, வெம் சினம் களிறு அனையவன் - கொடிய கோபத்தையுடைய ஆண்யானையைப் போன்றவனான அபிமன், இவன் - சயத்திரதனது, இரதம்உம்- தேரையும், தகர்த்து- உடைத்து, உறு கதியுடன் வரும் - மிக்கவேகத்தோடு வருகிற, இவுளிஉம்-*

*குதிரைகளையும், துணித்து - துண்டாக்கி, எதிர் முனை - எதிரில் தொழில்செய்கிற, வலவனை- சாரதியையும், முரணுடன் புடைத்து-வலிமையோடு தாக்கி, அணி துவசம்உம்- அழகிய கொடியையும், விழ-ஒடிந்து விழ (ச்செய்து), முதுகு கண்ட பின்-புறங்கொடுக்குமாறு வெல்லத் தொடங்கியவுடனே,-அவன்உம் -சயத்திரதனும், சரபம், அது எனும் வகை- (சிங்கத்தைக்கொல்லவல்ல) சரபம்போல, அரன் வழங்கு பொன் கதையுடன்-சிவபிரான் அளித்த பொன்மயமான கதையுடனே, அவனியில் முன் குதித்து - பூமியிலே வேகமாகக்குதித்து, அடலுடன் முனைய -வலிமையோடு போர்செய்ய,-(எ - று.)-"சிதறின" என அடுத்த கவியில் முடியும் களிறு- ஒருகையோடுஇருத்தற்கும் உவமை.* ***பி-ம்:*** *அடலுடைவலவனை, (262)*

### *125.- இருவரும் தரையிற் கைகலந்து பொருதல்.*

***பதயுகங்களொத் தியவலிபலகணபணபுயங்கர்பற் பலமுடிசிதறின,***
***வெதிர்கொடண்டமொத்தியவொலிதிசைகளிலிபமுநின்று***
***மெய்ப்பிடியொடுசிதறின,***
***கதியில்வந்தசித்திரமெனமுறைமுறைகதுவிமண்டலித்தொருபகன்***
***முழுவது,***
***மதிசயப்படப்பொருதனரெதிரெதிரபிமனுஞ்சயத்திரதனுமமரிலே.***

*(இ-ள்.) அபிமன்உம் சயத்திரதன்உம் - அவ்விரண்டுபேரும். பதயுகங்கள் ஒத்திய - (தம்தம்) இரண்டுகால்களையும் உறுதியோடு வைத்த, வலி-வலிமையினால், பணம்- படத்தையுடைய, கணம் - கூட்டமான, பல புயங்கர் (கீழிருந்து பூமியைத்தாங்குகிற) அநேக நாகர்களது, பல் பல முடி - பலபலதலைகள், சிதறின - நெருங்கின; எதிர் கொள் - எதிரெதிரிற் கொண்ட, தண்டம் - கதாயுதம், மொத்திய- (ஒன்றோடொன்று) தாக்குவதனாலுண்டான, ஒலி - ஒளியினால், திசைகளில் நின்று- (எட்டுத்) திக்குக்களினின்று, இபம்உம்-திக்குயானைகளும், மெய்- உண்மையாக பிடியொடு- (தம்தம்பெண்யானையுடனே, சிதறின-நிலைகுலைந்து ஓடின; (இவ்வாறுஅபிமனும் சயத்திரதனும்), அமரில்-போர்க்களத்தில், கதியில் வந்த சித்திரம்என- வேகமாகவந்த புலிகள்போல, முறைமுறை கதுவி-மாறிமாறி (ஒருவரையொருவர்) பற்றி, மண்டலித்து சுழன்றுவந்து, ஒரு பகல் முழுவது உம்- (அந்த) ஒருபகற்பொழுது முடியுமளவும். எதிர் எதிர் -எதிரிலே எதிரிலே, அதிசயம் பட - (காண்பவர்க்கு) வியப்புண்டாக, பொருதனர் - போர் செய்தார்கள்; (எ - று.)*

*ஐந்தலை, இருதலை முதலாக ஒவ்வொருநாகத்துக்கே பலதலைகள் உண்மை பற்றி, 'பற்பலமுடி' எனப்பட்டது. மெய்ப்பிடியொடு - தேகபலத்தோடு எனினுமாம். வீமசேனனை வீமனென்றும், சத்தியபாமையைச் சத்தியை யென்றும், கிருதவர்மாவைக் கிருதனென்றுங் கூறுதல்போல,* ***சித்திரகாயத்தைச் சித்திரமென்றார்;*** *சித்திரகாயம் என்று புலிக்குப்பெயர்****;*** *(கோடுகளால்) பலவகை நிறமுள்ள உடம்புடையதென்று காரணப்பொருள். இனி, இவ்விருவருள் ஒருவன் செய்த தொழிலை மற்றொருவன் அவ்வாறே செய்தலால், 'சித்திரமென' என்பதற்கு - ஒன்றில் உள்ளபடி யெழுதப்படுகிற சித்திர வடிவம்போல என்றும் உரைக்கலாம். முறைமுறை கதுவி மண்ட*

*லித்து-மேல் பதினேழாம்போர்ச்ருக்கத்து வருகிற " இடம்புரிந்திடில் வலம்புரியு மெண்ணின் முறையால், வலம்புரிந்திடி லிடம் புரியு மண்டலமுமாய்" என்பது போலக்கொள்க.* ***பி -ம்:*** *மொத்தியவலி. இபமடங்க. (263)*

### *126.- அபிமன்புயவலிமையைத் தேவரும் புகழ்தல்.*

***உலைவிறண்டினிற்பரிசனன்மதலையுமுவமையின்றெனப்பகழியின்***
***மழைபொழி,***
***சிலையின்வன்றொழிற்றிறலுடைமகபதிசிறுவனுந்தனக்***
***கெதிரிலனினியென,***
***மலையும்வெஞ்சமத்தொருதனிமுதுபுயவலிமைகண்டுபொற்புறு***
***கழலபிமனை.***
***யலைநெடுங்கடற்றரணி பரனைவருமமரருந்துதித்தனர்***
***முகடதிரவே.***

*(இ-ள்.) உலைவு இல்-அழிதலில்லாத, தண்டினில்-கதாயுதத்தில், பரிசனன் மதலைஉம்-வாயுகுமாரனான வீமனும், உவமை இன்று -(தனக்கு) ஒப்பாகான், என என்று (காண்பவர்) சொல்லவும்,-பகழியின் மழை பொழி-அம்புமழையைச் சொரிகிற, சிலையின் வல் தொழில்-வில்லினாற்செய்யுங் கொடிய போர்த்தொழிலில், திறல் உடை மகபதி சிறுவன்உம் -வலிமையையுடைய இந்திரன் மகனான அருச்சுனனும், தனக்கு இனி எதிர் இலன்-இவனுக்கு இனி ஒப்பாகான், என-என்று(காண்பவர்) சொல்லவும்,- வெம் சமத்து-கொடிய போர்க்களத்தில், மலையும்-(அன்றைத்தினத்தில் அபிமன்) போர்செய்த, ஒரு தனி முது புயம் வலிமை-ஒப்பில்லாத தனிப்பட்ட வலிய தோள்களின்பலத்தை, கண்டு-, அலை நெடு கடல் தரணிபர் அனைவர்உம்-அலைகளையுடையபெரிய கடல்சூழ்ந்த பூமியைக் காக்கிற அரசர்களெல்லோரும், அமரர்உம்-தேவர்களும்,பொற்பு உறு கழல் அபிமனை-அழகுமிக்க வீரக்கழலையுடைய அந்த அபிமந்யுவை,முகடு அதிர - (ஆரவாரத்தால் அண்டகோளத்தின்) மேல்முகடு அதிர்ச்சியடையும்படி,துதித்தனர் - (உரத்தகுரலோடு) தோத்திரஞ் செய்தார்கள்; (எ - று.)*

*வீமன் கதைத்தொழிலிலும், அருச்சுனன் வில்தொழிலும் மிகச்சிறந்தவரென்பது பிரசித்தம். முதுபுயம்-போர்த்தொழிலில் முதிர்ந்த [மிகப்பயின்ற] புயம் என்றுமாம். (264)*

### *127.-படுகளச் சிறப்பு.*

***கழுகுபந்தரிட்டனமிசைவிசையொடுகழுதினங்களிட்டனபலகரணமு.***
***மெழுகவந்தமிட்டனபலபரிவுகளிருபுறங்களிட்டனவெதிரழிபடை,***
***யொழுகுசெம்புனற்குருதியின்வருநதியுநதியுஞ்சிவப்புறும்***
***வகைபெருகலின்.***
***முழுகியெஞ்சியிட்டனகழியிடையிடைமுகிலின்வெங்குறற்கசரத***
***துரகமே.***

*(இ-ள்.) (அப்பொழுது), கழுகு-கழுகுகள். (இறந்தவற்றைத் தின்னும்பொருட்டு), மிசை-மேலே, விசையொடு-வேகத்தோடு, பந்தர் இட்டன-பந்தல்போகட்டாற்போல இடைவிடாது பரவின, கழுது இனங்கள்- பேய்களின் வகைகள், பல கரணம்உம் இட்டன - களிப்புமிகுதியால்) அநேக விதமான கரணங்களைப்*

*போகட்டன; எழு கவந்தம்-எழுந்த உடற்குறைகள், பல பவுரிகள் இட்டன- அநேகவகைப் பௌரியென்னுங் கூத்தை யாடின; எதிர் அழி படை-எதிரிலே அழிந்தசேனைகள், இரு புறங்கள் இட்டன -இரண்டுபக்கங்களிலும் விழுந்தன; ஒழுகு செம்புனல் குருதியின் வரும் நதி -வழிகிற செந்நீராகிய இரத்தவெள்ளத்தாலுண்டானஆறுகள், உததிஉம் சிவப்பு உறும் வகை-(தான் சென்று சேருஞ்) கடலும் செந்நிறம்மிகும்படி, பெருகலின்-பெருகுதலால், முகிலின் வெம் குரல் கச தர துரகம்-மேகம்போலப் பயங்கரமான முழக்கத்தையுடைய யானைதேர்குதிரைகள், முழுகி- (அவ்விரத்தப்பெருக்கில்) அமிழ்ந்து, சுழி இடை இடை- (அதிலுள்ள)சுழிகளினிடந்தோறும், எஞ்சி யிட்டன - மறைந்து அழிந்தன;*

*கரணம் - கூத்தின் ஓர்விகற்பம்; அதனை இடுதல் - ஆடுதல், மிகப்பலர் இறக்கையில் கவந்தம் எழுந்தாடுதல், முற்கூறப்பட்டது. பவுரி - தானே சுழன்று ஆடுங்கூத்து. (265)*

### *128. - அபிமன் கதாயுதப்போரி லிளைத்தல்.*

**முறைமையின்றி யெத்தரணிபர்களுமெதிர் முடுகவந்துமுற்**
**றெறுதலினவரவர்,**
**பொறையழிந்துகெட்டனைவரும்வெருவொடுபுறமிடும்படிக்**
**கொருதனிபொருதபி,**
**னிறைவலம்புரித்தொடைகமழ்புயகிரிநிருபதுங்கன்மைத்**
**துனனுளம்வெருவர,**
**வறைபெருங்கதைப்படைகொடுவலியுறவமர்புரிந்திளைத்**
**தனனடலபிமனே.**

*(இ - ள்.) எ தரணிபர்கள்உம்- எல்லா வரசர்களும், முறைமை இன்றி - (ஒருவர்பின் ஒருவர் என்ற) முறைமை யில்லாமல், முடுக-வேகமாக, எதிர் வந்து- (தன்னொருத்தனை) எதிர்த்து வந்து, முன் தெறுதலின்- முன்னே போர்செய்தலால்,- அடல் அபிமன்-வலிமையையுடைய அபிமந்யு,-அவர் அவர் - வந்த வந்த அவ்வீரர்கள், பொறை அழிந்து- (துன்பத்தைப்) பொறுக்குந் தன்மை யொழிந்து, கெட்டு-தோற்று, அனைவர்உம்-எல்லோரும். வெருவொடு-அச்சத்தோடு, புறம் இடும்படிக்கு- முதுகுகொடுக்கும்படி, ஒரு தனி - தன்னந் தனியாய், பொருத பின் - போர்செய்த பின்பு,-நிறை- நிறைந்த. வலம்புரி தொடை - நஞ்சாவட்டைப்பூமாலை, கமழ்- வாசனைவீசுகிற புயம்கிரி- மலைகள்போலுந் தோள்களையுடைய, நிருப துங்கன்-அரசரிற் சிறந்த துரியோதனனுக்கு, மைந்துனன்-உடன்பிறந்தவள் கணவனானசயத்திரதன், உளம் வெருவர-மனம் அஞ்சும்படி, அறை பெரு கதை படை கொடு-தாக்குகிற பெரிய கதாயுதத்தால், வலி உற-பலமாக, அமர் புரிந்து- (அவனுடன்)போர்செய்து, இளைத்தனன்-சோர்ந்தான்:*

*ஏற்கனவே தன்னந்தனியனாய் அபிமன் பலருடன் பொருது இளைத்துள்ளானென்பதை, முன்னிரண்டடிகள் காட்டவந்தன, தெறுதல்- வருத்துதலென்பாருமுளர். அழிந்துகெட்டு- ஒருபொருட்பன்மொழியுமாம், அறை- சிறப்பித்துச்சொல்லப்படுகிற என்றுமாம். (266)*

### *129.- இரண்டுகவிகள் - ஜயத்ரதன் சிவபிரானளித்த கதைகொண்டு அபிமனைத் தலைதுணித்துவீழ்த்துதலைக் கூறும்.*

***இவன்மயங்கிமெய்த்தளர்வுடன்மெலிவுறுமிறுதிகண்டினித்தெ
றுவதுகடனென,
வவனிகொண்டபற்குனன்மதலையையவனருகுவந்தடுத்தணி
புயவலிகொடு,
சிவனையஞ்செழுத்துரைசெய்துதொழுதொருசிகரதண்டம்
விட்டெ. றிதலினெறிதரு,
பவனனன்றுகுத்தினகிரியெனவிசைபடவிழுந்ததப்பருமணி
மகுடமே.***

*(இ-ள்.)* இவன் - அபிமன், மயங்கி-,மெய் தளர்வுடன் - உடம்பின் சோர்வுடனே,மெலிவு உறும் - வாட்டம் மிகுகிற, இறுதி-அந்திமதசையை, கண்டு- ,(சயத்திரதன்), இனிதெறுவது கடன் என - 'இப்பொழுதே(இவனை) அழிப்பது செய்தொழில்' என்றுகருதி,அவனி கொண்ட பற்குனன் மதலையை - (பராக்கிரமத்தால்) பூமிமுழுவதையும்(தன்னுடையதாகக்) கொள்ளவல்ல அருச்சுனபுத்திரனான அபிமனை, அவன் அருகுவந்து அடுத்து- அவனது சமீபத்தில் வந்து நெருங்கி, சிவனை அஞ்சு எழுத்துஉரைசெய்து தொழுது- சிவபிரானை ஸ்ரீபஞ்சாக்ஷரமகாமந்திரத்தை உச்சரித்து வணங்கி,அணி புயம் வலி கொடு-அழகிய தோள்களின் வலிமையால், ஒரு சிகர தண்டம்விட்டு- ஒம்பற்ற நுனியையுடைய (தன்) கதாயுதத்தை வீசி, எறிதலின் - தாக்கியதனால்,- எறிதருபவனன்- வீசுகிற வாயு, அன்று-(ஆதிசேடனோடு பகைத்த) அக்காலத்தில், குத்தின - தாக்கிக் கொடிமுடி யொடித்த, கிரி என - மேருமலைபோல, அபரு மணிமகுடம்-அபிமனது பருத்த இரத்தினங்கள்பதித்த கிரீடம், விசை பட விழுந்தது-வேகமாகக் கீழ் விழுந்தது; (எ - று.)

*மதலையை எறிதலின் என்றும், சிவனைத்தொழுது என்றும் இயையும். புயவலிகொடு- தனதுதோள்களிரண்டுக்கும் எவ்வளவு வலிமை யுண்டோ அவ்வளவையுங் கொண்டு. அஞ்சு - முழுப்போலி. (267)*

***130. தலைது ணிந்துதத் திடவிழ விவனொரு தனது திண்கை
யிற் கதைகொடு தரியல,
னிலைய றிந்துபுக் குரனுற வெறிதலி னெரி
நெ ரிந்தத் தரணிப னுடலமு,
மளைம றிந்ததொத் தபிமன துடலமு மகித லந்தனிற்
றரியற விழுதலி,
னலையெ றிந்துமைக் கடல்புர ளுவதென வரவம்
விஞ்சியிட் டதுகள மடையவே.***

*(இ-ள்.)* (அப்பொழுது), இவன் - அபிமன், தனது ஒரு திண்கையில் கதை கொடு- தனது வலிய ஒற்றைக்கையிலுள்ள கதாயுதத்தால், தரியலன் நிலை அறிந்து புக்குஉரன் உற எறிதலின் - பகைவனான சயத்திரதனது (மார்புமுதலிய) உயிர்நிலைகளைஉணர்ந்து சென்று பலம்மிக வீசியடித்தலால், அ தரணிபன் உடலம்உம்-அந்தச்சிந்துராசனது உடம்பும், நெரிநெரிந்தது-மிக நொருங்கிற்று; அபிமனதுஉடலம்உம்-அபிமந்யுவின் உடம்பும், (சைந்தவன் கதை தாக்கலால்), தலை துணிந்துதத்திட விழ - தலைதுணிபட்டுச்சரியவிழ, மலை மறிந்தது ஒத்து-மலைசாய்ந்ததுபோன்று, மகிதலந்தனில் -தரையிலே, தரி அற விழுதலின் - நிற்றலின்றிவீழ்ந்ததனால், அலை எறிந்து - அலைவீசி, மை கடல் புரளுவது என -

கரிய கடல்கரைபுரள்வதுபோல, களம் அடைய-போர்க்களம் முழுவதிலும், அரவம் விஞ்சி யிட்டது- ஆரவாரம் மிக்கது: (எ - று.)

*நிலை - கதைப்போரில் அடிக்கத்தக்க இடம். நெரிநெரிதல் இரட்டைக்கிளவி. தரி-தரிப்பு: முதனிலைத்தொழிற்பெயர். அரவம்-ரவம்; வடசொல். (268)*

வேறு.

*131.- இதுமுதல் நான்குகவிகள் - அபிமனதுமரணத்துக்குக் கவி இரங்கல்.*

***மாயனாந் திருமாமன் றனஞ்சயனாந் திருத்தாதை வானோர்க்***
***கெல்லா,***
***நாயனாம் பிதாமகன்மற் றொருகோடி நாரதிபரா நண்பாய்***
***வந்தோர்,***
***சேயனா மபிமனுவாஞ் செயத்திரதன் கைப்படுவான்***
***செயற்கை வெவ்வே,***
***றாயநா ளவனிதலத் தவ்விதியை வெல்லும் வகை***
***யார்வல் லாரே.***

*(இ-ள்.) (அபிமனுக்கு), திரு மாமன் - சிறந்த மாதுலன், மாயன் ஆம் - கண்ணனாம்; திரு தாதை-சிறந்த தந்தை, தனஞ்சயன் ஆம்-அருச்சுனனாம்; பிதாமகன்- பாட்டன், வானோர்க்கு எல்லாம் நாயன் ஆம்-தேவர்களுக்கெல்லாந் தலைவனானஇந்திரனாம்; மற்று-மேலும், நண்பு ஆய் வந்தோர் - சினேகமும் உறவுமாகப்பொருந்தினவர், ஒரு கோடி நராதிபர் ஆம் - ஒரு கோடிக்கணக்கான அரசர்களாம்;(இப்படியிருக்க), சேயன் ஆம்-இளங்குமரனாகிய, அபிமனு-அபிமந்யு, செயத்திரதன்கை படுவான் அம் -சயத்திரதனது கையால் இறப்பானாம்; செய்கை-(ஊழ்வினையின்)செய்கைகள், வெவ்வேறு ஆய நாள்- வேறுவேறுவிதமாக நிகழ்ந்தகாலத்தில்,அவனிதலத்து-உலகத்தில், அ விதியை வெல்லும் வகைவல்லார்- அவ்வூழ்வினையைச்சயிக்கவல்லவர்கள், யார்-யாவர் (உளர்)? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)*

*எல்லாச்சிறப்புக்களும் அமைந்திருக்கவும் அபிமன் அழிந்தா னென்றசிறப்புப்பொருளை 'விதியை வெல்லவல்லார்யார்? என்னும் பொதுப்பொருள் கொண்டு விளக்கியதனால் வேற்றுப்பொருள்வைப்பணி. "ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந்துறும்" என்ற இதனால், ஊழின்விலக்கலாகாத வலிமையைஉணர்க. இக்கவியில்வந்த 'ஆம்' என்னுஞ்சொற்கள் பலவும்-உயர்வு, சிறப்பு, வியப்பு முதலிய சிலகுறிப்புக்களை விளக்கின: "கைத்தோடுஞ் சிறைகற்போயை,வைத்தோனின்னுயிர்வாழ்வானாம், பொய்த்தோர்வில்லிகள் போவாராம். இத்தோடொப்பதி யாதுண்டோ" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. இது இடைச்சொல்லின்பாற்பட்டது. ஆகும்என்னும்செய்யுமென்முற்றாகக் கொள்வோமெனின் 'நராதிபராம'ஂஎனப் பலர்பாற்பெயரோடும் வந்ததனால், அது பொருந்தாது; "பல்லோர்படர்க்கைமுன்னிலை தன்மையில், செல்லாதாகுஞ் செய்யுமென்முற்றே" என்பதுஇலக்கணமாதலால். இரட்டுற மொழிதலால், நண்பு- உறவுமாயிற்று, நாயகன் என்றவடசொல், நாயன் என விகாரப்பட்டது. மாயன், தநஞ்சயன், வானோர்க்கெல்லாம்நாயன் என்ற பெயர்களாற் குறித்தது, அவரவர்பெருமையை*

*நன்குவிளக்கும். 'சேய்' என்னும் ஆண்பாற் சிறப்புப்பெயர் அன்விகுதிபெற்றது. செயற்கை யென்ற தொழிற்பெயரில், அல்-சாரியை. **பி-ம்** : வெல்லும்விரகார்.*

*இதுமுதல் பதினைந்து கவிகள்-பெரும்பாலும் ஈற்றுச்சீரிரண்டும் மாச்சீர்களும், மற்றைநான்கும் காய்ச்சீர்களு மாகிய அறுசீராசிரியவிருத்தங்கள். (269)*

***132. சேடன்முடிநெளியவருசெம்பொற்றேரழிவதோவந்தோ***
***வந்தோ,***
***கேடகவாளணிவலயக்கிளர்புயத்தோளறுவதோவந்தோ***
***வந்தோ,***
***கூடகவெங்கதையொன்றாற்சிந்துபதிகொல்வதோவந்***
***தோவந்தோ,***
***வாடமரிலருகொருவர்வாராமலிருப்பதோவந்தோ***
***வந்தோ.***

*(இ-ள்.) சேடன் - (கீழிருந்து பூமியைத் தாங்குகிற) ஆதி சேஷனது, முடி- தலை,நெளிய- (பாரமிகுதியைப் பொறுக்கமாட்டாமல்) வளையும்படி, வரு-வருகிற, செம் பொன்தேர்- (அபிமனது) சிவந்த பொன்மயமான தேர், அழிவதுஓ- அழிதல் தகுதியோ!அந்தோ அந்தோ-ஐயோ ஐயோ!! கேடகம் வாள்-கேடகத்தையும் வாளையும் ஏந்திய,அணி வலயம் - அழகிய வளையை அணிந்த, கிளர் புயம்- விளங்குகிறதோள்களையுடைய, தோள் - (அபிமனது) கைகள், அறுவதுஓ- அறுபடுதல் தகுதியோ!அந்தோ அந்தோ-!! கூடகம்-வஞ்சனையையுடைய, வெம் கதை ஒன்றால் -கொடியதொரு கதாயுதத்தால், சிந்துபதி-சிந்துதேசத்தரசன், கொல்வதுஓ-(அபிமனைக்)கொல்லுதல் தகுதியோ! அந்தோ அந்தோ-!! ஆடு அமரில் - செய்கிற போரில், அருகுஒருவர் வாரமல் இருப்பதுஓ- (இவ்வபிமனது) சமீபத்தில் ஒருத்தரும்துணைவராதிருத்தல் தகுதியோ-! அந்தோ அந்தோ-!! (எ-று.)*

*ஓகாரங்கள்-சிறிதுந்தகுதியன் றென்று இரங்குதலை உணர்த்தும். சேஷன் என்றுவடசொல் - (பிரளயகாலத்திலும் அழியாமல்) மிகுந்து நிற்பவனென்று காரணப்பொருள்படும். வரத்தா லமைந்ததாதலின், 'கூடகவெங்கதை'எனப்பட்டது; இனி, கூடகம்-நுனியுமாம்.* ***பி-ம்*** *: வந்துதவாமல். (270)*

***133. கன்னனையுந்தேரழித்தான்கந்தனிலும்வலியனேயந்தோ வந்தோ,***
***மன்னவரைவருமிருக்கமைந்தனுயிரழிவதேயந்தோ வந்தோ,***
***பொன்னுலகோர்வியந்துருகிப்புந்தியினான்மலர்பொழிந்தாரந் தோவந்தோ,***
***வன்னநெடுந்துவசனிவற்காயுமிகக் கொடுத்திலனேயந்தோ வந்தோ.***

*(இ-ள்.) (அபிமன்), கன்னனைஉம் தேர் அழித்தான் - கர்ணனையுந் தேரழியச்செய்தான்; கந்தனில்உம் வலியன்ஏ - முருகக் கடவுளினும் பலசாலியேயாவன்! அந்தோ அந்தோ-!! மன்னவர்ஐவர்உம் இருக்க- பாண்டவராசர்கள்ஐந்துபேரும் உயிருடனிருக்க. மைந்தன்-அவர்கள் மகனான அபிமன், உயிர்அழிவதுஏ-இறப்பதோ! அந்தோ அந்தோ-!! பொன் உலகோர் - பொன்மயமானசுவர்க்க லோகத்திலுள்ள தேவர்கள், வியந்து-(இவன்பராக்கிரமத்தை)*

*அதிசயித்து, உருகி-மனமுருகி, புந்தியினால் - நல்லறிவோடு, மலர் பொழிந்தார்- (இவன்மேல்) பூமாரிபொழிந்தார்கள்! அந்தோ அந்தோ-!! அன்னம் நெடு துவசன் - அன்னப்பறவையின் வடிவத்தையெழுதிய பெரிய கொடியையுடைய பிரமன், இவற்கு- இந்த அபிமனுக்கு, ஆயு மிக கொடுத்திலன்ஏ-ஆயுளை மிகுதியாகக் கொடுத்தானில்லையே! அந்தோ அந்தோ-!! (எ - .று)*

*கந்தன் - ஸ்கந்தன் என்னும் வடசொல்லின் திரிபு; இதற்கு- (சத்துருக்களை) வற்றச்செய்பவனென்பது அவயவப்பொருள்; 'சேயவன்வடிவமாறுந் திரட்டிநீ யொன்றாய்ச் செய்தாய், ஆயதனாலே கந்தனாமெனுநாமம் பெற்றான்" எனக் கந்தபுராணத்திற் கூறியபடி, (சக்திசொரூபமான உமாதேவியினால்) சேர்க்கப்பட்டவ னென்றும் பொருள்கொள்ளலாம். இவன், தேவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கிய பரமசிவனது திருவருளால் அப்பிரானதுகுமாரனாகத் தோன்றித் தேவசேனாபதியாகிச் சூரபதுமன் முதலிய அசுரர்களை அழித்தது, பிரசித்தம். மேன்மையுடையாரது இயல்பை யுணர்ந்து அழுக்காறும் உபேட்சையுமில்லாமல் அப்பொழுதப்பொழுது கொண்டாடுதல் அறிவின்பயனாதலால். 'புந்தியினால் மலர்பொழிந்தார்' என்றார்.*

***134. சரமறுத்தான்வில்லறுத்தான்றேரறுத்தான்கொடியறுத் தான்சமரபூமி,***
***யுரமறுத்தான்முதற்பொருதவுதயதினகரன்மைந்தனு டன்றுசீறிக்,***
***கரமறுத்தானடுப்பொருதகார்முகத்தின்குருவிசயன் காளைதன்னைச்,***

**சிரமறுத்தான்பின்பொருதசயத்திரதனிவன்வீரஞ்**
**செப்பலாமோ.**

*(இ-ள்.) சமர பூமி-யுத்தகளத்தில், முதல் பொருத-முதலில் எதிர்த்துப் போர் செய்த,உதய தினகரன் மைந்தன் - உதித்தலையுடைய சூரியனுக்குப் புத்திரனான கர்ணன்,உடன்று சீறி - பகைத்துக் கோபங்கொண்டு, (இவ்வபிமனது), சரம் - அம்பை,அறுத்தான்-துணித்தான்; வில் அறுத்தான்-; தேர் அறுத்தான்-; கொடி அறுத்தான்-;உரம் அறுத்தான்-வலிமையை அழித்தான்; (பின்பு), நடு பொருத - இடையிற்போர்செய்த, கார் முகத்திங் குரு - வில்லாசிரியனான துரோணன், கரம்அறுத்தான்-ஒருகையைத் துணித்தான்; பின் பொருத சயத்திரதன் - அதன்பின் இறுதியாகப் போர்செய்த சைந்தவன், விசயன் காளைதன்னை - அருச்சுனன் மகனான இவனை, சிரம் அறுத்தான் - தலை துணித்தான்; இவன் - (இங்ஙனம் ஒருவரால் எதிர்த்துப் பொருது கொல்ல முடியாமல் பலரால் ஒருங்குகூடிப் பொருதுஅழிக்கப்பட்ட) இவ்வபிமனது, வீரம் - பராக்கிரமம், செப்பல் ஆம்ஓ - சொல்லமுடியுமோ? (எ - று.)-எவராலும் முழுவதும் எடுத்துச்சொல்ல முடியாது என்பதாம்.*

*சமரபூமி, உடன்றுசீறி, விசயன்காளைதன்னை என்றவற்றை, மற்றைவாக்கியங்களிலும் எடுத்துக்கூட்டுக. உரம் என்பதற்கு - மார்பென்று பொருள் கூறுதல் பொருந்தாமையை. கீழ் 104 - ஆங் கவி நோக்கி யுணர்க. (272)*

### *135. அபிமனிறந்ததுகேட்ட மாற்றலரின்செய்கை.*

**எட்டானைத்தம்பமுடன் சயத்தம்பநாட்டியபேரிறைவன்**
**மைந்தன்,**
**பட்டானென்பதுகேட்டுத்திருகினார் முதுகிட்டுப்பறந்தவீர,**
**ரொட்டாமற் செயிரமரிலுயிரிழந்த தன்புதல்வற்குருஞ் சோகம்**
**விட்டான்வெஞ்சமரமினி வென்றோமென்றுட்கொண்டான்**
**வேந்தர்வேந்தன்.**

*(இ-ள்.) எட்டு ஆனை தம்பமுடன் - எட்டுத்திசைகளிலும் திக்கஜங்களைக் கட்டிநிற்கிற தூண்களுடனே, சயத்தம்பம் நாட்டிய-(தனது) வெற்றிக்கொடிக் கம்பத்தைநிலைநிறுத்திய, பேர் இறைவன்-சிறந்த அரசனான அருச்சுனனுக்கு, மைந்தன் -மகனான அபிமன், பட்டான்-இறந்தான், என்பது-என்கிறசெய்தியை, கேட்டு-கேள்விப்பட்டு,-முதுகு இட்டு பறந்த வீரர் திருகினார் -(முன்பு அபிமனெதிரிற்)புறங்கொடுத்துப் பறந்தோடியவீரர்கள் (மகிழ்ந்து தைரியத்தோடு) திரும்பினார்கள்;வேந்தர் வேந்தன் - ராஜராஜனான துரியோதனன், செயிர் அமரில்-கோபத்தோடுசெய்யும் போரில், ஒட்டாமல்-நிலைநிற்காமல், உயிர் இழந்து-இறந்த, தன்புதல்வற்கு-தனக்குமகனான இலக்கணன்பொருட்டாக, உருகும் - மனங்கரைகிற, சோகம்-விசனத்தையும், விட்டான்-நீங்கி, இனி-, வெம்சமரம் வென்றோம் என்று உள்கொண்டான்-கொடிய போரில் (பாண்டவரைச்) சயித்திட்டோமென்று கருதினான்;(எ - று.)*

*'ஆனைத்தம்பமுடன்' என்பதற்கு - யானைகட்டுந்தறியோடு ஒப்ப என்று பொருள்கொள்ளுதலும் பொருந்தும்; "தனித்தனியே திசையானைத் தறிகளாகச் சயத்தம்பம் பலநாட்டி" என்ற கலிங்கத்துப்பரணியைக் காண்க. 'கேட்டு' என்றதனால் நெடுந்தூரம் ஓடியமை விளங்கும். வென்றோம் - காலவழுவமைதி. ஒட்டாமல் - வாழும் ஊழ்வினை இல்லாமலெனினுமாம்.* ***பி-ம்*** *: போரிறைவன்.*

### *136.- துரியோதனன் முதலிய நால்வர்தவிர யாவரும்*
### *அபிமனிறந்தமைக்கு இரங்குதல்.*

**ஓரிரண்டுவயவர் முனைந்துடன்பொருதலுலகியற்கை யொரு**
**வன்றன்மேற்,**
**போரிரண்டுபுறமும்வளைந்தொருகோடிமுடிவேந்தர்பொருது**

***கொன்றார்.***
***தேரிரண்டுகிடையாதகுறையன்றோ களத்தவிந்தான்***
***சிறுவனென்றென்,***
***றீரிரண்டுபெயரொழியமற்றுள்ளாரழுதிரங்கியென்பட்டாரே.***

*(இ-ள்.) ஓர் இரண்டு வயவர் - இரண்டுவீரர்கள், முனைந்து-பிரயத்தனப்பட்டு, உடன் பொருதல் - (தம்மில் ஒருவரோடொருவர்) போர்செய்தல், உலகு இயற்கை- உலகத்துஇயல்பாம்: (அங்ஙனமிருக்க), ஒருவன்தன்மேல்-(அபிமன்) ஒருத்தன்மேலே, ஒரு கோடி முடி வேந்தர்- கிரீடந்தரித்த மிகப்பல அரசர்கள், இரண்டு புறம்உம் வளைந்து-இரண்டுபக்கத்திலும் எதிர்த்துச்சூழ்ந்து, போர் பொருது- போர்செய்து, கொன்றார்-(அவனைக்) கொன்றுவிட்டார்கள்; தேர் இரண்டு கிடையாத குறை அன்றுஓ - இரண்டாவது ஒரு தேர்கிடைக்காத குறைவினா லன்றோ, சிறுவன் - இளங்குமரனான அபிமன், களத்து அவிந்தான் - போர்க்களத்தில் இறந்தான், என்று*

*என்று-என்று (பலவாறு) எண்ணி, ஈர் இரண்டு பெயர் ஒழிய மற்று உள்ளார்- நாலுபேர்தவிர மற்றுள்ளவர் எல்லோரும், அழுது இரங்கி-புலம்பிச் சோகித்து, என் பட்டார் - என்னபாடு பட்டார்கள்? [மிகத் துன்பமுற்றார்கள் என்றபடி] எ - று.)- ஏ-இரக்கம்.*

*ஈரிரண்டுபேர் - துரியோதனன், சயத்திரதன், சகுனி, கர்ணன் என இவர்; கர்ணனைநீக்கித் துச்சாதனனைச் சேர்த்தலும் ஒன்று. தனதுதேர் கர்ணனம்பால் அழிந்தகாலத்தில் மறுபடி ஏறிக்கொள்ளுதற்கு உதவியாக மற்றொருதேர் கிடைத்திருந்தால் அபிமனைக் கொல்ல எவராலும் ஆகாதென்பது, மூன்றாம் அடியால் விளங்கும்.*

### *137.- அபிமனிறந்தமையைத் தருமன் கேட்டல்.*

***தாள் விசயம்பெறமுனைந்துசக்கரயூகம்பிளந்துதானேநின்று,***
***வாள்விசயன்றிருமதலைவானோரும்வியந்துரைக்கமாய்ந்***
***தானென்று,***
***வேள்வியினா லுண்மையினாற் றிண்மையினாற் றண்ணளியால்***
***விறலாற்பன்னூற்,***
***கேள்வியினான்மிகுந்தெவர்க்குங்கேளானவுதிட்டிரனுங்***
***கேட்டானன்றே.***

*(இ-ள்.) வேள்வியினால்-யாகங்களினாலும், உண்மையினால்- சத்தியத்தினாலும், திண்மையினால் - வலிமையினாலும், தண் அளியால் - குளிர்ந்த கருணையினாலும், விறலால் - வெற்றியினாலும், பல்நூல் கேள்வியினால் - பல சாஸ்திரார்த்தங்களைக் கேட்டலாலும், மிகுந்து-, எவர்க்குஉம் கேள் ஆன - எல்லோர்க்கும் சினேகிதனான, உதிட்டிரன்உம் - தருமபுத்திரனும்,-'வாள் விசயன் திருமதலை- ஆயுதம்வல்ல அருச்சுனனுக்குச் சிறந்த குமாரனான அபிமன், தாள்-(தனது) முயற்சியால், விசயம் பெற - வெற்றியை யடையும்படி, முனைந்து - போர்செய்து, சக்கரயூகம் பிளந்து - சக்கரவியூகத்தைப் பேதித்து, தான் ஏ நின்று-தான்மாத்திரமே தனியாகநின்று, வானோர்உம் வியந்து உரைக்க - தேவர்களும் அதிசயித்துப் புகழ, மாய்ந்தான்- இறந்தான்,' என்று கேட்டான் - என்று கேள்விப்பட்டான்; (எ - று.)-அன்றே- ஈற்றசை.*

*தருமன் சக்கரவியூகத்துக்கு வெளியேநின்றவனாதலால், 'கேட்டான்' என்றார். எவர்க்குங் கேளான உதிட்டிரன் - அஜாதசத்ருவென்று தருமனுக்கு ஒருபெயர்; அதற்குப் பகையில்லாதவனென்று பொருள் (275)*

### *138.- நான்குகவிகள் - அபிமனிறந்ததற்குத் தருமன் புலம்பலைக் கூறும்.*

***பிறந்ததினமுதலாகப்பெற்றெடுத்தவிடலையினும்பீடுந்தேசுஞ்,***
***சிறந்தனையென்றுனைக்கொண் டேதெவ்வரை வென்றுல***

***காளச்சிந்தித்தேனே,***
***மறந்தனையோவெங்களையு மாலையினால்வளைப்புண்டு***
***மருவார்போரி,***
***லிறந்தனையோவென்கண்ணேயென்றுயிரேயபிமா***
***வின்றென்செய்தாயே.***

*(இ-ள்.) என் கண்ணே - எனது கண்போன்றவனே! என் உயிரே-எனது உயிர்போன்றவனே! அபிமா-அபிமந்யுவே! பிறந்த தினம் முதல் ஆக-(நீ) பிறந்தநாள்முதற்கொண்டு, பெற்று எடுத்த விடலையின்உம்-(உன்னைப்) பெற்றெடுத்த வீரனானஅருச்சுனனைக்*

*காட்டிலும், பீடுஉம் தேசுஉம் சிறந்தனை -(நீ) பெருமையும் ஒளியும் மிக்குள்ளாய், என்று - என்ற காரணத்தால், உனை கொண்டு ஏ தெவ்வரை வென்று உலகு ஆனசிந்தித்தேன் ஏ - உன்னைக்கொண்டே பகைவர்களைவென்று (யான்) உலகத்தைஅரசாள எண்ணியிருந்தேனே! எங்களைஉம்-(உனது அன்புள்ள தந்தையரான)எங்களையும், மறந்தனைஓ-மறந்துவிட்டாயோ? (மறந்திடாமல்), மாலையினால்வளைப்புண்டு - கொன்றைமாலையாற் சூழப்பட்டு, மருவார் போரில்-பகைவர்கள்செய்தபோரில், இறந்தனை ஓ-? இன்று என்செய்தாய்ஏ- இன்றைக்குஎன்னசெய்துவிட்டாயே!*

*தந்தைக்கு 'பெற்றெடுத்த' என்ற அடைமொழிகொடுத்தல், உபசாரம். இனி, 'பெற்றெடுத்தவிடலையினும்' என்பதற்கு-யான்பெற்றுவளர்த்த (விந்தனென்னும் எனது)குமாரனினும் என்று உரைத்தல் சிறப்பன்று, என்கண், என் உயிர் - சிறப்பினால்உயர்திணையில் அஃறிணைவந்த வழுவமைதி; [நன்-பொது-28.]* ***பி-ம்:***
*சிந்தித்தேன்யான். (276)*

***139. தேனிருக்குநறுமலர்த்தார்ச்சிலைவிசயனிருக்கவரைத்திண்***
***டோள்வீமன்,***
***றானிருக்கமாநகுலசாதேவர்தாமிருக்கத்தமராய்வந்து,***
***வானிருக்கின்முடிவான மரகதமாமலையிருக்க***
***வாழ்வானெண்ணி,***
***யானிருக்கவினையறியாவிளஞ்சிங்கமிறப்பதேயென்னே***
***யென்னே.***

*(இ-ள்.) தேன் இருக்கும் -தேன்பொருந்தின, நறு-வாசனை வீசுகிற, மலர்- பூக்களாலாகிய, தார் - வெற்றிமாலையையுடைய, சிலை-(காண்டீவமென்னும்) வில்லையுடைய, விசயன் - அருச்சுனன், இருக்க - வாழ்ந்திருக்க,- வரை திண் தோள் - மலைகள்போலும் வலியதோள்களையுடைய, வீமன்-, தான் இருக்க-, மா-சிறந்த, நகுல சகாதேவர்-, தாம் இருக்க-, வான் இருக்கின் முடிவு ஆன- சிறந்தவேதங்களின் அந்தத்துப்பொருளான, மரகதம் மா மலை-சிறந்த மரகதரத்தினமயமான மலை போன்ற கண்ணபிரான், தமர் ஆய் வந்து- உறவினனாய்ப் பொருந்தி, இருக்க-, யான்-, வாழ்வான் என்ணி - (பகைவென்று அரசாண்டு) வாழக் கருதி, இருக்க-, வினை அறியா - செய்தொழிலை முற்ற அறியாத, இளசிங்கம் சிங்கக்குட்டிபோன்ற நீ, இறப்பது தகுதியோ? என்னே என்னே-(இது) என்ன அநீதி! என்ன அநீதி!! (எ - று.)-* ***பி-ம்;*** *விளைவறியா.*

*அபிமன்சக்கரவியூகத்தின் உட்செல்லுதல்மாத்திரம் உணர்ந்து மீண்டுவரவிதறியாதவ னென்பது தோன்ற, 'வினையறியா இளஞ்சிங்கம்' என்றார்; இதனை முதனூலால் அறிக. 'தமராய்வந்து' என்பது, எல்லோருக்குங் கூட்டத்தக்கது: ஆனதுபற்றியே, 'தமர்' எனப் பண்மையாற் கூறியது. மாநகுலன் என எடுத்து, குதிரைத் தொழிலில்வல்ல நகுலனென்றுமாம். நகுலசகதேவர் இரட்டைப் பிள்ளையராதலால், ஒருதொடராகக் கூறப்பட்டனர். இருக்கு- நான்குவேதங்களுள் முதலாவதன் பெயராவதே யன்றி, எல்லா வேதங்களுக்கும் பொதுப்பெயராகவும் வழங்கும். 'இருக்கின்முடிவு' என்றது-வேதத்தின்பிரிவான கர்மகாண்டம் பிரகாண்டம் என்ற இரண்டனுள் சிறந்ததும், பிந்தினதுமான உபநிஷத்துக்களின் சித்*

*தாந்தமானபொருளை, மரகதம்-மரகதம்: எழுத்துநிலைமாறுதல்: இலக்கணப்போலி, மரகதம்-பச்சையிரத்தினம், மரகதமாமலை-உவமையாகுபெயர்; "பச்சைமாமலைபோல்மேனி" என்றதுங் காண்க. (279)*

***140.*** ***நின்றனையேயெனைக்காத்துநீயேகென்றியானுரைப்பநெடுந்***
***தேரூர்ந்து,***
***சென்றனையேயிமைப்பொழுதிற்றிகிரியையுமுடைத்***
***தனையேதெவ்வரோட,***
***வென்றனையேசுயோதனன்றன்மகவுடனேமகவனைத்தும்***
***விடங்காலம்பிற்,***
***கொன்றனையேநின்னாண்மைமீண்டுரைக்கக்***
***கூசினையோகுமரரேறே,***

*(இ-ள்.) குமார் ஏறே - இராசகுமாரர்களுள் சிங்கம்போன்றவனே! எனை காத்து நின்றனைஏ-(நீ இதுவரையில்) என்னை(ப்போரில்) பாதுகாத்து நின்றாயே; நீ ஏகு என்று யான் உரைப்ப-(சக்கரவியூகத்தைப் பிளத்தற்கு) 'நீ செல்' என்று நான் சொல்ல, நெடு தேர் ஊர்ந்து சென்றனைஏ - பெரிய தேரைச்செலுத்திக் கொண்டுபோயினாயே; இமை பொழுதில்-கண்ணிமைப்பொழுதிலே, திகிரியைஉம் உடைத்தனைஏ - சக்கரவியூகத்தையும் பேதித்தாயே; தெவ்வர் ஓட வென்றனைஏ - (பின்பு) பகைவர்கள் ஓடச் சயித்தாயே; சுயோதனன்தன் மகவுடனே- துரியோதனன்புத்திரனான இலக்கணனுடனே, மகவு அனைத்துஉம்-(மற்றும்) இராசகுமாரர் பலரையும், விடம் கால் அம்பின்-விஷத்தை வெளிச்சொரிகிற பாணங்களால், கொன்றனைஏ-கொன்றிட்டாயே; நின் ஆண்மை- உனது (இப்படிப்பட்ட) பராக்கிரமத்தை, மீண்டு உரைக்க-திரும்பி வந்து (என்னுடன்) சொல்ல,கூசினைஓ - நாணங்கொண்டுவாராது சென்றாயோ? (எ - று.)*

*"போர்வாய்ப்பச் செய்தவைநாடாச் சிறப்புடைமை,... நலமாட்சி நல்லவர் கோள்" என்றபட, போரில்வெற்றியுண்டாம்படி தான் செய்த செயல்களைத் தானே எடுத்துச்செல்ல நாணுதல் சுத்த வீராது நற்குண மாதலின், 'நின்னாண்மை மீண்டுரைக்கக் கூசினையோ' என்றான். (278).*

***141.*** ***உனக்குதவியொருவரறவொருதனிநின்றமருடற்றியொ***
***ழிந்தமாற்றந்,***
***தனக்குநிகர்தானானதனஞ்சயனுங்கேட்கினுயிர்தரிக்***
***குமோதா.***
***னெனக்கவனிதரவிருந்ததித்தனையோமகனேயென்***
***றென்றுமாழ்கி,***
***மனக்கவலையுடனழிந்துமணித்தேரின்மிசைவீழந்தான்***
***மன்னர்கோவே.***

*(இ-ள்.) உனக்கு உதவி ஒருவர் அற- உனக்கு உதவிசெய்பவர் ஒருவருமில்லாமல், ஒரு தனி நின்று-(நீ சக்கரவியூகத்தினுள்) தன்னந்தனியே நின்று,அமர் உடற்றி-போர்செய்து, ஒழிந்த- இறந்த, மாற்றம்-செய்தியை, கேட்கின்-கேட்டால்,தனக்கு நிகர்தான் ஆன தனஞ்சயன்உம்-(வேறுஉவமை பெறாமையால்)தனக்குத்தானேஒப்பான அருச்சுனனும், தான் உயிர்தரிக்கும் ஓ-தான்பிழைத்திருப்பானோ? மகனே-!- (நீ), எனக்கு அவனி தரஇருந்தது- எனக்கு இராச்சியத்தைக் கொடுக்க இருந்தது, இதனைஓ இவ்வளவு தானோ? என்று என்றுமாழ்கி-என்றுபலவாறு சொல்லிப் புலம்பிச் சோகித்து, மன்னர் கோ-அரசர்க்கு அரசனான தருமன், மனக்கவலை*

*யுடன்-, அழிந்து-மூர்ச்சித்து, மணி தேரின்மிசை- அழகியதேரில், வீழ்ந்தான்-;(எ-று.)*

***142.- இதுமுதல் மூன்றுகவிகள் - வீமன்புலம்புதல்.***

***சங்கலாரிடைவளைத்த சக்கரத்தை யுடைப்பதற்குத்
தமியேனெய்தி,
யங்குலாவருமிரதத்தரசரையுந்தொலைத்துன்னையடுப்பான்
வந்தேன்,
பங்கெலாமரகதமாம் பவளநிறப்பொருப்புதவுபைம்பொற்
கொன்றைத்,
தொங்கலாற் கோறுவித்த சூழ்ச்சியை யின்றறிந்திலனே
தோன்றலேநான்.***

*(இ-ள்.)* தோன்றலே - குமாரனே! சங்கலார் - பகைவர்கள்,இடை வளைத்த-(நீ)நடுவிலிருக்க (உன்னைச்) சூழ்ந்துகொண்ட, சக்கரத்தை-சக்கர வியூகத்தை,உடைப்பதற்கு-, தமியேன்-தனியனான யான், எய்தி - மனம்பொருத்தி, அங்கு உலாவரும் - அந்தச் சக்கரவியூகத்தில் உல்லாசமாகப்பொருந்திய, இரதத்து அரசரை உம்-தேர்வீரர்களையும், தொலைத்து-அழித்து, உன்னை அடுப்பான் வந்தேன்-உன்னைச்சமீபித்தற்கு வந்தேன்; பங்கு எலாம் மரகதம் ஆம்- (பார்வதீரூபமான) இடபக்கம் முழுவதும் பச்சை ரத்தின நிறமான, பவளம் நிறம் பொருப்பு - பவழநிறத்தையுடையமலை போன்ற சிவபிரான், உதவு-கொடுத்தருளிய, பை பொன்கொன்றை தொங்கலால்-பசிய பொன்னின்நிறமான கொன்றைப் பூமாலையைக்கொண்டு, கோறுவித்த- (உன்னைக்) கொல்வித்த, சூழ்ச்சியை- வஞ்சனையை, இன்று நான் அறிந்திலன்ஏ - இன்று நான் அறிந்திட்டேனில்லையோ!(எ - று.)

*சங்கு - ஸங்க மென்னும் வடமொழி விகாரப்பட்டது; கூடுதலென்று பொருள், அதனையுடையவரல்லாதவர் - சங்கலார்; எனவே, பகைவராவர். தமியேன்-ஒப்பற்ற யான், ஒன்றியானயான், அர்த்தநாரீசுவரனாதலால், இவ்வாறு கூறினார். பொருப்பு- இங்கே, உவமவாகுபெயர். 'கோறுவித்த' என்பதில், றுவி என்னும் இரண்டு பிறவினைவிகுதிகள் விகுதிமேல்விகுதியாய் அடுக்கி வந்தன வெனக் கொள்ளல் வேண்டும்; கொல் என்னும் பகுதி, முதல் நீண்டு இறுதிகெட்டது. சந்திவிகாரங்கள். **பி-ம்:** உனை வளைத்தசூழ்ச்சியை, கோறல்புரிசூழ்ச்சியை. (280)*

***143. மின்னாமலிடித்ததெனவீழ்த்தபொலந்தொடையாலும்
விடையோனீந்த,
பொன்னார்வெங்கதையாலுமல்லதபிமனையமரிற்
பொரவல்லார்யார்,
தன்னாண்மைநிலைநிறுத்திச்சங்கமுழக்கியவீர
சிங்கசாப,
வென்னானையிறந்துபடவின்னமுநானிவ்வுயிர்
கொண்டிருக்கின்றேனே.***

*(இ-ள்.)* மின்னாமல் இடித்தது என - மின்னலில்லாமலே இடியிடித்தது போல,வீழ்ந்த - (எதிர்பாராதிருக்கக்) கொணர்ந்து போகட்ட, பொலம்தொடையால்உம்-பொன்னிறமான கொன்றைப்பூமாலையினாலும், விடையோன் ஈந்த-இடபத்தை(வாகனமுங்கொடியுமாக) உடைய சிவபிரான் கொடுத்த, பொன் ஆர் வெம்கதையால்உம்-பொன்மயமாய்நிறைந்த கொடிய கதாயுதத்தினாலும், அல்லது-(இவ்விரண்டினாலும்) அன்றி, அபிமனை-, அமரில்-யுத்தத்தில்

பொர வல்லார்-(தம்வலிமையால்) அழிக்கவல்லவர், யார்-யாவர் (உளர்)? [எவருமில்லை யென்றபடி]; தன் ஆண்மை நிலை நிறுத்தி - தனதுபராக்கிரமத்தை நிலைநிற்கச்செய்து, சங்கம் முழக்கிய-(அதற்கு அறிகுறியாகத் தனது) வெற்றிச்சங்கத்தை ஊதி ஒலிசெய்த, வீரம் சிங்க சாபம் - வீரத்தன்மையையுடைய சிங்கக் குட்டிபோன்ற, என் ஆனை-எனது யானை போன்ற இளங்குமரன், இறந்து பட-அழிந்து ஒழிய இன்னம்உம்-அதன் பின்பும். நான்-, இ உயிர் கொண்டு இருக்கின்றேன்ஏ- (இறவாமல்) இவ்வுயிரை வைத்துக்கொண்டிருக்கிறேனே.! (எ-று.)

***இப்பாடலை நகுலன் புலம்பலாகவும், அடுத்த பாடலைச் சகதேவன் புலம்பலாகவும் கொள்ளினுமாம்.*** *மின்னல் காணப்படுதலும், இடி முழக்கங் கேட்கப்படுதலும் என்னும் இரண்டும் உண்மையில் ஒரு தொழிலின்பயனேயாயினும், மின்னற்காட்சி முன்னும் இடிக் கேள்வி பின்னுமாகி மின்னல் தோன்றுதல் இடிமுழக்கத்தை முன்னர்த்தெரிவிக்கிற அறிகுறியாகும் இயல்பைக் கருதுக. (281)*

***144. எடுத்தபடையனைத்தினுக்குமெதிரில்லை யெனக்கலைக ளெல்லாமுன்னை,***
***யடுத்ததுகண்டையாநின்னாருயிர்க்குக்கரைந்து கரைந்தையுற்றேன்யான்,***
***விடுத்தபெருந்திருத்தாதைவிழிகளிப்பப் பகைவென்றுமீளாதென்னைக்,***
***கெடுத்தனையேபிழைத்தனையென்றினியொருவர்வந்துரைக்கக் கேளேன்கொல்லோ.***

*(இ-ள்.) எடுத்த-(கையில்) ஏந்திய, படை அனைத்தினுக்கு உம்- ஆயுதங்களெல்லாவற்றிலும், எதிர் இல்லை - (உனக்கு) ஒப்பு இல்லை, என - என்றுசொல்லும்படி, கலைகள் எல்லாம் - எல்லாக் கல்விகளும், உன்னை அடுத்தது-உன்னைச் சேர்ந்து அமைந்ததை, கண்டு-, ஐயா-! யான்-, நின் ஆர் உயிர்க்கு -உனது அருமையான உயிரின்பொருட்டு, கரைந்து கரைந்து ஐயுற்றேன்- மிகமனமுருகி (முன்னமே) சங்கித்திருந்தேன்; (அதற்கு ஏற்க), விடுத்த பெரு திரு தாதை-(பகைவெல்லுதற்கு உன்னை) அனுப்பின சிறந்த பெரிய தந்தையான தருமன், விழிகளிப்ப-கண்களாற் கண்டு களிக்கும்படி, பகை வென்று மீளாது - பகைவர்களைவென்று திரும்பாமல், (இறந்து), என்னை கெடுத்தனைஏ- என்னை அழித்துவிட்டாயே; இனி-, பிழைத்தனை என்று ஒருவர் வந்து உரைக்க, (நீ) பிழைத்தாயென்று ஒருத்தர் வந்து சொல்ல, கேளேன் கொல் ஓ-கேட்கமாட்டேனோ? (எ - று.)*

*'அதி ஸ்நேஹ: பாபஸங்கீ' என்றபடி ஒருவனுக்கு ஒருத்தனிடம் மிக்க அன்பு இருந்தால் அவனுக்கு என்ன தீங்குநேருமோ என்ற பயசங்கையே முன்னர்த் தோன்றுவது இயல்பாதலாலும், ஒப்புயர்வில்லாமல் மிக்க இளமையிலேயே கல்விமுற்றும் நிரம்பியவர் திருஷ்டிதோஷம் பட்டாற்போல அற்ப ஆயுளுடையராய் விரைவில் இறத்தல் உலக வியல்பாதலாலும், இவ்வாறு கூறினான்-கெடுத்தல் - துன்படையச்செய்தல். 'உன்னைக் கெடுத்தனையே' என்ற பாடமும் பொருந்தும்: அப்பொழுது, கெடுத்தல்- போக்கிக் கொள்ளுதல்,* ***பி-ம்:*** *பெருந்தாதையிருவிழி. கேட்பேன் கொல்லோ, (282)*

### *145.- சூரியாஸ்தமன வருணனை.*

***என்றேன்றுவீமனுந்தன் னிளையோரு மழுதரற்ற விறந்தோன் வீர,***
***நன்றென்றுதளமிரண்டி னரபாலர்பலர்திரண்டுநவிலா நிற்ப,***
***வன்றென்றுமனமருளுற் றபிமனடுதலைக்குன்றையடுத்து மேலைக்,***
***குன்றென்று தடுமாறிப் பின்னையும்போய்த் தனதுதடங் குன்று சேர்ந்தான்.***

*(இ-ள்.) என்று என்று-என்று பலவாறு சொல்லி, வீமனும்-, தன் இளையோர்உம் அவன் தம்பிமாரன நகுலசகதேவரும், அழுது அரற்ற -புலம்பிக் கதறவும், 'இறந்தோன் வீரம்- மரித்த அபிமனது பராக்கிரமம், நன்று - சிறந்தது' என்று-, தளம் இரண்டில்- இருதிறத்துச் சேனைகளிலும், நரபாலர் பலர் திரண்டு - அரசர்கள் பலர் ஒருங்குகூடி, நவிலாநிற்ப-கூறிய புகழ்ந்துநிற்கவும், (கேட்டு, அதனால்), என்று - சூரியன், அன்று- அப்பொழுது, மனம் மருள் உற்று- மனம்மயங்கி, அபிமன் அடு தலை குன்றை - அபிமன் கொன்றுவிழுத்திய பகைவர்தலைகளா லாகிய மலையை, மேலை குன்று என்று தடுமாறி அடுத்து - மேற்குத்திக்கிலுள்ள அஸ்தகிரி யென்று மாறாகக்கருதிச் சமீபித்து, (அது*

*அங்ஙனமல்லாமையால்), பின்னைஉம் போய்-பின்பு அப்பால் விலகிச் சென்று, தனதுதட குன்று சேர்ந்தான்-தனக்கு உரிய பெரிய அஸ்தகிரியை அடைந்தான்; (எ - று.)*

*தலைக்குவியலை மலையென்று மயங்கியதாகக் கூறியதனால், **மயக்கவணி** : வடநூலார் **'பிராந்திமதலங்காரம்'** என்பர். 'என்று' என்ற தெய்வப்பெயர் உயர்திணையாக, 'சேர்ந்தான்' என்று கூறப்பட்டது. 'அன்று என்று' என எடுத்து- அல்லதென்று அறிந்து என்று உரைத்து, 'அடுத்து' என்பதன் பின் கூட்டினால், 'சூரியன்' என்ற தோன்றாஎழுவாய் வருவிக்க. (283)*

வேறு.

### *146.-சஞ்சத்தகரைவென்ற அருச்சுனன் அங்குநின்றுமீளுதல்.*

***இந்நிலத் தவனி பால ரிவ்வகை யிரங்கி யேங்கத்***
***தென்னிலத் தெதிர்ந்து ளாரைத் தென்னிலந்தன்னி லேற்றி***
***யெந்நிலத் தினுந்தன் னாண்மைக் கெதிரிலா விசயன் றானு***
***மந்நிலத் தகன்று மீண்டா னுற்றவா றறிவு றாதான்,***

*(இ-ள்.) இ நிலத்து - இப்போர்களத்தினிடத்திலே, அவனிபாலர்- பூமியைக் காப்பவரான அரசர்கள், இ வகை இரங்கி ஏங்க- இவ்வாறு சோகித்துப் புலம்ப,- எ நிலத்தின்உம்-எவ்விடத்திலும், தன் ஆண்மைக்கு எதிர் இலா-தனது பராக்கிரமத்துக்குஎதிரில்லாத, விசயன்தான்உம்- அருச்சுனனும், தென் நிலத்து- தெற்குத்திக்கில்,எதிர்ந்துளாரை-(தன்னை) எதிர்த்துச்சென்ற சஞ்சப்தகர்களை, தென் நிலந்தன்னில்ஏற்றி -தென் திசையிலுள்ள யமலோகத்தில் குடிபுகுத்தி (கொன்று), உற்ற ஆறுஅறிவுறாதான்-(இங்கு) நடந்தசெய்கையை அறியாதவனாய், அ நிலத்து அகன்றுமீண்டான் அவ்விடத்தினின்று நீங்கித் திரும்பினான்; (எ - று.)-எதிர்-ஒப்புமாம்.உற்றவாறு-அபிமந்யுமரணம். **பி-ம்** : அறிகிலாதான்.*

*இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் -பதினோராம்போர்ச்சருக்கத்து முதற்கவி போன்ற **அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள்.** (284)*

### *147.- ஸ்ரீக்ருஷ்ணன் அபிமன்யுமரணத்தை நினைந்து இந்திரனை நினைத்தல்.*

***போனதுவருவதெல்லாம்புரையறவுணருகிற்கு***
***மானதிர்கனகத்திண்அடர்வலவனாமதுரைமன்னன்***
***றேனதிர்கடுக்கைமாலையிடுசெயத்திரதன்றன்னா***
***லானதுங்குறித்துவானோரரசையுங்குறிக்கலுற்றான்***

*(இ-ள்.) போனது வருவது எல்லாம் - நடந்ததும் நடப்பதுமாகிய செய்கைகளெல்லாவற்றையும், புரை அற-குற்றமில்லாமல், உணருகிற்கும்-அறியவல்ல, மான் அதிர் கனகம் திண் தேர் வலவன் ஆம்-குதிரைகள் பூட்டிய ஆராவாரிக்கிற பொன்மயமான வலிய (அருச்சுனனது) தேரைச் செலுத்துகிற பாகனாகிய, மதுரைமன்னன் வடமதுரைநகரத்து அரசானா கண்ணபிரான், (அப்போது), தேன் அதிர் கடுக்கை மாலை இடு செயத்திரதன் தன்னால் ஆனதும்உம் குறித்து - வண்டுகள் ஆரவாரிக்கிற கொன்றைப்பூமாலையைப் போகட்ட சயத்திரதனா லாகிய செய்கையையும் [அபிமந்யு மரணத்தையும்] திருவுள்ளத்தில் அறிந்து, வானோர் அரசைஉம் குறிக்கல் உற்றான் - தேவாரசனான இந்திரனையும் நினைத்தான்;*

*இந்திரனை நினைத்தது, இவன்மகனானா அருச்சுனனுக்குப்புத்திர சோகத்தால் பிராணபாயமுண்டாகாதபடிதடுக்க உபாயஞ்செய்தற்கு என்பது, மேல்விளங்கும். போனது வருவது எல்லாம் - ஒருமைப்பபன்மைமயக்கம்: முக்காலத்துவரலாற்றுள், முன்பு நடந்தவற்றையும் இனி*

*நடப்பவற்றையும் அறிதலாகிய அருமையான தன்மையைக் கூறவே, அப்பொழுது நடக்கின்றவற்றை அறிதலாகிய எளியதன்மை தானே பெறப்படும். உணர்ச்சிக்குக் குறைவு-சந்தேகவிபரீதங்கள். மது என்னும் அரசனால் சீர்திருத்தி ஆளப்பட்டதனாலும், கண்ணுக்கு இனியதாயிருத்தலாலும், மதுரா என்று பெயர்; அது ஈறுதிரிந்தது. இது, முத்திதரும் நகரம் ஏழனுள் ஒன்று; மற்றவை-அயோத்தி, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன. (285)*

***148.-நான்குகவிகள்-மனத்துவந்தஇந்திரனை 'உன்மைந்தனைக் காவாய்' என்ன, அவன் முனிவனாகி ஊழாலிறந்தமைந்தனோடுஇறப்பேனென்று நடிக்க, ஸ்ரீக்ருஷ்ணன் அருச்சுனனைக்கொண்டு தடுத்தலைக் கூறும்***

***மதித்தலுமனத்திற்றோன்றும்வலாரியைக்குறிப்பினாலுன்
கதித்தடந்திண்டேர்மைந்தனுயிரைநீகாத்தியென்னத்
துதித்தவன்றொழுதுமாயச்சூழ்ச்சியான்முனியுமாகி
விதித்தலைப்பட்டகாதற்சுதனுடன்விழுவனென்றான்.***

*(இ-ள்.) மதித்தலும்-(கண்ணபிரான்)கருதியவளவிலே, மனத்தில் தோன்றும்- அவன்மனத்தில்வந்து காணப்பட்ட வலாரியை- இந்திரனை(ப்பார்த்து), (கண்ணன்), குறிப்பினால் - இங்கிதத்தால்,*

*'உன்-உனது, கதி தட திண் தேர் மைந்தன் - வேகத்தையுடைய பெரிய வலிய தேரையுடைய புத்திரனான அருச்சுனனது, உயிரை-, நீ-, காத்தி-(புத்திரசோகத்தால் இறவாதபடி) பாதுகாப்பாய்,' என்ன - என்றுசொல்ல, அவன் - அவ்விந்திரன், துதித்து - (கண்ணனைத்) தோத்திரஞ்செய்து, தொழுது - நமஸ்கரித்து, (அதற்கு இசைந்து), மாயம் சூழ்ச்சியால் முனிஉம் ஆகி-(வேண்டியவடிவத்தைப் பெறவல்ல) மாயையின் வலிமையால் (உடனே) ஒருமுனிவேடங்கொண்டவனுமாய், விதித்தலை பட்ட காதல் சுதனுடன் விழுவன் என்றான் - 'ஊழ்வினையின்வசப்பட்டு இறந்த அன்புள்ள (என்) மகனுடன் (யான் நெருப்பில்) விழுந்து இறப்பேன்' என்று கூறினான்; (எ - று.)*

*இந்திரன், ஒருபிராமணவடிவங்கொண்டு, சிறிதுபொழுதுக்குமுன் இறந்த தன்புதல்வன்பொருட்டுச் சோகித்து அம்மகனுடன் அக்கினிப்பிரவேசஞ்செய்து பிராணத்தியாகம்பண்ண நிச்சயித்தவன்போல வழியிடையிற் காணப்பட்டனனென்பதாம். இந்திரன் வந்ததும் அவனுக்குக் கண்ணன் கட்டளையிட்டதும் கண்ணபிரானுடன் தேரிலிருக்கிற அருச்சுனனுக்குத் தெரியாதபடி நிகழ்ந்தது தோன்ற. 'மனத்தில் தோன்றும்' என்றும், 'குறிப்பினால்' என்றுங் கூறினார். விதியில் தலைப்பட்ட என்றும், தலைவிதியில்பட்ட என்றும் உரைத்ததற்கு இடமுண்டு. வலாரி-பலாரி யென்ற வடசொல் திரிந்தது **பி-ம்:** விளிவேனென்னா. (286)*

***149. நெறியிடையிவர்கள்காணநெருப்பினைவளர்த்துத்தானும்
பொறியுறவீழுங்காலைப்புவனங்களனைத்துமீன்றோ
னறிவுடைவிசயற்கிந்தவந்தணன்றழலில்வீழா
தெறிகணைவரிவில்வீரவிலக்குநீயீண்டையென்றான்.***

*(இ-ள்.) நெறியிடை-(அருச்சுனனும் கண்ணனும் செல்லும்) வழிநடுவிலே, இவர்கள்காண- இவ்விருவரும் பார்க்க, நெருப்பினை வளர்த்து-அக்கினியை மூட்டிவிருத்திசெய்து, (அம்முனிவன்), தான் உம் பொறி உற வீழும் காலை-(இறந்த தன்குமாரனோடு) தானும் அவ்வக்கினியிலே பொருந்த விழவிருக்குமவ்வளவில்,- புவனங்கள் அனைத்துஉம் ஈன்றோன்-உலகங்களையெல்லாம் உண்டாக்கியருளியவனான கண்ணன், அறிவு உடை விசயற்கு - அறிவுள்ள அருச்சுனனை நோக்கி, 'எறி கணை வரி வில் வீர-எறிகிற அம்புகளையுடைய கட்டமைந்தவில்லில்வல்ல வீரனே! இந்த அந்தணன் தழலில் வீழாது-இந்த முனிவன் நெருப்பில் விழாதபடி நீ-, ஈண்டை-இப்பொழுது இவ்விடத்தில், விலக்கு-தடுப்பாய்,' என்றான்-என்று கூறினான்; (எ - று.)*

*படைத்தல்தொழிற்கடவுளான பிரமனையும் படைத்தவ னாதலாலும், பிரமரூபியாயிருந்து தொழில்செய்பவன் பகவானே யாதலாலும், 'புவனங்களனைத்துமீன்றோன்' எனப்பட்டான்*

*இரட்டுறமொழிதலால், 'ஈண்டை' என்பதற்கு - காலமும் இடமுமாகிய இருபொருள் கொள்ளப்பட்டன. பொறி- அக்கினிக்கு, இலக்கணை: இனி, பொறிஉற-மனப்பூர்த்தியாக என்றாலும் ஒன்று. (287)*

***150.** என்றலும்விசயனெய்தியெந்தைநீயெரியில்வாளா*
*பொன்றலுய்ந்திருந்தாலின்னம்புதல்வரைப்பெறலுமாகு*
*நன்றலதவத்தின்மிக்கோய்நல்லுயிர்செகுத்தலென்னாக்*
*குன்றினும்வலியதோளான்முனிவனைத்தழுவிக்கொண்டான்.***

*(இ-ள்.) என்றலும்-என்று(கண்ணன்) கூறியவளவிலே, விசயன்-அருச்சுனன், எய்தி- (அம்முனிவனருகிற்)சென்று, 'எந்தை-சுவாமி! நீ-,வாளா - வீணாய் எரியில் பொன்றல்-நெருப்பில் (வீழ்ந்து) இறக்காதே: உய்ந்திருந்தால்-பிழைத்திருந்தால், இன்னம் புதல்வரை பெறல்உம் ஆகும்- இன்னமும் புத்திரைப் பெறுதலும் கூடும்; தவத்தில் மிக்கோய் - தவத்திற் சிறந்தவனே! நல் உயிர் செகுத்தல் - சிறந்த (உன்)உயிரை(நீயே) போக்கிக்கொள்ளுதல், நன்று அல-நல்லதன்று' என்னா- என்று (உபசாரமொழி) கூறி, குன்றின்உம் வலிய தோளால்-மலையிலும் வலிமையையுடைய (தன்) கைகளால், முனிவனை தழுவிக்கொண்டான்- அம்மமுனிவனை அணைத்துக்கொண்டான்: (எ - று.)*

*உயிரைவைத்துக்கொண்டிருந்தால் பலபுத்திரரை இன்னும் பெறுதலாகும்: மறுமையில் மோட்சமடைவதற்கும் உபாயஞ்செய்யலாகுமென்று தடுத்தனனென்க. அயலானை 'எந்தை' என்றது, உயர்வுபற்றிவந்த மரபுவழுவமைதி, அதிக சமாதான முண்டாதற்கு, 'புதல்வர்' எனப் பன்மையாற் கூறினான். வீடுபெறுமுயிரென்பான், 'நல்லுயிர்' என்றான்.*

***151.** வீதலும்பிழைத்தறானும்விதிவழியன்றிநம்மா*
*லாதலுமழிவுமுண்டோநின்னில்வேறறிஞருண்டோ*
*பூதலந்தன்னில்யாவர்புதல்வரோடிறந்தாரையா*
*சாதலிங்கியற்கையன்றென்றருளுடன்றடுத்தகாலை.***

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ-ள்.) 'வீதம்உம்-(ஒருபிராணி) இறந்தாலும், பிழைத்தல்தான்உம்- பிழைத்திருத்தலும், வீதி வழி அன்றி-ஊழ்வினையின்படி நடப்பனவே யல்லாமல், நம்மால்-,ஆதல்உம் அழிவுஉம் உண்டுஓ- உண்டாதலும் அழிதலும் உண்டோ? நின்னில் அறிஞர் வேறு உண்டுஓ-உன்னினும் அறிவுடையோர் வேறு உளரோ? பூதலந்தன்னில்-உலகத்தில், யாவர் புதல்வரோடு இறந்தார்-எவர்தாம் புத்திரரோடு இறந்தவர்? ஐயா-! இங்கு-இப்பொழுது, சாதல்-(நீ) இறந்தல், இயற்கை அன்று- உலகவியல்புக்கு ஒத்ததன்று,' என்று-என்றுஞ்சொல்லி, அருளுடன் - கருணையுடனே, தடுத்த காலை - (அம்முனிவனைத்)தடுத்தபொழுது,-(எ-று.)- "நின்மகனிறந்தாலென்சொான் மறாதொழி நீயுமென்றான்" என அடுத்த கவியோடு முடியும்.*

***152. - அந்தமுனிவன் வெகுண்டு 'உன்மகனிறந்தால் நீ என்சொல்லை மறாதொழி' என்று அருச்சுனனிடம் கூறுதல்.***

***தன்மகனுடன்றீமூழ்கத்தவிர்ந்தநற்றவனுமீள*
*வின்மகனாகிநின்றவிசயனைவெகுண்டுநோக்கி*
*யென்மகனிறக்கவென்னையிருத்தினையாயினம்ம*
*நின்மகனிறந்தாலென்சொன்மறாதொழிநீயுமென்றான்.***

*(இ-ள்.) தன் மகனுடன் -(இறந்த) தன்புத்திரனுடனே, தீ மூழ்க - நெருப்பில் பாய்தலை, தவிர்ந்த - ஒழிந்த, நல் தவன்உம்- சிறந்தவத்தையுடைய அம்முனிவனும், மீன - பின்பு, வில் மகன் ஆகி நின்ற விசயனை வெகுண்டு நோக்கி - வில்வீரனாய்நின்ற அருச்சுனனைக் கோபித்துப்பார்த்து, 'அம்ம-*

*(யான்சொல்வதைக்) கேட்பாயாக; என் மகன் இறந்த என்னை இருத்தினை ஆயின் - எனக்குப் புத்திரன் மரிக்க என்னை (அவனுடன் இறவாதபடி) இருக்கச் செய்தாயாயின், நின் மகன் இறந்தால் நீஉம் என் சொல் மறாது ஒழி- உனக்குப்புத்திரன் இறந்தால் (அப்பொழுது)நீயும் எனது வார்த்தையை மறுக்காமலிருப்பாய்', என்றான்-என்று கூறினான்; (எ -று.) பி-ம்: தன்மகவுடன்.*

*தனது கருத்தை நிறைவேறவொட்டாதபடி தடுத்ததனால், வெகுளி கொண்டான். ஆயின் - ஆதலாலென்க. 'அம்ம'-முன்னிலையிடைச்சொல். (290)*

### *153.- அருச்சுனன்உடன்பட்டு முனிவனைமீட்டுத்தேரேறிச்செல்லுகையில் பேரோசை செவிப்படல்.*

***ஐயெனத்தொழுதுவீரனந்தணனுயிரைமீட்டு***
***மையெனக்கரியமேனிவலவனுந்தானுந்திண்டே***
***ரொய்யெனச்செலுத்துகாலைவேலையினோதைதானும்***
***பொய்யெனப்பரந்தோரோதைசெவிகளைப்புதைத்தன்றே.***

*(இ-ள்.) வீரன் - அருச்சுனன், ஐஎன - (அதற்கு) இசைந்து, தொழுது - வணங்கி, அந்தணன் உயிரை மீட்டு- அம்முனிவனது உயிரை இறவாதுகாத்து, மை என கரிய மேனி வலவன்உம் தான் உம்- மேகம்போலக் கறுத்த திருமேனியையுடைய சாரதியான கண்ணனும் தானுமாக, திண் தேர்-வலிய தேரை, ஒய்யென செலுத்து காலை-விரைவாகச் செலுத்திவருகிற பொழுதில்,- வேலையின் ஓதை தான்உம் பொய் என-கடலோசையும் (தனக்குமுன்) இல்லையென்னும்படி, ஓர்ஓதை-ஒருபேரொலி, பரந்து-பரவி, செவிகளை புதைத்தது-(அவர்கள்) காதுகளை நிறைத்தது; (எ - று.)- கேட்கப்பட்டது என்பதாம். அன்றே - ஈற்றசை.*

*ஐயென-உடன்பாட்டுக் குறிப்பு. ஒய்யென-விரைவுக்குறிப்பு. ஓர் ஓதை- அபிமனதுமரணத்துக்குத் தருமன்முதலியோர் புலம்பும் ஆரவாரம். (291)*

### *154. - பாசறை சேருமுன் ஸ்ரீக்ருஷ்ணன் அருச்சுனனைக் கையில்ஆயுதமொன்றும் இல்லாதபடி செய்தல்.*

***பாசறையணுகுமுன்னம்பாசடைப்பதுமம்போல***
***மாசறவிளங்குமேனிவண்டுழாயலங்கன்மூர்த்தி***
***யாசறுவரிவிற்காளையங்கையுமருகுநீங்காத்***
***தேசுறுபடைகள்யாவுமொழித்தனன்றீமைதீர்ப்பான்.***

*(இ-ள்.) பாசு அடை பதுமம் போல - பசிய இலைகளையுடைய செந்தாமரை போல, மாசு அற விளங்கும்- குற்றமில்லாமல்*

*விளங்குகிற, மேனி - திருமேனியையும், வண் துழாய் அலங்கல்- அழகிய திருத்துழாய் மாலையையுமுடைய, மூர்த்தி - கடவுளாகிய கண்ணன்,-பாசறை அணுகும் முன்னம்-படைவீட்டைச் சமீபித்தற்கு முன்னமே, ஆசு அறு வரி வில் காளை - குற்றமில்லாத கட்டமைந்த வில்லையுடைய வீரனான அருச்சுனனது, அம் கைஉம்- அழகிய கைகளையும், அருகு நீங்கா-சமீபத்தை விட்டுநீங்காத, தேசு உறு படைகள் யாஉம் - ஒளி மிக்க ஆயுதங்களெல்லாவற்றையும், தீமை தீர்ப்பான்- (அவற்றாலாகுந்) தீமையை ஒழிக்கும்பொருட்டு, ஒழித்தனன் - தனியே பிரித்துவிட்டான்: (எ - று.)*

*அருச்சுனன் பாசறையையணுகி அங்கு அபிமன்மரணத்தை அறியும் பொழுது கையில் ஏதேனும் ஆயுதமுடையனாயிருந்தால், புத்திரசோகத்தைப் பொறுக்கமாட்டாமல் அவ்வாயுதத்தைக் கொண்டு தன்னைக் கொலைசெய்து கொள்ளக் கூடுமென்று மூன் சாக்கிரதையாகக் கண்ணன் அவன் கைகளில் எந்த- ஆயுதமுமில்லாதபடி ஒழித்தருளினனென்பதாம். எம்பெருமானது கரிய திருமேனி*

*பசியதாமரையிலைகள் போலவும், அத்திருமேனியிலுள்ள கண் கை கால் வாய் உந்திஎன்னும் அவயவங்கள் இடையிடையிற்பூத்த செந்தாமரை மலர்கள்போலவும் இருத்தலால், 'பாசடைப்பதுமம்போல மாசற விளங்குமேனி' என்றார். பசுமை+அடை=பாசடை; பண்புப்பெயர் ஈறு போய் ஆதிநீண்டது. தீமைதீர்ப்பான்- தன்னைச் சரணமடைந்தவர்களது துன்பங்களையெல்லாம் தானே வலியத்தீர்த்தருளுபவனெனக் கண்ணனுக்கு அடைமொழியாகவுமாம். (292)*

*155.-'இந்தப்பேரொலி என்?' என்று அருச்சுனன் வினவ,*
*ஸ்ரீக்ருஷ்ணன் கண்ணீர்வடித்தல்.*

***அங்கையார்த்தனைத்துளோருமரற்றுபேரரவங்கேட்டுக்***
***கங்கையம்பழனநாடன்கண்ணனைவணங்கிநோக்கி***
***யிங்கயலெழுந்தகோடம்யாதெனயாதுஞ்சொல்லான்***
***பங்கயநெடுங்கண்சேப்பநித்திலம்பரப்பினானே.***

*(இ-ள்.) அனைத்து உளோர்உம்-(பாசறையிலுள்ளவர்) எல்லோரும், அம் கை ஆர்த்து - அழகிய கைகளால் அடித்துக் கொண்டு, அரற்று-கதறுகிற, பேர் அரவம்- பெரிய ஆரவாரத்தை, கேட்டு-, கங்கை அம் பழனம் நாடன் - கங்காநதிபாய்கிற அழகிய கழனிகளைக்கொண்ட குருநாட்டையுடைய அருச்சுனன், கண்ணனை வணங்கி நோக்கி-, இங்கு அயல் எழுந்த கோடம் யாது என- 'இப்பொழுது சமீபத்திலுண்டான ஆரவாரம் என்ன? என்று கேட்க, (அதற்குக் கண்ணன்), யாதுஉம் சொல்லான்- யாதொருமறு மொழியுங் கூறாமல், பங்கயம் நெடு கண் சேப்ப- தாமரைமலர் போன்ற நீண்ட (தன்) கண்கள் செந்நிறமடைய, நித்திலம் பரப்பினான் - முத்துப்போன்ற கண்ணீர்த்துளிகளை மிகுதியாகச் சொரிந்தான்; (எ -று.)*

*சேப்ப - செயவெனெச்சம்: செம்மையென்பதன் விகாரமாகிய 'சே' என்பதனடியாப்பிறந்தது. நித்திலம் - உவமவாகு பெயர்; வடிவுவமை. கோடம்=* ***கோ*** *ஷம்; வடமொழி. (293)*

*156. - இரண்டுகவிகள் - ஒருதொடர்: அருச்சுனன் மனம்நொந்து*
*கேட்க, ஸ்ரீகிருஷ்ணன் நடந்ததைக் கூறியதைத் தெரிவிக்கும்.*

***வன்கணனிளகிச்செங்கண்மாலடிவீழ்ந்துமேன்மே***
***லென்கணுந்தோளுமார்புமிடனுறத்துடிக்கைமாறா***
***நின்கணுமருவிசோரநின்றனையின்றுபோரிற்***
***புன்கணுற்றவர்கண்மற்றென்றுணைவரோபுதல்வர்தாமோ.***

*(இ-ள்.) (அதனைக்கண்டு) வன்கணன்-வலிமையையுடைய அருச்சுனன், இளகி- மனம்நெகிழ்ந்து, செம் கண் மால் அடி வீழ்ந்து-சிவந்த திருக்கண்களையுடைய கண்ணபிரானது திருவடியில் விழுந்து நமஸ்கரித்து, 'என்-எனது, கண்உம்-கண்களும், தோள்உம்- தோள்களும், மார்புஉம்-, மேல் மேல்-, இடன் உற துடிக்கை மாறா- இடப்பக்கம் மிகுதியாகத் துடித்தலை நீங்கா; நின் கண்உம் அருவி சோர நின்றனை- உனது கண்களினின்றும் கண்ணீர்ப்பெருக்கு வழிய (நீ) நின்றாய்; இன்று - இன்றைக்கு, போரில்-, புன்கண் உற்றவர்கள் - துன்படைந்தவர்கள், என் துணைவர்ஓ- எனது உடன்பிறந்தவரோ? மற்று-அன்றி, புதல்வர் தாம்ஓ - புத்திரரேயோ? (எ-று.)-"என்று" என மேற்கவியோடு தொடரும்.*

*ஆடவருக்கு இடந்துடித்தல்-துர்நிமித்தம். இடையறாது மிக்குப் பெருகுதலைக் காட்டுதற்கு, 'அருவி' எனப்பட்டது. இன்னாரென்று அறியாமையின், 'புன்கணுற்றவர் துணைவரோ புதல்வர் தாமோ' எனப் பன்மையாற் கூறினான். புன்கண் - மரணம்.* ***பி-ம்:*** *புதல்வரோ துணைவர்தாமோ.*
*(294)*

***157. திருவுளத்துணராதில்லைசெப்புகென்றயர்வான்றன்னை***
***மருவுறத்தழுவித்திங்கண்மரபினுக்குரியசெல்வா***

**வெருவுறப்பகையைவென்றவீரனேமருகனென்றென்**
**றருவரைத்தோளினானுக்குற்றவாறனைத்துஞ்சொன்னான்.**

*(இ-ள்.) திரு உளத்து உணராது இல்லை - (உனது) சிறந்த மனத்தில் அறியப்படாதது(எதுவும்) இல்லை; செப்புக-(நிகழ்ந்த உண்மையைக்) கூறுவாயாக, என்று-என்றுசொல்லி, அயர்வான் தன்னை-தளர்பவனான அருச்சுனனை, (கண்ணன்),மருவுற தழுவி-சேர அணைத்துக்கொண்டு, 'திங்கள் மரபினுக்கு உரிய செல்வா-சந்திரவமிசத்துக்கு உரிய செல்வத்துக்கு உடையவனே! வெருவுற பகையை வென்றவீரனே-அஞ்சும்படி பகைவர்களைச் சயித்த பராக்கிரமசாலியே! மருகன்-(இன்றுஅழிவடைந்தவன் என்) மருமகனான அபிமன்,' என்று என்று-என்று பலமுறைசொல்லி, அரு வரை தோளினானுக்கு உற்ற ஆறு அனைத்துஉம்- அழித்தற்கரிய மலைபோன்ற தோள்களையுடைய அபிமனுக்கு நேர்ந்த தன்மைமுழுவதும், சொன்னான்-(விவரமாக எடுத்துக்) கூறினான்;*

*'திருவுளத்து உணராதில்லை' என்றதனால், எம்பெருமானது சர்வஜ்ஞதை வெளியிடப்பட்டது. அயர்வானாகிய வன்கணனை எனக் கீழ்க்கவியோடு தொடர்ப்படுத்துக, 'அருவரைத்தோளினானுக்கு' என்பதற்கு அருச்சுனனுக்கு என்று உரைத்தால், 'சொன்னான்' என்பதோடு கூட்டவேண்டும். செப்புகென்று- தொகுத்தல். பி-ம்: வீரனென்மருகனென்றென்று. (295)*

### 158. - அதுகேட்ட அருச்சுனன் புத்திரசோகத்தால் தேரினின்று தரையிலயர்ந்து வீழ்தல்.

**மைத்துனனுரைத்தமாற்றமைத்துனன்செவிக்குத்தீக்கோ**
**லொத்திருபுறனும்வேவவுள்ளுறச்சுட்டபோது**
**புத்திரசோகமென்னுநஞ்சினாற்பொன்றினான்போ**
**லத்தடந்தேரினின்றுமவனிமேலயர்ந்துவீழ்ந்தான்.**

*(இ-ள்.) மைத்துனன் உரைத்த மாற்றம்-மனைவியினுடன் பிறந்தவனான கண்ணன்சொன்னவார்த்தை, மைத்துனன் செவிக்கு-அத்தைமகனான அருச்சுனனது காதுகளுக்கு, தீ கோல்ஒத்து-கொள்ளிக்கட்டை போன்று, இரு புறன்உம் வேவ- இரண்டு பக்கங்களிலும் வேகும்படி, உள் உற சுட்ட போது-மனத்திலே பொருந்தத் தபித்தபொழுது, (அருச்சுனன்), புத்திரசோகம் என்னும் நஞ்சினால் பொன்றினான்போல்-புத்திரன் இறந்ததனாலாகிய விசன மென்கிற விஷத்தினால் இறந்தவன்போல, அ தடதேரினின்றும்- அந்தப் பெரிய இரதத்தினின்றும், அவனிமேல்-பூமியில், அயர்ந்து வீழ்ந்தான் - மூர்ச்சித்து விழுந்திட்டான்; (எ - று.)*

*சேர்ந்தமாத்திரத்தில் வருத்துதலால், கொடுஞ்சொல்லுக்குத் தீக்கோலை உவமைகூறினார். செவி இரண்டாதலின், 'இருபுறன்' எனப்பட்டது. (296)*

### 159. -ஸ்ரீக்ருஷ்ணன் சைத்தியோபசாரத்தால்தெளிவிக்க, தெளிந்த அருச்சுனன் அழுதலுறுதல்.

**அயர்ந்தனன்விழுந்தகோவையச்சுதன்பரிவோடேந்திப்**
**புயந்தழீஇயெடுத்துவாசப்பூசுநீர்தெளித்துமாற்றப்**
**பயந்தருகோடிக்கூடபாகலந்தணிந்துமெல்லக்**
**கயந்தெளிவுற்றதென்னக்கண்மலர்ந்தழுதலுற்றான்.**

*(இ-ள்.) அயர்ந்தனன் விழுந்த-மூர்ச்சித்துக் கீழ்விழுந்த, கோவை- அருச்சுனராசனை,அச்சுதன்-கண்ணபிரான், பரிவோடு ஏந்தி - அன்போடு தாங்கி, புயம் தழீஇ எடுத்து-கைகளால் அணைத்து எடுத்து, வாசம் பூசு நீர் தெளித்து- பரிமளத்தையுடையபூசுதற்குரிய பனிநீரை (அவன்மேல்) தெளித்து, மாற்ற-(அவனது மூர்ச்சையைப்)போக்க,-(அவ்வருச்சுனன்), பயம்தரு-அச்சத்தைத்தருகிற, கோடி-*

*புதுமையான,கூடபாகலம்-கூடபாகலமென்னுந் தீராப்பெருநோய், தணிந்து - குறைய, கயம்-யானை, மெல்ல தெளிவு உற்றது என்ன-மெல்லத்தெளிவை யடைந்தாற் போல, கண்மலர்ந்து-கண்களை விழித்து[தெளிந்து], அழுதல் உற்றான்- புலம்பத் தொடங்கினான்;(எ - று.)-அதனை மேல் எட்டுக் கவிகளிற் காண்க.*

*தணிந்து-தணிய; செயவெனெச்சம் செய்தெனெச்சமாகத் திரிந்தது. பரிவோடு ஏந்தியதற்கு ஏற்ப, அச்சுதனென்றார். அச்சுதன்-தன்னைச் சரணமடைந்தவர்களை நழுவவிடாதவன.*

***பாகலமென்*** *பது யானைநோயின்பெயரென்று தமிழ்நிகண்டுபிங்கலந்தைகளால் தெரிகிறது. அந்நோயின் வகைகளையும், அவற்றில் பரிகாரமில்லாத கூடபாகலமென்னுங் கொடியபகுப்பின் தன்மையையும் அடியில் வருமாறு அறிக:- உருத்திரமூர்த்தியின் கோபத்தினின்று உண்டான ஜ்வரம் யானையிடத்திற் காணும்பொழுது அதற்குப் பாகலமென்று பெயர்; இப்பெயர்-பாகஞ்செய்வது [வேவிப்பது] என்னும் பொருளுடையது; இது-சுத்த பாகலம், பாலபாகலம், பக்வலபாகலம், ம்ருதுக்ஹரபாகலம், குக்குடபாகலம், ஏகாங்கக்ரஹபாகலம், ப்ரஸுப்தபாகலம் கூடபாகலம், புண்டரீக பாகலம் மகாபாகலம் எனப் பத்துவகைத்து; இது- பொருந்தாதவையும் அளவுக்குவிஞ்சினவையுமாகிய உணவின்வகைகளாலாவது, மிக்கசுமையைச்சமத்தல் கடத்தற்கரியதைக்கடத்தல் என்னுமிவற்றாலாவது, உள்ளிருக்கும் வாயு கெடுதல்பற்றி, உளதாவது; கூடம்-விரைவிற்கொல்லுதல்; இந்நோய், தொடக்கத்திலேயே யானையைக் கொல்லுதலால், கூடபாகமெலனப்படும்; கூடம்-கபடம்: அதனால் [வெளித்தெரியாமலே] கொல்லும் பாகலம். கூடபாகலம் என்றும்; கூடம்-வலை; அது மிருகங்களைப்பிடித்துக்கொல்லுதல்போல யானையைப் பற்றிக்கொல்லுவது கூடபாகலம் என்றும்; கூடம்- கூட்டம்; வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்றின் தோஷங்களுஞ் சேர்ந்து உண்டாக்கின பாகலம் கூடபாகலம் என்றுங் காரணங் கூறுவர்; இந்நோய் வந்தமாத்திரத்தில் கை கால் கண் காது வால் என்னும் உறுப்புக்கள் தம்பித்து இடிவிழுந்தாற்போல யானை கீழ் விழுந்து இறந்துவிடும்: மிக விரைவில் இறந்துவிழுந்திடுதலால் இதன்குறிகளை அறிதல் அரிது; கட்டுத்தறியிற் கட்டியிருக்கையிலும், நீர்பருகுகையிலும், கதிபயிலுகையிலும், நீராடுகையிலும் வழிநடக்கையிலும், மற்றுஞ் சிலசமயங்களிலும் இந்நோய் திடுக்கென நேரிடும். இந்நோயால் இறந்துபட்ட யானையைச் சிற்றறிவினர் இலக்கணமின்மையால் விஷந்தீண்டியதென்பர்; மற்றுஞ்சில பேதையர் பொய்யறிவாற் பேய்பிடித்ததென்பர்: அவற்றிற்கு அறிகுறியும் சிகிச்சையும் உண்டு; இதற்கோ அவையில்லை, இது,* ***பாலகாப்யமென்னும்*** *வடமொழி யானை வைத்தியநூலிற் கண்டது. (இன்னும் இதைப்பற்றி எழுதத்தக்கவற்றை விரிவஞ்சி விடுத்தனம்.) அந்நூலில் 'பாம்பும் நெருப்பும் இடியும் போலக்கொடிய இந்நோய்க்கு எப்பொழுதும் அஞ்சவேண்டும்' என்று கூறியுள்ளதற்கு ஏற்ப, இங்கே 'பயந் தரு' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இது ஆச்சரியகரமானநோயென்றதற்கு, 'கோடி' என்ற அடைமொழி கொடுத்தார்; இதுவரையிற் கூறியதனால், கூடபாகலந்தணிந்து மெல்லக்கயந் தெளிவுற்றதுஎன்றது,* ***இல்பொருளுவமையாம்.*** *இதனால், அருச்சுனனது மூர்ச்சை மரணத்தோடு ஒத்திருந்ததெனப் புலப்படும். கயம்=கஜம்.*
***பி-ம்:*** *மாற்றிப். கோடிகூடப்பாகலம், கொடியகூடப்பாகலம். (297)*

---

* *மாலதீமாதவமென்னும் வடமொழிநாடகத்தில், 'அதிதீவிரமான கூடபாகலமென்னும் த்ரிதோஷஸந்நிபாதஜ்வரம் விரைவில் யானையைக் கொல்லுதல்போல, தடையில்லாத மன்மதன் சுகுமார சரீரமுடைய மாதவனை மிகவருத்துகிறான்' எனக் கூறியுள்ளது.*

### 160.- இதுமுதல் எட்டுக்கவிகள்-அருச்சுனன்புலம்புவதைத்தெரிவிக்கும்

**போரினிற்றுணைவரோடும்புயங்கேதனனைவென்று**
**பாரெனக்களித்திநீயேயென்றுளம்பரிவுகூர்ந்தே**

***னேருனக்கொருவரில்லாய்நீகளம்பட்டாயாகி***
***லாரினிச்செகுக்கவல்லாரைவருக்குரியகோவே.***

ஒன்பது கவிகள் - ஒருதொடர்.

*(இ-ள்.) உனக்கு நேர் ஒருவர் இல்லாய் - உனக்கு ஒப்பு ஒருத்தரும் இல்லாதவனே !ஐவருக்கு உரிய கோவே - (எங்கள்) ஐந்து பேருக்கும் உரிய அரசனே ! போரினில்-யுத்தத்தில், துணைவரோடு உம்-தம்பிமார்களுடனே, புயங்ககேதனனை -பாம்புக்கொடியனான துரியோதனனை, நீயே-, வென்று - சயித்து, எனக்கு-, பார்அளித்தி-இராச்சியங்கொடுப்பாய், என்று-, உளம் பரிவு கூர்ந்தேன் - மனத்தில்ஆசைமிகுந்திருந்தேன்; நீ-, களம் - போர்க்களத்தில், பட்டாய் ஆகில் -இறந்தாயானால், இனிசெகுக்க வல்லார் ஆர் - இனிமேல் (பகைவரை)அழிக்கவல்லவர் எவர்? (எ-று.) (298)*

***161. சக்கரம்பிளந்தவாறுந்தரியலருடைந்தவாறுந்***
***துக்கரமானகொன்றைத்தொடையலால்வளைத்தவாறு***
***மெய்க்கரந்துணிந்தவாறுமீண்டுருத்தடர்த்தவாறு***
***முக்கரமுடனென்முன்னேயோடிவந்துரைசெய்யாயோ.***

*(இ-ள்.) சக்கரம் பிளந்த ஆறுஉம்-சக்கரவியூகம்(உன்னால்) பிளப்புண்ட விதத்தையும் தரியலர் உடைந்த ஆறுஉம்-(அதில்) பகைவர்கள் அழிந்த விதத்தையும்,துக்கரம் ஆன-செய்யவொண்ணாத [தெய்வத்தன்மையுள்ள), கொன்றைதொடையலால்-கொன்றைப்பூமாலையால், வளைத்த ஆறுஉம்-[உன்னைச் சயத்திரதன்] சூழ்ந்த விதத்தையும், மெய் கரம் துணிந்த ஆறுஉம்-(உன்) உடம்பில் ஒருகை(துரோணனால்) துணிபட்ட விதத்தையும்,மீண்டு-அதன் பின்பும், உருத்து அடர்த்த ஆறுஉம்-(நீ)கோபித்துப் போர்செய்தவிதத்தையும், உக்கரமுடன்-வீரத்தோடு, என் முன்னே ஓடி வந்து உரைசெய்யாய்ஓ-எனதுமுன்னே (நீ) வேகமாகவந்து சொல்ல மாட்டயோ? (எ-று.)*

*சக்கரம்பிளத்தல் முதல் மீண்டுருத்தடர்த்த விறுதியாக உள்ள விவரங்களையெல்லாம்,கீழ்க் கண்ணன் கூறியதனால் அருச்சுனன் அறிந்தானென்க: கீழ் 157-ஆங் கவியைநோக்குக. துக்கரம்- துஷ்கரம்: வடசொல். உக்கரம்=உக்ரம்: இது, உக்கிரம் எனப்பெரும்பாலும்வரும். **பி-ம்** : உக்கிரம். (299)*

***162. பன்னகவரசன்பெற்றபாவைமாமதலைதன்னை***
***முன்னுறமுனையிற்றோற்றேன் மூர்க்கனேன்முடியாதுண்டோ***
***வுன்னையுமின்றுதோற்றேனுன்னுடன்றொடர்ந்துவாரா***
***தின்னமுமிருந்ததையாவென்னுயிர்க்கிறுதியுண்டோ.***

*(இ-ள்.) பன்னக அரசன்பெற்ற-சர்ப்பராசன் பெற்ற, பாவை-பெண்ணாகிய உலூபியினது, மா மதலைதன்னை-சிறந்தகுமாரனான இராவானை, முன்உற-முற்பட, முனையில் - போரில், தோற்றேன் -*

*இழந்தேன்; உன்னையும்-, இன்று - இன்றைக்கு, தோற்றேன் - இழந்தேன்; ஐயா-! இன்னம்உம் - நீ இறந்தபின்பும், உன்னுடன், தொடர்ந்து வாராது - உன்னுடன் கூட வந்திடாமல், இருந்தது - (என்உயிர் என்உடம்பில்) இருந்தது! என் உயிர்க்கு இறுதி உண்டுஓ - என்னுயிருக்கும் அழிவு உள்ளதோ? மூர்க்கனேன்- மூர்க்கனாகிய யான், முடியாது - முடிக்காததொரு தொழிலும், உண்டோ-? (எ - று.)*

*மூர்க்கமாவது-கொண்டதுவிடாமை: என்னசங்கடம் நேர்ந்த விடத்தும் தான் உயிரைவிடாமையால், தன்னை 'மூர்க்கனேன்' என்று பழிக்கிறான். நிரந்தரமானதும், பரிகாரமில்லாததுமான இப்படிப்பட்ட புத்திரசோக பரம்பரையை எளிதில் பொறுத்த தனக்கு வேறு பொறுக்கவொண்ணாத துயரம் எதுவுமில்லையென்பான், 'மூர்க்கனேன் முடியாதுண்டோ' என்றான். பந்நகம் என்ற வடசொல்-பத் நகம் என்று பிரிந்து கால்களால் நடவாததென்றும், பந்நம் கம் என்றுபிரிந்து வளைந்து செல்வதென்றும் பொருள்படும். பாவை-சித்திரப்பதுமைபோல் அழகியவள்; அல்லது, கண்மணிப் பாவைபோல் அருமையானவள்; உவமையாகுபெயர்,*

*தீர்த்தயாத்திரையாகப்புறப்பகட்ட அருச்சுனன் கங்காநதியில் நீராடுகையில், அங்கு நீர்விளையாடவந்த நாககன்னிகைகளுள் உலூபியென்பவள் அருச்சுனனைக் கண்டு காமுற்று அவனைப் பிலத்துவாரவழியாய்த் தன் உலகத்துக்கு அழைத்துச்சென்று அவனை மணஞ்செய்துகொண்டு இராவானென்னும் புத்திரனைப் பெற்றாள். இவனைத் துரியோதனன் வஞ்சனையாகவந்து வேண்டி உடன்படுத்தித் தனக்குப்போரில் வெற்றியுண்டாகும்பொருட்டு அமாவாசையில் துர்க்கைக்குப்பலிகொடுப்பதென்றிருக்க, கண்ணபிரான் அதனையறிந்து முந்தினநாளாகிய சதுர்த்தசியன்றைக்கே தனது திவ்விய சக்தியால் அமாவாசையை வருவித்து இவ்விராவானையே தந்திரமாய் இந்தப்பக்கத்துக்குப் பலியாகுமாறு உடன்படுத்த, அதற்கு இசைந்து" கடியநேர்பலிதந்தாலுங் காயமர்சிலநாட்கண்டு, முடியநேரலர்வெம்போரின் முடிவெனக் கருளுக" என்று இவன் கண்ணனை வேண்டி வரம்பெற்று அன்றையிரவில் தானே தன்உறுப்பனைத்தையுங் கொய்து யுத்ததேவதைக்குப் பலிகொடுத்ததுமன்றி, கண்ணனருளிய வரத்தின்படி பலவடிவங்கொண்டு. போர்செய்து வென்று முடிவில் எட்டாம்போர்நாளில் இறந்தனன். (300)*

***163. கதிரவனுதிக்குமுன்னேகண்டுயிலுணர்த்தியென்னை
யதிரமர்க்கோலங்கொள்வானறிவுறுத்துரைக்கவல்லாய்
முதிர்மர்முருக்கிமிண்டேனித்தனைப்போதுமுன்போ
லெதிர்வரக்காண்கிலேனிங்கில்லையோவென்செய்தாயோ.***

*(இ-ள்.) கதிரவன் உதிக்கும் முன்னே -சூரியனுதிப்பதற்கு முன்னமே, என்னை-,கண் துயில் உணர்த்தி - தூக்கத்தினின்று எழுப்பி, அதிர் அமர் கோலம் கொள்வான்-ஆரவாரிக்கிற போருக்கு உரிய அலங்காரத்தைச்செய்துகொள்ளும்படி, அறிவுறுத்து உரைக்க வல்லாய்-தெரிவித்துக்கூறுதல் வல்லவனே! இ தனை போதுஉம்-*

*இவ்வளவுபொழுதும், முதிர் அமர் முருக்கி-மிக்க போரைச்செய்து, மீண்டேன் - திரும்பிவந்தேன்; முன்போல்-வழக்கம்போல, எதிர்வர காண்கிலேன் - (நீ இன்றைக்கு) எதிரில் வரக்காண்கிறேனில்லை; (நீ), இங்கு இல்லையோ? என் செய்தாயோ-? (எ-று.) (301)*

***164. தந்திரமியாவுமின்றித்தனித்துநீதானேபோர்செய்
தந்தரமமையுமென்றிவ்வகலிடந்துறந்தவையா
மைந்துடனம்மைக்காணமகன்மகன்வருகின்றானென்
றிந்திரனேவவுன்னையிமையவரெதிர்கொண்டாரோ.***

*(இ-ள்.) தந்திரம் யாஉம் இன்றி - சேனைகளெவையுந் துணையில்லாமல், நீதான்ஏ தனித்து போர் செய்து-, அந்தரம் அமையும் என்று - சுவர்க்கலோகமே (உன்சிறப்புக்கு) ஏற்ற இடமாகு மென்று கருதி, இ அகல் இடம் துறந்த - பரந்த இந்தப்பூமியினிடத்தை நீங்கின, ஐயா-! 'மைந்துடன் - களிப்போடு, நம்மை காண- நம்மைப்பார்ப்பதற்கு, மகன் மகன் - (நமது) பௌத்திரன், வருகின்றான்-,' என்று- என்று எண்ணி, இந்திரன்-, ஏவ- செலுத்த, இமையவர் - தேவர்கள், உன்னை-, எதிர் கொண்டார்ஓ- அமையுமென்றிவ்வகலிடந் துறந்தவையா -* **தற்குறிப்பேற்றவணி.**

***165. தேரழிந்தெடுத்தவில்லுஞ்செங்கதிர்வாளுமின்றி
யோருதவியும்பெறாமலொழிந்துயிரழிந்தமைந்தா
போரமருடற்றிநீயப்பொன்னகரடைந்தபோதுன்
பேரமராண்மைகேட்டுப்பிதாமகனென்சொன்னானோ.***

*(இ - ள்.) தேர் அழிந்து-, எடுத்த-(கையில்) பிடித்த, வில்லும்-, செம் கதிர்- (பகைவ ரிரத்தந் தோய்தலாற்) சிவந்த ஒளியையுடைய, வாளும்-, இன்றி - இல்லாமல்,ஓர் உதவிஉம் பெறாமல் ஒழிந்து-, உயிர் அழிந்த- இறந்த, மைந்தா- மகனே! நீ-,போர் அமர் உடற்றி - சிறந்த போரைச்செய்து, (பின்பு), அ பொன் நகர்அடைந்தபோது-பொன்மயமான அந்த அமராவதிபட்டணத்தை யடைந்த*

பொழுது.(அங்கு) பிதாமகன் -பாட்டனான இந்திரன், உன்பேர் அமர் ஆண்மை கேட்டு- உனதுபெரும்போர் வல்லமையைக் கேட்டறிந்து, (உன்னைக் குறித்து), என் சொன்னான்ஓ-?(எ - று.)- பேர் அமர் ஆண்மை - பிரசித்திபெற்ற பராக்கிரமமுமாம். (303)

**166. மற்புயக்குன்றிலொன்றுவாளுடன்வீழப்பின்னும்**
**பொற்புறப்பொருதநீயப்பொன்னுலகடைந்தகாலை**
**யற்புதப்படைகள்வல்லாயபிமனேயமரரூருங்**
**கற்பகக்காவும்வானிற்கங்கையுங்காட்டினாரோ.**

(இ-ள்.) அற்புதம் படைகள் வல்லாய் - ஆச்சரியகரமான ஆயுதங்களில் வல்லவனே! அபிமனே-! மல்- வலிமையையுடைய, புயம் குன்றில்-மலைகள்போன்ற தோள்களில், ஒன்று-,வாளுடன்-(ஏந்திய) வாளாயுதத்துடனே, வீழ-(துணிந்து) விழவும், பின்உம்- அதன்பின்பும், பொற்புஉற - அழகு மிக, பொருத - போர்செய்த,

நீ-, அ பொன் உலகு அடைந்த காலை-பொன்மயமான அந்தத்தேவ லோகத்தைச் சேர்ந்தபொழுது, (அங்கு), அமரர் - தேவர்கள், ஊர்உம்- (தங்களுடைய) அமராவதிநகரத்தையும், கற்பகம் காஉம் கற்பகவிருட்சங்களையுடைய (நந்தனவனமென்னும் பூஞ்சோலையையும், வானில் கங்கைஉம் - ஆகாயகங்காநதியையும், காட்டினார்ஓ- (உனக்குக் காண்பித்தார்களோ? (எ - று.)

புதியராய்வந்தாரை அழைத்துக்கொண்டுபோய் அவர்க்குத் தமது நகரம் முதலிய சிறப்புக்களைக் காண்பித்தல், உலககவியல்பு- கல்பகம் என்பதற்கு- (தன்னிடம் வந்து நினைத்த பொருள்களை அவரவர்க்குக்) கல்பிப்பது [உண்டாக்குவது] என்று காரணப்பொருள்; இது-சந்தாநம், மந்தாரம், பாரிஜாதம், கல்பகம், ஹரிசந்தநம் என்ற ஐந்துதேவதருக்களுள் ஒன்றற்கு உரிய பேராத லன்றி, ஐந்துக்கும் பொதுப்பெயராகவும் வழங்கும். தேவ கங்கைக்கு 'மந்தாகிநீ' என்று பெயர்; (பாதாளகங்கை-'போகவதீ' எனப்படும்.) (304)

**167. வளைத்தவின் னிமிரா வண்ணம் வாளியான் மாவுந்தேருந்**
**துளைத்துமுன் காலா ளாகத் துரோணனைத் துரந்த வீரா**
**திளைத்தவெஞ் சமரி னொந்து தனஞ்சயன் சிறுவன் மேனி**
**யிளைத்ததென் றிந்தி ராணி யின்னமு தூட்டி னாளோ.**

(இ-ள்.) வளைத்த வில் நிமிரா வண்ணம்-வணக்கின வில் நிமிராதபடி, வாளியால்-அம்புகளை எய்ததனால், மாஉம் தேர்உம் துளைத்து-குதிரைகளையும் தேரையும் பிளந்து, காலாள் ஆக- பதாதியாய்ச் செல்லும்படி, முன்-முதலில், துரோணனை-, துரந்த - ஓட்டிய, வீரா வீரனே! 'தனஞ்சயன் சிறுவன் மேனி - அருச்சுனன் மகனது உடம்பு, திளைத்த-இடைவிடாது செயத, வெம் சமரில்- கொடிய போரில், நொந்து-சிரமப்பட்டு, இளைத்தது-மெலிவடைந்து விட்டது, என்று என்றுஎண்ணி, இந்திராணி - இந்திரன் மனைவி, (தனதுபௌத்திரனாகிய உனக்கு), இன் அமுது ஊட்டினாள்ஓ- இனிய அமிருதத்தை உண்பித்தாளோ? (எ - று.) (305)

வேறு.

### 168. - இங்ஙன் புலம்புகையில் வியாசமுனிவன் வருதல்.

**என்னமக வான்மகனி ரங்கினன ரற்ற**
**முன்னவர்கள் பின்னவர்கண் முறைமுறைபு லம்பச்**
**சென்னிகரம் வைத்தனைவ ருங்கலுழி செய்ய**
**வன்னபொழு தாரணம ளித்தமுனி வந்தான்.**

*(இ-ள்.) என்ன-என்று, மகவான் மகன் - இந்திரகுமாரனான அருச்சுனன், இரங்கினன்அரற்ற - சோகித்துக் கதற,-முன்னவர்கள்-(அவனது) முன்பிறந்தவரான தருமனும்வீமனும், பின்னவர்கள்- பின்பிறந்தவரான நகுலசகதேவர்களும், முறை முறை புலம்ப-மாறிமாறி (அடுத்தடுத்து) அழ,- அனைவர்உம்-எல்லோரும், சென்னி கரம் வைத்து,-தலைமேற் கைகளைவைத்துக்கொண்டு, கலுழிசெய்ய- கண்ணீர்வெள்ளஞ்சொரிதலைச்செய்ய, அன்னபொழுது-*

*அந்தச்சமயத்தில், ஆரணம் அளித்த முனி-வேதங்களை அருளிய வியாசமாமுனிவன், வந்தான் - (அங்கு) எழுந்தருளினான்; (எ -று.)*

*சென்னி கரம் வைத்தல் - சோகக்குறிப்பு, வரம்பின்றியிருந்த வேதங்களைத் துவாபரயுகமுடிவில் இருக்கு, யசுர், சாமம் அதர்வணம் என நான்காகப்பகுத்து ஒழுங்குபடுத்தி அக்காரணத்தால் வ்யாஸனென்று பெயர் பெற்றவ னென்பார், 'ஆரணமளித்தமுனி' என்றார்.*

*இதுமுதல் பதினெட்டுக்கவிகள் -பெரும்பாலும் நான்காஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளங்காய்ச்சீர்களுமாகிய **கலிவிருத்தங்கள்** (306)*

### *169.- வந்தமுனி கண்ணீர்போக்கி பலஉபதேசமொழிகூறத்தொடங்கல்.*

***வந்தமுனிமற்றுமுடன்வருமுனிவரோடு***
***மந்தநரபாலர்கண்ணரும்புனறுடைத்துக்***
***கந்தனிகர்மைந்தனொடுகையறநினைக்கும்***
***பந்தனையறுக்குமொழிபற்பலபகர்ந்தான்.***

*(இ-ள்.) வந்த முனி-எழுந்தருளின வேதவியாசபகவான்,- மற்றும் உடன் வரும்முனிவரோடுஉம்- இன்னுங்கூடவந்த முனிவர்களுடனே,- அந்த நரபாலர் கண் அரும்(பு) புனல் துடைத்து-(தருமன் முதலிய) அந்த அரசர்களது கணகளில்தோன்றுகிற நீரைப் போக்கி,-கந்தன் நிகர் மைந்தனொடு - முருகக்கடவுளை யொத்த குமாரனான அபிமனுடனே, கை அற-(தாமும்) செயலற்றிருக்க, நினைக்கும்- (அப்பாண்டவர்கள்) எண்ணுகிற, பந்தனை - (அவர்களது) பாசபந்தத்தை [அன்பின்தொடக்கை], அறுக்கும்-ஒழிக்கும்படியான, பல்பல மொழி - அனேக உபதேசவார்த்தைகளை, பகர்ந்தான் - கூறுபவனானான்; (எ -று.)-அதனை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க.*

*கையாறு-உயிர்ப்புமின்றி வினையொழிந்து அயர்தல். அரும்பு புனலென்பது, அரும்புனலென விகாரப்பட்டது: இனி, அரும்புனல் எனப் பண்புத்தொகையாக எடுத்து - அரிய [இதுவரையில் இல்லாத] நீர் எனினுமாம். (307)*

### *170.- நான்குகவிகள் ஒரு தொடர்: - வியாசமுனிவனுபதேசித்துப் போதலைத் தெரிவிக்கும்,*

***தாயரொடுதந்தையர்கடாரமொடுதனயோர்***
***தூயதுணைவோர்களொடுசுற்றமெனநின்றோர்***
***மாயையெனும்வல்லபமயக்குறுமயக்கா***
***லாயவுறவல்லதவரார்முடிவில்யாமார்.***

*(இ-ள்.) தாயரொடு-தாய்மார்களும், தந்தையர்கள்- தகப்பன்மார்களும், தாரமொடு-மனைவியரும், தனயோர்-புதல்வரும், தூய-(மனத்தில்) சுத்தியையுடைய, துணைவோர்களொடு - உடன் பிறந்தவர்களும், சுற்றம் - (மற்றும்) பந்துவர்க்கமும், என- என்று நின்றோர்-நின்றவர்களெல்லோரும், மாயை எனும் வல்லபம்-மாயை யென்கிற (பகவானுடைய) சக்தி, மயக்குறும்-(மனத்தை) மயங்கச்*

*செய்தலாலாகிற, மயக்கால்-மயக்கத்தினால், ஆய-உண்டான, உறவு அல்லது- சம்பந்தமே யல்லாமல்,(உண்மையை நோக்குமிடத்து), முடிவில்-முடிவிலே, அவர் யார்- அந்தத் தாய்மார் முதலியஉறவினர் யார்? யாம்ஆர்?-[அவருக்கும் நமக்கும் யாதோருறவுமில்லை யென்றபடி].*

*கண்ணன் அருச்சுனனுக்குக் கீதை உபதேசிக்கையில், "மாயையென்றொருத்திதன்பால்மனமெனு மைந்தன் தோன்றித், தூயநல்லறிவன் றன்னைத் தோற்றமின் றாக்கி வைத்தான். தாயொடு தந்தை மக்கள் தார மென் றிவர்பால்வைத்த, நேயமு மவன்றனாலே நிகழ்ந்த தோர்நினைவு கண்டாய்" என்றும்,"பந்தம் துணர்ந்து நேரே பார்க்குங்காற் பகையார் நண்பார்" என்றும் அருளிச்செய்தமை காண்க. மனம் மாயைக்கு வசப்பட்டபோது பொருள்களின் நிலையை உள்ளபடியறியுந் தத்துவஞானம் தோன்றுகிறதில்லை; ஆகவே, நிலையுள்ளபொருள்களை நிலையில்லாதனவென்றும் நிலையில்லாதபொருள்களை நிலையுள்ளனவென்றும் மாறுபட அறியும் விபரீதஞானம் தலையெடுக்கும்; அதனாலேயே, நித்தியமான ஆத்துமாவுக்கு யாதோரு சம்பந்தமும் படாமல் அநித்தியமான தேகத்தையே பற்றியே தாய் முதலியோரிடத்துச் சுற்றத்தவரென்ற பொய்யபிமானம்உண்டாகி நிலைநிற்கின்றது; அத்திரிபுணர்ச்சியை ஒழித்து மெய்யுணர்ச்சிகொண்டு நோக்குமிடத்து, யாவும் மாயாகாரிமென்றஉண்மை புலப்படும்மென்பதாம். தாய்வழியிலும் தந்தைவழியிலும், பெரியதாய் சிறியதாய் பெரியப்பன்சிற்றப்பன் எனத் தாய்தந்தையர் பலராவர். சுற்றம்-(உரிய காலங்களில் வந்து)சுற்றிநிற்ப தெனக் காரணப்பெயர்: அம்-கர்த்தாப்பொருள்விகுதி. மயக்கு- மயங்குஎன்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். உறவு-உறுதல்; சேர்க்கை; இந்தொழிற்பெயர்-உறவினர்க்கு ஆகுபெயராம். முதலடி-முற்றுமோனை. **பி-ம்:** முடிவில்யார்யார். (308)*

***171. வந்துபிறவாதமனையில்லைமுலைமாறித்***
***தந்துபரியாமலொழிதாயர்களுமில்லை***
***புந்தியுணர்வற்றவர்புலம்புறுவதல்லா***
***லிந்தவுலகத்தறிஞர்யாதினுமயங்கார்.***

*(இ - ள்.) (ஓர்உயிர்), வந்த பிறவாத மனை-(உடம்பெடுத்து) வந்து பிறக்காத வீடுகள், இல்லை-; (அவ்வுயிர்க்கு), முலை மாறி தந்து-முலைப்பாலை மாறிமாறிக் கொடுத்து, பரியாமல்-காப்பாற்றாமல், ஒழி-நீங்குகிற, தாயார்கள்உம்-தாய்மாரும், இல்லை-; (ஆதலால், அவ்வுயிர் நீங்கியவிடத்து), புந்தி உணர்வு அற்றவர் புலம்புறுவது அல்லால்-மனத்தில் தத்துவஞானமில்லாதவர்கள் அழுதலேயல்லாமல், இந்த உலகத்து-இவ்வுலகத்தில்,அறிஞர்-மெய்யுணர்வுடையோர், யாதின்உம் மயங்கார்-எந்தவிதச்சங்கடம் நேர்கையிலுங் கலங்கமாட்டார்கள்; (எ - று.)*

*அநாதியான கருமத்துக்கு வசப்பட்டுப் பலபலவீடுகளில்பற்பலர் கருப்பத்திற் பிறந்தும் பிறக்கவும் இருக்கிற ஒருயிரை, தனதுகைனென்றும் பிறவாறும் உறவுமுறைபாராட்டி அன்புகொண்டு, அது*

*விதிவசத்தால் நீங்கிய காலத்திற் சோகிப்பது, அறிவுடையோர்க்கு உரியதன்று என்பதாம். மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கையும் அபேதமாகக்கூறுவது கவிசமயமாதலால், இங்கே மனம் 'புந்தி' எனப்பட்டது. (309)*

***172.. உம்மையினும்யாருறவுணர்ந்திலமினிப்போம்***
***அம்மையினும்யாவருறவாவரெனவறியேம்***
***இம்மையினிகழ்ந்தவுறவித்தனையிரங்கன்***
***மும்மையுமுணர்ந்துவருமூதறிவினீரே.***

*(இ-ள்.) உம்மையின்உம் - கழிந்து பிறப்பிலும் யார் உறவு - (நமக்கு) எவர் சுற்றத்தவராயிருந்தவர்? (என்று) உணர்ந்திலம், - (நாம்) அறிந்தோமில்லை; இனி போம் - இனிமேல் வரப்போகிற,*

*அம்மையின்உம் - மறுபிறப்பிலும், யாவர் உறவு ஆவர் என - (நமக்கு) எவர் சுற்றத்தவராகுபவர் என்று, அறியேம் - (நாம்) அறியமாட்டோம்: (அங்ஙனமிருக்க), இம்மையில் நிகழ்ந்த உறவு இத்தனை - இப்பிறப்பில்மாத்திரமுள்ள சுற்றமாகிய இவ்வளவுக்கு? இரங்கல்- வருந்துதல்,- மும்மைஉம் உணர்ந்து வரும் - மூன்று காலத்துச் செய்கைகளையும் அறிந்துவருகிற, மூது அறிவின்-பழமையான ( சிறந்த) அறிவுக்கு (உரிய), நீர்எ - தன்மையாகுமோ? (ஆகாது எனறபடி); ( எ- று.)*

*உலகத்தில் உயிருக்கு அநாதியான கருமத்தின் தொடக்கத்தால் அளவிறந்த பிறப்புக்கள் உள; அவற்றில் ஒவ்வொருபிறப்பிலும் உறவினர் பலர் அமைதல் இயல்பே: அவற்றில் இப்பிறப்பில் உறவினராகவுள்ளவரைமாத்திரம் அறிதல் கூடுவதேயன்றி முன்பின் பிறப்பின் உறவினரை யுணர்தல் இப்பொழுது சாத்தியமில்லை: என்றதனால், உறவு நிலையில்லாததாகிய உடம்பைப்பற்றினதேயன்றி நிலையுள்ளதாகிய உயிரைப் பற்றின தன்று என்றும், முன்பும், பின்பும் உறவல்லாத உயிர் இப்பொழுது உறவாகவும், உறவாகவிருந்த உயிர் உறவன்றாகவும், ஓருறவாகவிருந்தது மற்றோருறவாகவும் எல்லாவித விகாரங்களுக்கும் இடமுண்டு என்றும் தெரிகிறது: இப்படியிருக்க, இவ்வொருபிறப்பில் உறவாகவிருந்த உயிரின் ஒழிவுக்கு விசனப்படுவது நல்லுணர்வன்று என்பதாம். இன்னும், இப்பாட்டின்முன்னிரண்டடிகளால், உடம்பின் நிலையில்லாமையையும், உயிர் என்றைக்கேனும் உடம்பினின்று நீங்குதலையே இயல்பாகவுடைய தென்பதையும் குறிப்பித்தார். இம்மை அம்மை உம்மை என்றவற்றில், பகுதியாகிய மூன்றுசுட்டெழுத்துக்களும்-முறையே சமீபம் தூரம் முன் என்னும் பொருளை யுணர்த்தின. இரண்டாமடியில் 'ஆவரென' என்பதற்கு ஏற்ப, முதலடியில் 'ஆனாரென' என்பது வருவிக்கத்தக்கது. மும்மை-மூன்றுகாலத்துச் செய்கைகளுக்கு, இருமடியாகுபெயர். நீர்மை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் 'நிர்' என நின்றது. இரங்கல் - தொழிற்பெயர். (310)*

***173. ஆற்றிநுமதாண்மையழியாமலிருமென்றென்***
***றேற்றியடைவேசுருதியாவையுமெடுத்துத்***
***தேற்றியுரைசெய்துதனசேவடியிறைஞ்சிப்***
***போற்றியமகீபரைநிறுத்திமுனிபோனான்.***

*(இ-ள்.) (ஆதலால்), ஆற்றி- (சோகத்தைப்) பொறுத்து, நுமது ஆண்மை அழியாமல் -(அதனால்) உங்கள் பராக்கிரமம் சிதையாமல், இரும் - (மனவுறுதிநிலையோடு)இருங்கள், என்று என்று-என்று (இங்ஙனம்) பலவிதமாக, அடைவுஏ ஏற்றி -முறையாய் (அவர்கள் மனத்தில்) ஏற்கச்செய்து, சுருதி யாவைஉம் எடுத்து உரைசெய்து - வேதவாக்கியங்கள் பலவற்றையும் எடுத்துச் சொல்லி, தேற்றி - (அவர்களைச்) சமாதானப்படுத்தி, தன் சேவடி இறைஞ்சி போற்றிய மகீபரை -தன்னுடைய சிவந்த பாதங்களை நமஸ்கரித்துத் துதித்த அப்பாண்டவராசர்களை,நிறுத்தி-(ஒருவாறு சோகம்நீஙகிய நிலையில்) நிற்கச்செய்து, முனி -(எழுந்தருளின)அந்த வியாசமுனிவன், போனான் (அப்பால்) சென்றான்; ( எ- று.) அடைவேஏற்றுதல் - ஒவ்வொரு விஷயத்தை ஒவ்வொருவர்க்கும் உபதேசித்தல். தேற்றுதல் -தேறப்பண்ணுதல். **பி-ம்:** தமசேவடி இருத்தி. அவர்போனார்.*
*(311)*

*174.-அப்போதும் தேறாது அருச்சுனன் அக்கினிப்பிரவேசஞ்செய்யத் தீமூட்டச் சொல்லுதல்.*

***தேற்றினுமகப்பரிவுதேறலரிதன்றே***
***யாற்றவரிதாதலினருச்சுனனரற்றா***
***மாற்றரியபேரழல்வளர்த்தியெனவல்லே***
***யேற்றதுணராதுதனதிளவலொடுரைத்தான்.***

*(இ-ள்.) ஆற்ற அரிது ஆதலின் - (அத்துன்பம்) பொறுக்க முடியாதாதலால், அருச்சுனன்-, அரற்றா - வாய்விட்டுப் புலம்பி, தனது இளவலொடு தனது அடுத்தம்பியானநகுலனுடனே, 'மாற்று அரிய - அவிக்க முடியாத, பேர் அழல் - பெருந்தீயை, வளர்த்தி - (எனது அக்கினிப்பிரவேசத்துக்காக) வளரச்செய்வாய், 'என - என்று, ஏற்றது உணராது - (செய்யத்) தக்கதை (இன்னதென்று) அறியாமல்,*

*வல்லே உரைத்தான் - விரைவிற் கூறினான்; தேற்றின்உம் - (எவ்வளவு) தேறுதல் செய்தாலும், மக பரிவு-புத்திரசோகம், தேறல் அரிது - சமாதானப்படுதற்கு முடியாதது. அன்றே - அல்லவோ? (எ -று.)*

*'தேற்றினாலும் புத்திரசோகம் தேறவொண்ணாததன்றோ' என்ற பொதுப்பொருள், மற்றைமூன்றடிகளாற் கூறப்படுஞ் சிறப்புப்பொருளைச் சமர்த்தித்துநின்றது-* ***வேற்றுப்பொருள்வைப்பணியாம். பி - ம்,*** *அரிதென்றே. (312)*

### *175.- அருச்சுனன் யார்தடுக்கவும் கேளாது அக்கினியிற்புகச் சித்தனாதல்.*

***மத்திரைமகன்கனல்வளர்க்கவதனூடே***
***மித்திரரும்யாவரும்விலக்கவும்விலங்கான்***
***சித்திரவில்லூடுயிர்செகுப்பனெனநின்றான்***
***புத்திரரிலாவிடர்பொறுத்திடலுமாமோ.***

*(இ-ள்,) மத்திரை மகன் - மாத்திரியின் குமாரனான நகுலன் கனல் வளர்க்க- (தமையன்கட்டளையைக் கடக்கவொண்ணாமையால் அங்ஙனமே) தீயை மூட்டிவளரச்செய்ய, - (அருச்சுனன்),*

*மித்திரர்உம் யாவர்உம் விலக்கவும் அதனூடு விலங்கான்-தனது) நண்பர்களும் (மற்றும் உறவினர் முதலிய) எல்லோரும் தடுக்கவும் அக்கினிப்பிரவேசமாகிய அத்தொழிலிலே தடைப்படாதவனாய், 'சித்திரம்வில்லூடு - அக்கினியிலே, உயிர் செகுப்பன் - (என்) உயிரை ( நானே) மாய்த்துக்கொள்வேன்,' என - என்றுகூறி, நின்றான் - (அக்கினிப்பிரவேசத்துக்குச்) சித்தனாய் நின்றான்: புத்திரர் இலா இடர் - புதல்வரையொழிந்தமையாலான சோகம், பொறுத்திடல்உம் ஆம்ஓ-பொறுத்தற்குங் கூடுமோ? ( எ-று.)*

*இப்பாட்டில், நான்காமடி-பொதுப்பொருள்: இதனால், அருச்சுனனது செய்கையாகிய சிறப்புப்பொருளை விளக்கியது-* ***வேற்றுப்பொருள்வைப்பணி.***
*ஒருவன்மனத்தை அதுபோகிறவழியினின்று வேறு வழியில் மீட்டுக்கொணர்தலில் நண்பர் சிறத்தலால், அவரைமுதலிற் கூறினார். சித்திரவில்-பலவகையான ஒளியையுடையது என அக்கினிக்குப் பண்புத்தொகையன்மொழி; (வில்-ஒளி). சித்திரபாநு என்ற வடமொழிப்பெயரையுங் காண்க. மத்திரை - மத்திரதேசத்து அரசனது மகள்,* ***பி- ம்:*** *சித்திரவில்லோடு. (313)*

### *176.- இரண்டுகவிகள் - ஒருதொடர் : ஸ்ரீக்ருஷ்ணன் அழைக்க இந்திரன் முனிவன் வடிவாய்வந்து அருச்சுனனைத் தடுத்தமை கூறும்.*

***அன்பொடுதுழாய்முதல்வனப்பொழுதழைக்க***
***முன்புதழன்மூழ்கலொழிமுனிவிரைவின்வாரா***
***நின்புதல்வனோடெரியினீபுகுதனெறியோ***
***வென்புதல்வனோடெனையிறப்பதுதவிர்த்தோய்.***

*(இ-ள்.) துழாய் முதல்வன் - திருத்துழாய்மாலையையுடைய தலைவனான கண்ணபிரான், அன்பொடு - (அருச்சுனன்பக்கல்) அன்புடனே, அப்பொழுது அழைக்க - அச்சமயத்தில் (மனத்திற் சிந்தித்துக்) கூப்பிட, முன்பதழல் மூழ்கல் ஒழிமுனி - முன் (அருச்சுனனது தடையால்) அக்கினிப்பிரவேசம் நீங்கின (இந்திரனாகிய)முனிவன், விரைவின் வாரா-துரிதமாக (அருகில்) வந்து, (அருச்சுனனை நோக்கி),'என்புதல்வனோடு எனை இறப்பது தவிர்த்தோய் - என் புத்திரனுடனே யான் இறக்கஇருந்ததைத் தடுத்தவனே! நீ அக்கினிப்பிரவேசஞ் செய்தல் நீதியாகுமோ? (ஆகாதுஎன்றபடி),*

*முதல்வன் - எல்லாப்பொருள்களுக்கும் முந்தினவரான திரிமூர்த்திகளுள்ளும் மற்றையிருமூர்த்திக்கும் முதலாய் நிற்பவன்: உலகத்துக்கு முதலானவன், 'எனை யிறப்பது*

*தவிர்த்தோய்' - என்னை யிறப்பதைத் தவிர்த்தோய் என இரண்டு செயப்படு பொருளாகவாவது, யான் இறப்பதைத்தவிர்த்தோய் என உருபுபிரித்துக் கூட்டலாகாவது உரைக்க. (314)*

### *177.- முனிவன்சொல்லினால் அக்கினிப்பிரவேசந் தவிர்ந்து அருச்சுனன் நிலைகெட்டிருத்தல்.*

***வழிப்படவழக்கின்வழிவருகவெனமுனிவன்***
***மொழிப்படிபொறுத்தழலின்மூழ்குதொழின்மாறி***

***விழிப்புனலின்மூழ்கிமனம்வெந்துதளர்வுறுவோன்***
***பழிப்படுசுரத்தின்முளிபாதவமதானான்.***

*(இ-ள்.) வழி பட ஒழுங்காக, வழக்கின் வழி-நீதிவழியிலே, வருக-(நீ) பொருந்துவாயாக, என - என்று (அருச்சுனனைநோக்கி முனிவனாகி வந்த இந்திரன்) சொல்ல, முனிவன் மொழி படி-(அந்த) இருடியின் வார்த்தையின்படி, பொறுத்து- (துயரத்தைப்) பொறுத்துக்கொண்டு, அழலில் மூழ்கு தொழில் மாறி -அக்கினியிலே பிரவேசிக்குந் தொழி லொழிந்து, விழி புனலில் மூழ்கி-கண்ணரில் முழுகி, மனம் வெந்து-மனந்தவித்து, தளர்வு உறுவோன்-தளர்ச்சி மிகுபவனான அருச்சுனன்,-பழி படு-(யாவராலும்) இகழப்படுகிற, சுரத்தில்-பாலைவனத்திலே, முளி-உலர்ந்துகிடக்கிற, பாதவம்அது ஆனான்-மரத்தின்தன்மையுடையவனானான்;(எ- று.)*

*பட்டுப்போன மரம்போல நிலைகெட்டுநின்றனன் அருச்சுனனென்பதாம். 'வழிப்பட வழக்கின்வழி வருக' என்றது, கீழ் "என்மகனிறக்க வென்னை யிருத்தினையாயினம்ம, நின்மக னிறந்தாலென்சொல் மறாதொழி நீயும்" என்று யான் கேட்ட வரத்துக்கு நீ உடன்பட்டபடிஉறுதியாய் நிற்கவேண்டு மென்றபடி, 'அழலின் மூழ்குதொழில்மாறிப் புனலில் மூழ்கி' எனச் சமத்காரந்தோன்றக் கூறினார், 'விழிப்புனலின் மூழ்கி' -கண்ணீர் வெள்ளத்தை மிகச் சொரிந்து என்றபடி. 'அழலின் மூழ்கு தொழில் மாறிப் புனலின் மூழ்கி மனம்வெந்து' என்றதனால், நீருட்குளிப்பினும் மனவெப்பம் தணியா தென்பதும், தீயிற்குளித்து இறந்தாலே மனவெப்பம் தணிந்திடு மென்பதும் விளக்கப்பட்டன. புனன் **மூழ்கி.....வெந்து** என்றதில் மாறுபட்டதொழில் தோன்றியதாகக் கூறியது-விஷமாலங்காரமாகும். **பி-ம்;** பொறித்தழலின் (315)*

### *178.- அபிமனைப் போரிற்செல்லவினதன்பொருட்டுத் தருமன்முதலியோரை அருச்சுனன் வெகுளல்.*

***காமர்பிறையன்னசிறுகாளைதனைவாளா***
***வேமமுறுவெஞ்சமரிலேவினர்களென்னா***
***மாமுரசணிந்தகொடிமன்னனையும்வண்டார்***
***வீமனையுநின்றவிளையோரையும் வெகுண்டான்.***

*(இ-ள்.) 'காமர்-அழகிய, பிறை-இளஞ்சந்திரனை, அன்ன- ஒத்த, சிறு காளைதனை-இளங்குமரனான அபிமனை, வாளா-வீணாய், ஏமம் உறுவெம் சமரில் - உற்சாக மிக்க கொடிய போரில், ஏவினர்கள்-செலுத்தினார்கள்,' என்னா-என்று, மா முரசு அணிந்த கொடி மன்னனைஉம்-சிறந்தபேரிகைவடிவத்தைத் தரித்த துவசத்தையுடைய தருமராசனையும், வண்தார் வீமனைஉம்-அழகியமாலையையுடைய வீமசேனனையும், நின்ற இளையோரைஉம்-(மற்றும்) நின்ற தம்பிமாரான நகுலசகதேவரையுங்குறித்து, வெகுண்டான்-(அருச்சுனன்) கோபித்தான்: (எ - று.)*

*காமமருவு என்பது, காமர்என மரூஉவாயிற்று. வாளா-துணையின்றித் தனியே என்றுமாம். (316)*

*179.- இதுமுதல் ஆறுகவிகள்-அடுத்தநாள் சூரியாஸ்தமனத்துக்குள் சயத்திரதனைக் கொல்வதாக அருச்சுனன் செய்யுஞ் சபதங்களைத் தெரிக்கும்.*

***சிந்துபதியாகியசெயத்திரதனைத்தே***
***ருந்தமரினாளையுருமேறெனவுடற்றா***
***வந்திபடுமவ்வளவினாவிகவரேனேல்***
***வெந்தழலின் வீழ்வனி துவேதமொழியென்றான்.***

*(இ-ள்.) தேர் உந்து அமரில் - தேர் செலுத்திச் செய்யும் போரில், நாளை அந்திபடும்அ அளவின்- நாளைத்தினத்தில் மாலைப்பொழுதுவருகிற அச்சமயத்திற்குள், சிந்துபதிஆகியசெயத்திரதனை- சிந்துதேசத்து அரசனான சயத்திரதனை, உரும் ஏறு எனஉடற்றா-பேரிடிபோல(க்கொடியதாக)ப் போர்செய்து, ஆவி கவரேன் ஏல்-(நான்)உயிர்பறிக்காதொழிவேனானால், வெம் தழலின் வீழ்வன் - (நான்)உயிர்பறிக்காதொழிற்குறித்து இறப்பேன்: இது-, வேதம் மொழி- வேதவாக்கியம்போலத் தவறுபடாத சபதவார்த்தை, என்றான் - என்று (அருச்சுனன் பிரதிஜ்ஞை) கூறினான்: (எ - று.)*

***180. இன்றபிமன்வாளமரிலின்னுயிரிழக்கக்***
***கொன்றவனைநாளையுயிர்கோறல்புரியேனேன்***
***மன்றிலொருசார்புறவழக்கறவுரைக்கும்***
***புன்றொழிலர்வீழ்நரகுபுக்குழலுவேனே.***

*(இ-ள்.) இன்று - இன்றைக்கு, அபிமன் - அபிமந்யு, வாள்அமரில் - கொடிய போரில், இன் உயிர் இழக்க - இனிமையான உயிரை ஒழியும்படி, கொன்றவனை- வதைத்தவனான சயத்திரதனை, நாளை- நாளைக்கு, உயிர் கோறல் புரியேன்ஏல்- (நான்) உயிரையழித்தல் செய்திடேனாயின்,- மன்றில்- நியாயத்தலத்தில், ஒருசாரபுஉற-(வாதிப்பிரதிவாதிகளுள்) ஒருவர் பக்கத்தில் பக்ஷபாதம் மிக, வழக்கு அற உரைக்கும்-நீதியில்லாமற் பேசுகிற, புன் தொழிலர்-இழிதொழிலையுடையவர்கள், வீழ்- விழுகிற,நரகு-நரகத்தில். புக்கு உழலுவேன் - (யான்) வீழ்ந்து வருந்துபவனாவேன்; (எ - று.)*

*சயத்திரதனை நாளைக்கொல்லாவிடின் மன்றோரஞ் சொன்ன பெரும்பாவத்தையான் அடைவேனென்பதாம். ஏ - தேற்றம். **பி-ம்:** இன்றமரில் வாளபிமன்.வழக்கினை.*
*(318)*

***181. மோதமரினென்மகன்முடித்தலைதுணித்த***
***பாதகனைநானெதிர்படப்பொருதிலேனேற்***
***றாதையுடனேமொழிதகாதனபிதற்றும்***
***பேதைமகனெய்துநெறிபெற்றுடையனாவேன்.***

*(இ-ள்.) மோது அமரின் - தாக்கிச்செய்யும்போரில், என் மகன் முடி தலை துணித்த-எனது புத்திரனது கீரிடந்தரித்த தலையைத் துண்டித்த, பாதகனை-பாவியான சயத்திரதனை, நான்-,எதிர்பட-(அவன் தொழிலுக்கு) எதிராக (பழிக்குப் பழிவாங்க), பொருதிலேன்ஏல்-போர்செய்து கொல்லேனாயின்,- தாதையுடனே மொழி தகாதன பிதற்றும் - தந்தையோடு (எதிர்த்துத்)*

*தகுதியில்லாத வார்த்தைகளை உளறுகிற, பேதை மகன் - மூடனான புத்திரன், எய்தும்- (மறுமையில்) அடையும், நெறி - நரகவழியை. பெற்றுடையன் ஆவேன் - பெற்றுள்ளவனாவேன்; (எ - று.)*

*போரில் எதிரியைக் கொல்லுதல் நீதியாயிருக்க, அதுசெய்த சைந்தவனை அருச்சுனன் 'பாதகன்' என்றது, வஞ்சனையாகக் கொன்றைமாலையை இடையிலிட்டுஅபிமனைத் துணையிலனாக்கியதனா லென்க. (319)*

*182.* ***சேயனையவென்மதலைபொன்றவமர்செய்தோன்***
***மாயமுனடர்த்துவயவாகைபுனையேனேற்***
***றாயர்பசிகண்டுநனிதன்பசிதணிக்கு***
***நாயனையபுல்லருறுநரகிலுறுவேனே.***

*(இ-ள்.) சேய் அனைய-முருகக்கடவுளை யொத்த, என் மதலை-எனது புத்திரன், பொன்ற-இறக்க, அமர் செய்தோன் - போர் செய்தவனான சயத்திரதன், மாய - அழியும்படி, முன் அடர்த்து - எதிரில் பொருது, வயம் வாகை புனையேன்ஏல் - வெற்றிக்குரிய வாகைப்பூமாலையைத் தரித்திடேனாயின்,-தாயார் பசி கண்டுஉம்- தாயார் பசித்திருத்தலைப்பார்த்தும், (அதனைத்தீர்த்திடாமல்), தன் பசி நனி தணிக்கும்- தனது பசியை நன்றாக (ப் போசனத்தால்) தீர்த்துக்கொள்ளுகிற, நாய் அனையபுல்லர் - (கடைப்பட்ட)நாயை யொத்த அற்பகுணமுடையோர், உறும்- (மறுமையிற்)சேரும், நரகில் - நரகத்தில், உறுவேன்-(யான்) சேருவேன்; (எ - று.) -ஏ- தேற்றம்.*

*மற்றொன்றையும் பாராது தன்பசியைத் தீர்த்துக் கொள்ளுதலிலேயே கருத்தைச்செலுத்துதற்கு, நாய் உவமை கூறப்பட்டது. முன்- விரைவில் என்றுமாம். உம் - இழிவுசிறப்பு. (320)*

*183.* ***வஞ்சனையிலென்மகனையெஞ்சமுன்மலைந்தோன்***
***நெஞ்சமெரியுண்ணவமர்நேர்பொருதிலேனேற்***
***றஞ்செனவடைந்தவர்தமக்கிடர்நினைக்கு***
***நஞ்சனையபாதகர்நடக்குநெறிசேர்வேன்.***

*(இ-ள்.) வஞ்சனையில், - என் மகனை - எனது புத்திரனை, எஞ்ச - அழியும்படி, முன் மலைந்தோன்- முன்பு பொருதவனான சயத்திரதனது, நெஞ்சம் - மனம், எரி உண்ண- எரிபடும் படி, அமர் - போர்க்களத்தில், நேர் பொருதிலேன் ஏல்-(அவனுக்கு) நேராக (யான்) போர் செயிதிடேனாயின்,- தஞ்சு என அடைந்தவர் தமக்கு - அடைக்கலமென்றுகூறிச் சரணமடைந்தவர்களுக்கு, இடர்நினைக்கும் - தீங்குசெய்ய எண்ணுகிற, நஞ்சு அனைய பாதகர் - விஷத்தையொத்த பாவமுடையவர், நடக்கும் - (மறுமையிற்) செல்லும், நெறி - நரகவழியில், சேர்வேன்- ; (எ - று.)*

*எரியுண்ண-மிகவருந்த, இறந்தொழிய, தகநஸம்ஸ்காரத்துக்கு இலக்காக, நேர் - எதிரில் என்றேனும், தகுதியாக என்றேனும் கொள்க. தஞ்சு-தஞ்ச மென்பதன் கடைக்குறை. தஞ்சம்-பற்றுக்கோடு, ரக்ஷகம். பாவத்துக்கு, நஞ்சு உவமை- தவறாது அழிக்குங்*

*கொடுமைக்கு, வஞ்சனை இல்-வஞ்சனையில்லாத, என்மகன் எனினுமாம். (321)*

*184.* [*] ***வினையிலென்மகன்றனுடல்வேறுசெய்வித்தோனைக்***
***குனிசிலையினாளையுயிர்கோறல்புரியேனேன்***
***மனைவியுயிர்வீயநன்மகன்மனைவிகையாற்***
***றினையளவுமோர்பொழுதுசீவித்தவனாவேன்.***

*(இ-ள்.) வினையில்- (தனது வஞ்சனைத்) தொழிலால், என் மகன்தன் உடல் வேறு செய்வித்தோனை - என்புத்திரனது உடம்பை உயிர் நீங்கச்செய்த சயத்திரதனை, குனி சிலையின் - வளைத்த (என்) வில்லைக்கொண்டு, நாளை- நாளைக்கு, உயிர் கோறல் புரியேன்ஏல்- உயிரை யழித்தல் செய்திடேனாயின்,- மனைவி உயிர் வீய - (தன்) மனையாள் இறக்க, நல் மகன் மனைவி கையால்- நல்ல(தன்) புத்திரனுக்கு மனையாளின் கையினால், தினை அளவுஉம் ஓர் பொழுது- மிகச்சிறியதொரு பொழுதாயினும், சீவித்தவன் ஆவேன் - பிழைத்தவனது பாபத்தையுடையவனாவேன்; (எ-று.)-என்று அருச்சுனன் வஞ்சினங்கூறி முடித்தானென்க.*

*அநாச்சிரமியாயிருக்கிற தோஷத்தையே இவ்வாறு குறித்ததென்க; மனிதன் எப்பொழுதும் பிரமசரியம் கிருகஸ்தம் வாநப்பிரஸ்தம் சந்யாசம் என்ற நான்கு ஆச்சிரமங்களுள் ஏதேனும் ஒன்றிலே இருத்தல் வேண்டு மென்றும், ஓராச்சிரமத்திலுஞ்சேராமல் வெறுமையாயிருத்தல் கூடா*

*தென்றும், ஒருவனுக்கு மனைவி இறந்துபோன மாத்திரத்தில் கிருகஸ்தாச்சிரமவுரிமை போய் விடுகிறதென்றும்.உடனே அவன் வேறுவிவாகஞ் செய்துகொண்டு கிருகஸ்தனாதல் அல்லதுவாநப்ரஸ்த சந்நியாசங்களின் ஒன்றைசேர்தல் என்னும் இரண்டில் யாதாயினும்ஒன்றைச் செய்யத்தக்கவனென்றும், அவ்வாறன்றி மணம் புரிந்து கொள்ளாமல்மருமகள் முதலியோர் உபசரிக்க இல்வாழ்க்கையிலே இருக்கலாகாதென்றும்.அங்ஙனமிருத்தல் பிராயச்சித்தஞ்செய்யத்தக்க பாதகமென்றும், அதுசெய்யாவிட்டால்நரகம் புகுவா னென்றும்* ***குமார விஜயம், கௌதமஸ்மிருதி முதலியஅறநூல்களால் அறியப்படுகிறது. ஈழநாட்டில் மருமகள் சமைக்க வுண்ணுதல்இழிவாகக் கருதப்படுகின்றதெனக் கேள்வி.***

*இனி, கையால், என்றதனை இடக்கரடக்கலாக் கொண்டு, 'மகன்மனைவி கையாற் சீவித்தவன்' என்பதற்கு - மருமகளுடன் கூடி வாழ்ந்தவ னென்று கருத்துக்கொள்ளுதலும் ஒருவாறு பொருந்தும். மருமகளோடு கூடுதல், குரு பத்நீகமநத்துக்குச் சமமான பெரும்பாவமென்று மநு, நாரதர், வசிஷ்டர், வியாக்கிரர், யாஜ்ஞவல்க்யர் என்னும் இவர்கள் தருமசாஸ்திரங்களாலும், தாயோடு கூடுதலுக்குச் சமமான அதிபாதக மென்று விஷ்ணுஸ்மிருதியாலும் தெரிகிறது.* ***பி- ம்*** *:*
*மகன்றனுயிர்.தின்றவனுமாவேன். (322)*

---

*[*] இப்பாட்டு, யாம் கண்ட ஏட்டுப்பிரதிகளில் இல்லை."மனைவியயலான் மருவல்கண்டுமவள் கையால்" என்று மூன்றாமடிக்குப் பாடமோதுவாருமுளர்.*

### *185. - அருச்சுனன் வஞ்சினமுரைத்ததுகேட்ட தருமன் கிருஷ்ணனோடு பேசலுறுதல்.*

***இன்னணமி ருந்தவர்கள் யாவருந டுங்க***
***மன்னவையி லன்றுபல வஞ்சினமு ரைக்கச்***
***சொன்னவுரை யானகனல் சுட்டசெவி யோடும்***
***பின்னையறன் மைந்தனெடு மாலினொடு பேசும்.***

*(இ-ள்.) இன்னணம் - இவ்வாறு, மன் அவையில்-இராசசபையிலே, இருந்தவர்கள் யாவர்உம் நடுங்க - (அங்கு) உள்ளவர்கள் எல்லோரும் (கேட்டு) மிகஅஞ்சும்படி-(அருச்சுனன்), அன்று - அப்பொழுது, பல வஞ்சினம் உரைக்க - அநேக சபதங்களைக்கூற,-சொன்ன-(அவ்வருச்சுனன்) கூறின, உரை ஆன- சபதவார்த்தைகளாகிய, கனல்-அக்கனி, சுட்ட-(சென்று) வருத்தின, செவியோடு உம்- காதுகளுடனே (அச்சபதங்களைக் கேட்டமாத்திரத்தில் மிக வருத்தியவனாய்) பின்னை - பின்பு, அறன் மைந்தன்- தருமபுத்திரன், நெடு மாலினொடு - பெருமைக்குணமுள்ள கண்ணனுடனே, பேசும் - (சிலவார்த்தை) கூறுவான். (எ - று.)-அவற்றை மேல் காண்க. நெடுமால் - முன்பு திரிவிக்கிரமனாய் நீண்ட மூர்த்தியுமாம்; விசுவரூபமெடுத்தருளியவனுமாம். (323)*

*வேறு.*

### *186.- இதுவும், அடுத்த - கவியும் தருமன் கண்ணனை நோக்கிக் கூறுவன.*

***வடிசுடர் வாளியான் மொழிந்த வஞ்சினப்***
***படிசயத் திரதனைப் படுத்தல் கூடுமோ***
***பொடியன லிவன்புகிற் புகுந்து நால்வரு***
***மிடிபொரு மரவென விறத்த றிண்ணமே.***

*மூன்றுகவிகள் - ஒருதொடர்.*

*(இ - ள்.)* வடி சுடர் வாளியான்-கூரிய ஒளியையுடைய அம்புகளையுடைய அருச்சுனன், மொழிந்த வஞ்சினம் படி-சொன்ன சபதவார்த்தையின்படி, சயத்திரதனை படுத்தல் கூடும்ஓ - சயத்திரதனைக் கொல்லுதல் முடியுமோ? (ஒருகால்அங்ஙனம் முடியாமல்), இவன் - இவ்வருச்சுனன், பொடி அனல் புகின் - சாம்பல்செய்யும்படியான அக்கினியிற் பிரவேசித்தால், நால்வர்உம் - (மற்றைநாங்கள்)நாலுபேரும், புகுந்து - (அவனுடனே தீக்) குதித்து, இடிபொரும் அரவு என இறத்தல்-இடியினால் அழியும் பாம்புபோல மரிப்பது, திண்ணம்-:ஏ - தேற்றம். பி-ம்: சுடர்வேலினான்.

இதனால், பாண்டவர் ஐவரும் உடல்வேறு உயிரொன்று என்னும்படி அந்நியோந்நியமாயிருப்பவரென்பது விளங்கும். நால்வரும்- தன்மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி; 'நால்வேமும்' என்றிருப்பின், வழாநிலையாம்.

இதுமுதல் முப்பத்து மூன்று கவிகள்-பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும், விளச்சீர்களுமாகிய **கலிவிருத்தங்கள்** . *(324)*

***187. முப்பதுகடிகையின் முரண் கொண்மொய்ம்பனைத்***
***தப்பறக்கொல்லுவேனென்றுசாற்றுமால்***
***அப்பெருஞ்சேனையிலவனையுள்ளுறத்***
***துப்புறவணிந்திடிற்றுன்னலாகுமோ.***

*(இ-ள்.)* 'முரண் கொள்-மாறுபாடுகொண்ட, மொய்ம்பனை-வலிமையையுடைய சயத்திரதனை, முப்பது கடிகையின்-(நாளைப்பகல்) முப்பது நாழிகைக்குள்ளே, தப்பு அற-தவறாமல், கொல்லுவேன்,- என்று-, சாற்றும் -(அருச்சுனன் இப்பொழுது சபதம்கூறுகிறான்; அ பெரு சேனையில்-அந்தப் பெரிய கௌரவசேனையில், அவனை - அச்சயத்திரதனை, உள் உற - உள்ளிடத்திலே பொருந்த, துப்புஉற - வலிமைமிக, அணிந்திடில்-(எதிரில்) அணி வகுப்பில் நிறுத்தியிட்டால், துன்னல் ஆகும்ஓ-(அவனைக்) கிட்டுதல் முடியுமோ? (எ - று.)-கிட்டுதலே அரிதாயின், கொன்று சபதத்தை நிறைவேற்றுவது எவ்வாறு? என்றபடி - பி-ம்: கடிகையின் முரண்டு

கடிகை-கடிகா என்னும் வடசொல் திரிந்தது; இருபத்து நான்கு நிமிஷங் கொண்ட பொழுது. ஆல் - ஈற்றசை 'மால்' என எடுத்துத் திருமாலே என விளியாகக் கொள்ளினுமாம். துப்பு-துணையும், காவலுமாம். *(325)*

### *188. - ஸ்ரீகிருஷ்ணன் தருமனுக்கு அபயமளித்தல்.*

***எஞ்சின்மற்றென்செய்வேனென்னுமேல்வையின்***
***அஞ்சலென்றறன்மகனவலமாற்றினான்***
***கஞ்சாவான்பொய்கையிற்கராவின்வாய்ப்படு***
***குஞ்சரந்தனக்கருள்கொண்டன்மேனியான்.***

*(இ-ள்.)* எஞ்சின் - (அருச்சுனன்) அழிவதானால், மற்று என்செய்வேன் - (யான்) வேறு யாது செய்வேன்? என்னும் - என்று சொன்ன, ஏல்வையின் - சமயத்தில்,- அஞ்சல் என்று- பயப்படாதேயென்று சொல்லி, அறன் மகன் அவலம்ஆற்றினான்-தருமபுத்திரனது கவலையைத் தணியச்செய்தான்; (யாவனெனில்),-வான்கஞ்சம் பொய்கையில்-சிறந்த தாமரைத்தடாகத்திலே, கராவின்வாய் படு-முதலையின்வாயில் அகப்பட்ட, குஞ்சரந்தனக்கு-யானைக்கு, அருள் - கருணைசெய்த,கொண்டல் மேனியான் - காளமேகம்போலுந் திருமேனியையுடைய கண்ணபிரான்;(எ - று.)

**குஞ்சரந்தனக்கருள்** கொண்டல்மேனியான் அவலமாற்றினான் என்ற தொடரில், அடியார்க்கு வருந்துயரை ஆற்றுவிக்குந்தன்மையன் திருமால் என்பது பெறப்படும்: இது **கருத்துடையடைகொளியணி.** எஞ்சின்-(சபதந்) தப்பினால் என்றும். (அவன்) ஒழிந்தால் என்றும் பொருள்கள்படும். மற்று-யான் இறத்தலே யொழிய என்றபடி. அஞ்சலென்னுதல் - அபயப்பிரதானம்.

*இரண்டாம் அடி* ***முற்று***
***மோனை*** *யாதலால். மாற்றினானென்று பிரித்தல் சிறவாது.* *(326)*

***189. - ஸ்ரீக்ருஷ்ணன் தருமனை நோக்கி யாவர்காப்பினும்சயத்திரதனை நாளைத் தவறாமல் அருச்சுனன் கொல்வா னெனல்.***

***இந்திரன் காக்கினுமீசன்காக்கினுஞ்***
***சிந்துவின்றலைவளைத்தேவர்காக்கினுங்***

***கந்தனிற்சிறந்தநின்கனிட்டனாளையே***
***மைந்துறப்பொருதவன்மகுடங்கொள்ளுமே.***

*இரண்டுகவிகள் - ஒருதொடர்.*

*(இ-ள்.) சிந்துவின் தலைவனை - சைந்தவனை, இந்திரன் காக்கின்உம் - தேவேந்திரன் (வந்து) பாதுகாப்பனானாலும், ஈசன் காக்கின்உம்-சிவபிரான் (வந்து) பாதுகாப்பனானாலும், தேவர் காக்கின்உம்-, கந்தனின் சிறந்த நின் கணிட்டன்- முருகக்கடவுளினும் மேம்பட்ட உனது தம்பியான அருச்சுனன். நாளைஏ- நாளைத்தினத்திலே, மைந்து உற பொருது-வலிமை மிகப் போர் செய்து, அவன் மகுடம் கொள்ளும் - அவனது தலையைத் துணித்திடுவான்; (எ - று.)*

*தந்தையும் தேவராசனு மாதலால் இந்திரனையும், அழித்தற்றொழிற் கடவு ளாதலால்உருத்திரனையும் இங்குத் தலைமையாக எடுத்துக்கூறினார். காக்கினும் என்றஉம்மையால், அவர்கள் காவாரென்பதும் விளங்கும். கநிஷ்டன்-வடசொல்; இளையோன் - நாளையே, ஏ - பிரிநிலை. மகுடமென்ற கிரிடத்தின் பெயர் - தானியாகுபெயராய், அதற்கு ஆதாரமான தலையைக் குறித்தது. தேவர் என்ற வடசொல்-விண்ணுலகத்திலுள்ளவரென்றும். ஒளிவிளங்குபவ ரென்றும் பொருள்படும். ஈற்று ஏ-தேற்றம்.* ***பி-ம்:*** *இமயங்*

***190.-ஸ்ரீக்ருஷ்ணன் சூரியோதயத்துக்குமுன் கயிலைப்பொருப்பனைக் கண்டு வருவோமெனல்.***

***வெயிலெழுவதன்முனிவ்விசயன்றன்னொடுங்***
***கயிலையம்பொருப்பனைக்கண்டுமீளவுந்***
***துயிலுணர்த்திடும்படிதோன்றுவோமெனா***
***வயிலணியாழியானவனொடேகினான்.***

*(இ-ள்.) வெயில் எழுவதன் முன் - சூரியன் உதிப்பதன்முன், இவிசயன்தன்னொடுஉம்- இந்தஅருச்சுனனுடனே (சென்று), கயிலை அம்பொருப்பனை - கைலாசகிரியையுடைய சிவபிரானை, கண்டு - தரிசித்து, மீளவும்-பின்பு, துயில் உணர்த்திடும்படி- (உன்னைத்) தூக்கத்தினின்று எழுப்பும்படி பொழுதுவிடிவதற்குள்), தோன்றுவோம்-(இங்கு) வந்திடுவோம், எனா - என்று (தருமனை நோக்கிச்) சொல்லி, அயில் அணி ஆழியான்-கூர்மையையுடைய அழகிய சக்கராயுதத்தையுடைய கண்ணபிரான், அவனொடு-அருச்சுனனுடனே, ஏகினான்-(கயிலைக்குப் புறப்பட்டுச்) சென்றான்: (எ - று.)*

*இங்கே '* ***ஆழியான்*** *-ஏகினான்' என்றதனால், அச்சயத்திரதனைத்தான் நேரிலேஅழிக்கக் கண்ணன் வல்லமையில்லாதவனல்லனென்றும், இந்தத் திருவாழியேஅவனை அழிக்கும்பொருட்டுச் சூரியனைமறைத்தற்கு நாளை உதவுவ தென்றும்.இங்ஙனம் கைலாச யாத்திரை சென்றது மனிதனாக அவதரித்தற்கு உரியதொருதிருவிளையாட்டே யென்றும் குறிப்பிக்கப்படும். வெயிலெழுவதன்முன் மீளவும்தோன்றுவோம் என இரண்டடித்துங் கூட்டுக. 'வெயிலெழுவது' என்பதனை, காரியம்காரணத்தின்மேல்நின்ற உபசார வழக் கொன்னலாம். திருமாலின் சுதரிசநமென்றசக்கரம் ஆயிரம்*

*அரங்களை யுடைய தென்பது தோன்ற 'அயிலாழி' என்றும், 'பகவானுக்குச் சக்கரம் முதலியன பகைவர்பார்வைக்கு அச்சஞ்செய்து ஆயுதகோடியிலும், அன்பர்கண்ணுக்கு அழகியனவாய்த் தோன்றி ஆபரணகோடியிலும், அமையும்' என்ற சாஸ்திரார்த்தம் விளங்க, ' அணியாழி' என்றும் கூறப்பட்டது. (328)*

**191.-வழியிடையில் அருச்சுனனுக்குநேர்ந்த அயர்ச்சியை ஸ்ரீக்ருஷ்ணன் ஆற்றுதல்.**

***ஏகியநெறியிடையிளைத்துவாசவற்***
***காசியகுமரன்மெய்யயர்ந்துவீழ்தலும்***
***போகியினறிதுயில்புரியுநான்மறை***
***யோகியங்கையினணைத்துயக்கமாற்றியே.***

*இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.*

*(இ-ள்.) ஏகிய நெறியிடை - (கிருஷ்ணஅருச்சுனர்) சென்ற வழி நடுவிலே, வாசவற்கு ஆகிய குமரன் - இந்திரனுக்குப் பிறந்த குமாரனான அருச்சுனன், இளைத்து - மெலிந்து மெய் அயர்ந்து- உடம்பு சோர்ந்து, வீழ்தலும்-(கீழே) விழுந்தவளவிலே, -போகியின் அறிதுயில் புரியும் நால்மறை யோகி - ஆதிசேஷனிடத்து யோகநித்திரைசெய்கிற நான்குவேதங்களாலும் புகழப்படுகிற யோகம்வல்ல கடவுளான கண்ணன், அம் கையின் அணைத்து - (தனது) அழகிய திருக்கைகளால் (அருச்சனனைத்) தழுவி, உயக்கம் ஆற்றி-(அவனது) தளர்ச்சியைத் தணியச்செய்து,- (எ-று.)-'ஆற்றி' என்பது, மேல் 194 ஆம் பாட்டிலுள்ள 'உரைத்தலும்' என்பதனோடு தொடரும்.*

*போகம் என்றால், பாம்பினுடல்; அதனையுடையது போகீ: இது -பாம்புக்கு வடமொழியிற் காரணப்பெயர். அறிதுயில்-எல்லாவற்றையும் அறியாநின்று செய்யுந் தூக்கம்; விழிதுயில், துயிலாத் துயில், பொய்த்துயில் எனவும் படும். யோகம்-இமயம் நியமம் முதலிய எட்டு அங்கங்களோடு செய்யும் ஒருவகைத்தவவொழுக்கம்: அதனையுடையவன், யோகீ: இது-திருமாலின் ஆயிரத்தொட்டுத் திரு நாமங்களுள் ஒன்றாம். கடவுள் சிலசமயங்களில் தான் யோகு செய்து நின்றதனாலும், பிறர்க்கு யோகநிலையை உபதேசித்திருத்தலாலும், முனிவர் முதலியோரது யோகத்துக்கு விஷய மாகுதலாலும், யோகி யென்று பெயர்: பகவத்கீதையில் "யத்ர யோககேச்வரக்ருஷ்ண," என்றவிடத்தில், கண்ணபிரானை யோகங்களுக்குத் தலைவ னென்றதுங் காண்க. கோயம் - லோகரக்ஷணசிந்தையுமாம். உயக்கம் - தொழிற்பெயர். மாற்றி என்றும் பதம் பிரிக்கலாம் (329)*

**192.- இதுவும், மேற்கவியும் - கண்ணன் அருச்சுனனைப் பசியும் விடாயும் நீங்க அருந்துமாறு கூறுதல்.**

***உண்டிலையடிசிலுமுண்ணுந்தீம்புனல்***
***கொண்டிலைபசிக்கனல்கொளுந்திவீழ்ந்தனை***
***மண்டிலைவேலினாய்மகவினன்பினாற்***
***கண்டிலையுலகியல்காட்டக்காட்டவே.***

*(இ-ள்.) மண்டு - (வலிமை) மிக்க, இலை வேலினாய்-அரசிலைவடிவமான வேலாயுதத்தை யுடையவனே! அடிசில்உம்- சோற்றையும், உண்டிலை-புசித்தாயில்லை; உண்ணும்-குடிக்கதக்க, தீம்புனல் - இனிய நீரை, கொண்டிலை- உட்கொண்டாயுமில்லை; பசி கனல் கொளுந்தி - பசியாகிய தீப்பற்றி, வீழ்ந்தனை - (கீழ்) விழுந்தாய்; உலகு இயல்-(யாக்கைநிலையாமையாகிய) உலகத்தின் இயல்பை, காட்ட காட்ட-(முனிவர்கள்) நன்றாக எடுத்துக் காண்பிக்கவும், மகவின் அன்பினால்- புத்திரவாற்சல்லியத்தால், கண்டிலை-(அதனைநீ) அறிந்தாயில்லை; (எ - று.)*

*'சோற்றாலெடுத்தசுவர்' என்னும்படி உடம்பிற்குஉறுதிதருகிற உணவை முற்கூறினான். 'உண்ணும் புனல்' என்ற இடத்து 'உண்ணல்' என்பது-பொதுவினை. பசி என்பது ஜாடராக்நியெனப்படுகிற வயிற்றினுள் உள்ளதொரு தீயின் செயலே யாதலாலும், நெருப்புப் போலப் பசி சேர்ந்துவிடத்தை மிக வருத்தலாலும், 'பசிக்கனல்'எனப்பட்டது. காணுதல்-அறிதல், காட்டுதல்-அறிவித்தல். (330)*

***193. மாங்கனிவாழையின்கனிவருக்கையின்***
***றீங்கனிகன்னலிற்செய்யநீருள***
***வேங்கனற்பசியுநின்விடாயுமாறவே***
***யீங்கினிதருந்துதியேந்தலென்னவே.***

*(இ - ள்.) மா கனி-மாம்பழங்களும், வாழையின் கனி - வாழைப்பழங்களும், தீம் வருக்கையின் கனி- இனிய பலாப்பழங்களும், கன்னலின் செய்ய நீர்- கருப்பஞ்சாற்றினும் செம்மையான (மிகஇனிய) நீரும், உள-(இங்கு) உள்ளன; (அவற்றை), ஏந்தல்-பெருமையிற் சிறந்தவனே! நின்-உனது, வேம் கனல் பசிஉம்- எரிகிற நெருப்புப்போன்ற பசியும், விடாய்உம்-இளைப்பும், ஆற- தணிய, ஈங்கு- இப்பொழுது (இவ்விடத்தில்), இனிது அருந்துதி- இனிமையாக உண்பாய், என்ன- என்ற,- (எ- று.)- "இவையுரைத்தலும்" என அடுத்த கவியோடு தொடரும்.*

*மா+கனி=மாங்கனி: மரப்பெயர் முன்னர்இனமெல்லெழுத்து வரப்பெற்றது; (நன்- உயிர்-16.) மா, வாழை. வருக்கை என்பன-முக்கனியெனச் சிறப்பித்துக் கூறப்படும். கன்னலென்னுங் கரும்பின் பெயர்-அதன் இரசத்துக்கு ஆகுபெயராம். ஏந்தல்- உயர்ந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்; அல்- கருத்தாப்பொருள்விகுதி; இங்கே, அண்மைவிளி; ஆதலின், இயல்பு.* ***பி-ம்:*** *கன்னலிற் செழும்புனலுள, கன்னலிற்செய்தமாவுள. நீர்விடாயும். (331)*

***194.- அருச்சுனன் இன்னுஞ் சிவபூசை செய்யவில்லையே யெனல்.***

***சரிந்தவர்சரிவறத்தாங்குநாயகன்***
***பரிந்திவையுரைத்தலும்பாவைபங்கன்மேற்***
***புரிந்திலனின்னமும்பூசையென்றனன்***
***வரிந்தவெஞ்சிலைக்குமண்மதித்தவீரனே.***

*(இ-ள்.) சரிந்தவர் - தளர்ச்சியடைந்தவர்களது, சரிவு-தளர்ச்சி, அற- நீங்க, தாங்கும்-(அவர்களைப்) பாதுகாத்தருளுகிற,*

*நாயகன் தலைவனான கண்ணன், பரிந்து, அன்புகொண்டு, இவை-இவ்வார்த்தைகளை உரைத்தலும் - சொன்னவளவிலே,-வரிந்த வெம் சிலைக்கு மண் மதித்த வீரன் - கட்டமைந்த கொடிய வில்லின் தொழிலில் (மிகச்சிறந்தவனென்று) நிலவுலகத்தாரால் நன்குமதிக்கப்பட்டவீரனான அருச்சுனன், 'இன்னம்உம்-இன்றைத்தினம் இது வரையிலும், பாவைபங்கன்மேல் பூசை புரிந்திலன்- உமாதேவியைவலபாகத்திலுடைய சிவபிரான்மேல் பூசனைசெய்தேனில்லை,' என்றனன் - என்றுகூறினான்; (எ - று.)*

*இன்னும் யான் சிவபூசைசெய்யாமையால், உண்ணுதல் தகாதென்பதாம்: இதனால், நித்தியபூசைசெய்தாலன்றி உண்ணுதல் செய்யாத அருச்சுனனது சிவபக்திமிகுதி விளங்கும். இங்கே இளைத்து மெய்சோர்ந்து வீழ்ந்த அருச்சுனனைக் கண்ணன் கைகளால் அணைத்து எடுத்ததற்கு ஏற்ப, 'சரிந்தவர் சரிவறத் தாங்குநாயகன்' என்றார்: முதலடி* ***-கருத்துடையடைகொளியணி.*** *பிறவித்துயரத்தில் வீழ்ந்திட்டாரைக்கரையேற்றுபவன் என்றதும் இதிற் பெறப்படும். சிலைக்கு- உருபுமயக்கம். மண்-ஆகுபெயர்.* ***பி- ம்:*** *மேன்மதிக்கும். (332)*

***195.- இதுவும் மேற்கவியும் -குளகம்: 'எம்மைப்பூசைபுரி: இருவரும்ஒருவரேயென்பதைக் காண்பாய்' எனல்.***

***மருவருகானகமலரினாலெமைப்***
***பொருவருபூசனைபுரிதியையநீ***
***யிருவருமொருவரேயென்பதின்றுபோ***
***யருவரையவனடியடைந்துகாண்டியே.***

*(இ-ள்.) 'ஐய-! நீ-, மரு வரு- பரிமளம் மிக்க, கான் அகம் மலரினால்- காட்டினிடத்திலுள்ள பூக்களால், எமை-எம்மை பொருவு அரு பூசனை புரிதி- ஒப்பில்லாத பூசைசெய்வாய்: (செய்தபின்பு), அரு வரை போய்-(செல்லுதற்கு) அரிய கைலாசத்துக்குச் சென்று, அவன் அடி அடைந்து- அச்சிவபிரானது திருவடிகளைச் சேர்ந்து, இருவர்உம் ஒருவர்ஏ என்பது-(அப்பரமசிவனும் யானும் ஆகிய) இரண்டுமூர்த்தியும் ஒருமூர்த்தியே யென்பதை, இன்று- இன்றைக்கு, காண்டி- பிரதியக்ஷமாகப் பார்ப்பாய்; (எ - று.)- "என்ற அரி யியம்பலும்" என எடுத்த கவியோடு தொடரும்.*

இதனால், ***'அரியும் அரனும் ஒன்று'*** என்ற ***அபேதசித்தாந்தம் விளக்கப் பட்டது.*** *சிவபிரானுக்கு அந்தராத்மாவாக வுள்ளவனும் ஸ்ரீமந்நாரயணனே என்ற தன்மை குறிப்பிக்கப்பட்ட தென உரைப்பர்: "சிவனா யயனானாய்", " முனியே நான்முகனே முக்கண்ணப்பா", "அவாவறச்சூழ் அரியையயனையரனையலற்றி" என்ற ஆழ்வார் அருளிச்செயலுங் காண்க. மருவரு கானகம்-பொருந்திய இக்காட்டில். (இப்பொழுது) எம்மைப் பூசைசெய் எனினுமாம். மருவு அரு எனப் பிரித்தால், பெறுதற்கரிய என்று பொருளாம். பி- ம்: அரனடி. (333)*

***196.- அருச்சுனன் சிவனாக ஸ்ரீகிருஷ்ணனைப் பூசித்தல்.***

***என்றரியியம்பலுமிருமருங்கினு***
***நின்றநன்மலர்கொடுநிகரில்கேள்வியான்.***

***மன்றலந்துழாய்மாயன்மேன்மன***
***மொன்றியேசிவாகமவுரையிற்சாத்தினான்***

*(இ-ள்.) என்ற -, அரி- கண்ணபிரான், இயம்பலும் - கூறிய வளவிலே,- நிகர்இல் கேள்வியான் - ஒப்பிலாத நூற்கேள்வியையுடைய அருச்சுனன்,- இரு மருங்கின்உம் நின்ற - இரண்டுபக்கங்களிலும் பொருந்தின, நல்மலர்கொடு-சிறந்த பூக்களைக் கொண்டு, மன்றல் அம் துழாய் முடி மாயன் மேல் மனம் ஒன்றிஏ - பரிமளத்தையுடைய அழகிய திருத்துழாய்மாலையைச் சூடிய திருமுடியையுடைய அக்கண்ணபிரான்மேல் (தன்) மனம் பதியவைத்துக்கொண்டு, சிவ ஆகம உரையின்- சைவாகமங்களிற் கூறப்பட்ட சொற்களின் படியே, சாத்தினான் - இட்டு அருச்சித்தான்; (எ-று.)*

*வேதம் ஆகமம் என்ற இரண்டனுள், வேதம் பல தேவர்களுக்குப் பொதுவும் ஆகமம் சிவபிரானுக்குச் சிறப்பும் ஆதலாலும், ஆகமம் சிவபிரானால் அருளிச்செய்யப்பட்டதாகிச் சிவனைத் தியானித்தல் பூசித்தல் முதலியவற்றின் முறைமைகளை வெளியிடுவதாதலாலும், 'சிவாகமம்' எனப்பட்டது. இவ்வாகமம், இருபத்தெட்டாம். நன்மலர் - வாடாதமலர், கொன்றைமுதலிய சிவனுக்குரிய மலர். முன்னர்ப் பாசுபதம்பெறத் தவஞ்செய்யும்பொருட்டுச் செல்லுமுன் ஸ்ரீவேதவியாசரிடம் சிவபிரானுக்குரிய மந்திரத்தை அருச்சுனன் உபதேசம் பெற்றமை தோன்ற, 'நிகரில் கேள்வியான்' என்றார். மாயன்மேல் மனம்ஒன்றியே - கண்ணனைப் பரமசிவனாகப் பாவித்தே யென்றவாறு.* ***பி - ம்*** *: மலர்கொய்து. ஒன்றுபட்டாகமவுரையின். (334)*

***197-.பூசைசெய்தபின் அருச்சுனன் கனியுண்டு தேறுதல்.***

***சாத்தினன்றொழுதுபின்றலைவன்றாண்மலர்த்***
***தீர்த்தமுங்கனிகளுந்தெவிட்டவுண்டுதன்***
***காத்திரந்தேறினன்கருத்துந்தேறினன்***
***பார்த்தன்முற்றவப்பயன்பலித்தவாறரோ.***

*(இ-ள்.) (அருச்சுனன்) , சாத்தினன் - (கண்ணன்மேல் மலர்களை அணிந்து, தொழுது - நமஸ்கரித்து, பின் - பின்பு, தலைவன் - (எல்லாவுயிர்களுக்கும்) நாயகனான அக்கண்ணனது, தாள் மலர்- திருவடித்தாமலைமலர்களை விளக்கின, தீர்த்தம்உம் - தீர்த்தத்தையும், கனிகள்உம் - பழங்களையும் ,தெவிட்ட - அதிக திருப்தியுண்டாம்படி, உண்டு உட்கொண்டு, தன் காத்திரம் தேறினன் - தனது உடம்புதெளிந்து, கருத்துஉம் தேறினன் - மனமுந்தெளிந்தான்; பார்த்தன்- அருச்சுனனது,முன் தவம் பயன்- முன்புசெய்த தவத்தின் பலன், பலித்த ஆறு- சித்தித்த விதம்,(இதுவாம்); (எ - று.)- அரோ, ஈற்றசை ; வியப்புவிளக்கும் இடைச்சொல்லாகக்கொள்ளுதலும் பொருந்தும்.*

*அரியையேனும் அரனையேனும் ஒருகடவுளைத் தனியேபூசித்தல் உலகத்தில் உளதாயினும், இப்படிப்பட்ட அபோதமான பாவனையோடு பூசனைசெய்தல் அரிதாதலின், இதனை வியந்து கூறினார். தாள்மலர்தீர்த்தம் - ஸ்ரீபாததீர்த்தம். (335)*

### *198.-ஸ்ரீக்ருஷ்ணன் கருடனைநினைக்க அவன் இவரிருவரையும் ஏந்திச் செல்லுதல்.*

***போயருநெறியிடைப்புள்ளின்வேந்தனைத்***
***தூயவனினைத்தலுமவனுந்தோன்றினான்***
***மாயனைத்தோளினும்வலாரிமைந்தனைச்***
***சேயதன்கரத்தினுஞ்சேரவேந்தினான்.***

*(இ - ள்) (அதன்பின்பு), போய் - (அப்பால்) சென்று, அருநெறியிடை - (செல்லுதற்கு) அரிய வழிநடுவிலே, தூயவன்- பரிசுத்தகுணமுள்ள கண்ணன், புள்ளின் வேந்தனை - பறவைகளுக்கு அரசனான கருடனை, நினைத்தலும் - (திருவுள்ளத்திற்) கருதியமாத்திரத்தில், அவன்உம் - அந்தப்பக்ஷிராசனும், தோன்றினான் - (அங்கு) வந்து, மாயனை- கண்ணனை, தோளின்உம் - (தனது) தோள்களிலும், வலாரி மைந்தனை- இந்திரகுமாரனான அருச்சுனனை, சேய தன் கரத்தின்உம் - சிவந்த தனது கைகளிலும், சேர- ஒருசேர, ஏந்தினான் - வகித்துக்கொண்டான்; (எ-று.) - சேய - குறிப்பெயரெச்சம். **பி-ம்;** சேயெனக். (336)*

### *199.- க்ருஷ்ணார்ச்சுனருடன் கருடன் கயிலையைக் குறுகுதல்.*

***நீலமுற்றியமலையிரண்டொடொன்றுபொற்***
***சீலமுற்றியமலைசெல்வதென்னவே***
***யாலமுற்றியகளத்தையன்வெள்ளியங்***
***கோலமுற்றியமலைகுறுகினானரோ.***

*(இ-ள்.) சீலம் முற்றிய - அழகு மிக்க, பொன் மலை ஒன்று - பொன்மயமானதொரு மலை, நீலம் முற்றிய - நீலநிறம் மிக்க, மலை இரண்டொடு - இரண்டுமலைகளைச் சுமந்துகொண்டு, செல்வது என்ன- பறந்துபோவது போல, (கருடாழ்வான் கிருஷ்ணார்ச்சுனரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு), ஆலம் முற்றியகளத்து ஐயன்- விஷம்மிக்க ஸ்ரீகண்டத்தையுடைய தலைவனான சிவபிரானது, கோலம் முற்றிய - அலங்காரம் மிக்க, வெள்ளி - வெள்ளிமயமான, அம் - அழகிய,மலை - கைலாசபருவத்தை, குறுகினான் - சமீபித்தான்.*

*முன்னிரண்டடி - **இல்பொருளுவமை.** இரண்டுநீலமலைகள் - நீலநிறமுள்ள கண்ணனுக்கும் அருச்சுனனுக்கும், பொன்மலை - பொன்னிறமள்ள கருடனுக்கும் ஒப்பு எனக் காண்க. (337)*

### *200.- இரண்டகவிகள்- கருடன் வேகத்தை விளக்கும்.*

***மாற்றினால்விளங்குபொன்வடிவன்வெஞ்சிறைக்***
***காற்றினால்விசைபெறக்கழன்றுபோயின***
***வாற்றினாலறம்புரியம்மையோடொரு***
***கூற்றினான்வரைபடிகொண்டலேழுமே.***

*(இ-ள்.) ஆற்றினால் - நல்லநெறியினால், அறம் புரி- தருமங்களைச்செய்த, அம்மையோடு - தலைவியான உமாதேவியோடு, ஒரு கூற்றினான் - ஒருபாகத்தையுடைய பரமசிவனது, வரை - கைலாச மலையிலே, படி - படிந்துள்ள, கொண்டல் ஏழ்உம் - ஏழு மேகங்*

*களும்,- மாற்றினால் விளங்கு பொன் வடிவன் - உயர்ந்தமாற்றுடன் பிரகாசிக்கிற பொன் போன்ற வடிவத்தையுடைய கருடனது, வெம்சிறை - கொடிய இறகுகளின், காற்றினால்-, விசை பெற - வேகமாக, கழன்று போயின- விலகிச்சென்றன; (எ-று.)*

*கருடனுக்கு 'ஸ்வர்ணவர்ணன்' என்று ஒரு பெயர். சிவபிரான் இரு நாழிநெல்கொடுக்க அதுகொண்டு உமாதேவி அப்பிரானது விருப்பத்தின்படி முப்பத்திரண்டு தருமங்களையும் நடத்தின ளென்பது, கதை. இனி, ஆற்றினால் அறம்புரி - சன்மார்க்கத்தில் நின்று (பரம சிவனைத் திருமணஞ் செய்யும் பொருட்டுத்)தவமியற்றிய என்றுங்கொள்ளலாம், திருக்குறளில் 'அறன் வலியுறுத்தல்' என்றஅதிகாரத்தில், அறம் என்பது - இல்லறம், தவம் என்னும் இரண்டுமாத லுணர்க.அம்மை - அம்பா என்னும் வடசொல்லின் திரிபு. அம்மையோடு ஒருகூற்றினான் - அம்பிகைக்குத் தன்வடிவத்தில் இடப்பக்கத்தைக் கொடுத்துத் தான் வலப்பக்கத்தைமாத்திரங் கொண்டு அர்த்தநாரீசுவரனாகியவன், கொண்டல் ஏழ் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. இப்பாட்டு - கருடனது வேகத்தை விளக்கியது. (338)*

***201. பறிந்தனகொடுமுடிபலவும்வேரொடு***
***மறிந்தனசாரலின்மரங்கள்யாவையு***
***மறிந்தனதமயின்முதலானபுள்ளினஞ்***
***செறிந்தனபணிந்தனசெய்யதாள்களே.***

*(இ-ள்.) (கருடனுடைய சிறைக்காற்றின் விசையால்), கொடு முடி பலஉம் - வளைந்துள்ள மலைச்சிகரங்கள்பலவும், வேரொடு பறிந்தன - அடியோடு பறியுண்டன: சாரலின் மலைச்சாரலிலுள்ள, மரங்கள் யாவைஉம் - எல்லா மரங்களும், மறிந்தன - தலைசாய்ந்தன; மயில் முதல் ஆன புள்இனம் - மயில் முதலிய பறவைக்கூட்டங்கள், அறிந்தன - (கருடன்வருவதை) அறிந்தனவாய், செறிந்தன - திரண்டனவாகி, செய்ய தாள்கள் - அந்தக் (கருடனுடைய) செவ்வியபாதங்களை, பணிந்தன - வணங்கின; (எ-று.) **பி - ம்** : மரங்களாயின.*

### *202.- கருடன் சிறகுஅசைவினால்தோன்றும் ஓசையின் தன்மை.*

***பாண்டவசகாயனூர்பறவையின்குலத்***
***தாண்டகையிருசிறகசையுமோதையாற்***

---

*[*] இந்தப்பாடலும் அடுத்த பாடலுமாகிய இரண்டுபாடல்கள், யாம்கண்ட ஏட்டுப்பிரதிகளிலெல்லாம் உள்ளன. சென்னை இராசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலுள்ள ஏட்டுப்புத்தகம் இரண்டிலும் இவை உண்டு. மேல்காட்டப்படும் 208 - முதல் 220 - வரையிலுமுள்ளசெய்யுள்களும் இவ்வாறே. கோயமுத்தூரைச் சார்ந்ததொரு கிராமத்திலுள்ள வித்துவான் ம-ள-ள- ஸ்ரீமுத்துநாயுடு அவர்களுடையகுமாரர் வேணுகோபாலசாமி நாயுடு அவர்களும், அந்தப்பக்கத்துப் பிரதிகள் பலவற்றை ஒத்திட்டுப் பார்த்து இங்ஙனமே தெரிவித்தனர். மதுரைச்சங்கப்பதிப்பிலும் இவையுள்ளன.*

***காண்டகுசடைமுடிக்காலகாலன்மெய்ப்***
***பூண்டனபணிகளும்புரண்டுவீழ்ந்தவே.***

*(இ-ள்.) (பாண்டவ(ர்) சகாயன் - பாண்டவர்க்குத்துணைவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன், ஊர் - ஏறிச்செல்லுகிற, பறவையின்குலத்து ஆண்டகை- பறவைக்குலத்தையெல்லாம் அரசனாகியாளுந்தன்மை வாய்ந்த ஆண்மைக்குணமுள்ள கருடனுடைய, இரு சிறகு - இரண்டு இறக்கைகளும், அசையும் - அசைகின்ற, ஓதையால் - ஓசையினால்,- காண்தகு - காணத்தக்க [அழகிதாகத்தோன்றுகிற], சடைமுடி - சடைமுடியையுடைய, காலகாலன் - யமனுக்கும் யமனான சிவபெருமானுடைய, மெய் - திருமேனியிலே, பூண்டன - ஆபரணமாக அணிந்தனவான, பணிகள்உம்- பாம்புகளும், புரண்டு வீழ்ந்த - (அச்சத்தால்) கீழ் வீழ்ந்துபுரளலாயின; (எ-று.)*

***காலகாலனென்றவிவரம்*** *:- ஊழ்வினையாற் பதினாறுபிராயம் பெற்ற மிருகண்டுபுத்திரனாகிய மார்க்கண்டேயனென்னும்முனிவன், கூற்றுவன்வந்து காலபாசத்தாற் கட்டியிழுங்குங்காலத்துப் பரமசிவனைச் சரணமடைய, அப்பெருமான் யமனைக் காலாலுதைத்துத்தள்ளி முனிகுமாரனுக்கு என்றும் பதினாறாகத் தீர்க்காயுசு கொடுத்தருளினனென்பதாம். இச்சரித்திரத்தால், அனுபவித்தே தீரவேண்டும் பெருவலிதாகிய ஊழ்வினையையும் தன் அடியார்க்குக்கடக்கச்செய்கிற கடவுளது பேராற்றல் புலப்படும். காலன் - பிராணிகளின் ஆயுட்காலத்தை வரையறுப்பவன்.*
*(340)*

### *203.- கருடனைக் கண்ட அரமாதர் ஐயுறுதல்.*

***வரிந்தபைங்கனைகழல்வயினதேயனை***
***விரிந்தவெண்கிரியரமாதர்மீதுகண்***
***டெரிந்திடுவச்சிரனிந்தமால்வரைக்***
***கரிந்திலன்சிறகெனவையமெய்தினார்.***

*(இ-ள்.) வரிந்த - (காலிற்) கட்டிய, பை - பசுமையான [பசும்பொன்னாலாகிய], கனை - ஒலிக்கின்ற, கழல் - வீரக்கழலையுடைய, வயினதேயனை- கருடனை, விரிந்த வெள் கிரி அரமாதர் -(ஒளி) விளங்குகிற வெள்ளிமயமான கைலாசமலையில்வாழ்கிற தேவமாதர்கள், மீது கண்டு மேலே [ஆகாயத்திலே] பார்த்து, 'எரிந்திடு வச்சிரன் - விளங்குகிற வச்சிராயுதத்தையுடைய தேவேந்திரன், இந்த மால் வரைக்கு - இந்தப் பெரிய மலைக்கு, சிறகு அரிந்திலன்- இறகுகளை அறுத்தானில்லைபோலும்', என - என்று, ஐயம் எய்தினார் - சங்கைகொண்டார்கள்; (எ-று.)*

*'இந்த மால்வரை' என்றது, கருடனது பெருவடிவத்தை. கருடனைச்சிற கறுபடாதமலையோ வென்று ஐயமுற்றதனால்,* ***ஐயவணி.*** *அரமாதர் - அமரமாதர் அல்லதுஅரம்பைமாதர் என்பதன் விகாரம்.*

### *204.- கைலாயவருணனை.*

***நிறைமதிநிகரெனநிறத்தவெள்ளியம்***
***பொறைமலைதிசைதொறும்பொழியும்வாணிலா***

***நறைமலரிதழிசேர்நாதன்வார்சடைப்***
***பிறைமதிநிலவினும்பிறங்கவீசுமால்***

*(இ-ள்.) நிறை மதி நிகர் என (கலைகள்) நிறைந்த [பூர்ண] சந்திரன் ஒப்பு என்னும்படி, நிறத்த - வெண்ணிறத்தையுடைய, வெள்ளி- வெள்ளி மயமான, அம் - அழகிய, பொறைமலை - (பூமியைத்) தாங்குவதான கைலாசகிரி, திசைதொறுஉம் - எல்லாத்திக்குக்களிலும், பொழியும்- சொரிகிற, வாள் நிலா- பிரகாசமான வெள்ளொளி,நறை - தேனையுடைய, இகழி மலர் - கொன்றைப்பூ, சேர் - பொருந்தின, நாதன் -தலைவனான சிவபிரானது, வார்சடை - நீண்ட சடையிலுள்ள, பிறை மதி - இளஞ்சந்திரனது, நிலவின்உம் - நிலாவொளியைக் காட்டிலும், பிறங்க -மிக்குவிளங்க, வீசும் - பரவும்; (எ-று.)- ஆல் - ஈற்றசை*

*பிறைச்சந்திரன் நிலவினும் கைலாயத்தின்வெள்ளொளி மிக்கதென்பதாம். மலைபூமியைத் தாங்குவதாதலை,* **பூதரம்** *என்ற பெயரினாலும் அறிக. (342)*

*205.- அங்கு யாழிசை, வந்த விடாயைப் போக்குவதாகை.*

**நீரறுதருக்களுந்தழைக்கநின்றுமுன்**
**னாரதன்முதரியோர்நவிற்றுநாதயாழ்**
**பாரதவமர்புரிபச்சைமாமுகி**
**லாரதர்விடாயைவந்தாற்றுகின்றதால்.**

*(இ-ள்.) நீர் அறு தருக்கள்உம் - ஈரம் வற்றிய மரங்களும், தழைக்க - செழிக்கும்படி, முன் நின்று - (சிவபிரானது) முன்னே நின்றுகொண்டு, நாரதன் - முதலியோர் - நாரதமுனிவன் முதலானவர்கள், நவிற்று - பாடுகிற, யாழ் நாதம் - வீணையின் இசை,- பாரதம் அமர் புரி - பாரதயுத்தத்தை நடத்துகிற, பச்சை மா முகில்- பசுநிறமுள்ள பெரியமேகம்போன்ற கிருஷ்ண அருச்சுனரது, ஆர் அதர் விடாயை- (செல்லுதற்கு) அரிய நெடுவழியில் வந்தாலாகிய இளைப்பை, வந்து ஆற்றுகின்றது - (அருகில்) வந்து தணிக்கின்றது;*

*சங்கீத சாஸ்திரலக்ஷணத்துக்குச் சிறிதுந் தவறாத மிக இனிய இசைப்பாட்டைக் கேட்டமாத்திரத்தில் பட்டுப்போன மரங்களும் தளிர்த்துப்பூத்துக் காய்த்துப் பழுத்துச் செழிக்குமென்றல் மரபாதலால், 'நீரறுதருக்களுந்தழைக்க நவிற்று நாதயாழ்' எனப்பட்டது; "கலைத்தொழில்பட வெழீஇப்பாடினாள் கனிந்து, இலைப்பொழில் குரங்கின வீன்ற தூண் தளிர்" என்ற சிந்தாமணியையுங் காண்க. நாரதன் - தேவமுனி; பிரமனது குமாரன்; நரம் - மனிதர், அவர்களுள் உள்ள ஒற்றுமை - நாரம்: அதனை, தன் - (கலகத்தாற்) கெடுப்பவன் என்றாவது, நாரம் - ஆத்மசம்பந்தமான ஞானம்: அதனை, தன் - (பிறர்க்கு உபதேசத்தாற்) கொடுப்பவன்என்றாவது காரணப் பொருள். முகில் - உவமாகுபெயர். (343)*

*206.-ஆங்கு வீசுங் காற்றின் தன்மை.*

**சங்கரன்மணிவரைச்சாரன்மாருதந்**
**திங்களினிலவுமிழ்செக்கர்வேணிமேற்**

**கொங்கவிழ்செழுமலர்க்கொன்றைவாசமுங்**
**கங்கைநுண்டுவலையுங்கலந்துவீசுமால்.**

*(இ-ள்.) சங்கரன் - சிவபிரானது, மணி - அழகிய, வரை- கைலாசகிரியின். சாரல் - பக்கங்களிலே (வீசுகிற), மாருதம்-காற்று,- திங்களின் நிலவி உமிழ் - சந்திரனது நிலாவைச் சொரிகிற, செக்கர் வேணி மேல் - செந்நிறமுள்ள (சிவபிரானது)சடையின்மேல் (தரித்த), கொங்கு அவிழ் - வாசனை வீசுகிற, செழு - செழிப்பான,கொன்றை மலர் - கொன்றைப்பூவின், வாசம்உம் - பரிமளத்தையும், கங்கை நுண்துவலைஉம் - (அச்சடையிலுள்ள) கங்காநதியின் சிறிய நீர்த்துளிகளையும், கலந்துவீசும் - ஒருங்கு வெளிவீசும். (344)*

*207.- அரவங்களின் மாணிக்கவொளி*

**அங்குளவிடரகத்தநேகமாயிரம்**
**பொங்கழலுமிழ்விழிப்புயங்கமாமணி**
**யெங்கணுமிருளறவிலங்குசோதியாற்**
**கங்குலும்பகலவன்கரங்கள்காட்டுமால்.**

*(இ-ள்.) அங்கு உள - அவ்விடத்திலுள்ள, விடர் - மலை வெடிப்புக்களின், அகத்து - உள்ளேயிருக்கிற, அநேகம் ஆயிரம் - பல ஆயிரக்கணக்கான, பொங்கு அழல் உமிழ் விழி புயங்கம் - மிக்க கோபாக்கினியைச் சொரிகிற கண்களையுடைய நாகங்களின், மா மணி- சிறந்த மாணிக்கங்கள்,- எங்கண்உம் இருள் அற - எவ்விடத்திலும் இருள் நீங்கும்படி, இலங்கு - விளங்குகிற, சோதியால் -*

*ஒளியினால்,- கங்குல்உம் - அந்த இராப்பொழுதிலும், பகலவன் கரங்கள் காட்டும் -சூரியனது கிரணங்கள்போலத் தோன்றும்; (எ - று.)*

*ஆங்குள்ள சிறந்தசாதிப்பாம்புகளின் மாணிக்கங்களுடைய ஒளியால் எங்கும் இருள்நீங்கிப் பகல்போல்விளங்கிற்றென்பதாம்.*

***208.-நந்தி ஸ்ரீ க்ருஷ்ணன்வருகையைத் தெரிவிக்க, சிவபெருமான் நன்றென்றுவந்து எதிர்போந்து தழுவுதல்.***

**செந்திருமடமயிற்கேள்வன்சென்றமை**
**யந்திவானிறத்தவனறிந்துமுன்னமே**
**நந்தியுமுரைசெயக்கேட்டுநன்றெனப்**
**புந்தியான்மகிழ்ந்தெதிர்போந்துபுல்லினான்,**

*(இ-ள்.) செந் திரு மடமயில் - செவ்விய திருவென்னும் பேரையுடைய மடப்பமுள்ள மயில்போலுஞ்சாயலையுடைய இலக்குமிக்கு, கேள்வன் - கணவனாகியஸ்ரீ க்ருஷ்ணன், சென்றமை - வந்துள்ள செய்தியை,-அந்திவான் நிறத்தவன் -செவ்வானம்போலுந் திருமேனியையுடைய சிவபெருமான்,- முன்னம்ஏ அறிந்துஉம் -முன்னமே அறிந்திருந்தும், நந்திஉம் உரைசெய - நந்திதேவரும் திருமுன் வந்துதெரிவிக்க, கேட்டு-, நன்று என புந்தியால் மகிழ்ந்து - நன்றென்று மனத்தினாற்சந்தோஷித்து, எதிர் போந்து - எதிர் கொண்டு, புல்லினான் - (அப்பிரானைத்)தழுவினான்; (எ - று.) - செல்லுதல் - தன்னிடத்தினின்று நடத்தல்*

*திருமால் கண்ணனாகத் திருவவதரித்தபொழுது திருமகள் உருக்குமணிப்பிராட்டியாகத் தோன்றின ளென்று புராணங்கூறம், 'அந்திவண்ணன்' என்று சிவபிரானுக்கு ஒரு திருநாமம். நந்தி - சிவனைச்சூழ்ந்து நிற்கிற அடியவர் கூட்டமாகிய பிரமதகணங்களுக்குத்தலைவர்; திருவாயில்காப்பவரும், சிலசமயங்களில் வாகனமுமாய் நிற்பவர்.*

*முன்பு அச்சிட்டுள்ள பிரதியில் இங்கு, "செந்திருமடமயில்" (208) என்ற இந்தப்பாடலுக்குப் பதிலாகக் காணப்படும் பாடல் வருமாறு:-*

*** (1) செந்திருமடமயில்கேள்வன்சென்றுசெவ்***
**வந்திவானிறத்தினனருள்செய்வாய்மையா**
**னந்தியுள்விடுத்திடநரன்றனோடுதன்**
**புந்தியின்மகிழ்ந்துமந்திரத்துட்போயினான்.**

*(இ-ள்.) இளமையான மயில்போன்ற சாயலையுடையசெந்நிறமுள்ள இலக்குமிக்குக் கணவனான கண்ணன், அருச்சுனனுடனே (அந்தக் கைலாசகிரியிற்) சேர்ந்து, மாலைப்பொழுதிற் காணப்படுகிற செவ்வானம்போன்ற செந்நிறமுடைய சிவபிரான் கருணையோடு கூறிய கட்டளைமொழியின்படி (அச்சிவபிரானது வாயில்காவலராகிய) திருநந்திதேவர் உள்ளே அனுப்ப, (தனது) மனத்தில் மகிழ்ச்சிகொண்டு, ஆலயத்தினுட் சென்றான்; (எ - று.)] (346)*

***+ 209 - திருமாலை ஓராசனத்திருத்தி, அப்பிரானுடைய திருவவதாரம் முதலியவற்றைக்குறித்துச் சிவபெருமான் வினாவுதல்.***

**ஆங்கொராசனத்திடையிருத்தியையனைப்**
**பாங்கினால்வினவினான்பவளமேனியான்**
**ஈங்கிவன்பிறந்ததுமிளைத்தபார்மகள்**
**தீங்கறப்புரிதருஞ்செயலுமியாவுமே.**

*(இ -ள்.) ஆங்கு - அங்கே, ஐயனே - தலைவனா ஸ்ரீக்ருஷ்ணனை, பவளம் மேனியான் - பவழம்போற் செந்நிறத்தவனான சிவபெருமான்,- ஓர் ஆசனத்து இருத்தி - ஓராசனத்திலே வீற்றிருக்குமாறு செய்து, ஈங்கு - இங்கே [இவ்வுலகத்திலே], இவன் பிறந்தது*

---

*[*] இதுவும் இன்னும் 10 - பாடல்களும் இந்தச்சருக்கத்தில் 220 - ஆம் பாடலுக்குள் முன்பு அச்சிட்டபிரதிகளில் மாத்திரம் உள்ளன. ஏட்டுப்பிரதிகளுள் எதிலுமில்லை. இவை முறையே இலக்கமிட்டு இந்த [] இருதலைப்பகரத்தினுள் பொழிப்புரை முதலியவற்றோடு காட்டப்படும். ஏட்டுப்பிரதியிலுள்ளனவே இந்தப்பதிப்பிற் பிரதானமாகக் கொள்ளப்பட்டன.*

*[+] இதுமுதல் 220 - வரையிலுமுள்ள பாடல்கள் இங்குக்காட்டிய முறைப்படியே ஏட்டுப்பிரதிகளிலெல்லாம் உள்ளன: அச்சிட்ட சங்கப்பிரதியிலும் உள்ளன. இவற்றுள் 212, 213 - இலக்கங்களிலுள்ள இரண்டுபாடல்கள்தவிர, மற்றவை மற்றை அச்சிட்ட*

*உம் - இந்தத் திருமால்க்ருஷ்ணனாகத்திருவவதரித்ததும், இளைத்த - (பலதுஷ்டவரசரையும் அசுரரையும் சுமப்பதனால்) இளைப்படைந்த, பார்மகள் - பூமிதேவியின், தீங்கு-தீமை [சுமை], அற - நீங்குமாறு, புரிதரு - செய்துவருகின்ற, செயல்உம் - செய்கையும் ஆகிய, யாஉம் - எல்லாச் செய்கையையும், பாங்கினால்- பாங்காக [ஆர்வமோடு], வினாவினான் - கேட்டான்; (எ-று.) (347)*

### *210.-ஸ்ரீக்ருஷ்ணன் தான் செய்ததையெல்லாம் சொல்லியபின், சிவ பெருமான் அருச்சுனனை வரவேற்க, அக்கடவுளை அருச்சுனன் பணிதல்.*

**கேசவன்புரிவெலாங்கிரீசனென்னுமத்**
**தேசவன்தெளிவுறச்செப்பிவிட்டபின்**
**வாசவன்புதல்வனைவருகவென்றலும்**
**பாசவன்புடனவன்பணிந்துபோற்றினான்.**

*(இ-ள்.) கேசவன் - கேசியென்னும் அசுரனைக் கொன்றவனாகிய க்ருஷ்ணன், புரிவு எலாம் - (தான்) செய்த செயல்களையெல்லாம், கிரீசன் என்னும் அ தேசவன்-கிரீசனென்று திருநாமம்பூண்ட ஒளியுள்ள அந்தக்கடவுள், தெளிவுஉற- நன்குதெளியும்படி, (செவ்வனே), செப்பிவிட்ட பின்-சொல்லி முடித்தபின்பு,- (அச்சிவபெருமான்),-வாசவன்புதல்வனை - இந்திரனுக்குப் புதல்வனான அருச்சுனனைப்பார்த்து, வருக என்றலும் - 'வருவாயாக' என்று வரவேற்றலும்,- அவன்-அந்த அருச்சுனன், பாசம்- மனத்தைப் பிணித்தலையுடைய, அன்புடன்- அன்போடு [பக்தியோடு], பணிந்து (அந்தச் சிவபெருமானை) வணங்கி, போற்றினான்- வாழ்த்தினான்; (எ-று.)*

*கிரீசன் என்ற வடசொல் - மலையிலிருக்குந் தலைவனென்று காரணப்பொருள்படும். அன்பு பற்றுதலை யுண்டாக்குதலால், 'பாசவன்பு' என்றார்.*

***(2) புரநகையாலெரிபுராரிதன்முன***
***நரனொடுநாரணனணுகியன்பினாற்***
***சரணபங்கயமுறத்தாழ்ந்துபன்முறை***
***கரனுறமுகிழ்த்திகழறன்மேயினார்.***

*(இ-ள்.) திரிபுரத்தை சிரிப்பினால் எரித்திட்ட சிவபிரானது முன்னிலையில் [சந்நிதாநத்தில்] அருச்சுனனும் கிருஷ்ணனும் சேர்ந்து, அன்பினால் (அப்பிரானது) திருவடித் தாமரைகளில் நன்றாக நமஸ்கரித்து, கைகளைச் செவ்வையாகக் கூப்பிக்கொண்டு, அநேகமுறை இவ்வார்த்தையைச்*

*சொல்லத்தொடங்கினார்கள்; (எ-று.) - அதனை மேற்காண்க. இதன்பின் "பொங்கரா" (212) என்றும் "விண்ணிடைத்திரிபுரம்" (213) என்றும் தொடங்குகிற பாடல்கள் முன்பு அச்சிட்டுள்ளபிரதிகளில் உள்ளன. அவற்றை, (3) (4) பாடல்களாகக்கொள்க. (348)*

**211.-தான்முன்பு கண்ணன்மேல் அணிந்த மலர்களைச் சிவபிரான்மீது காணலும் அருச்சுனன் இருவர்க்கும் பேதமில்லையென்று உடற்புளகமுண்டாகப்பெறுதல ்.**

**கண்ணன்மேலணிமலரனைத்துங்காய்கனல்**
**வண்ணன்மேற்காண்டலுமனங்களிப்புறா**

**வெண்ணின்மேலிரண்டெனவிலதென்றவ்விற**
**லண்ணன்மேனியும்புளகரும்பினானரோ.**

*(இ - ள்.) கண்ணன்மேல் அணி - (தான் முன்பு) க்ருஷ்ணன் மேற் சாத்தின, மலர் அனைத்துஉம் - மலர்களையெல்லாம், காய் கனல் வண்ணன் மேல் - எரிக்குந்தன்மையுள்ள அக்கினிபோன்ற செந்நிறமுடைய சிவபெருமான்மீது, காண்டலும்-கண்டவுடனே,- அ விறல் அண்ணல்-வெற்றி பொருந்திய பெருமையிற் சிறந்த அந்த அருச்சுனன், மனம் களிப்பு உறா - மனமகிழ்ச்சியடைந்து, 'மேல் எண்ணில் - மேலே [நன்றாக] ஆலோசிக்குமிடத்து, இரண்டு - இரண்டு பொருள் (உள்ளன), என-என்று சொல்லுமாறு, இலது-இல்லை, 'என்று - என்றுகருதி, மேனிஉம் - தன்னுடல்முழுதும், (அப்பெருங்களிப்பினால்), புளகு அரும்பினான்- மயிர்க்கூச்செறியப் பெற்றான் ; (எ-று.)*

*உலகத்துப் பரம்பொருள்ஒன்றே பலபடியாகத் தோன்றுவதென்று உணர்ந்தனனென்றவாறு. இங்குச்சிவனது மகிமையைக் கூறுமிடமாதலால், அதற்கு ஏற்ப, இக்கவிஇங்ஙனம் எழுதின ரென்பர். சிவனை யருச்சிக்கவிரும்பிய அருச்சுனன் கண்ணன் கட்டளைப்படி அப்பிரானது திருவடிகளிலே யிட்ட மலர்கள் பின்பு பரமசிவனது முடியின்மேல் காணப்பட, அதுகண்டு பார்த்தன் பரதத்துவமுணர்ந்தனனென இவ்வரலாறு வைஷ்ணவசம்பிரதாயத்திற் சிறிது வேறுபாடாக் கூறப்படும்; "தீர்த்தனுலகளந்த சேவடிமேற் பூந்தாமஞ், சேர்த்தி யவையே சிவன்முடிமேல் தான் கண்டு, பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை, பேர்த்து பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை, போர்த்துமொருவராற் பேசக் கிடந்ததே" என்ற திருவாய்மொழியைக் காண்க. (349)*

**212.-நான்குகவிகள் - அருச்சுனன் செய்யும் சிவஸ்தோத்திரம்.**

**பொங்கராவெயின்மணிப்பூணும்பேணுநீற்**
**றங்கராகமுமுவந்தணியுமேனியாய்**
**சங்கராமேருவெஞ்சாபம்வாங்கிய**
**செங்கராசிவசிவதேவதேவனே.**

*(இ - ள்.) பொங்கு-விளங்குகிற, அரா-நாகங்களாகிய, வெயில் மணி பூண்உம் -சூரியகாந்திபோலச் செந்நிறமாய்விளங்குகிற மாணிக்கத்தையுடைய ஆபரணங்களையும், பேணும் - விரும்பப்படுகிற, நீறு - விபூதியாகிய, அங்கராகம்உம்- உடற்பூச்சையும், உவந்து அணியும்- மகிழ்ச்சியோடு தரித்த, மேனியாய்-திருமேனியையுடையவனே! சங்கரா-! மேரு - மேருமலையாகிய, வெம் சாபம் -கொடிய வில்லை, வாங்கிய- வளைத்த, செம் கரா-சிவந்த திருக்கையையுடையவனே!சிவ சிவ-! தேவ தேவனே-எல்லாத்தேவர்களுக்கும் ஆதிதேவனாக வுள்ளவனே !(எ-று.) (350)*

***213.* விண்ணிடைத்திரிபுரம்வெந்துநீறெழப்**
**பண்ணுடைச்செந்தழல்பரப்புமூரலாய்**

*[*] இந்தப்பாடல் முன்பு அச்சிட்டபிரதிகளில் சிறிது பாட பேதத்துடன் காணப்படுகிறது : அது (8) ஆவது பாடலாக மேலே காட்டப்படும்.*

**எண்ணுடைக்காமனையெரித்தபேரழற்**
**கண்ணுடைக்கடவுளேகாலகாலனே.**

*(இ-ள்.) விண்ணிடை - அந்தரத்திலே, திரி புரம் - மூன்று பட்டணம், வெந்து-எரிபட்டு, நீறு எழ- சாம்பலாய் மேலெழும்படி, பண் உடை - செய்யுந்தன்மையையுடைய, செம் தழல் பரப்பும் மூரலாய் - சிவந்த நெருப்பை வெளிவிட்ட புன்சிரிப்பையுடையவனே! எண் உடை - (யாவர்) மனத்தையும் (இடமாக) உடைய, காமனை - மன்மதனை, எரித்த - கொளுத்திய, பேர் அழல் கண்-பெரிய தீயின் வடிவமான நெற்றிக்கண்ணை, உடை - உடைய, கடவுளே-! கால காலனே-யமனுக்கு யமனானவனே! (எ - று.)*

***(5) தருவதுமுயிரெலாங்காக்குந்தன்மையு***
***முருவறவொழித்தலுமுன்றனாடலே***
***கருவராதொழிந்தவர்கருத்திற்கண்டுதே***
***றொருவனேயெம்மனோர்க்குரைக்கற்பாலையோ***

*(இ-ள்.) எல்லாச்சீவன்களையும் படைப்பதும், பாதுகாக்கிற இயல்பும், வடிவமில்லாதபடி [அடியோடு] அழித்துவிடுதலும், உனது திருவிளையாட்டேயாம்; (மீண்டும்) கருப்பத்தில் வராதபடி பிறப்புத்துன்பத்தை நீங்கின முக்தர்கள் மனத்திலேதரிசித்து [ஞானத்தினாலறிந்து] தெளியும்படியான ஏகமூர்த்தியே! எங்களைப்போன்றவர்களுக்கு (நீ) புகழ்ந்துசொல்லுந் தரமுடையையோ? [அல்லையென்றபடி]; (எ - று.)*

***(6) நித்தனேநிமலனேநிகழ்நின்னாமனே***
***யத்தனேயடியவர்க்கெளியவண்ணலே***
***பித்தனேயாதியந்தங்கள்பேசொணா***
***முத்தனேயுயிர்தொறுமுலாயமுன்பனே.***

*(இ-ள்.) முக்காலத்திலும் ஒரேவிதமாகவுள்ளவனே! ஆணவம் கன்மம் மாயையென்னும் மும்மலங்களின் தொடர்ச்சியில்லாதவனே! விளங்குகிற நிர்நாமனாக வுள்ளவனே! தலைவனே! அடியவர்க்கு எளிய அண்ணலே! பித்துடையவனே! முதலும் இறுதியும் சொல்லமுடியாத முத்தியுலகத்துக்கு உரியவனே! எல்லாவுயிர்களிடத்தும் பொருந்திய முதல்வனே ! (எ - று.)*

*நின்னாமன் - நிர்நாமன் என்ற வடசொல் திரிந்தது; அதற்கு - பேரில்லாதவனென்று பொருள். வியவகாரநிலையில் கடவுளுக்கு அநந்தமான திருநாமங்கள் உளவாயினும், தத்துவநிலையில் ஏற்றதொரு திருநாமமும் இல்லை யென்பதுகொள்கை; "ஊரும் பேருமுருவு மில்லான்" என்றதுங்காண்க. வில்லாலும் கல்லாலும் பிரம்பாலும் செருப்பாலும் அடியும் உதையும் படுதல் மண்சுமத்தல் விறகுவிற்றல் முதலிய இழிதொழில்களை அடியார்பொருட்டுச் செய்ததனால், கடவுள் அடியவர்க்கு எளியவனாதல் அறிக; "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்" என நடராசப்பெருமான் தன்னைத் தானே குறித்தவாறுங்காண்க. அப்பிரானது சௌலப்பியத்தோடு பரத்துவமுந்தோன்ற, 'அடியவர்க்கு எளிய அண்ணலே' என்றார்.பித்து - ஆசைமிகுதி ; அதனை அடியார்களிடத்தும்,*

*அம்பிகையினிடத்தும் உடைமையால், பித்தனெனப்பெயர்; தோலுடுத்தல், ஆடையின்றிநிற்றல், எலும்பணிதல், பெண்சுமத்தல், கூத்தாடுதல் முதலியவற்றால் பித்தகுணமுள்ளவன்போலக் காணப்படுபவ னென்றுமாம்.*

***(7) என்றுபற்பலவுரையெடுத்துக்கூறியே***
***நின்றுளநெக்குநெக்குருகிநேயமோ***

***டொன்றுகண்ணருவிகளுகுத்தனோக்கியே***
***யன்றுமாபதியவர்க்கருள்செய்தானரோ***

*(இ-ள்.)* என்று இவ்விதமாகப் பல பல துதிமொழிகளை எடுத்துச்சொல்லி, *(கண்ணனும் அருச்சுனனும் அருகில்)* நின்று கொண்டு, மனம் மிகநெகிழ்ந்து கரைந்து, பக்தியுடனே பொருந்தின ஆனந்தக்கண்ணீர்ப் பெருக்குகளைச் சொரிதலைப் பார்த்து, அப்பொழுது, பார்வதிகொழுநனான பரமசிவன் அவர்களுக்குப்பிரசந்நனானான்;(எ-று.)- கட்புலனாகத் தரிசனந்தந்தருளினனென்பதாம்.

* ***(8) கண்ணன்மேலணிமலரனைத்துங்காயெரி***
***வண்ணன்மேற்காண்டலுமகிழ்ந்துமேதினி***
***யுண்ணுமாதவன்சிவனுருவமென்றுணர்ந்***
***தண்ணலுமுடல்புளகரும்பினானரோ.***

*(இ-ள்.) (அங்ஙனம் பிரதியக்ஷமானபொழுது முன்பு தான்)* கிருஷ்ணன்மேற்சாத்தின மலர்களையெல்லாம் சொலிக்கிற அக்கினி போன்ற செந்நிறமுடைய சிவபிரான்மேல் பார்த்தவளவிலே, சிறந்தவீரனான அருச்சுனனும் மகிழ்ச்சிகொண்டு, உலகத்தை உட் கொள்ளுகிற திருமால் சிவனது வடிவமென்று அறிந்து உடம்பில் மயிர்ச்சிலிர்ப்பு உண்டாகப்பெற்றான்; (எ - று.)

***(9) இமையநல்வரையினிதீன்றகன்னிகை***
***யுமையவள்கணவனெவ்வுயிர்க்குநாயகன்***
***சமைவுறத்துதித்திடுமடியர்தம்முக***
***மமைவுறுதிருவுளத்தருளினோக்கியே.***

*(இ-ள்.)* சிறந்த இமயமலை இனிமையாகப் பெற்ற இளமகளாகிய உமாதேவிக்குநாயகனும், எல்லாவுயிர்களுக்குந் தலைவனுமான சிவபிரான்,- பொருத்தமாகத்தோத்திரஞ்செய்கிற *(தனது)* பக்தர்களாகிய கிருஷ்ணார்ச்சுனரது முகங்களைச்சாந்தமான *(தன்)* மனத்தில் மிக்க கருணையோடுபார்த்து,- (எ - று.)- வேண்டுவது என்என' என்று மேற்கவியோடு தொடரும்.

தக்ஷப்பிரஜாபதியினிடம் மகளாகப் பிறந்து தாக்ஷாயணி யென்றும் சதியென்றும்பெயர்கூறச் சிறந்து வீற்றிருந்த அம்பிகை, பின்னொருகாலத்தில் சிவாபராதியானஅம்முனிவனதுசம்பந்தமான பேரோடும் உடம்போடும் உய்ந்திருக்க மனமியலாமல்,சிவபிரான்

---

* இந்தப்பாடல் சிறிதுபாடபேதத்துடன் ஏட்டுப்பிரதிகளில் 211-ஆம் பாடலாக உள்ளது.

கட்டளையிட்டபடியே, அவ்வுடம்பை யொழித்துத் தன்னை மகளாகப்பெறும்பொருட்டுப் பலநாளாகத்தவம்புரிந்துவருகிற மலையரசனாகிய இமவானினது எண்ணம் ஈடேறும்படி தான் ஒரு அழகிய சிறு பெண்குழந்தைவடிவமாய் அவனெதிரில் அம்மலையில் ஒரு தடாகத்தில் தாமரைமலரொன்றின்மேல் தங்கியிருக்க, அப்பர்வதராசன் அக்குழந்தையைக்கண்டு மகிழ்ந்து எடுத்துச்சென்று மனைவியாகிய மேனையினிடம் கொடுத்து வளர்த்துவர, அப்பார்வதியைப் பரமசிவன் திருமணஞ்செய்துகொண்டன னென்பது **கதை.**

* ***(10) வேண்டுவதென்னெனவிண்டுதாழ்ந்தெழீஇப்***
***பூண்டருள்கருணையம்புனிதவிங்கிவ***
***னாண்டருள்படைகளாலவுணர்க்காய்ந்தன***
***னீண்டுநல்குதிவிறலெய்தும் வண்ணமே.***

*(இ - ள்.) '(நீங்கள்)* விரும்புவது யாது?' என்றுவினாவ, விஷ்ணுவாகிய கண்ணன், நமஸ்கரித்து எழுந்து, ஆபரணமாகக் கொண்டருளிய திருவருளையுடைய அழகிய பரிசுத்தமூர்த்தியே! இங்குள்ள இவ்வருச்சுனன் *(நீ)* அப்பொழுது கொடுத்தருளிய *(பாசுபதம் முதலிய)* ஆயுதங்களால் *(நிவாதகவசர் முதலிய)* அசுரர்களை அழித்திட்டான்; இப்பொழுது, *(சயத்திரதனைக் கொன்று)*

*வெற்றியடையும்படி (இவனுக்குப் படைக்கலம்) கொடுத்தருள்வாய்; (எ-று.)- இப்பாட்டில் 'விண்டு தாழ்ந்தெழீஇ' என்றது, அடுத்தபாட்டில், 'என்று சொற்றனன்'என்பதனோடு முடியும்.*

***(11) தானவர்ப் பொருபடை கொண்டு தாரணி**
**மானவர்ப் பொருவது வழக்கன் றாதலாற்**
**கூனல்விற் கணையொடு குறைவு றாததோர்**
**தூநிறத் தடமருள் கென்று சொற்றனன்.***

*(இ-ள்.) அசுரர்களைப்போர்செய்து அழித்த அவ்வாயுதங்களால் பூமியிலுள்ளமனிதர்களைப் போர்செய்து அழிப்பது, முறைமையன்று: ஆதலால், (மனிதரை அழித்தற்கு வேறு) வளைந்த சிறந்த வில்லும் அம்பும் குறைவுபடாததான ஒரு பரிசுத்தமான தன்மையையுடைய தடாகத்தை அளித்தருள்வாய்' என்று கூறினார்;(எ - று.)-முன்பு ஒருகாலத்தில் பரமசிவன் தேவர்க்குப் பகைவரானார் யாவரையும்பொருது அழித்து அவ்வில்லையும் அம்பையும் அமிருதசரசில் வைத்திட்டனனென்பது, வரலாறு.] (351)*

***+214. கையுறுசிலையுடன்கானவேடனென்**
**றையுறவந்துடனணுகியென்னுடன்**
**மெய்யுறவமர்புரிவினோதநாடொறு**
**மையுறுகண்டனேமறப்பதில்லையே.***

---

** இச்செய்யுள்கள் சிறிது பாடபேதத்துடன் ஏட்டுப்பிரதிகளில் **217, 218** - ஆம் பாடல்களாக உள்ளன.*

+ **குறிப்பு** *:- இது முதல் 220-வரையிலுள்ள பாடல்கள் முன்பு ஏட்டுப் பிரதிகளிலும் சங்கப்பதிப்பிலும் மாத்திரமே கண்டவை; அச்சிட்டுள்ள பிரதிகளில்இல்லை.*

*(இ-ள்.) ஐயுற - (உனது பாரக்கிரமத்தைக் கண்டு யான் திகைத்துச்) சந்தேகிக்குமாறு, உடன் - உடனே [விரைவாக], கை உறு சிலையுடன் - கையிலேபொருந்திய வில்லுடனே, கானம் வேடன் என்று - காட்டிலேதிரிகின்ற வேடனுருவத்தைக்கொண்டு, வந்து-, அணுகி- (என்னைச்) சமீபித்து, என்னுடன்- என்னுடனே, மெய்உற - உண்மையாக, அமர் புரி - போர்புரிந்த, வினோத - வினோதச்செயலையுடையவனே! மைஉறு கண்டனே-(நஞ்சுண்டதனாற்) கறுத்த கண்டத்தையுடையவனே! நாள்தொறுஉம் - ஒருநாளும், (நான் உன்னை,), மறப்பதுஇல்லை-; (எ-று.) (352)*

***215. உமையவள்கணவனேயுகாந்தகாலனே**
**யிமையவில்வீரனேயென்றுகொண்டிவ**
**னமையுறத்துதித்தலினவனுமற்றிவன்**
**சமைவுகண்டையனோடுவகைசாற்றினான்.***

*(இ-ள்.) உமையவள் கணவனே-! யுகாந்தகாலனே-யுகாந்த காலத்துக்கு உரியவனே! [சங்காரமூர்த்தியே!] இமையம் வில்வீரனே - மேருமலையை வில்லாகக்கொண்ட வீரனே ! என்று-, கொண்டு - (வாயினாற்) சொல்லிக்கொண்டு, இவன் - இந்தஅருச்சுனன், அமைஉற - மனவமைதிதோன்ற [மனவொருமைப்பாட்டோடு என்றபடி], துதித்தலின் - தோத்திரஞ் செய்ததனால், அவன்உம் - அந்தச்சிவபெருமானும், மற்று - பின்பு, இவன் - இந்த அருச்சுனனுடைய, சமைவு கண்டு - சாந்தமான மனநிலைமையைக் கண்டு, ஐயனோடு - தலைவனான ஸ்ரீக்ருஷ்ணனோடு, உவகை-மகிழ்ச்சியோடு, சாற்றினான் - சொல்லலானான்; (எ - று.)- சிவபெருமான் கூறுவதை, அடுத்தகவியிற் காண்க.*

*மேரு மந்திரம் இமயம் முதலிய மலைகளை அபேதமாகக்கூறுதல் கவி சமயம்; "இமையவில்வாங்கிய வீர்ஞ்சடையந்தணன்" என்ற கலித்தொகையையுங் காண்க. இனி, இமையவில் - இமயமலையில் தோன்றிய மூங்கிலை வில்லாகவுடைய என்று உரைப்பாரு முளர்.*

### *216.-சிவபெருமான் க்ருஷ்ணனைக் கொண்டாடுதல்.*

***ஆற்றினைதுயர்மயலனைத்துமெய்யுறத்***
***தேற்றினைசிந்தையைத்தெளிந்தவாய்மையான்***
***மாற்றினைமும்முறைபிறப்பும்வந்துநின்***
***கூற்றினையடைதலாற்பிறவிகொள்ளுமே.***

*(இ-ள்.) துயர் மயல் அனைத்துஉம் - (இவனுக்குஉள்ள) துயரினாலாகிய [புத்திரசோகத்தினாலாகிய] மயக்கத்தையெல்லாம், ஆற்றினை - (இப்போதே) தணிப்பித்தாய்: தெளிந்த வாய்மையால் - தெளிவாகவுள்ள (உன்னுடைய) வாய்ச்சொற்களால் [கீதையையுபதேசித்ததனால்], சிந்தையை- (இவன்) மனத்தை, மெய்உற - உண்மை நன்குபட, தேற்றினை- தெளிவுறச்செய்தாய்: (இவ்வகையினால்), மும்முறை பிறப்புஉம் வந்து-மூன்றுமுறைப் பிறவியிலும் (உன்னுடன்) வந்து, நின் கூற்றினை-உன்னுடைய அமிசத்தை, அடைதலால்- அடைந்திருத்தலினால்,(இவன்), பிறவிகொள்ளும்ஏ- பிறவியையடைவனோ? மாற்றினை - (நீ இவன் பிறவியையடையாத*

*வாறு) மாற்றிவிட்டாய்; (எ-று.)-பி-ம்: துயரமுமறுத்து, மெய்ம்மையான்.*

*மும்முறைப்பிறப்பில் அருச்சுனன் திருமாலோடுகூடவந்ததனை "நரனும் நாரணனுமானோம்," "பின்னொருபிறப்பின் யாமே யிராமலக்குமப் பேர்பெற்றோம், இந்நெடும்பிறப்பில்நீயும் யானுமாயீண்டு நின்றோம்" என்று முதற்போர்ச்சருக்கத்து வந்ததனாலு முணர்க. கொள்ளுமே, ஏகாரம் - வினாவகையால், எதிர்மறைகுறித்தது. உன்னுடைய அமிசம் இவனுக்கு அமைந்திருத்தலினால், இனி இவனுக்குப்பிறப்பில்லையென்றானென்க. (354)*

### *217.-'வேண்டுவது யாது?' என்று சிவபெருமான் கேட்க. அருச்சுனன் பகையறுக்கும்படையை வேண்டுதல்.*

**** வேண்டுவதென்கொல்மற்றென்னவீரனும்***
***பூண்டதோர்பறையறைந்தன்றிப்போகலேன்***
***ஆண்டருள்படைகளாலவுணர்க்காய்ந்தனன்***
***ஈண்டுநல்குதிவிறலெய்தும்வண்ணமே.***

*(இ-ள்.) மற்று - இனி, வேண்டுவது-விரும்புவது, என்கொல்- யாது? என்ன- என்று வினாவ,-வீரன்உம் - வீரனாகிய அருச்சுனனும், பூண்டது - (யான்) மேற்கொண்ட போர்த்தொழிலை, பறை அறைந்து அன்றி - (வென்று) வெற்றிப்பறையை எறிந்தல்லாமல், போகலேன்- இதனினின்று நீங்கேன்: ஆண்டு - (நான் தவம்புரிந்த) அக்காலத்து, அருள் - ( ) கருணையோடுதந்த, படைகளால் - ஆயுதங்களினால், அவுணர் - (நிவாதகவசர்முதலிய) அசுரர்களை, காய்ந்தனன்- கொன்றேன்; ஈண்டு-இப்போது, விறல் எய்தும் வண்ணம் - (நான்) வெற்றியையடையும் வகையை, நல்கு - அருள்புரிவாய் ; (எ - று.)-என்று தான் வேண்டுவதை அருச்சுனன் சிவபெருமானிடம் கூறினான் என்க. வீரனும் என்பதற்கு - ஸ்ரீக்ருஷ்ணனும் என்பாரு முளர். **பி - ம்:** பூண்டதோர்பகையறுத்தன்றி. விறலெண்ணும். (355)*

### *218.-ஸ்ரீக்ருஷ்ணன் சிவபெருமானை நோக்கிக் கூறுதல்.*

**** தானவர்ப் பொரும்படை கொண்டு தாரணி***
***மானவர்ப் பொருவது வழக்கு மல்லவால்***

***கூனல்விற் கணைகளுங் குறைவுறாததோர்***
***தூநிழற் பொய்கையுங் கொடுத்தி தோன்றலே.***

நான்குகவிகள் - ஒருதொடர்.

*(இ - ள்.) 'தோன்றலே - விளங்குபவனே! தானவர் பொரும் படைகொண்டு- அசுரரைக்கொல்லுதற்கு உரியபடையைக்கொண்டு, தாரணி- பூமியிலேயுள்ள, மாணவர்-மனிதரை, பொருவது - போர் செய்வது, வழக்குஉம் அல்ல - முறைமையுமன்று: ஆல் - ஆதலால், கூனல் வில் - வளைவுபொருந்திய வில்லிற்பூட்டுதற்குஉரிய, கணைகள்உம்-அம்புகளும், குறைவு உறாதது ஓர் தூநிழல்பொய்கை*

---

* இச்செய்யுள்கள் சிறிது பாடபேதத்துடன் ***(10, 11)-*** ஆம் பாடல்களாக ***211-*** ஆம் பக்கத்துக் காட்டப்பட்டுள்ளன.

*உம்-(எடுக்க எடுக்க அந்தக்கணைகள்) குறைதலில்லாத ஒப்பற்ற பரிசுத்தமான சாயை பொருந்துதலுடைய பொய்கையையும், கொடுத்தி- கொடுப்பாய்,' (எ - று.)- "என்றலும்" என மேலே தொடரும்.*

*தெளிவான நீரில் சாயைநன்கு விழுமாதலால், 'தூ நிழற் பொய்கை' என்றது.* ***பி-ம் :*** *தோழநீ. (356)*

வேறு.

***219.-இரண்டுகவிகள்-ஸ்ரீக்ருஷ்ணனைச் சிவபெருமான் புகழ்தலைக்கூறும்.***

***என்றலுமீசன கைத்துரை செய்தனன் யானென நீயெனவே***
***றன்றிவை யாவு மளித்திடு தற்குனை யல்லது வல்லவர்யார்***
***நின்றதொர் தூணிடை வந்தனை யானைமு னின்றனை***
***கஞ்சனையுங்***
***கொன்றனை மன்னவை யூடிரி யப்பல கூறைகொ டுத்தனையே.***

*(இ-ள்.) என்றலும்-என்று (ஸ்ரீக்ருஷ்ணன்) கூறியவுடனே,- ஈசன்- சிவபெருமான், நகைத்து - சிரித்து, உரைசெய்தனன் - (பின் வருமாறு) சொல்லுபவனானான்; யான் என - யானென்றும், நீ என - நீ என்றும், வேறு அன்று- வேறு இல்லை: இவையாஉம்-இப்போது வேண்டிய வில்முதலிய எல்லாவற்றையும்,அளித்திடுதற்கு - கொடுத்திடுதற்கு, உனை அல்லது - உன்னையல்லாமல், யார்வல்லவர்-? நின்றது ஓர் தூணிடை - (எதிரிலே) நின்றதாகிய ஒருதூணினிடத்திலே,வந்தனை - (இரணியனைச் சங்கரிக்க) நரசிங்கரூபியாகத்திருவவதரித்தாய்: யானைமுன் நின்றனை- ('ஆதிமூலமே!' என்று கூவின) யானைக்குமுன்னே (அதனைப்பாதுகாக்குமாறு) வந்து நின்றாய் : கஞ்சனை கொன்றனை - கஞ்சனைக் கொன்றாய்: மன் அவையூடு - இராசசபையிலே, இரிய- (திரௌபதியின் துயரம்) நீங்க, பல கூறைகொடுத்தனை - பல ஆடைகளைச் சுரக்குமாறு அருள்புரிந்தாய்;*

*இதுமுதற் பதினான்கு கவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவி போன்ற* ***அறுசீராசிரியவிருத்தங்கள்.*** *(357)*

***220. முன்னுருவாயினைநின்றிருநாபியின்முளரியின்வாழ்முனிவன்***
***றன்னுருவாகியிருந்துபடைத்தனைபலசகதண்டமுநீ***
***நின்னுருவாகியளித்திடுகின்றனைநித்தவிபூதியினா***
***லென்னுருவாகியழிக்கவுநின்றனையெம்பெருமானெனவே.***

*(இ - ள்.) எம்பெருமான்-எமது பெருமானே! முன்-முதலில், உருஆயினை - (உலகத்தையெல்லாம் வெளிப்படுத்தத் திருவுளங் கொண்டு அவ்யக்த ஸ்வரூபியாகிய நீ) உருவமுள்ளவனாகி, நின் திருநாபியின் - உன்னுடைய திருவுந்தியிலே, முளரியின்வாழ் முனிவன்தன் - தாமரையில் வாழ்பவனாகிய இருடியின் [நான்முகனுடைய],உருஆகி இருந்து - உருவத்தையுடையவனாயிருந்து, பல சகத் அண்டம்உம் -பலலோகங்களையும் (தன்னிடத்துக்) கொண்ட அண்டங்களையெல்லாம், நீ-,படைத்தனை-சிருஷ்டித்தாய்: நித்தவிபூதியினால் நித்தியவிபூதியாகியஸ்ரீவைகுண்டத்தில், நின் உரு ஆகி-உன்னுடைய உருவத்தையேகொண்டு[விஷ்ணுரூபத்துடனிருந்து] அளித்திடுகின்றனை - பாதுகாத்தல் தொழிலைச்செய்கின்றாய்: என் உருஆகி -*

*என்னுடைய உருவத்தை [சிவவடிவத்தை] அடைந்தவனாகி, அழிக்க உம் நின்றனை - அழிப்பதற்கும் நின்றருளினாய்; என - என்று (புகழ்ந்து) - (எ-று.)- "ஆயிடைநின்ற கிரீடியை மூழ்கென" என மேற்கவியோடு இயையும்.*

*எம்பெருமானுடைய ஸ்ரீவைகுண்டலோகம் என்றும் அழியாது நித்தியமாக இருப்பதாதலால், நித்தியவிபூதியெனப்படும் : அதை யொழிந்த இந்த உலகங்களெல்லாம் அப்பெருமானுடைய விளையாடலுக்கு இடனாயிருத்தலால், லீலாவிபூதி யெனப்படும் என்ப. (258)*

***221.-அருச்சுனனை அங்கொருபொய்கையில் 'நீராடுக' என்ன, அப் பொய்கையிலே ஒருநாகத்தின் வாயினின்று வில் அம்புகளுடன் ஒருமுனிவன் தோன்றுதல்.***

***ஆயிடைநின்றகிரீடியைமுக்கணனங்கொருபொய்கையிலே***
***போயிடைமூழ்கெனவப்புனலூடொர்புயங்கமெழுந்ததன்***
***வாயிடைவந்தனன்மாணுருவாயொருமாமுனியம்முனியச்***
***சேயிடைநீரிலெடுத்தனன்மற்றொருசிலையுடன்வாளியுமே.***

*(இ-ள்.) (பிறகு), முக்கணன் - மூன்றுதிருக்கண்களையுடைய சிவபிரான், ஆயிடை நின்ற கிரீடியை - அவ்விடத்தில் நின்ற அருச்சுனனை (ப்பார்த்து), அங்குஒரு பொய்கையில்போய் இடை மூழ்கு என - அவ்விடத்திலுள்ளதொரு சரசிலேசென்று அதனில் நீராடுவாய் என்று சொல்ல,- (அங்ஙனம் அருச்சுனன் ஸ்நாநஞ்செய்த வளவிலே), அ புனலூடு - அந்தத்தடாகத்தின் நீரினின்று, ஓர் புயங்கம் எழுந்தது - ஒரு நாகம் மேல்வந்தது; அதன் வாயிடை - அதனுடைய வாயிலே, மாண் உரு ஆய் - பிரமசாரிவடிவமாய், ஒரு மா முனி - ஒரு சிறந்த முனிவன், வந்தனன் - தோன்றினான்; அ முனி - அந்தமுனிவன், அ சேய் இடை நீரில் - நெடுங்தூரம்பரவிய இடத்தையுடைய அந்நீரினின்று, மற்று ஒரு சிலையுடன் வாளிஉம் - வேறொரு வில்லையும் அம்பையும், எடுத்தனன்-: (எ - று.)*

*சிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர் 'பொய்கை-மானிடராக்காத நீர்நிலை' என்றதை இங்கே யறிக. மாண் உரு ஆய் - (பிரமதேஜசு விளங்குகிற) சிறந்த வடிவமாய் என்றுமாம். முன் அருச்சுனன் தவநிலைச்சருக்கத்தில் "ஐயனுமம்மையோ டருள்புரிந்து பின், வெய்ய பொற்றூணியும் வில்லுமந்த்ரமுந், துய்ய பாசுபத மெய்த் தொடையு முட்டியும், ஒய்யென நிலையுடனுதவினானரோ" என்றதை நோக்கி 'மற்றொருசிலையுடன்வாளியும்'என்றார். (359)*

***222.-வந்தமுனிவன் முட்டிநிலைகளைப்பயிற்றி உருத்திரமறை யுபதேசிக்க, அருச்சுனன் பெற்றுக்கொள்ளுதல்.***

***முப்புரநீறெழுநாளினியற்றியமுட்டியுநன்னிலையு***
***மப்புரசூதனனேவலினந்தணனமரர்பிரான்மதலைக்***
***கொப்புறவோடுபயிற்றியுதங்கொடுருத்திரமாமறையுஞ்***
***செப்பினனாலவைபெற்றனன்வென்றுசெயத்திரதற்றெறுவான்.***

*(இ-ள்.) மு புரம் - திரிபுரம், நீறு எழும் நாளின் - எரிந்து சாம்பரான காலத்தில், இயற்றிய - (சிவபிரான்) கொண்டருளிய, முட்டிஉம் - கைப்பிடியையும், நல் நிலைஉம் - நல்ல நிற்கும்விதத்தை*

*யும், அ புர-சூதனன் ஏவலின்-திரிபுரமழித்த அந்தப்பரமசிவனது கட்டளையால், அந்தணன்-அம்முனிவன், அமரர் பிரான் மதலைக்கு-தேவராசனான இந்திரனது புத்தினாகிய அருச்சுனனுக்கு, ஒப்புறவோடு-தகுதியோடு, பயிற்றி-கற்பித்துக்கொடுத்து, இதம்பொடு - (அவனிடத்து) அன்புகொண்டு, உருத்திர மா மறைஉம் - உருத்திரமென்னுஞ் சிறந்தமந்திரத்தையும், செப்பினன்-உபதேசித்தான்; அவை - அவற்றை, (அருச்சுனன்), செயத்திரதன்-சயத்திரதனை; வென்று-சயித்து, தெறுவான் - அழிக்கும்பொருட்டு, பெற்றதனன்-பெற்றுக்கொண்டான்; (எ-று).*

*'ஒப்புரவோடு' என்ற பாடத்துக்கு - உபகாரமாக என்க. 'இதம் கொடு' என்பதற்கு நன்மைகளைக் கொடுக்கிற என்றும் உரைக்கலாம். வென்றுதெறுவான்=தெற்று வெல்வான் என விகுதி பிரித்துக் கூட்டினுமாம். (360)*

*223.-பிறகு வேண்டிபோது இவையெய்து மென்றுகூறிச் சிவபெருமான் திருமாலைநோக்கிப் பூமிபாரத்தைத் தீர்த்துச்செல்க எனல்.*

***யாதொருபோதுநினைத்தனையவ்வழியெய்துமுனக்கிவையென்
றோதியநேகவரங்கள்கொடுத்தபினுமையொருகூறுடையோன்
பூதலமாதிடர்தீரவருஞ்சமர்புரிதொழின்முற்றியபின்
சீதரநின்பதமேவுகமென்றருள்செய்துவிடுத்தனனே.***

*(இ-ள்.) 'யாது ஒரு போது-எந்தச் சமயத்தில், நினைத்தனை-(நீ இவற்றை) நினைத்தாயோ, அ வழி - அந்தச் சமயத்தில் (அவ் விடத்தில்), உனக்கு-, இவை - இந்த வில்லும் அம்பும், எய்தும் - வந்து சேரும்,' என்று ஓதி - என்று சொல்லி, அநேக வரங்கள் கொடுத்தபின் - பலவரங்களை (அருச்சுனனுக்கு)க் கொடுத்தருளிய பின்பு, உமை ஒருகூறு உடையோன் - உமாதேவியை ஒருபக்கத்திலுடைய சிவபிரான், (கண்ணனை நோக்கி), 'சீதர-ஸ்ரீதரனென்னும் பெயருடையவனே! பூதலம் மாது இடர் தீர - பூமிதேவியின் துன்பம் நீங்கும்படி, அரு சமர் புரி தொழில் முற்றிய பின்-செய்தற்கரிய போர் செய்யுந்தொழிலை முடித்த பின்பு, நின்பதம் மேவுக-உனது இடத்தை அடைவாயாக" என்று அருள் செய்து - என்று கருணையோடு சொல்லி, விடுத்தனன்-(இருவரையும்) அனுப்பினான்:*

*துஷ்டஅசுரர்கள் அநேகரும் கெட்ட அரசர்கள் பலரும்ஒருங்கே கூடி வசிப்பதனா லுண்டான பூமிபாரத்தை நிவிருத்திசெய்யும் பொருட்டு அப்பூமிதேவியின் பிரார்த்தனையின்படி தேவர்கள் வேண்டுகோளால் திருமால் வசுதேவகுமாரனாய்க் கிருஷ்ணனாகத் திருவவதரித்ததனால், அவ்வவதார காரியம் முடிந்தபின் தன்னடிச் சோதிக்குச் செல்லும்படி சிவபிரான் கூறினனென்க. 'நின்பதம்' என்றது - ஸ்ரீவைகுண்டத்தை. பி-ம்: சீதரநீவரகென்று தழீஇயுரை செய்தனன்மீளவுமே. (361)*

*224.-க்ருஷ்ணர்ச்சுனர் மலையினின்றுபுறப்படுகையில் சுக்ரோதயமாதல்.*

***எண்ணியகாரியமெய்தியிறைஞ்சியவிந்திரன்மாமகனுந்
திண்ணியநேமிவலம்புரிவாள்கதைசிலையுடைநாயகனும்***

***புண்ணியன்மால்வரைநின்றுரகாரிபுயங்களும்வன்கரமு
நண்ணியகாலையில்வெள்ளியெழுந்ததுஞாயிறெழுந்திசையே.***

*(இ-ள்) எண்ணிய காரியம் எய்தி இறைஞ்சிய - நினைத்த தொழிலைப் பெற்றுவணங்கின, இந்திரன் மா மகன்உம் - அருச்சுனனும், திண்ணிய - வலய, நேமி - சக்கரம், வலம்புரி - சங்கம், வாள்-, கதை-, சிலை-வில், (என்னும் பஞ்சாயுதங்களை), உடை-உடைய, நாயகன்உம் - தலைவனான திருமாலும்,*

*புண்ணியன் மால் வரை நின்று - பரிசுத்தமூர்த்தியான சிவபிரானது பெரிய கைலாசகிரியினின்று, உரக அரி-நாகங்களுக்குப் பகைவனான கருடனது, புயங்கள் உம்-தோள்களையும், வல் கரம்உம் - வலிய கைகளையும், நண்ணிய காலையில்-ஏறிச்சேர்ந்த பொழுதில், ஞாயிறு எழும் திசை - சூரியனுதிக்கும் திக்கில், வெள்ளி எழுந்தது-சுக்கிரன் உதித்தது; (எ-று.)*

*திருமாலின் சக்கரம் சுதர்சந மென்றும், சங்கம் பாஞ்சஜந்ய மென்றும், வாள் நந்தகமென்றும், கதை கௌமோதகீ யென்றும், வில் சார்ங்கமென்றும் பெயர் கூறப்படும். உரகாரி - வடமொழித் தொடர். நாயகன் தோளிலும் இந்திரன்மகன் கரத்திலும் நண்ணிய என மாறி இயைதலால்,* ***எதிர்நிரனிறைப்பொருள்கோளாம்.*** *வெண்ணிற முடைமையால், சுக்கிரனுக்கு 'வெள்ளி' என்று பெயர். 'வெள்ளியெழுந்து ஞாயிறெழுந்திசை' என்றதனால், வைகறைப் பொழுதாயிற்று என்றவாறு; சுக்கிரோதயம், இரவின் இறுதிப்பாகத்திலே உளதாவது.* ***பி-ம்:*** *புண்ணியமால், (362)*

*225.-அருச்சுனன்செய்த சபதம் முதலியவற்றைச் சொல்லிவருமாறு*
*தருமபுத்திரன் கடோற்கசனைத் துரியோதனாதியரிடம் அனுப்புதல்.*

***இங்கிவர்மூவருமேகினர்மீளுமுனெறிமுரசக்கொடியோ***
***னங்குரையாடியதுரைசெயின்மண்மிசையார்வியவாதொழிவார்***
***பங்குனனோதியவஞ்சினமும்பசுபதியிடையேகியதுங்***
***கங்குலினேவினனுரைசெய்கவென்றுகடோற்கசமீளியையே.***

*(இ-ள்.) இங்கு-இவ்விடத்து, இவர் மூவர்உம்-(கண்ணன் அருச்சுனன் கருடன் என்னும்) இம்மூன்றுபேரும், ஏகினர் மீளும் முன்-சென்று திரும்பி வருவதற்கு முன்னே, எறி முரசம் கொடியோன்-அடிக்கப்படுகிற பேரிகையின் வடிவத்தை யெழுதின கொடியையுடைய தருமன், அங்கு-அவ்விடத்தில் (பாசறையில்) உரை ஆடியது - சொல்லியதை, உரை செயின்-சொன்னால். மண்மிசை-பூலோகத்தில், வியவாது ஒழிவார் - (கேட்டு) ஆச்சரியப் படாதொழிபவர், யார்-யாவர் (உளர்)? (எவருமில்லை): (அது யாதெனில்):-'பங்குனன்-அருச்சுனன், ஓதிய-(நாளை அஸ்தமனத்திற்குள் சயத்திரதனைத் தான் கொல்லாவிட்டால் அக்கினிப் பிரவேசஞ்செய்வதாகச்) சொன்ன, வஞ்சினம்உம் - சபதத்தையும், (அந்தச் சபதத்தை நிறைவேற்றுதற்கு ஏற்றகருவி பெறும் பொருட்டு), பசுபதியிடை ஏகியதுஉம்-(அவ்விரவிற்) சிவபிரானிடத்து(க் கண்ணனோடு) சென்றதையும், உரை செய்க-(துரியோதனாதியர்க்கு நீ சென்று) சொல்வாயாக,' என்று- ,கடோற்கசன்மீளியை - கடோற்கசனாகிய வீரனை, கங்குலின்-(அந்தப்பதின்மூன்றாநாள்) இராத்திரியிலே, ஏவினன்-(தருமன்) கட்டளையிட்டான். (363)*

*226.-கடோற்கசன் மாற்றாருடன் சபதம்முதலியவற்றை*
*எதற்காகச் சொல்லுவதென்று தருமபுத்திரனை வினாதல்.*

***மற்றவன்முந்துறுதந்தையைவந்துவணங்கிமுன்வஞ்சனையிற்***
***செற்றவர்தம்முடனுற்றதுசொல்வதுசேவகமோவறிவோ***
***கொற்றவர்மாமுடிகமழ்கழலாய்வலிகூர்திறலுஞ்செயலு***
***மற்றவர்போலவுரைப்பதென்னென்றுளழன்றுபுகன்றனனே.***

*(இ-ள்.) (அதுகேட்டு), மற்று-உடனே, அவன்-அக்கடோற்கசன், முந்து உறு தந்தையை-முன்னே பொருந்தின [பெரிய] பிதாவான தருமனை, வந்து வணங்கி - (அருகில்) வந்து நமஸ்கரித்து, 'முன் - முன்பு, வஞ்சனையின் - வஞ்சனைவழியால், செற்றவர்தம்முடன் - (அபிமனை) அழித்த அப்பகைவர்களோடு, உற்றது சொல்வது- இங்கு நடந்த உண்மையைக் கூறுவது, சேவகம்ஓ - பராக்கிரமமாகுமோ? அறிவுஓ - நல்லறிவின்பயனாகுமோ? [இரண்டுமாகா என்றபடி]; கொற்றவர் மா முடி கமழ் கழலாய்-வெற்றியையுடைய அரசர்களது சிறந்த சிரசின்மேல் பரிமளிக்கிற திருவடித் தாமரையையுடையவனே! வலி கூர் திறல்உம் - வலிமையோடு மிகுந்த பராக்கிரமமும், செயல்உம்- (அதற்கு ஏற்ற) வினைத்திறமும், அற்றவர் போல- ஒழிந்தவர் போல, உரைப்பது-(நீ இவ்வாறு)*

*சொல்வது, என் - என்னகாரணம்?' என்று-, உள் அழன்று- மனங்கொதித்து, புகன்றனன்-சொன்னான்; (எ-று.)*

*வஞ்சனையிற் செற்றவர் - இளமைமுதல் பலவஞ்சகங்களால் அழித்தவருமாம். அரசர்கள் தருமன்பாதத்தின்கீழ்த் தம்தலையை வைத்து வணங்கும்பொழுது, இவ்வடிமலர் அவர்முடிமேல் மணப்பதென்க. கமழ் என்ற வினைக்குஏற்ப, கழல், தாமரையாக்கப்பட்டது.*
*(364)*

### *227.-முந்துறச்சொல்லிவெல்வதே பொய்ம்மையில்லாதவெற்றிவழிஎன்று தருமன்சமாதனங்கூறுதல்.*

***திறனறியாமலுரைத்தனைமாருதிசிறுவனெனும்படிநீ***
***மறநெறியேன்றுவயிர்த்தவர்கொல்வதுவஞ்சனையோவிரகோ***
***வறநெறியேபொருதல்லதுவெல்லுதலாண்மைகொலோவழகோ***
***விறனெறியாவதுபொய்யிலதென்றனன்மெய்ம்மையுணர்ந்திடுவான்***

*(இ-ள்.) (அதுகேட்டுக் கடோற்கசனை நோக்கி), மெய்ம்மை உணர்ந்திடுவான்- தத்துவங்களை யறிந்திட்டவனான தருமன், 'நீ-, மாருதி சிறுவன் எனும்படி- வீமன்மகனென்றற்கு ஏற்றபடி, திறன் அறியாமல் உரைத்தனை - தகுதியை அறியாமற்கூறினாய்; மறம் நெறி - கொடுமையானவழியை, ஏன்று மேற்கொண்டு, வயிர்த்தவர்கொல்வது - வைரங்கொண்ட பகைவரைக்கொன்றிடுவது, வஞ்சனைஒ விரகுஓ-வஞ்சகமோ (வேறுவகை) உபாயமோ? [வஞ்சனையேயாம் என்றபடி]: அறம் நெறிஏபொருது அல்லது - தருமமார்க்கமாகப் போர்செய் தல்லாமல், வெல்லுதல்-சயித்தல்,(நமக்கு), ஆண்மை கொல்ஓ - பராக்கிரமமோ? அழகுஓ - அழகுடையதோ?[இரண்டும் அன்று என்றபடி]; விறல் நெறிஆவது - வெற்றியின் வழியாவது, பொய்இலது -பொய்ம்மையில்லாததே, என்றனன் - என்றுகூறினான்; (எ - று.)*

*முன் சிலசமயங்களில் வீமன் செய்வன தவிர்வன ஆராயாமலும் சாந்த குணத்தை மேற்கொள்ளாமலும் கோபத்தையே பிரதானமாகக் கொண்டு தருமன்கருத்துக்கு மாறுபாடாகக் கூறியுள்ளதனால், 'தந்தைபோல்வான் மைந்தன்' என்ற முறைப்படி நீ உன் தந்தையான வீமன்போலவே பேசினாயென்று கடோற்கசனைத் தருமன் கூறினான். அங்ஙனம் வீமன் பேசுதலைக் கீழ்க் கிருட்டிணன் தூது சருக்கத்தில் "விரிகுழற் பைந்தொடி நாணி வேத்தவையின் முறையிடுநாள் வெகுளே லென்று, மரபினுக்கு நமக்கு முலகுள்ளளவுந் தீராத வசையே கண்டாய், எரிதழற் கானக மகன்று மின்னமும் வெம்பகை முடிக்க விளையா நின்றாய், அரவுயர்த்தோன் கொடுமையினு முரசுயர்த்தோ யுனதருளுக் கஞ்சி னேனே" என்றது முதலியவற்றால் அறிக. மறநெறியன்றி வயித்தவர் சொல்வதுஎன்ற பாடத்துக்கு - வீரமார்க்கத்தைவிட்டு (உன்போல) முன்கோபங் கொண்டவர்கள் கூறுவது வஞ்சனையாகுமே யன்றி அறிவாகாது எனக் கருத்துக்கொள்ளுக.*
*(365)*

### *228.-கடோற்கசன் சென்று துரியோதனன்வாயிலையடைந்து ஒன்றுசொல்லிக் கூப்பிடுதல்.*

***நிருதனகைத்துவணங்கிநிணங்கமழ்நீளிலைவேலினொடுங்***
***கருதலர்துற்றியபாசறையான்றொர்கணப்பொழுதிற்புகுதா***
***வொருதனிலக்கணமைந்தனிறந்தனனென்றமுதுள்ளழியும்***
***விருதுடைவித்தகன்வாயிலின்றுவிளித்தனனோருரையே.***

*(இ-ள்.) (அதுகேட்டவுடன்), நிருதன் - இராக்கதனாகிய கடோற்கசன்,-நகைத்து- சிரித்து, வணங்கி - (தருமனை) நமஸ்கரித்து,- நிணம் கமழ்-(முன்பு குத்தப்பட்ட பகைவர்களது) உடற் கொழுப்பு நாறுகிற, நீள்-நீண்ட, இலை-அரசிலைவடிவமைந்த, வேலினொடுஉம்- வேலாயுதத்துடனே, அன்று - அப்பொழுது, ஓர் கணம் பொழுதில் - ஒரு க்ஷணப்பொழுதிலே, கருதலர் துற்றிய பாசறை -*

*பகைவர்கள் நிறைந்த (எதிர்ப்) படைவீட்டை, புகுதா - சார்ந்து,- ஒரு - ஒப்பற்ற, தன் இலக்கண மைந்தன் - தனது லக்ஷ்ணகுமாரன், இறந்தனன் - (போரில்) அழிந்தான், என்ற - என்றகாரணத்தால், அழுது,- உள் அழியும்-மனம் வருந்திய, விருதுஉடை வித்தகன்- (அன்றைப்போரிலேயே அபிமனைக் கொல்வித்ததனால்) வெற்றியையுடைய சதுரனான துரியோதனனது, வாயிலில் - (இருப்பிடத்தின்) வாசலிலே, நின்று-, ஓர் உரை விளித்தனன் -ஒருவார்த்தைசொல்லிக் கூப்பிட்டான் ; (எ - று.)-தருமன் கூறியதை மடமையாகக் கருதியதனால், நிருதன் நகைத்தான். (366)*

### *229.-வாயில்காவலரிடம் தான் வந்த காரணத்தையும், தன்னை இன்னானென்பதையும் கடோற்கசன் தெரிவித்தல்.*

**எதிரெதிர்கொற்றவன்வாயிலினின்றவர்யாரெனவெய்துதலும்**
**அதிர்முரசக்கொடியோனரவக்கொடியரசனிடைப்பகர்வான்**
**முதிரவுரைத்ததொர்மொழியுளதம்மொழிமொழிதரவந்தனன்யா**
**னெதிரறுவெற்றியரிக்கொடியோன்மகனென்றனன்விக்ரமனே.**

*(இ-ள்.) (அப்பொழுது), கொற்றவன் வாயிலில் நின்றவர்- வெற்றியையுடைய துரியோதனராசனது மனைவாசலில் (காவல் செய்து) நின்றவர்கள், எதிர் எதிர் - எதிரிலே எதிரிலே, யார்என - (நீ) யார்? என்று வினாவிக்கொண்டு, எய்துதலும் - வந்தவளவிலே-,விக்ரமன் - பராக்கிரமசாலியான கடோற்கசன்,-'அதிர் முரசம் கொடியோன்- முழங்குகிற பேரிகையையெழுதிய கொடியையுடைய தருமன், அரவம் கொடி அரசனிடை - பாம்புக்கொடியையுடைய துரியோதனனிடத்து, பகர்வான் - சொல்லும்படி, முதிர உரைத்தது - நன்றாகக் கூறினதான, ஓர் மொழி - ஒருவார்த்தை, உளது - இருக்கிறது; அ மொழி - அவ்வார்த்தையை, மொழிதர - (அத்துரியோதனனுடன்) சொல்லுதற்கு, வந்தனன் - வந்தேன்: யான்-, எதிர் அறு வெற்றிஅரி கொடியோன் மகன் - ஒப்பில்லாத சயத்தையுடைய சிங்கக்கொடியுடையனான வீமனது புத்திரன்,' என்றனன் - என்றுசொன்னான்:*

*மொழி - கருவியாகுபெயராய், பலசொற்களாலாகிய வாக்கியத்தை யுணர்த்திற்று.* ***பி - ம் :*** *அச்சொன்மொழிந்திட. (367)*

### *230.-கடோற்கசன் உத்தரவுபெற்று பாசறையுட்சென்று, சொன்னமை தெரிவிக்கத் துரியோதனனிடம் உடன்பாடுபெறுதல்.*

**அம்மொழிதீயுருமேறெனநீடவையரசர்செவிப்படவோர்,**
**செம்மொழியற்றவன்மொழிவழிசென்றொருசிறிதுமதித்தருளா,**
**னும்மொழிவிட்டொரு மெய்ம்மொழிகேளென**
**நோதகுநெஞ்சினனும்,**
**வெம்மொழிவித்தகவெம்மொழிநுந்தைதன்**
**மெய்ம்மொழியென்றனனே.**

*(இ-ள்.) அ மொழி - அந்தக்கடோற்கசன்வார்த்தை, தீ உரும் ஏறு என-கொடிய பேரிடிபோல, நீடு அவை அரசர் செவி பட - (பாசறையினுள்) பெரிய சபையிலுள்ள அரசர்களது காதுகளிற் பட, (உடனே), ஓர் செம்மொழி அற்றவன்மொழிவழி-நல்ல வார்த்தையொன்று மில்லாதவனாகிய துரியோதனன் கட்டளையிட்ட சொல்லின்படி, சென்று - (கடோற்கசன் உள்ளே) போய், ஒரு சிறிது உம் மதித்தருளான் - (அங்குள்ளவர்கள் எவரையும்) மிகச்சிறிதும் இலட்சியஞ் செய்யாதவனாய், 'நும் மொழி விட்டு- உங்கள் வார்த்தையைநிறுத்திவிட்டு, ஒரு மெய்மொழிகேள்-(நான் சொல்லும்) ஒரு சத்தியமான வார்த்தையைக் கேட்பாயாக,' என-என்று சொல்ல,- நோதகு நெஞ்சினன்உம்- (புத்திரசோகத்தால்) வருந்திய மனத்தையுடைய அத்துரியோதனன்,'வெம் மொழி - வித்தக - கடுமையான சொல்லையுடைய தூதனே!நுந்தை தன் மெய் மொழி- உன் பெரிய தந்தையின் உண்மை வார்த்தை, எ மொழி -எந்தவார்த்தை?' என்றனன்-என்று வினாவினான்; (எ - று.)*

*செம்மொழி - நீதியும் இனிமையு முடைய வார்த்தை, தான் கூறும் தருமன் வார்த்தையை 'ஒரு மெய்ம்மொழி' என்றதனால், நும்மொழி பொய்ம்மொழி என்பது பெறப்படும்; இது - **அருத்தாபத்தி.** வித்தகன் - தூதன் : "வித்தகர் வினையுரைப்போர் விதியுளி*

*வழியுரைப்போர், உத்தம மான பண்புற் றுரைப்பவர் தூதராகும்" என்பது நிகண்டு. (368)*

*231.- இதுவும், அடுத்தகவியும்- ஒருதொடர்: கடோற்கசன் அருச்சுனனது சபதம் முதலியனதெரிவித்து, தன்னைத்தூதனுப்பினதன் காரணத்தையும் தெரிவித்தமை கூறும்.*

***தன்றிருமைந்தனைமௌலிதுணித்தசயத்திரதன்றனைவாள்***
***வென்றிகொள்காவலர்காவன்மிகுப்பினும்வெயிலவன்வீழ்வதன்முன்***
***கொன்றிடுவேனதுதப்பினருங்கனலூடுகுதித்திடுவே***
***னென்றுமொழிந்தரன்வாழ்கயிலாயமுமெய்தினன்வில்விசயன்.***

*(இ-ள்.) தன் திரு மைந்தனை - தனது சிறந்த புத்திரனான அபிமனை, மௌலிதுணித்த - தலையைத் துண்டித்த, சயத்திரதன்தனை- சயத்திரதனை, வாள் வென்றிகொள் காவலர் - ஆயுதங்களால் வெற்றியைக்கொள்ளும் அரசர்கள், காவல்மிகுப்பின்உம் - காத்திடுதலை மிகுதியாகச்செய்தாலும், வெயிலவன் வீழ்வதன் முன் -(நாளைச்) சூரியன் அஸ்தமித்தற்குமுன்பு, கொன்றிடுவேன்-; அது தப்பின் - அங்ஙனச்செய்தல் தவறினால், அரு கனலூடு குதித்திடுவேன் - (மீளுதற்கு) அரிய அக்கினியிலே பிரவேசித்துவிடுவேன்; என்று மொழிந்து - என்று சபதஞ்செய்து, வில்விசயன் - வில்லில் வல்ல அருச்சுனன், (அதற்குஏற்ற கருவி பெறும்பொருட்டு), அரன்வாழ் கயிலாயம்உம் எய்தினன்- சிவபிரான் வாழ்கிறகைலாசகிரியையடை தலையுஞ் செய்தான்; (எ-று.) - **பி - ம்:** காவல்வீரர் தடுப்பினும். (369)*

***232. வஞ்சனை யாலம ரிற்பகை தன்னைம லைப்பது***
***பாதகமென்,***
***றஞ்சின னாதலி னீயறி யும்படி யையன்வி டுத்தனனா,***
***லெஞ்சினனாளையுன் மைத்துன னென்றுகொ***
***ளென்றனன் வன்றிறல்கூர்,***
***நெஞ்சினில் வேறொரு சஞ்சல மற்றநி சாசரன்***
***மாமருகன்.***

*(இ -ள்.) 'வஞ்சனையால்-, அமரில்-போரில், பகைதன்னை - பகைவனை, மலைப்பது-அழிப்பது, பாதகம்-தீவினை,' என்று-என்று எண்ணி, அஞ்சினன் ஆதலின் - பயந்தா னாதலால், நீ அறியும்படி - நீ (இவ்வுண்மையை) உணரும்படி, ஐயன்- (என் தலைவனானதருமன், விடுத்தனன் - (என்னைத்) தூதனுப்பினான்; 'நாளை - நாளைக்கு, உன் மைத்துனன்-உனது உடன்பிறந்தவள் கணவனானசயத்திரதன், எஞ்சினன்- இறந்தொழிந்தான்,' என்று கொள் - என்று நிச்சயித்துக்கொள், என்றனன் - என்றுகூறினான்: (யாவனெனில்),- வல்திறல் கூர் - கொடிய பராக்கிரமம் மிக்க, நெஞ்சினில் - மனத்தில், வேறு ஒரு சஞ்சலம் அற்ற - (அதற்கு) மாறான கவலைசிறிதுமில்லாத, நிசாசரன் மா மருகன் - (இடிம்பனாகிய) அரக்கனது சிறந்த மருமகனான கடோற்கசன்; (எ - று.)*

*இங்கே, 'வஞ்சனை' என்றது - முன்புதெரிவியாமற் பின்பு கொல்வதனையே. நாளை எஞ்சினன் - தெளிவுபற்றிய காலவழுமைதி. நிசாசரன்மாமருகன் - இடிம்பனுடன்பிறந்த இடிம்பியின்மகன். (370)*

*வேறு.*

*233.- இதுமுதல் நான்குகவிகள்-ஒருதொடர்: அதுகேட்டுத் துரியோதனன் கடோற்கசனைநோக்கிக் கூறுவன.*

***மன்மைந்தர் பலரொடும்போய் மறித்தொருவர் மீளாமன்***
***மலைந்து வீழ,***
***வென்மைந்த னிறந்திடவும் யாதொன்றும் புகலாமலிருக்கின்***
***றேன்யான்,***
***றன்மைந்த னிறந்தனனாந் தான்றழலின் மூழ்குவனாஞ்***
***சபதங் கூறி,***
***வின்மைந்தின் மிகுந்தவருக் கழுதிரங்கி யரற்றுவது வீரந்***
***தானோ.***

*(இ-ள்.) மன் மைந்தர் பலரொடுஉம் - இராசகுமாரர்கள் அநேகருடனே, போய்- (அபிமனையெதிர்த்துச்) சென்று, மறித்து ஒருவர் மீளாமல்-மறுபடி ஒருவருந்திரும்பிவராமல், மலைந்து வீழ- போர்செய்து (அவனால்) இறந்து விழ, என்மைந்தன்- எனது மகனான இலக்கணனும், இறந்திடஉம்- (அவனால்) அழிவுபட்டிருக்கவும், யான்- (இராசராசனான) நான், யாது ஒன்றுஉம் புகலாமல் இருக்கின்றேன்- யாதொருசபதத்தையுஞ் சொல்லாமலிருக்கிறேன்; (அங்ஙனமிருக்க), தன் மைந்தன் இறந்தனன் ஆம் - தன்மகனான அபிமன் இறந்துவிட்டானாம்; (அதற்காக), தான் தழலில் மூழ்குவன்ஆம் - அருச்சுனன்தான் அக்கினியிற் பிரவேசிப்பானாம்; வில் மைந்தில் மிகுந்தவருக்கு - வில்வலிமையில் மிக்க வீரர்கள் இறந்ததற்காக, அழுது - புலம்பி, இரங்கி- விசனமுற்று, சபதம் கூறி- சபதவார்த்தைசொல்லி, அரற்றுவது-கதறுவது, வீரம்தான்ஓ - பராக்கிரம நிலையாகுமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)*

*இதுமுதற் பதின்மூன்று கவிகள் - இச்சருக்கத்து **145** - ஆங் கவி போன்ற* ***அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள்.*** *(371)*

*234 .* ***பயத்திரவினடுங்கியரன்பருப்பதம்புக்கவன்கொடுத்த***
***படையும்வாங்கி,***
***வயத்திரதமால்கடவவந்தெதிர்தோன்றுவனாகின்***
***மகரமோதுங்.***
***கயத்திரவிவிழுவதன்முன்கையறுதன்புதல்வனைப்***
***போற்களத்தின்மாளச்,***
***சயத்திரதன் கொடுங்கணையாற்றான்படுதலு***
***றுதியெனச்சாற்றுவாயே.***

*(இ-ள்.) (அருச்சுனன்), நடுங்கி - (தன்சபதம் நிறைவேறுமோ மாட்டாதோ என்று) மிக அச்சங்கொண்டு, பயத்து இரவில் - அச்சந் தருவதான இராத்திரியில், அரன் பருப்பதம் புக்கு- சிவனது கைலாச பருவதத்துக்குச் சென்று, அவன் கொடுத்த படைஉம் வாங்கி - அச்சிவபிரான்கொடுத்த ஆயுதங்களையும் பெற்றுக்கொண்டு, வயத்து இரதம் மால் கடவ - வலிமையையுடைய தேரைக் கிருஷ்ணன் செலுத்த, எதிர் வந்து தோன்றுவன் ஆகில் - (நாளைப்போரில்) எதிரில்வந்து நிற்பானானால்,- மகரம் மோதும் கயத்து - சுறாமீன்கள் பாய்கிற நீர்நிலையாகிறகடலிலே, இரவி விழுவதன்முன் - சூரியன் வீழ்ந்து அஸ்தமித்தற்கு முன்பு, கை அறுதன் புதல்வனை போல்- (இன்று) செயலற்று அழிந்த தன்மகனானஅபிமனைப்போலவே. களத்தில் - போர்க்களத்தில், மாள-உயிரழிய, சயத்திரதன்கொடுகணையால் - சயத்திரதனது கொடிய அம்பினால், தான் படுதல் - அவ் வருச்சுனன்தான் இறப்பது, உறுதி - நிச்சயம், என - என்று, சாற்று வாய்- (அவனுக்கு நீ போய்ச்) சொல்லுவாய்; (எ-று.)*

*பிறர் பலர் கூறுங்கொள்கையைப்பற்றி, கண்ணனைத் துரியோதனன் 'மால்' என்றான். மகரம் - இயல்பிற் கடலில்மாத்திரமே வாழும் பெருமீன் கயம் - ஆழமான இடம். இப்பாட்டில்,* **திரிபு** *என்னுஞ் சொல்லணி காண்க. (372)*

***235. என்னினும்பார்த்தனக்குரியன்சிலைத்தொழிலிற்சிலைக்குரு வாயெவரும்போற்று,***
***மன்னினுந்தான்மிகவலியன்றண்டெடுத் தாலுந்தையினும் வலியன்சால,***
***வுன்னினுந்தோளுரனுடையன்மதி யாமலிப்படி நீயுரைக்கலாமோ.***
***தன்னினும்போர்க்கெளியனோசயத்திரதன்றானென்று சாற்றுவாயே.***

*(இ-ள்.) தான் - சயத்திரதன், பார்த்தனக்கு - உலகத்தை அரசாளுந்திறத்தில், என்னின்உம் - (இராசராசனான) என்னைக்காட்டிலும், உரியன் - உரியவல்லமையுடையான்; சிலை தொழிலில்- வில்லினாற்செய்யும் போர்த்தொழிலில், சிலை குரு ஆய் எவர்உம் போற்றும் மன்னின்உம்- வில்லாசிரியனாய் எல்லாராலுஞ்சிறப்பித்துக்கூறப்படுகிற தலைவனான துரோணனைக்காட்டிலும், மிகவலியன் - மிகவலிமையுடையான்; தண்டு எடுத்தால் - கதாயுதத்தை யேந்தி வந்தால்,உந்தையின்உம் சால வலியன் - உன் தந்தையான வீமனிலும் மிக வலிமையுடையான்; உன்னின்உம் - (அரக்கனான) உன்னைக் காட்டிலும், தோள் உரன் உடையன் - மிக்கதோள்வலிமையுடையான், (இங்ஙனமிருக்க), மதியாமல் - (அவனை) லட்சியஞ்செய்யாமல், நீ -, இ படி உரைக்கல் ஆம்ஓ- இவ்வாறு கூறுதல்தகுதியோ? சயத்திரதன்-, தான்-, தன்னின்உம் - அருச்சுனனினும், போர்க்கு-யுத்தஞ்செய்தலில், எளியன்ஓ - கீழ்ப்பட்டவனோ? [அல்லன்], என்று-, சாற்றுவாய்-(நீ சென்றுஅருச்சுனனுக்குச்) சொல்லுவாய்.*

*'என்னினும் பார்த்தனக் குரியன்' என்றதனால் , துரியோதனனது அரசாட்சிச்செருக்கு விளங்கும். 'சிலைத்தொழிலில் சிலைக்குருவாய் எவரும் போற்றும் மன்னினும் தான் மிகவலியன்' என்றதனால், அருச்சுனனை வில்லுக்கு ஒருவனாக மதியாமையோடு குருவையும் அலட்சியஞ்செய்தல் வெளிப்படும். வலியில்மிக்கவனானான வீமனைக் கதைப்போருக்குச் சிறப்பாக எடுத்து, அவன்மைந்தனானகடோற்கசனுக்கு அவமானமுண்டாகுமாறு, அவனினுஞ் சயத்திரதனைவலியனென்றான். 'உன்னினுந் தோளுரனுடையன்' என்றது, அவனைக் கீழ்ப்படுத்த.'இப்படி நீ உரைக்கல்' என்றது - கீழ் அவன்' எஞ்சினன் நாளை உன்மைத்துனன்என்றுகொள்" என்ற தனை.* **பி-ம்** *: மிகப்பெரியன். (373)*

***236. ஆளையாணிலையறிவதல்லதுமற்றறிபவர்யாரணிந்தபோரி, னாளையார் வெல்வரெனத் தெரியுமோவென நவின்று நகைத்தான்மன்னோ,***
***பாளைவாய்நெடுங் கமுகின் மிடறொடியக் குலைத்தெங் கின்பழங்கள்வீழ, வாளைபாய்குருநாடு மெந்நாடுமுழுதாளுமன்னர் கோமான்.***

*(இ-ள்.) ஆளை- (ஒரு) மனிதனை, ஆள் - (மற்றொரு) மனிதன், நிலை அறிவது அல்லது - (எதிரில்நின்று காணப்படும்) வடிவத்தை மாத்திரம் அறிவதல்லாமல், மற்று- மற்றை வலிமை திறமைமுதலிய குணாதிசயங்களை, அறிபவர் - அறியவல்லவர், யார் - எவர்? (ஆதலால்), அணிந்த போரில் - அணி வகுத்துச்செய்யும் யுத்தத்தில், நாளை - நாளைக்கு, யார் வெல்வர் - எவர் சயிப்பர்? என - என்று, தெரியும்ஓ - (இன்றைக்குத்) தெரியுமோ? என - என்று, நவின்று- சொல்லி, நகைத்தான் - (பரிகாசமாகச்) சிரித்தான்; (யாவனெனில்?) - பாளை வாய் -பாளை யமைந்த, நெடுங்கமுகின் - நீண்ட பாக்கு மரத்தின், மிடறு - கழுத்து[மேலிடம்], ஒடிய - ஒடிபடவும், குலை தெங்கின் பழங்கள் - குலையாகவுள்ளதென்னைமரத்தின் முதிர்ந்த காய்கள், வீழ - கீழ்விழவும், வாளை பாய் - வாளைமீன்கள் தாவிப் பாயப்பெற்ற, குரு நாடுஉம்- குருநாட்டையும், எ நாடுஉம்-மற்றை*

*யெல்லாநாடுகளையும், முழுது ஆளும் - முழுவதும் அரசாளுகிற, மன்னர்கோமான் - ராஜராஜனான துரியோதனன்; ( எ-று.)*

*'நாளை யார்வெல்வ ரெனத் தெரியுமோ' என்ற துரியோதனனது உட்கோள், அருச்சுனனைச் சயத்திரதன் வெல்வானென்பது. மீனின்கொழுமையைக் கூறி, அதனால், நாட்டுவளத்துக்குப் பிரதானகாரணமான நீர்வளச்சிறப்பைத் தெரிவித்தவாறு;இங்ஙனம் வருணித்தல் கவிகளுக்கு இயல்பு. தெங்கின் முற்றின நெற்று பழமெனப்படுவதை "காய்மாண்ட தெங்கின் பழம் வீழ" எனச் சிந்தா மணியிலுங்காண்க. மன், ஓ - ஈற்றசை. (374)*

*237.- இதுவும், மேற்கவியும் - கர்ணன் கூறுதல்.*

***தாரரசன்மகன் றுச்சாதனன் மகன் சல்லியன்மகன் வேற்***
***சகுனியென்னும்,***
***பேரரசன்மகன் முதலாவெத்தனைபேர் பட்டாலும்***
***பெரியதன்றே,***
***பாரரசாளுதற்கிருந்த பார்த்தன்மா மகனொருவன்***
***பட்டானாகி,***
***லாரரசுக்கின்யுரியா ரந்தோவென்றுரைத்தான்மற்***
***றங்கர்கோமான்.***

*(இ-ள்.) தார் அரசன் மகன்-வெற்றிமாலையையுடைய துரியோதனது குமாரனான இலக்கணனும், துச்சாதனன் மகன் - துச்சாசனனது புத்திரனான துச்சனியும், சல்லியன் மகன் - சல்லியனது புதல்வனும், வேல் சகுனி என்னும் பேர்அரசன் மகன் -வேலில்வல்ல சகுனியென்னும் பெரிய அரசனது மைந்தனும், முதல்ஆ-முதலாக, எத்தனை பேர் பட்டால்உம் - எத்தனையோபேர் இறந்தாலும், பெரியதுஅன்றே - (அதுவெல்லாம்) பெரியதன்றாம்; அரசு ஆளுதற்கு இருந்த - பூமிமுழுவதையும் (இனி) அரசாட்சிசெய்ய இருந்த-பார்த்தன் மா மகன் ஒருவன் - அருச்சுனனது சிறந்த பிள்ளையான அபிமனொருத்தன், பட்டான் ஆகில்- இறந்தானானால், இனி அரசுக்கு ஆர் உரியார்-இனி அரசாட்சிக்கு எவர் உரியர்? அந்தோ - ஐயோ! என்று -, மற்று - பின்பு, அங்கர் கோமான் - அங்கநாட்டார்க்குத்தலைவனான கர்ணன், உரைத்தான் - (பரிகாசமாகக்) கூறினான்;*

*இராச்சியத்துக்கு உரியவரான துரியோதனன் முதலியோரது மக்கள் இறந்ததை அவர்கள் பெரிதும் பாராட்டாமலிருக்க, அர*

*சின்றி அலைதற்கே யுரிய அபிம னிறந்ததற்கு அருச்சுனன் அரற்றுதல் ஆச்சிரிய மென்றபடி. (375)*

***238. அங்கிருந்துசயத்திரதனாவிகவர்ந்திடுவலெனவாண்மை***
***கூறிப்,***
***பங்கிருந்தவுமாபதிபாற்பணிந்துவரம்பெறச்சென்றான்***
***பார்த்தனாகிற்,***
***கொங்கிருந்ததாராய்நின்குடைநிழற்கீழிதுகாலங்***
***கூட்டங்கூடி,***
***யிங்கிருந்தவேழையரேமென்செயமற்றிருக்கின்றே***
***மென்றுஞ்சொன்னான்.***

*(இ-ள்.) கொங்கு இருந்த தாராய் - வாசனை தங்கிய மாலையையுடைய துரியோதனனே! பார்த்தன் - அருச்சுனன், அங்கு இருந்து - எதிர்ப்பக்கத்திலிருந்து, சயத்திரன் ஆவி கவர்ந்திடுவல் என ஆண்மை கூறி - 'சயத்திரதனது உயிரைக் கவர்ந்திடுவேன்' என்று வீரவாதஞ்சொல்லி, பங்கு இருந்த உமாபதிபால் - (தனது) வாமபாகத்திலுள்ள உமாதேவிக்குக் கணவனான சிவபிரானிடத்து, பணிந்து வரம் பெற- வணங்கி வரம்பெறும்பொருட்டு, சென்றான் ஆகில் - போயினனானால்,- இங்கு-*

*இந்தப்பக்கத்தில், நின் குடை நிழல் கீழ் - உனது குளிர்ந்த அரசாட்சியின் கீழ், இதுகாலம் - இவ்வளவு காலமாய், கூட்டம் கூடி இருந்த - திரண்டிருந்த, ஏழையரேம்-எளியவரான நாங்கள், மற்று என் செய இருக்கின்றேம் - (அவ்வருச்சுனனைஅழிப்ப தல்லாமல்) வேறு யாதுசெய்ய இருக்கிறோம்? என்றுஉம் சொன்னான் -என்றும் கூறினான், (கர்ணன்); (எ -று.) - கீழ்ப்பாட்டு - சபையிற் பொதுவாகவும்,இப்பாட்டு - துரியோதனனை நோக்கியுங் கூறியதெனக் காண்க.*

*கர்ணனும் அருச்சுனனும் இளமைதொடங்கி ஒருவர்க்கொருவர் வைரங் கொண்டவ ராதலாலும் ஒருவரையொருவர் போரிற் கொல்வதாகச் சபதஞ் செய்திருத்தலாலும், இங்ஙனம் கர்ணன் அருச்சுனன்விஷயத்தில் அலட்சியமாகப்பேசினான். 'ஏழையரேம்' என்று தம்மை யிழித்துக்கூறி, அதனால் தமது சிறப்பை வெளியிடுகிறான்; இது செருக்கின் காரியம். **பி - ம்** :இதுகாறும். (376)*

*239.-மூன்றுகவிகள் - அதுகேட்டுக் கடோற்கசன் கூறுதலைக் தெரிவிக்கும்.*

***இவன்மொழிந்தவிகழுரைகேட்டிடிம்பன்மருமகன்வெகுளூற்
றென்சொன்னாலு,
மவனிதலமுழுதுமினியரசாளநினைந்திருந்தீரறி
விலீர்காள்,
சிவனெரிசெய்புரம்போலும்பாடிவீடழலூட்டிச்சேனை
யாவும்,
பவனன்மகன்மகனென்னும்பரிசறியத்தொலைத்தீடுபடுத்து
வேனே.***

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

*(இ-ள்.) இவன் மொழிந்த - கர்ணன் (இவ்வாறு) சொன்ன, இகழ்உரை - நிந்தைமொழியை, கேட்டு-, இடிம்பன் மருமகன்- இடிம்பனது மருமகனான கடோற்கசன், வெகுளூற்று - கோபங் கொண்டு , (கூறுவான்;-) அவனிதலம் முழுதுஉம் - பூலோகம் முழுவதையும், இனிஅரசு ஆள நினைந்து இருந்தீர் - இனிஅரசாட்சி செய்ய எண்ணியிருந்தவர்களான அறிவு இலீர்காள் - புத்தியில்லாதவர்களே ! என் சொன்னால்உம் - (நீங்கள்) எதைச்சொன்னாலும்,*

*(லக்ஷயஞ்செய்யாமல் நான்), சிவன் எரி செய் புரம் போல் - சிவபிரான் எரித்திட்ட திரிபுரத்தைப்போல, உம் பாடி வீடு - உங்களுடைய படைவீட்டை, அழல் ஊட்டி - தீயுண்ணச்செய்த, சேனையாஉம்- (உங்கள்) சேனைகளெல்லாவற்றையும், பவனன் மகன் மகன் என்னும் பரிசு அறிய - வாயுகுமாரனான வீமனது புத்திரன் நானென்னுந்தன்மையை (யாவரும்) அறியும்படி, தொலைத்து - நாசஞ்செய்து, ஈடு படுத்துவேன் - பெருமையழிப்பேன்; (எ-று.)- இப்பாட்டில் 'வெகுளூற்று' என்றது, மேல் **242** - ஆம் பாட்டில் "உரைக்கும்" என்றதோடு இயையும். **பி -ம்:** இடிம்பிமகன்மிக.*

*என்சொன்னாலும் என்பதற்கு-(நாங்கள்) என்னசொன்னாலும் (நீங்கள் கேளாமல்) என்றும் உரைக்கலாம். அக்கினியை மூட்டி வளர்க்கத் துணையாந்தன்மைவாயுவினிடத்திலும், அரக்குமாளிகையையும் இலங்காபுரியையுந் தீயிட்டழித்ததன்மைஅவ்வாயுவின் குமாரனான வீமனிடத்திலும் அநுமனிடத்திலும் உள்ளதனால்,'பவனன்மகன்மகனென்னும் பரிசறிய' என்றான். (377)*

***240. தசைகுருதிமிசையொழுகத்தனித்தனியேயெதிர்த்தவரைத்
தலைகள்சிந்த,
விசையன்வரவேண்டுமோமற்றுள்ளார்திரண்டுவர
வேண்டுமோதோ,
னிசைபுலருமுனமுனைந்துநீறாக்கிவிடுகுவனெந்நிரு
பன்சொன்ன,***

**வசைவின்மொழிமறுத்துடற்றலாகாதென்றிருக்கின்
றேனறிகிலீரே.**

*(இ -ள்.) எதிர்த்தவரை - எதிர்த்துப் போர்செய்தவர்களை, தசை குருதிமிசை ஒழுக-சதையும் இரத்தமும் மேல்வழியும்படி, தனி தனியே -, தலைகள் சிந்த - தலைகளைச் சிதறடித்தற்கு, விசையன் வரவேண்டும்ஓ - அருச்சுனன்தான் (போருக்கு) வருவது அவசியமோ? மற்று உள்ளார் திரண்டு வரவேண்டும்ஓ தான் - மற்றுமுள்ள (வீமன் முதலிய) வீரர்கள் ஒருங்குகூடிவருதல்தான் அவசியமோ? (யான்ஒருவனே), நிசை புலரும் முனம் - இவ்விரவு விடியமுன்னே, முனைந்து - போர்செய்து, நீறு ஆக்கி விடுகுவேன்- (உங்களையெல்லாம்) பொடியாக்கிவிடுவேன்; (ஆனால்), எம் நிருபன் சொன்ன - எங்களது அரசனான தருமன் கூறின, அசைவு இல் மொழி - தளர்ச்சியில்லாத வார்த்தையை, மறுத்து - விலக்கி, உடற்றல் - (இப்பொழுது) போர் செய்தல், ஆகாது - தகுதியன்று, என்று - என்றகாரணத்தாலேயே, இருக்கின்றேன்- (நான் சும்மா) இருக்கிறேன்; அறிகிலீரே -(இதனை நீங்கள்) அறியமாட்டீர்களா?(எ-று.)-அறிகிலீரே, ஏ - அசையுமாம். **பி -ம்:** குருதிநிணம். அறிவிலீரே.*

*தூதுசென்று தான் கூறிய செய்தியைச்சொல்லி வரும்படியே கட்டளையிட்ட தருமனது வார்த்தைக்கு மாறாக யான் பொருதலாகா தென்கிறான். (378)*

***241.** **இருவரெதிவதிர்தம்மிலிகல்பொருதலுலகியற்கையாருங்
கூடிப்,
பருவமுறாத்தனிக்குதலைப்பாலகனுக்காற்றாமற்பறந்து
போனீ,
ரொருவனெடுந்தேரழிக்கவொருவன்மலர்க்கைதுணிக்க
வொருவன்பின்னைப்,
பொருவனெனவறைகூவிப்பொன்றுவித்தானிதுகொண்டோ
புகல்கின்றீரே.***

*(இ -ள்.) இருவர் - இரண்டுபேர், எதிர் எதிர் - எதிர்க்கு எதிராக (நின்று), தம்மில் - தமக்குள் [ஒருவரோடொருவர்], இகல் பொருதல் - போர்செய்தல், உலகுஇயற்கை -; (அப்படியிருக்க), யார் உம் - (நீங்கள்) எல்லோரும், கூடி - ஒன்றுசேர்ந்து, (வந்துஎதிர்த்து) பருவம் உறா- தக்கபிராயம் நிரம்பாத, தனி - ஒப்பற்ற,குதலை - மழழைச் சொற்களையுடைய, பாலகனுக்கு - இளங்குமரனான அபிமனுக்கு.ஆற்றாமல் - முன்நிற்கமாட்டாமல், பறந்து போனீர் - (முதலில்) விரைந்தோடிப்போனீர்கள் ; (அப்படிப்பட்ட உங்களில்), (பின்பு) ஒருவன் - [கர்ணன்],நெடு தேர் அழிக்க - பெரியதேரைச்சிதைக்க, ஒருவன் -[துரோணன்], மலர் கைதுணிக்க - தாமரைமலர்போன்ற ஒருகையைத் துண்டிக்க, ஒருவன்- [சயத்திரதன்],பின்னை - அதன் பின், பொருவன் என - (நான் உன்னோடு) போர்செய்வேனென்று சொல்லி, அறை கூவி- வலியப் போருக்கு அழைத்து, பொன்றுவித்தான் -(அபிமனை) அழியச்செய்தான்; இது கொண்டுஓ - இந்தப் பராக்கிரமத்தாலோ,புகல்கின்றீர் - (நீங்கள் செருக்கிப்) பேசுகின்றீர்கள்; ( எ-று.)- என்று கடோற்கசன்கூறினான். ஈற்றேகாரம்- இகழ்ச்சி.*

*மழலையும் குதலையும் ஒருபொருளன வென்பது ஒருசாரார் துணிபு; பரிமேலழகர்கருத்தும் இதுவே. மற்றொருசாரார், குதலை- எழுத்துவடிவுபெறாதென்றும். மழலை- எழுத்துவடிவுபெற்றுச் சொல்வடிவுபெறாதென்றும் வேறுபாடுகூறுவர். இருவரெதிரெதிர் தம்மில் இகல்பொருதல்- 'த்வந்த்வயுத்தம்'. (379)*

***242.-அதுகேட்டுத் துரியோதனன் கூறுதல்.***

***வரைக்குவமை பெறுந்தடந்தோள் வீமன்மகனிப்படியே மதி
யானாகி,
யுரைக்குமொழி கேட்டிருந்த வுரகமணி கொடிவேந்த
னுருத்துநோக்கி,***

***யிருக்குமெழி லவைக்கேற்ப லியம்பாமற் றன்மதத்தா***
***வியம்புகின்ற,***
***வரக்கிமக னுடனென்றுங் கழறாதீரென்றுரைத்***
***தானரசர்யார்க்கும்.***

*(இ -ள்.) வரைக்கு - மலைக்கு, உவமை பெறும்- ஒப்பாகத்தக்க, தடதோள் -பெரிய தோள்களையுடைய, வீமன் மகன் - கடோற்கசன், மதியான் ஆகி- (தம்மை)லட்சியஞ்செய்யாதவனாய், இ படி ஏ உரைக்கும் - இவ்வாறேமேல்மேல் கூறுகிற,மொழி- வார்த்தையை, கேட்டு இருந்த-, உரகம் அணிகொடி வேந்தன் -பாம்பின்வடிவைத் தரித்த துவசத்தையுடைய துரியோதனன் ,உருத்து நோக்கி -கோபித்துப்பார்த்து, அரசர் யார்க்குஉம் - (அங்கிருந்த) அரசரெல்லோருக்கும்,'இருக்கும் - (நாம்) வீற்றிருக்கிற, எழில் - அழகிய, அவைக்கு - இச்சபைக்கு, ஏற்ப -தக்கபடி, இயம்பாமல் - பேசாமல், தன் மதத்தால் தனது கொழுப்பினால்,இயம்புகின்ற - பேசுகிற, அரக்கிமகனுடன்- இராக்கதியின் புத்திரனானகடோற்கசனோடு, ஒன்றுஉம் கழறாதீர்- யாதொருவார்த்தையையும் சொல்லாதீர்',என்று உரைத்தான் - என்று கூறினான்; (எ -று.)*

*'வரைக்கு உவமைபெருந் தோள்' என்றதற்கு - மலையினுஞ் சிறந்த தோள் என்று கருத்து. இதில் 'அரக்கிமகன்' என இகழ்ந்தவாறு. இரவில் வலிமை மிகுதியுடைய இராக்கதனான கடோற்*

*கசனை இப்பொழுது யாதொன்றுஞ் செய்யமுடியாதென்று கருதித் துரியோதனன் அவனுடன் எவரும் ஒன்றும் பேசவேண்டா என்று கட்டளையிட்டதாகவுங் கொள்ளலாம்.*
*(380)*

***243.- இதுமுதல் மூன்றுகவிகள் - அதுகேட்ட கடோற்கசன் துரியோதனாதியரின் கொடுமைதோன்றக்கூறி, அருச்சுனன் திறமையைச்சொல்லி மீளுதலைத் தெரிவிக்கும்.***

***அந்தவுரைமீண்டிவன் கேட்டாங்கவனைநகைத்துரைப்பானரக்க***
***ரேனுஞ்,***
***சிந்தனையில்விரகெண்ணார்செருமுகத்தில்வஞ்சகமுஞ்செய்***
***யாரையா,***
***வெந்திறல்கூர்துணைவருக்குவிட மருத்தார்நிரைக்கழுவில்***
***வீழச்செய்யா,***
***ருந்துபுனலிடைப்புதையாரோரூரிலிருப்பகற்றாருரை***
***யுந்தப்பார்.***

இதுவும் மேற்கவியும் - ஒருதொடர்.

*(இ -ள்.) அந்த உரை - (இங்ஙனங்கூறிய) அத்துரியோதனன் வார்த்தையை, கேட்டு-, இவன்- இந்தக்கடோற்கசன், ஆங்கு - அப்பொழுது, மீண்டு - மறுபடியும், அவனை நகைத்து உரைப்பான் - அத்துரியோதனனைப் பரிகசித்துப்பேசுவான்;- ஐயா-! அரக்கர்ஏன் ஓம் - (எனதுசாதியார்) இராக்கதரேயானாலும், (உம்மைப்போல), வெம் திறல் கூர் துணைவருக்கு - கொடிய வலிமைமிக்க உடன் பிறந்தவர்களுக்கு, சிந்தனையில் - மனத்தில், விரகு எண்ணார் - வஞ்சனையா நினைக்கமாட்டார்கள்; செரு முகத்தில் - போர்க்களத்தில், வஞ்சகம்உம் செய்யார் - வஞ்சனைசெய்யவும் மாட்டார்கள்; விடம் அருத்தார் - விஷத்தை உண்பிக்கமாட்டார்கள் ; நிரை கழுவில் வீழ செய்யார் - வரிசையான கழுமுனையிலே விழும்படி செய்ய மாட்டார்கள் ; உந்து புனலிடை புதையார் - பாய்கிற நீர்ப் பெருக்கில் அழுத்தமாட்டார்கள்; ஓர் ஊரில் இருப்பு அகற்றார்- (தாம் இருக்கும்) ஓரூரிலே அவர்களிருத்தலை விலக்கமாட்டார்கள்; உரைஉம் - (சொன்ன) வார்த்தையும், தப்பார்-; (எ -று.)*

*இதிற்குறித்த தீங்குகள்யாவும் துரியோதனனிடம் உள்ளன வென்பதை, மேற்பாட்டில் 'இவையெல்லா மடிகளுக்கே ஏற்ப' என்று விளக்குவன். துரியோதனன் சிந்தனையில் விரகெண்ணியது, அநந்தம்,* ***செருமுகத்தில் வஞ்சகஞ்செய்ததும்,***
*அபிமந்யுவதம் முதலாகப் பலவாம்.*

*துரியோதனாதியரும் பாண்டவரும், இளம்பிராயத்தில் ஒருநாள் கங்கையில் நீர்விளையாடி அதன் துறையில் ஒருசார் இன்னுணவுண்டு களித்துக் கண்டுயில, அவ்விரவில் துரியோதனன் வீமனைக் கொல்லும் பொருட்டுச் சகுனிமுதலானாரோடு ஆலோசித்து அவனை வலியகயிறுகளால் கைகால்களைக் கட்டி அப்பெருநதியில் எறிந்து விட, அதில்விழுந்து துயிலுணர்ந்த வீமன் தன் உடல் வலியால் அக்கட்டுக்களைத் துணித்துக்கொண்டு கரையேறிப் பிழைத்தானென்பதும்; மற்றொருநாள் கங்கைத்துறையில் எழுக்களினாலும் இரும்புகளினாலும் செம்மரங்களினாலும் கூரிய கழுக்களை நீரின்மேல் தோன்றாதபடி நாட்டச்செய்து துரியோதனன் வீமனை 'நீரில் விளையாடலாம் வா' என்று வஞ்சனையாக அழைத்துப்போய் 'இங்கிருந்து நீ நீரில் குதிக்கிறாயா, பார்ப்போம், என்ன, அப்பொழுது கண்ணன்.*

*கருவண்டின் உருவங்கொண்டு கழுமுனைதோறும் உட்கார்ந்திருக்க, வீமன் அதனைநோக்கி 'இது என்ன? நீரோட்டத்தில் வண்டுகள் உட்கார்ந்திருக்கின்றனவே' என்று உற்றுப் பார்க்கும்போது மூன்று அங்குலத்தின்கீழ் வசிகள் நாட்டியிருக்கக் கண்டு தன் சந்தேகப்படி அவை நாட்டியிராத இடம்பார்த்துக் குதித்துக் கரையேறி மீண்டானென்பதும்; வேறொருநாள் துரியோதனன் வீமனுக்கு விருந்து வியாஜமாகச் சமையற்காரரைக் கொண்டு மிக்க விஷத்தைக் கொடுத்து உண்பித்து அதனால் மயங்கியிருக்கிற சமயத்தில் அவனைக் கயிற்றாற் கட்டிக் கங்கை நீரிலே போகட்டுவிட, அதில் வீழ்ந்து பாதாளஞ்சேர்ந்த அவ்வீமனை அங்குள்ள சிறுநாகங்கள் கடிக்க, முந்தினவிஷம் இவ்விஷத்தால் நீங்கினவளவிலே, கயிற்றுக்கட்டையும் மெய்வலியால் துணித்திட்ட அவனுக்கு, வாசுகி வாயுகுமாரனென்ற அபிமானத்தோடு மிக உபசரித்து ஆங்குள்ள அமிருதகலசங்களிற்சிலவற்றையுண்பிக்க, வீமன் உண்டு மீண்டனன் என்பதும்,*
***கீழ்வாரணாவதச்சருக்கத்தில் வந்த கதைகள்.***

***ஒரூரில் இருப்பகற்றியது-*** *அஸ்தினாபுரத்திலிருந்து வாரணாவத நகரத்திற் சென்றுவாழும்படியும், இந்திரப்பிரஸ்தநகர மேற்படுத்திக்கொண்டு செல்லும்படியும், வனம்புகுத்தியும், பாண்டவரைத் துரியோதனன் பலகால் துரத்தியது.* ***உரைதப்பியது***
*- வனவாசஅஜ்ஞானவாசங்கள் கழித்தபின்னும் நாடுதராதது.* ***பி - ம்*** *; அவன். சொல்லார்.*
*(381)*

***244. செழுந்தழல்வாழ்மனைக்கொளுவார்செய்ந்நன்றிகொன்றறி***
***யார்தீங்குபூணா,***
***ரழுந்துமனத்தழுக்குறாரச்சமுமற்றருளின் றிப்பொ***
***ய்ச்சூதாடார்,***
***கொழுந்தியரைத்துகிலுரியார்கொடுங்கானமடை***
***வித்துக்கொல்லவெண்ணா,***
***ரெழுந்தமரின்முதுகிடாரிவையெல்லாமடிகளுக்கேயேற்ப***
***வென்றான்.***

*(இ -ள்.) ( என்சாதியார் அரக்கரேயானாலும் உம்மைப் போல), வாழ்மனை - (உடன்பிறந்தவர்கள்) வாழ்ந்துகொண்டிருக்கிற வீட்டில், செழு தழல் கொளுவார் - மிக்க நெருப்பைப் பற்றவைக்க மாட்டார்கள்; செய் நன்றி கொன்று அறியார் - (தமக்குப் பிறர்) செய்த நன்றியைச் சிதைத்தறியமாட்டார்கள்; தீங்கு பூணார்- (அவ்வுபகாரஞ் செய்தவர்களுக்கு) அபகாரஞ்செய்தலை மேற்கொள்ள மாட்டார்கள்;அழுந்து மனத்து - கீழ்ப்பட்ட (தங்கள்) மனத்திலே, அழுக்குறார்- பொறாமைகொள்ளமாட்டார்கள் ; அச்சம்உம் அற்று- (பழிபாவங்களுக்குப்) பயப்படுதலுமில்லாமல், அருள் இன்றி - கருணையில்லாது, பொய் சூது ஆடார்- (உடன்பிறந்தவர்களோடு) வஞ்சனைக் கிடமான சூதை ஆடமாட்டார்கள்; கொழுந்தி -*

*உடன்பிறந்தவர் மனைவியின், அரை துகில் - இடையிற்கட்டிய சேலையை, உரியார் - அவிழ்க்கமாட்டார்கள்; (அவ்வுடன்பிறந்தவர்களை), கொடுகானம் அடைவித்து - கொடிய காட்டை யடையச் செய்து, கொல்ல எண்ணார் - (பின்பு அவர்களைக்) கொலைசெய்யக் கருத மாட்டார்கள்; எழுந்து - (முன்னே போருக்குப்) புறப்பட்டுவந்து, அமரில்- அப்போரில் . முதுகு இடார் - புறங்கொடுக்கவும் மாட்டார்கள்; இவை எல்லாம் - இங்குக்கூறிய எல்லாத்தீயொழுங்கங்களும் அடிகளுக்கு*

*ஏற்ப - தேவரீர்களுக்கே அமைந்துள்ளன, என்றான்- என்று ( கடோற்கசன் துரியோதனனை நோக்கிக்) கூறினான்; (எ -று.)*

*துரியோதனன், வாரணாவதநகரத்தில் வஞ்சனையாக அழகியதோ ரரக்கு மாளிகையைஅமைப்பித்து அதில் பாண்டவரைவரையுங் குந்தியையும் வசிக்கச்செய்து, புரோசனனென்னுந்துர்மந்திரியையுங் குற்றேவலார் ஆறுபேரையும் கூடஇருக்கநியமித்து, ஒருநாளிரவிற் பாண்டவருந்தாயும் கண்துயில்கையில் மற்றையோரைக் கொண்டு அம்மனையில் தீப்பற்றவைத்து இங்ஙனம் பங்காளிகளைத்தொலைத்துவிடுவதாகத் துணிந்திருக்க, அவ்வஞ்சகத்தை விதுரனேவிய ஒருசிற்பியால்அறிந்து அதனினின்று தந்திரமாகத் தப்பிச் செல்லும் வழியையும் அவன்பா லுணர்ந்தவீமன், அத்துர்மந்திரி முதலியோர் எரிபட்டழியும்படி தான் ஓர் இரவில் தீக்கொளுவிவிட்டுத் தாயையும் உடன்பிறந்தாரையும் கைகளிலுந் தோள்களிலும் முதுகிலுமாகஎடுத்துக்கொண்ட அவ்வீட்டில் இரகசியமாக அமைத்துவைத்திருந்ததொருதூணின்கீழுள்ள சுரங்கவழியால் தப்பிச்சென்று இடிம்பவனம் முதலிய இடங்களிற்சென்று பிழைத்து வாழ, துரியோதனாதியர் பாண்டவர்களே எரிபட்டழிந்ததாகக்கருதி அகமகிழ்ந்தனரென்றது, கீழ் ஆதிபருவத்து வரலாறு. தீக்கொளுவத் துணிந்ததையும் கொளுவியதாகக்கருதி மகிழ்ந்ததையுமே கொண்டு, செழுந்தழல்வாழ்மனைக் கொளுவியதாகச் சொன்னது.*

*பாண்டவர் வனவாசஞ்செய்கையில் ஒருகால், துரியோதனன் தன் பெருமையைக் காட்டிப் பாண்டவர்க்குப் பொறாமையுண்டாக்கி அவரை அழுங்கச்செய்யவேண்டு மென்று ஆடம்பரத்துடனே அருகிற்சென்றபோது, இந்திரனேவலாற் சித்திரசேனென்னுங் கந்தருவராசன் வந்து துரியோதனனைக் கயிற்றாற்கட்டி வானத்தில் தூக்கிக்கொண்டுபோக, அப்பொழுது கர்ணன் முதலானோர்எதிர்த்துப் பொருது, தோற்று ஓட, பின்பு துரியோதனனது பரிதாபமானநிலைமையைஅவனதுபரிவாரத்தாலறிந்த தருமபுத்திரனது கட்டளையால் வீமன் அருச்சுனனோடுசென்று கந்தருவனைவென்று துரியோதனனைமீட்டு மறுபடியும் அக்கந்தவருவனால்துரியோதனனுக்குத் தீங்குநேராதபடி அவனை ஊர்வரையிலும் வழிவிடுவதாகத்துணை வர, தன் ஊர்ப்புறத்தளவும் வந்த மாத்திரத்தில், துரியோதனன்,அந்நன்றியறிவு சிறிது மில்லாமல், வீமனை நோக்கி 'என்எல்லையிற் கால்வையாதே'என்று கடுமையாகச் சொல்லித் துரத்திவிட்டமையின்; செய்ந்நன்றிகோறல் துரியோதனனுக்கு உரியதாயிற்று. பாண்டவர் துரியோதனனுக்குச் செய்த உபகாரங்களும், அவன் அந்நன்றியைச் சிறிதும் பாராட்டாது அவர்களுக்குச் செய்ததீமைகளும் மிகப்பல; நூல்முழுவதிலும் ஆங்காங்குக் காணலாம்.*

*பாண்டவர் தன் ஆற்றலால் திக்குவிசயஞ்செய்து இராசசூயயாகம் முடித்துச்சிறப்புற, அதனைக்கண்டு துரியோதனன் அழுக்காற்றில் அழுந்திச் சகுனி முதலானாரோடு ஆலோசித்து வஞ்சனையாக அப்பாண்டவரை வரவழைத்து மாயச் சூதால் அரசு கவர்ந்து கொண்டதுமன்றி, சபையில் திரௌபதியைத் துகிலுரிந்ததும் அவர்களை வனவாசத்துக்கு அனுப்பியதும் பிரசித்தம்.*

*பாண்டவர் வனத்தில் வசிக்கையில், துரியோதனன் காளமா முனியைக்கொண்டு அபிசாராயாகமொன்று செய்வித்து அவ்வோமத்தீயினின்று எழுந்த பெரும்பூதத்தைப் பாண்டவரைக்கொல்லுமாறு செலுத்தினமையும், போரிற் பாண்டவரைக்கொல்ல*

*முயல்கின்றமையுந் தோன்ற, '* ***கொல்லவெண்ணார்'*** *என்றான். திரௌபதி சுயம் வரகாலத்திலும், நிரைமீட்சியிலும், மற்றும் பதினெட்டுநாளிலும் போரிற் பாண்டவர்க்குமுன் துரியோதனன் புறங்கொடுத்தல் காண்க. 'அடிகள்' என்றசொல் - 'பாதா:' என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பாகத் தமிழில் வழங்குவது; இதற்குச் சிறந்தவ ரென்று பொருள். உயர்வுக்குஉரிய இச்சொல்லால் கடோற்கசன் துரியோதனனைக்கூறியது, சந்தர்ப்பத்தால் இகழ்ச்சிவிளக்கும்;* ***பிறகுறிப்பு.*** *(382)*

***245. தேனிடறிப் பாண்முரலுஞ் செழுந்தாம விசயனுடன் செருவில்வந்தால்,***
***மானிடரிற் பொரவல்லார் சிலருண்டோ தெரியாது வானுளோரிற்,***
***கோனிடையுற் றருகிருந்த திறல்வேந்தர் காத்திடினுங் குறித்தவீரன்,***
***றானிடருந் றுயிரழிகை தப்பாதென் பதுமுரைத்துத் தனயன்மீண்டான்.***

*(இ-ள்.) தேன் - வண்டுகள், இடறி - நெருங்கிமொய்த்து, பாண் முரலும் - இசைப்பாட்டை யொலிக்கப்பெற்ற, செழு தாமம்- செழிப்பான பூமாலையையுடைய, விசயனுடன் - அருச்சுனனுடனே, செருவில் வந்தால்- போர்க்களத்தில் எதிர்த்துவந்தால், மானிடரில் - மனிதருள், பொர வல்லார் - போர் செய்ய வல்லவர்,சிலர் உண்டுஓ - சிலரேனும் உளரோ? [எவரும் இலரென்றபடி]; வான் உளோரில் -மேலுள்ள தேவர்களுள், தெரியாது - (அருச்சுனனுடன் பொரவல்லார் உளர்என்பதுந்) தெரியாது; கோன் இடை உற்று - சிந்து தேசத்தரசனிடத்திற் பொருந்தி,அருகு இருந்த திறல் வேந்தர் காத்திடின்உம் - (உன்) பக்கத்திலுள்ள வலிமையுடையஅரசர்கள் (எல்லோரும்) பாதுகாத்திட்டாலும், குறித்த வீரன் - (அருச்சுனன்கொல்வதாக) உத்தேசித்த வீரனான அச்சைந்தவன், இடர் உற்று உயிர் அழிகை - அருச்சுனனால் துன்பமடைந்து இறத்தல், தப்பாது -தவறாது, என்பதுஉம் உரைத்து -என்பதையுஞ் சொல்லிவிட்டு, தனயன் - (வீமன்) மகனான கடோற்கசன், மீண்டான் -திரும்பி வந்தான்; (எ-று.) (383)*

வேறு.

*246.-இரண்டுகவிகள் - பிறகு துரோணனை நோக்கித் துரியோதனன் நாளைச்சயத்திரதனைக் காத்துவிடின் அருச்சுனன் தீக்குளிப்பானெனல்.*

***அரக்கனனப் பேரவை யகன்ற பின்பகை***
***துரக்கும்வெங் குனிசிலைத் துரோணன் றன்னொடும்***
***பரக்கும்வெண் டிரைக்கடற் பாரெ லாமுடன்***
***புரக்கநின் றவன்சில புகழ்ந்து கூறுவான்.***

*(இ-ள்.) அரக்கன்- கடோற்கசன், அ பேர் அவை - அந்தப் பெரிய சபையை, அகன்றபின் - நீங்கிச்சென்றபின்பு, - பரக்கும்- பரவுகிற, வெள்திரை - வெண்மையான அலைகளையுடைய, கடல்- சமுத்திரஞ்சூழ்ந்த, பார்எலாம் - பூலோகம் முழுவதையும், உடன் புரக்க - ஒருசேரஆள, நின்றவன் - (எண்ணி) நின்றவனான துரியோதனன்,- பகை துரக்கும் -பகைவரை அஞ்சியோடச்செய்யவல்ல, வெம் குனி சிலை - கொடியவளைந்தவில்லையுடைய, துரோணன் தன்னொடுஉம்- துரோணனுடனே, சில புகழ்ந்துகூறுவான் - சில வார்த்தைகளைப் புகழ்ச்சியாகச் சொல்லுவான்; (எ - று.) -அவற்றை அடுத்த கவியிற் காண்க.*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பதினான்கு கவிகள் - இச்சருக்கத்தின் 186 - ஆங் கவிபோன்ற* **கலிவிருத்தங்கள்.** *(384)*

***247. கொடிநெடுஞ்சேனையைக்கூறுசெய்துநீ***
***கடிகைமுப்பதுமுடன்காக்கவல்லையேல்***
***வடிவுடைச்சிந்துமாமகனுமுய்குவன்***
***வெடியனற்குளிக்குவன்விசயன்றானுமே.***

*(இ-ள்.) நீ-, கொடி நெடு சேனையை - துவசங்களையுடைய பெரிய (நமது) சேனையை, கூறுசெய்து- (ஒழுங்காக) அணிவகுத்து, கடிகை முப்பதுஉம் உடன் - (நாளைப்பகல்) முப்பதுநாழிகை முழுவதும், காக்க வல்லைஏல்- (சயத்திரதனைப்) பாதுகாக்கவல்லவனாவையானால்,- வடிவு உடை - (அழகிய) வடிவத்தையுடைய, சிந்து மா மகன்உம் - சிந்துதேசத்தையாளும் சிறந்த ஆண்மகனான அச்சயத்திரதனும், உய்குவன் - பிழைத்திடுவான் ; விசயன் தான்உம்- அருச்சுனனும், வெடி அனல் குளிக்குவன் - அழிக்கிற தீயில் மூழ்கியிறந்திடுவான் ; ( எ-று.)- என்றுதுரோணனிடம் துரியோதனன் கூறினான். வெடி - வெடிக்கிற எனினுமாம். (385)*

### *248.- மற்றும் போர்வீரரைத் துரியோதனன் வேண்டுதல்.*

**நாளையோர்பகலுமேநமக்குவெய்யபோர்**
**காளையரனைவருங்காமின்காமினென்**
**றாளையுமடுகளிற்றாழிமன்னவன்**
**வேளைபுக்கவரினும்வீழ்ந்துவேண்டினான்.**

*(இ -ள்.) (பின்னரும்), 'நாளை ஓர் பகல்உம்ஏ - நாளையொரு தினத்தின் பகற்பொழுது மாத்திரமே, நமக்கு வெய்ய போர் - நமக்குக் கொடிய போர் (நிகழ்வது); காளையர் அனைவர்உம் - வீரர் யாவரும், காமின் காமின் - (சயத்திரனைப்) பாதுகாத்திடுங்கள் பாதுகாத்திடுங்கள்,' என்று - என்று (போர்வீரரனைவரையும் நோக்கிப் பலமுறை) சொல்லி, ஆளைஉம் அடு களிறு ஆழிமன்னவன்- (தன்னை உணவளித்துக்காக்கிற) பாகனையும் கொல்லுகிற மதயானைபோன்ற ஆஜ்ஞாசக்கரத்தையுடைய துரியோதனராசன், வேளை புக்கவரின்உம்-ஆபத்துக்காலத்தில் சரணமடைந்தவர்களினும் அதிகமாக, வீழ்ந்து வேண்டினான் -(அவர்களை) வணங்கிப் பிரார்த்தித்தான்; ( எ -று.)*

*சயத்திரதனைக் கொல்லமாட்டாது அருச்சுனனொருவன் இறந்தமாத்திரத்தில் மற்றைப் பாண்டவர்நால்வரும் உடனே இறந்திட, நாளையோடு பகையொழியுமென்பது உட்கோள். ஆதலின்*

*வணங்காமுடிமன்னனான இவன் இங்ஙனம் வீழ்ந்து வேண்டினான். காளையர் அனைவரும் காமின் -* **இடவழுவமைதி.** *உபகாரஞ்செய்தவர்க்கும் அபகாரஞ்செய்பவ னென்பது தோன்ற, ஆளையும் அடு களிற்றுமன்னவனென்றார். ஆளையும் என்ற உயர்வுசிறப்பும்மையால், அதனை அவன் ஓம்புந்தன்மைவிளங்கும். வேலைபுக்கவரினும் - (மரக்கலமுடைந்து) கடலில் வீழ்ந்தவரினும் மிகுதியாக என்றும்உரைக்கலாம். (386)*

### *249. - இதுமுதல் மூன்று கவிகள் - ஒரு தொடர்: துரோணன் தைரியங் கூறுதலைத் தெரிவிக்கும்.*

***மணிமதிலரணெனமன்னுசேனையை***
***யணிபடநிறுத்தியாமளவுங்காப்பன்யான்***
***பணிவுறுபுண்ணியபாவமுற்றுவ***
***துணிவுறத்தெரியுமோதும்பைமாலையாய்.***

*(இ-ள்.) தும்பை மாலையாய் - (போருக்குரிய) தும்பைப்பூ மாலையையுடையவனே! யான்-, மன்னு சேனையை - நிலைபெற்ற (நமது) சேனையை, மணி மதில் அரண் என - அழகிய மதிலாகிய அரண்போல, அணிபடநிறுத்தி - இடைவிடாது பொருந்த நிற்கச் செய்து, ஆம் அளவுஉம் - (என்னால்)இயலுமளவும், காப்பன் - (சயத்திரனைப்) பாதுகாப்பேன்; பணிவு உறு- (தம்மைச்செய்த வரை) நியமித்தல் பொருந்திய, புண்ணியம் பாவம்- (அவரவர் செய்த)நல்வினை தீவினைகள், முற்றுவ - நிறைவேறும் வகைகள், துணிவுஉற தெரியும்ஓ -நிச்சயமாக முந்தி அறியப்படுமோ? [படா என்றபடி]; ( எ - று.)*

*என்னாலியன்றமட்டில் யான் பாதுகாப்பேன்; யார் விதி எப்படி பலிக்குமோ? தெரியாது என்பதாம். 'பணியுறு' என்ற பாடத்துக்கு - முந்திச் செய்து பொருந்திய என்க; பணி = பண்ணி.*
*(387)*

***250. முப்பதுகடிகையின்மொழிந்தவஞ்சினந்***
***தப்பதுபடாதெனிற்றனஞ்சயன்சிலைக்***
***கொப்பதொன்றில்லைமற்றுரைத்தவாசெய***
***லப்பதுமாசனன்றனக்குமாகுமோ.***

*(இ-ள்.) மொழிந்த வஞ்சினம்- (அருச்சுனன்) சொன்ன சபதம், முப்பது கடிகையின் - (நாளைப்பகல்) முப்பதுநாழிகைக்குள்ளே, தப்பு அது படாது எனின் -தவறாமல் நிறைவேறிவிடுவதானால், தனஞ்சயன் சிலைக்கு ஒப்பது ஒன்று இல்லை -அருச்சுனனது வில்லுக்குச் சமமாவது யாதொன்றுமில்லை; (ஏனெனில்),- உரைத்த ஆ(று) செயல்- சொன்னபடி செய்தல், அ பதுமஆசனன் தனக்கும் ஆகும்ஓ-திருமாலின் திருவுந்தித்தாமரைமலரை இருப்பிடமாகவுடைய அந்தப்பிரமதேவனுக்குத்தான் முடியுமோ? ( எ -று.)*

*"சொல்லுதல் யார்க்குமெளிய வரியவாஞ், சொல்லியவண்ணஞ் செயல்" என்றபடி சொன்னவாறுசெய்தல் படைக்குங் கடவுளான*

*பிரமனுமுட்பட அரிதாதலின், அருச்சுனன் சொன்ன சபதத்தை நாளைநிறைவேற்றி விடுவானானால் அவனுக்கு ஒப்பில்லையென்பதாம். மற்று - வினைமாற்று. (388)*

***251.- மல்லினான்மல்லரைமலைந்தமாலவட்***
***புல்லினானென்னினுஞ்சிந்துபூபனை***
***வில்லினால்வெல்லரிதென்றுமீளவுஞ்***
***சொல்லினான்மறைமொழித்துரோணன்றானுமே.***

*(இ-ள்.) (இங்ஙனஞ்சொன்ன), மறை மொழி துரோணன் - வேதவாக்கியங்களைவல்ல துரோணாசாரியன்,' மல்லினால் - மற்போரினால், மல்லரை- மற்போர்வீரரை, மலைந்த - அழித்த, மால் - கண்ணபிரான், அவண் - அவ்விடத்தில் [எதிர்ப்பக்கத்தில்], புல்லினான் என்னின்உம் - சேர்ந்துள்ளானாயினும்,சிந்து பூபனை - சிந்துநாட்டரசனான சயத்திரதனை, வில்லினால் வெல்அரிது - விற்போரினால் வெல்லுதல் அரியதே, ' என்று மீளஉம் சொல்லினான் - என்றுதிரும்பவும் சொன்னான்; ( எ -று.)- தான், உம் - அசை.*

*துரோணன்தானும் என்ற உம்மையை உயர்வுசிறப்பு எனக் கொண்டு, இங்ஙன் அறிஞனான துரோணன் சொல்லியது தகாது என்றபொருளைக் குறிப்பதெனினுமாம். **பி -ம்:** துரோணசாதனே.*

***மல்லினால் மல்லரை மலைந்தகதை; -** கம்ஸனது சபையிற் கிருஷ்ணபலராமர் செல்லுகையில், அவனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் அவர்களைக் கொல்லும்பொருட்டு வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர் செய்ய, அவர்களையெல்லாம் இவ்யாதவ வீரரிருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனரென்பது. (389)*

*252.- கர்ணன் தான் நாளைச் சயத்திரதனைக் காப்பதாகக் கூறுதல்.*

***கோப்பலருடன்பலகூறமற்றவர்***
***நாப்பலநவிலினுவாளைவான்பகற்***
***றாப்புலிநிகர்சயத்திரதன்றன்னுயிர்***
***காப்பல்யானென்றனன்கதிரின்மைந்தனே.***

*(இ -ள்.) கதிரின் மைந்தன் - சூரிய புத்திரனான கர்ணன்,- 'கோ - துரியோதனராசன், பலருடன் - அநேகராசர்களுடனே, பல கூற - (சயத்திரதனைக் காக்கும்படி) அநேகவார்த்தைகளைச் சொல்ல, (அவற்றிற்கு), அவர் - அவ்வீரர்கள், நா - (தம்) நாவினால், பல நவிலின்உம் - அநேக உத்தரங்களைச் சொன்னாலும்,- நாளை வான் பகல்- நாளைச் சிறந்த பகலில், தா புலி நிகர் சயத்திரதன் உயிர் யான்காப்பல் - வலிமையையுடைய புலியை யொத்த சயத்திரதனது உயிரை நான் பாதுகாப்பேன்,' என்றனன் - என்று (உறுதிமொழி) கூறினான்; ( எ -று.) - பாண்டவரது ஆக்க அழிவுகள் நாளையொரு பொபதின் தொழிலிலே நின்றுள்ளன வாதலின், 'வான்பகல்' என்றான். தாப்புலி - தாவுதலையுடைய புலியுமாம். **பி-ம்:** பலகூறல். (390)*

*253.- துர்மர்ஷணன் கூறுதல்.*

***அன்மருடிமிரமெய்தளவுநாளையிற்***
***றென்மருடெரியல்வேற்சிந்துவேந்தனைக்***
***கன்மருடிகிரியிற்காப்பன்யானென்றான்***
***றுன்மருடணனெனுந்துணைவன்றானுமே.***

*(இ-ள்.) துன்மருடணன் எனும் - துர்மர்ஷணனென்கிற, துணைவன்தான்உம் - (துரியோதனன்) தம்பியும்,-' அல்- இரவுக்குரிய, மருள் - மயக்கத்தைத் தருகிற, திமிரம் - இருள், எய்து அளவுஉம் - வரும்வரையிலும்[சூரியாஸ்தமனமட்டிலும்], நாளையின் - நாளைக்கு, தென் மருள் தெரியல் வேல் சிந்து வேந்தனை - வண்டுகள் (தேனை மிகுதியாகக்குடித்து) மயங்குதற்குக்காரணமான பூமாலையைத் தரித்த வேலாயுதத்தையுடைய சிந்துதேசத்தரசனை, மருள் -(காண்பவர்) அஞ்சுதற்குக்காரணமான, திகிரி கல்லின் - சக்கரவாளமலை போல் (வளைந்துகொண்டு), யான்காப்பன் - நான்பாதுகாப்பேன்,' என்றான் -; -தென் - தேன்என்பதன்குறுக்கல். **பி -ம்:** இரவிவீழ்.*

*254.-இதுவும், அடுத்தகவியும் - அசுவத்தாமன் கூறுதலைக் தெரிக்கும்.*

***விரற்புனைகோதைவல்வில்லின்வல்லவர்***
***குரற்படச்சேவகங்கூறுகிற்பரோ***
***வுரற்புரைநீடடியோடையானையாய்***
***சரற்புயலானதுதனிதஞ்செய்யுமோ.***

*இது முதல் மூன்றுகவிகள் - குளகம்.*

*(இ -ள்.) உரல் புரை - உரலை யொத்த, நீடு - அடி - பெரிய கால்களையும், ஓடை - நெற்றிப்பட்டத்தையு முடைய, யானையாய் - யானை போன்றவனே ! விரல் - கைவிரலினால், புனை- அழகாகத்தெறிக்கிற, கோதை - நாணியையுடைய, வல் - வலிய, வில்லின் - வில்லின் தொழிலிலே, வல்லவர் - வல்லவர்கள், குரல் பட - உரத்தகுரலுண்டாக, சேவகம்- (தம்) பராக்கிரமத்தை, கூறுகிற்பர்ஓ - எடுத்துச்சொல்லுவார்களோ ? சரத் புயல் ஆனது - சரத்காலத்து மேகமானது, தனி தம் செய்யும் ஓ - இடிமுழக்கத்தைச் செய்யுமோ?*

***எடுத்துககாட்டுவமையணி.*** *இதனை, ஒரு சாரார்* ***மறுபொருளுவமை*** *யென்பர். ஸரத், ஸ்தநிதம் என்னும் வடசொற்கள் திரிந்தன. சரத்காலம் - கூதிர்ப்பருவம் : ஐப்பசி கார்த்திகை மாதங்கள். (392)*

***255. பொருதொழில்விதம்படப்புரிந்தகாலையில்***
***விருதர்களிருவரும்வேறல்கூடுமோ***
***வொருதலைநின்றவனுடற்றும்வின்மையுங்***
***கருதலன்வின்மையுங்காண்டிகாவலா.***

*(இ -ள்.) காவலா - அரசனே! பொரு தொழில் - போர்த்தொழிலை, விதம் பட- ஒழுங்காக, புரிந்த காலையில் - செய்த பொழுது, விருதர்கள் இருவர்உம் - இரண்டு வீரர்களும், வேறல் - சயித்தல், கூடும்ஓ-சாத்தியமோ? [ஒருத்தர்வெல்ல மற்றொருத்தர் அழிதலே கூடுவது என்றபடி]; ஒரு தலை நின்றவன் - ஒருபக்கத்*

*தில் நின்ற சயத்திரதன், உடற்றும் - போர் செய்யும், வின்மைஉம் - வில்லின் திறமையையும், கருதலன் - பகைவனான அருச்சுனனது, வின்மைஉம் - வில்லின் திறமையையும், காண்டி - (நாளைக்குப்) பார்ப்பாய், ( எ -று.)*

*இருதிறத்தவரும் தாம்தாம் பிறரைத் தவறாது வெல்வதாகத் தனித்தனி சபதஞ்செய்தால், அச்சபதத்தில் ஒன்று பங்கப்பட்டே தீரும்; ஆதலின், வாயாற்சொல்லுதலில் பயனில்லை: காரியத்திற் காட்டுதலே சிறப்பு என அசுவத்தாமன்நிஷ்பக்ஷபாதமாக நீதி கூறினான்.* ***பி - ம்:*** *நின்றிவன். (393)*

***256.- யாவரும் துரியோதனனிடம் விடைபெற்றுச்செல்லுதல்.***

***என்றுசேனாபதிமகனியம்பினான்***
***நின்றகாவலர்களுநிசைபுலர்ந்துழிச்***
***சென்றுபோர்புரிந்துநின்றெவ்வர்யாரையும்***
***வென்றுமீளுதுமெனவிடைகொண்டாரரோ.***

*(இ-ள்.) என்று-, சேனாபதி மகன் - சேனைத்தலைவனாகிய துரோணனது புத்திரனான அசுவத்தாமன், இயம்பினான் - கூறினான்; (பின்பு), நின்ற காவலர்கள்உம்- (அங்கு) உள்ள அரசர்களெல்லோரும், 'நிசை புலர்ந்தஉழி- இவ்விரவு கழிந்தபொழுது [நாளை உதயத்தில்], சென்று போர் புரிந்து - எதிர்த்துப்போய்ப் போர்செய்து, நின் தெவ்வர் யாரைஉம் - உன் பகைவர்களெல்லோரையும், வென்று மீளுதும் - சயித்துத்திரும்புவோம்,' என - என்றுசொல்லி, விடை கொண்டார்- (துரியோதனனிடம்) அனுமதிபெற்றுச் சென்றார். (394)*

***257.- கிருஷ்ணர்ச்சுனரும் கடோற்கசனும் மீள, சூரியனுதித்தல்.***

***பூதனைமுலைநுகர்பூந்துழாய்முடி***
***நாதனும்விசயனுநலத்தொடேவிய***
***தூதனுமருக்கனுந்துயிலுணர்த்தினார்***
***சேதனர்புகழ்மொழித்திகிரிவேந்தையே.***

*(இ -ள்.) பூதனை முலை நுகர்- பூதனையென்னும் பேய்மகளது தனத்தையுண்ட, பூ துழாய் முடி நாதன்உம் - அழகிய திருத்துழாய் மாலையைத் தரித்த திருமுடியையுடைய கண்ணபிரானும், விசயன் உம்- அருச்சுனனும், நலத்தொடுஏவிய தூதன்உம் - நல்லெண்ணத்தோடு ( தருமன் துரியோதனனிடம்) அனுப்பினதூதனான கடோற்கசனும், அருக்கன்உம்- சூரியனும்,- சேதனர் புகழ் மொழி திகிரிவேந்தை - அறிவுடையார் புகழ்ந்துகூறுகிற சொற்களையுடைய ஆஜ்ஞாசக்கரத்தையுடைய தருமராசனை. துயில் உணர்த்தினார் - தூக்கத்தினின்று எழுப்பினார்கள்; ( எ -று.)*

*கைலைக்குச் சென்ற கிருஷ்ணார்ச்சுனரும், துரியோதனன் பாசறைக்குத் தூதுசென்ற கடோற்கசனும் மீளுமளவில், சூரியனுதிக்க, தருமன் துயிலுணர்ந்தனனென்பதாம். பி -ம்: ஏகிய.*

***பூதனைமுலைநுகர்ந்த கதை:-*** *தன்னைக் கொல்லப் பிறந்தவன் ஒளித்து வளர்கிறா னென்று உணர்ந்த கம்சனால் விசேஷமான பலம்.*

*சாமர்த்தியம் அழகு முதலிய சிறப்புக்களையுடைய குழந்தைகளைக் கொல்லும்படி யேவியனுப்பப்பட்ட பூதனையென்னும் ராட்சசி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து தூங்கிக் கெண்டிருந்த கண்ணனாகிய குழந்தையை யெடுத்து நஞ்சுதீற்றிய தனதுமுலையைக் கொடுத்துக் கொல்லதுமுயல, யெடுத்து நஞ்சுதீற்றிய தனதுமுலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானானகுழந்தை அவ்வரக்கியின் முலைகளைக் கைகளால் இறுகப்பிடித்து அவளுயிரோடும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறிவிழுந்திறக்கும்படி செய்த தென்பதாம். (395)*

### *258.- அருச்சுனனோடு சென்று மீண்டசெய்தியைக் கண்ணன் தருமபுத்திரனிடங் கூறுதல்.*

***கயிலைபுக்கதுமரன்கணையுஞ்சாபமும்***
***வியன்மலர்ப்பொய்கையும்விசயற்கீந்ததும்***
***புயலெனக்கரியமெய்ப்பூந்துழாயவன்***
***றுயிலுணர்குரிசிலுக்கடைவிற்சொன்னபின்.***

இதுவும் மேற்கவியும் குளகம்.

*(இ-ள்.) புயல் என கரிய- மேகம்போலக் கறுத்த, மெய் - திருமேனியையும், பூதுழாயவன் - அழகிய திருத்துழாய்மாலையையு முடைய கண்ணன்,- துயில் உணர்குரிசிலுக்கு - தூக்கம்விழித்த தருமராசனுக்கு,- கயிலை புக்கதுஉம்- (தாம்) கைலாயத்தைச் சேர்ந்ததையும், (அங்கு), அரன்- சிவன், கணைஉம் - அம்பையும், சாபம்உம் - வில்லையும், (கணைவிற்களைக்கொண்ட), வியன் மலர் பொய்கைஉம் - பெரிய பூக்களையுடைய தடாகத்தையும், விசயற்கு - அருச்சுனனுக்கு ஈந்ததுஉம்- கொடுத்ததையும், அடைவின் - முறையே, சொன்னபின் - கூறியபின்பு, (எ-று.)- "கடோற்கசனும் கூறினான்" என அடுத்தகவியோடு முடியும். (396)*

### *259.- கடோற்கசன் தான் தூதுசென்று மீண்ட செய்தியைக் கூறுதல்.*

***பைதிகழ்மணிப்பணிப்பதாகையானிடை***
***யெய்தியங்குரைத்ததுமிருந்தமன்னவர்***
***வெய்துறப்புகன்றதுமீண்டுவந்ததுங்***
***கொய்தொடைக்கடோற்கசன்றானுங்கூறினான்.***

*(இ-ள்.) கொய் தொடை - (பூக்களைப்) பறித்துத்தொடுத்த மாலையுடைய, கடோற்கசனும்--, --பை திகழ்- படத்தில் விளங்குகிற, மணி - மாணிக்கத்தையுடைய, பணி- பாம்பையெழுதிய- பதாகை யானிடை - துவசத்தையுடைய துரியோதனனிடத்து, எய்து - சேர்ந்து, அங்கு- அவ்விடத்து, உரைத்ததுஉம் - (தான்)பேசினதையும், இருந்த மன்னர் - (அங்கு) இருந்த அரசர்கள், வெய்து உற- கொடுமை பொருந்த, புகன்றதுஉம்- பேசினதையும், மீண்டு வந்தது உம் - (தான்) திரும்பிவந்ததையும், கூறினான்-; ( எ-று.)* ***பி -ம்*** *: கொய்திறற். பதாகை - பெருங்கொடி யென்பர், நச்சினார்க்கினியர். (397)*

***பதின்மூன்றாம் போர்ச்சருக்கம் முற்றிற்று.***

## *பதினான்காம்போர்ச்சருக்கம்*

### *1.- கடவுள் வணக்கம்*

***அரியதண் கலைவாண் மதியமுங் கொதிகொ ளாலமுந்
தனதிடத்தடக்கி,
யுரியவொண் கங்கா நதிக்கொரு பதியா யுரைபெறு
முயர்மகோ ததியிற்,
பரியதிண் சிலையோ டம்பெலா முகந்துபற்குனப்
பொருப்பிடைப் பொழியுங்,
கரியபைம் புயலைக் கைத்தொழுமவரே கருவிலே
திருவுடை யவரே.***

*(இ-ள்.) அரிய - (பிறர்க்கு) அருமையான, தண் - குளிர்ச்சியாகிய, கலைவாள் -கலைகளின் ஒளியையுடைய, மதியம்உம் - சந்திரனையும், கொதிகொள்- கொடுமையைக்கொண்ட, ஆலம்உம் - விஷத்தையும், தனதுஇடத்து - தன்னிடத்தில்,அடக்கி - அடங்கவைத்துக் கொண்டு, உரிய ஒள் கங்காநதிக்கு ஒரு பதி ஆய் -தனக்கு உரியதான சிறந்த கங்காநதிக்கு ஓர் இடமாய் [ஒரு தலைவனாய்].உரைபெறும்- புகழ்பெற்ற - உயர் மகோததியில் - சிறந்த (பரமசிவனாகிய)பெருங்கடலினின்று, பரிய திண் சிலையோடு அம்புஎலாம் முகந்து - பெரிய வலியவில்லும் அம்பும் ஆகிய எல்லாவற்றையும் நிரம்ப எடுத்து, பற்குனன் பொருப்பிடை- அருச்சுனனாகிய மலையிடத்தே, பொழியும் - சொரிந்த, கரிய பைம் புயலை -கருநிறமுடைய குளிர்ந்தமேகம் போன்ற கண்ணனை, கைதொழுமவர்ஏ - கைகூப்பிவணங்குந் தன்மையுடையவர்கள்தாமே, கருவிலே திரு உடையவர் -கருப்பத்திலேதொடங்கி ஐசுவரியமுடையவராவர்; ( எ -று.)*

*கண்ணபிரான் தனது பெருங்கருணையால் பாண்டவர்க்குச் சகாயனாய் நின்று அருச்சுனனது சபதத்தை நிறைவேறச்செய்தற் பொருட்டு அவனுடன் கைலாசத்துக்குச்சென்று அதற்கு உரிய கருவிகளை அவ்வருச்சுனனுக்குச் சிவபிரானைக்கொண்டு கொடுப்பித்தருளின வரலாற்றைக் கீழ்ப் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திற் கூறிவந்தபொழுது அப்பிரானது அந்தக் கலியாண குணத்தில் இவ்வாசிரியர்க்கு உண்டான ஈடுபாடு அச்சருக்கம் முடிந்தபின்பும் ஆராதுதலையெடுத்து நின்றதனால், அச்செய்தியையே குறித்து அடுத்த இச்சருக்கத்துக்குக்கடவுள்வாழ்த்துக் கூறுகின்றனர்.*

*சிவபிரானிடத்தில் கடலின்தன்மையையும், கண்ணபிரானிடத்துக்காளமேகத்தின் தன்மையையும், அருச்சுனனிடத்துமலையின் தன்மையையும் ஏற்றிக்கூறினார்;* ***உருவகவணி.*** *மதியமும் ஆலமும் தனதிடத்து அடக்குதல் - உபமானம் உபமேயம் இரண்டுக்கும் பொருந்துதலும், பதி சிலை அம்பு என்ற சொற்கள் உபமானமாகிய கடலோடு இயையுமிடத்து முறையே கணவன் மழைக்கல் நீர் என்றும், உபமேயமாகிய சிவபிரானோடு இயையுமிடத்து முறையே இடம் வில் பாணம் என்றும் பொருள்பட்டு, அச்* ***சிலேடை*** *உருவகத்துக்கு அங்கமாய் அமைதலும் காண்க.* ***கடலுக்கு,*** *மதியை அடக்குதல் - பாற்கடல் கடைந்தகாலத்து அக்கடல் சந்திரனது உற்பத்திக்கு இடமானதும், நாள்தோறும் சந்திரனுதித்தல் கடலினின்று தோன்றுகிறவாறுபோல இருத்தலும்: ஆலம் அடக்குதல் - பாற் கடல்கடைந்தகாலத்து அக்கடல் கொடிய ஹாலாஹலமென்னும்*

*விஷந்தோன்றுதற்கு இடமாயினமை : கங்காநதிக்குப்பதியாதல்- கங்கைநதியாகிய பெண்ணுக்குக் கடல் கணவனாதலும், கடல் கங்கை நதி சேருமிடமாதலும். (எல்லாநதிகளுங் கடலிற்சேர்தலும், நதி சப்தமும் ஸமுத்ரசப்தமும் வடமொழியில் முறையே பெண்பால் ஆண்பாற் சொற்களாக அமைந்திருத்தலு மாகிய தன்மைபற்றி நதிகளை மனைவிகளாகவும் கடலை அவைகட்குக் கணவனாகவும் கூறுதல் மரபு.) பொதுப்பட 'நதிக்கொருபதியாய்' என்றுகூறாது இங்கே 'கங்காநதிக் கொரு பதியாய்' என்று எடுத்துக்கூறினது. அந்நதியின் ஒப்புயர்வற்ற சிறப்புப்பற்றி யென்க.*

*அவ்யாற்றின் மிக்க சிறப்பு, பிரசித்தம். கடலுக்குச் சிலை - ஆலங்கட்டியும், அம்பு - சாதாரணநீர்த்துளியு மென்க. மிக்கவலிமையும், எதற்குஞ்சலியாத உறுதியும், அளவிடவொண்ணாதஉயர்வும் பொருள்வண்மையும் முதலியன உடைமைபற்றி, **அருச்சுனனி** டத்து **மலையின்** தன்மையை யேற்றிக் கூறினார். **கண்ணனு** க்குக் **காளமேகம்** கருநிறத்தால் மாத்திரமே யன்றி உலகத்தின்தாபத்தை யொழிக்கிற குளிர்ந்த கருணை மழையைச் சொரியுந் தன்மையாலும் அமையு மென்க. சிவபிரானுக்கு, சந்திரனையும் விஷத்தையும் அடக்குதல் - சந்திரனைத் தலையில் தரித்தலும், விஷத்தைக் கழுத்தில்நிறுத்தலும் ; கங்காநதிக்கு ஒரு பதியாதல் - கங்கையைச் சடையில் வைத்துக்கொண்டிருத்தல் ; இனி, பெண்பாலாகியகங்கை சிவபிரானை நீங்காதுசேர்ந்திருக்குந் தன்மையென்றலுமுண்டு உபமேயமாகிய சிவபிரான் பலதேவர்களினுஞ் சிறப்புப்பெற்று மகாதேவனென்றும் மகேசுவரனென்றும் கருணைக் கடலென்றும் உயர்த்திக்கூறப்படுந்தன்மை தோன்ற, உபமானமாகிய கடலை ' **உயர்** மகோததி' என்று விசேடித்துக் கூறின ரென்க.*

*பெறுதற்கரிய பொருள்களாய்ப் பரமசிவனிடமிருந்த வில் அம்புகளை அருச்சுனன் எளிதிற்பெற்றுப் பயன்படுத்திக்கொள்ளுதற்குக் கண்ணன் புருஷகாரமாய் நின்று உதவியமைபற்றி, கண்ணனை 'பரமசிவனாகிய பெருங்கடலிடத்தினின்று சிலையும் அம்பும் முகந்து பற்குணப் பொருப்பிடைப்பொழியுங் கரியபைம்புயல்' என்றார். வில் அம்புகளோடு அவற்றிற்கு உரிய முஷ்டிநிலை என்பனவும், ருத்திமகாமந்திரமுங் கொடுப்பித்தமை, 'எலாம்', 'பொழியும்' என்ற சொற்களாற் குறிப்பிக்கப்பட்டன வென்க.*

*கருவிலே திருவுடைமையாவது - கருப்பத்தி லிருக்கும்பொழுதே எம்பெருமான் தன் திருவருளால் தனதுசொரூபரூபகுண விபூதிகளைக் காட்டிக் குளிர நோக்கித் தரிசநந்தரப்பெற்று வணங்கி அப்பயிற்சியின் நிறைவினாற் பிறந்த பின்பும் ஒருகாலும் அப்பரமனை மறவாமல் எப்பொழுதும் பகவத் பக்தியாகிற ஐசுவரியத்தைப் பரி பூர்ணமாக உடையராயிருத்தல். தொண்டரடிப்பொடியாழ்வார் எம்பெருமானுக்கு அடிமைபூணாதவரை "கருவிலேதிருவிலாதீர்" என்று இகழ்ந்து அருளிச்செய்தமைகொண்டு , இவர் இங்கு எம்பெருமானுக்கு அடிமைபூண்பவரை 'கருவிலே திருவுடையவர் ' என்றார். 'கருவிலே திருவுடையவர் ' - கர்ப்ப ஸ்ரீமாந். **பி -ம்:** கரியவண்புயலை.*

*இதுமுதற் பதினொருகவிகள் - பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ்சீர்களும், மாச்சீர்களும மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட **எழுசீராசிரியவிருத்தங்கள்.** (398)*

### *2.- தருமபுத்திரன் சேனையுடன் போர்க்குப் புறப்படுதல்.*

***காலையாதபனைத் தருமன்மாமதலைகைதொழுகடன் முடித்தருளிச்,***
***சாலையார்தழல்செய் வேள்வியந்தணர்க்குத் தானமுந் தகுவன***
***வழங்கி.***
***மாலையாமளவிற் றனஞ்சயன்மொழிந்த வஞ்சினம்***
***வழுவறமுடிப்பான்,***
***வேலையாரரவப் பலபணைமுழங்க வெம்முரட்***
***சேனையோடெழுந்தான்.***

*(இ-ள்.) காலை - (பதினான்காநாட்) சூரியோதயகாலத்தில்,- தருமன் மா மதலை- யமதருமராசனது சிறந்தகுமாரனான யுதிட்டிரன், - ஆதபனை கை தொழு கடன்முடித்தருளி - சூரியனைக் கை கூப்பிவணங்கிச் செய்யவேண்டிய கடமைத்தொழில்களை அன்புடன் செய்து முடித்து, - சாலை - யாகசாலையில், ஆர்-பொருந்திய, தழல் - அக்கினியில், செய் - செய்கிற, வேள்வி - யாகங்களையுடைய,அந்தணர்க்கு - பிராமணர்களுக்கு, தகுவன தானம்உம் - தக்கனவாகியதானங்களையும், வழங்கி - மிகுதியாகக் கொடுத்து,- மாலைஆம் அளவில் - (அன்றைத்தினம்) மாலைப்பொழுது வருமளவிற்குள், தனஞ்சயன் மொழிந்தவஞ்சினம் வழு அற முடிப்பான் - அருச்சுனன் ( முதல்நாளிற்) சொன்ன சபதத்தைத்தவறுதலில்லாமல் நிறைவேற்றும் பொருட்டு,- வேலை ஆர்- கடலொலியையொத்த,அரவம் - ஆரவாரத்தையுடைய , பலபணை-*

*அநேகவகைவாத்தியங்கள், முழங்க -மிக ஒலிக்க, வெம் முரண் சேனையோடு - கொடிய வலிமையையுடைய ( தன்)சேனையுடன், எழுந்தான் - (போர்க்குப்) புறப்பட்டான்; ( எ -று.)*

*மாலையாமளவில் முடிப்பான் என்க. இனி, மாலையாமளவில்மொழிந்த என இயைத்து, முந்தினநாளைமாலைப்பொழுதிற் சொன்ன என்றலுமாம். (399)*

### *3.- அருச்சுனன் போர்க்குப் புறப்படுதல்.*

***அடைந்தவரிடுக்க ணகற்றுதற்கெண்ணி யாடகப் பொருப்பி***
***னாற்கடலைக்,***
***கடைந்தமுதளித்த கருணையங்கடலே கடும்பரிச்சந்த***
***னங்கடவ,***
***மிடைந்தொளியுமிழும் வேற்படைத்தடக்கை வீமனு***
***மிளைஞரும்பலருங்,***
***குளைந்திருபுறனுங் கைவரமகவான் குமரனு***
***மமர்க்களங்குறுக.***

இதுவும், வருங்கவியும் - குளகம்.

*(இ-ள்.) அடைந்தவர் - (தன்னைச்) சரணமடைந்த தேவர்களின் இடுக்கண்- துன்பத்தை, அகற்றுதற்கு - போக்குதற்கு, எண்ணி- நினைத்து, ஆடகம் பொருப்பினால் - பொன்மயமான மந்தர மலையைக் கொண்டு , கடலை கடைந்து - பாற்கடலைக் கடைந்து, அமுது அளித்த - (அத்தேவர்கட்கு) அமிருதத்தைக் கொடுத்த, கருணை அம் கடலே - அருளுக்கு அழகிய ஒருகடல்போல இடமாகவுள்ளவனாகிய கண்ணபிரான்தானே, கடும் பரி சந்தனம் கடவ- வேகத்தையுடைய குதிரைகள் பூட்டிய (தனது) தேரைச் செலுத்தவும்,-*

*மிடைந்து ஒளி உமிழும் - மிகுதியாக ஒளியை வீசுகிற, வேல் படை - வேலாயுதத்தையேந்திய, தட கை - பெரியகையையுடைய, வீமன்உம்- வீமசேனனும், இளைஞர்உம் - தம்பிமாரான நகுலசகதேவர்களும், பலர்உம் - மற்றும் பல அரசர்களும், இரு புறன்உம்- (தனது) இரண்டுபக்கங்களிலும், குடைந்து- நெருங்கி, கைவர - கைகள்போல ( ஏற்றதுணையாக அடுத்து) வரவும்,- மகவான் குமரன் உம்- இந்திரகுமாரனான அருச்சுனனும், அமர் களம் குறுக- யுத்த களத்தைச்சேர்ந்திட.- (எ-று.)-"மைத்துனன்வகுத்துநின்றான்" என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.*

*கீழ்க்கவியில், 'தருமன்மாமதலைசேனையொடெழுந்தான்' என்றதில், மற்றையோர் எழுந்ததும் அடங்குமாயினும், அன்றைத் தினத்தில் சபதத்தை நிறைவேற்றவேண்டிய பாரத்தை அருச்சுனன் மேற்கொண்டுள்ளானாதலால், அவனதுவருகையைச் சிறப்பாகத் தனியேயெடுத்துக்கூறுகிறார். வீமனும் நகுலசகதேவர்களும் சாத்தகி முதலிய மற்றும் பல அரசரும் அவனையடுத்துநின்றதற்கும் இதுவே காரணம். கடல் கடைந்ததொருகட லெனச் சமத்காரந் தோன்றக் கூறினார். தேவர்களைக் காக்கும்பொருட்டுப் பாற்கடல் கடைந்து அமுதளித்ததுபோலவே, தேவாமிசமான பாண்டவர்களைக் காத்தற்பொருட்டுப் போர்க்கடலைக் கடைந்து வெற்றியளிக்குங் கருணாநிதி யென்பார்,இங்கு அத்தன்மையைக் கூறினார். முன்பு கடல்கடைந்தமுதளித்தவனும், இப்பொழுதுகிருஷ்ணாவதாரஞ் செய்தவனும் ஒருதிருமாலே யாதலால் அத்தன்மை கண்ணன்மேல் ஏற்றிக் கூறப்பட்டது . கடலே என்ற ஏகாரம் - உயர்வு சிறப்பு. குடைதல்என்பது - நீரில்விளையாடுதலையுங் குறிக்குமாதலின், ஒருதொடராய் நின்ற அடுத்தகவியிற் சேனையைக் கடலென்பதற்கு ஏற்ப, அதனிடையே செல்லுதலை 'குடைந்து'என்றா ரென்னலுமாம்: அது, இங்கு, உல்லாசமாக ஊக்கத்தோடு செல்லுதலைவிளக்கும். கைவர - ஒழுங்காய்வரஎனினும், படைவகுப்பில்வர எனினுமாம். (400)*

### *4.-திட்டத்துய்மன் பாண்டவர்சேனையை அணிவகுத்தல்.*

***சோனையம்புயலிற்கணைதொடும்பதாதிதுரகதந்துரகதத்தடந்தேர்***
***யானையென்றுரைக்குநால்வகையுறுப்புமிராசமண்டலமுகமாகத்***
***தானையங்கடலைமிடலுறவகுத்ததுத்தான்முதற்பேரணியாகச்***
***சேனையின்பதியாமைத்துனனின்றான்றேவரும்யாவரும்வியப்ப.***

*(இ -ள்.) சேனையின் பதி ஆம்- (பாண்டவ) சேனைக்குத் தலைவனான, மைத்துனன் - (பாண்டவர்களின்) மைத்துனனாகிய திருஷ்டத்யும்நன்,- சோனை- விடாப்பெருமழை பொழிகிற, அம் - அழகிய, புயலின் - மேகம்போல, கணை தொடும் - அம்புகளை மிகுதியாகப் பிரயோகிக்கிற, பதாதி - காலாள்களும், துரகதம்- குதிரைகளும், துரகதம் தட தேர் - குதிரைகள் பூண்ட பெரிய தேர்களும், யானை- யானைகளும், என்று உரைக்கும் - என்று சொல்லப்படுகிற, நால் வகை - சதுரங்கங்கள், உறுப்பு உம்- ஏற்ற அவயவங்களும், நால் வகை - சதுரங்கங்கள், உறுப்புஉம் - ஏற்ற அவயவங்களும், இராச மண்டலம் - அரசர்கள் கூட்டம், முகம் ஆக - முகமுமாக (அமையும்படி), தானை அம் கடலை - (தனது) அழகிய*

*சேனாசமுத்திரத்தை, மிடல்உற - வலிமைமிக, தேவர்உம் யாவர் உம் வியப்ப. (வானத்தில் நின்ற போர்காணுந்) தேவர்களும்மற்றும் எல்லோரும் (கண்டு) அதிசயிக்கும்படி, வகுத்து - வியூகம்வகுத்து,- தான்-, முதல் பேர் அணி ஆக - அச்சேனையின் முகத்திற்கு ஒரு பெரிய அலங்காரமாக, நின்றான் - முன்நின்றான்; (எ-று.)*

*தானைக்கடல் - கடல்போல மிகப்பரந்த சேனையென்க; அணியணியாக வருதல்பற்றியும், அச்சந்தருதல் பற்றியும், சேனைக்குக் கடலுவமை ஏற்கும். சேனைகளை அணிவகுக்கிற கருத்து, கண்டபடிதனித்தனி பிரிந்துபரவியிருத்தலினும் ஒருவடிவமையத்திரண்டு நிற்கையில் வெல்லுதற்கரிதாய்ப் பகைவரை எளிதிலழிக்கு மென்ப தாதலால், 'மிடலுறவகுத்து' என்றார். அரசர்களை முகமாகவும், நால்வகைச்சேனைகளை மற்றை அவயவங்களாகவும் அமைத்து அணி வகுத்தன னென்க. மைத்துன்ன் - இங்கே, மனைவியினுடன்பிறந்தவன். (401)*

***5.- மூன்றுகவிகள் - குளகம்: துரோணன் கௌரவசேனையை அணிவகுத்தலைக் கூறும்.***

***பாப்புவெம்பதாகைப்பார்த்திவன்பணியாற்பத்திரண்டியோச***
***னைப்பரப்பிற்,***
***றீப்புறஞ்சூழநடுவணிற்பதுபோற்செயத்திரதனை***
***யிடைநிறுவிக்,***
***கோப்புறப்பரிதேர்குஞ்சரம்பதாதிகூறுநூன்முறை***
***யணிநிறுத்திக்,***
***காப்புறத்திசைகளெட்டினுநெருங்கக்காவலர்யாரையுநிறுத்தி.***

*(இ-ள்.) பாம்பு - பாம்பின்வடிவமெழுதிய, வெம் - பயங்கரமான, பதாகை - கொடியையுடைய, பார்த்திவன் - துரியோதனராசனது, பணியால் - கட்டளையின் படி,-பத்து இரண்டு யோசனை பரப்பில் - இருபத யோசனை விசாலமுள்ள இடத்திலே,தீ புறம் சூழ நடுவண் நிற்பது போல் - நெருப்புப் புறத்திற் சூழ்ந்துநிற்க அதன்நடுவில் நிற்பதுபோல, செயத்திரதனை இடை நிறுவி - சயத்திரதனை (க்கொடிய பெரியசேனையின்) மத்தியிலே நிற்கச்செய்து,- கோப்பு உற- இடைவிடாமல் ஒன்றோடொன்று தொடர்ச்சியாக அமையும் படி, பரி தேர் குஞ்சரம் பதாதி - குதிரை தேர் யானை காலாள் என்ற வகைச்சேனைகளையும், கூறும் நூல் முறை - (படைவகுப்பைக்) கூறுகிற சாஸ்திரங்களின் முறைமைப்படி, அணி நிறுத்தி - ஒழுங்கு படச் சுற்றிலும் நிற்கச் செய்து,- காப்புஉற - (அவனுக்குக்) காவலாக அமையும்படி, திசைகள் எட்டின்உம் - எட்டுத்திக்குக்களிலும், காவலர் யாரைஉம்- காக்குந் திறமமைந்தவர்களான அரசர்கள் பலரையும், நெருங்க நிறுத்தி - இடைவிடாது நிற்கும்படி வைத்து,- ( எ-று.)- இப்பாட்டிலும், அடுத்த இரண்டு பாடல்களிலுமுள்ள 'நிறுத்தி' என்ற சொற்களெல்லாம். 7- ஆம் பாட்டிலுள்ள 'நின்றனன்' என்றதனைக் கொண்டு முடியும்; அப்பாட்டிலுள்ள 'துரோணன்' என்பதேஇவற்றிற்கெல்லாம் எழுவாய்.*

*பதின்மூன்றாம்போர்நா ளிரவிலே கடோற்கசனால் அருச்சுனனது சபதத்தை யறிந்த துரியோதனன், துரோணனை நோக்கி 'நாளைக்குச் சைந்தவனைப் பாதுகாத்து அருச்சுனனை அனலிற் குளிப்*

*பிக்கவேண்டும்' என்றுமிகவும் பிரார்த்தித்தன னாதலால், இங்கே 'பார்த்திவன்பணியால்' என்றார். துரியோதனன் வேண்டிக்கொண்டதற்குத் துரோணன் ஆமளவுங்காப்பன் என்று வாக்குத்தத்தஞ்செய்துள்ளா னாதலால், மிக்ககாப்பு அமையும்படி அணிவகுக்கின்றன னென்க. அபிமனைக் கொன்ற சயத்திரதனை அருச்சுனன் சபதப்படி கொல்லவொண்ணாவண்ணம் மாலைப்பொழுதளவும் பாதுகாப்பதுவே துரியோதனாதியரது முயற்சியாதலால், இங்ஙனம் துரோணன் அவனை இடைநிறுத்திச் சுற்றிலும் வெகுதூரமளவும் சேனைகளையும் அரசர்களையும் நிறுத்தி அணிவகுப்பானாயினான். இரண்டாம்அடியில், சயத்திரதன் கொடியசேனைசூழ இடைநிற்றற்கு நெருப்புச்சூழ இடைநிற்றலை உவமைகூறியது,* ***உவமையணி.*** *பாணாசுரன் முதலிய சிலர்க்கு நெருப்புக்கோட்டையிருந்தது கருதி, சயத்திரதனுக்குப் பாதுகாவலாகச் சூழ்ந்த சேனைக்குத் தீயரண் உவமை கூறப்பட்ட தென்க. (402)*

***6. தூசியின்முதனாள்வஞ்சினமொழிந்ததுன்மருடணன்றனைநிறுத்தி***
***யூசியுநுழையாவண்ணம்விற்பதாதிவயவரையுரனுறநிறுத்தி***
***வாசியிலிபத்திற்றேரிலேண்பட்டமன்னரையிருகையுநிறுத்திப்***
***பேசியகன்னன்சகுனிசல்லியரைப்பேரணியாகவேநிறுத்தி.***

*(இ -ள்.) முதல் நாள் - முந்தினநாளில், வஞ்சினம் மொழிந்த - (மறுநாள் மாலைப்பொழுதளவும் சயத்திரதனைத் தான் காப்பதாகச்) சபதஞ் சொன்ன, துன்மருடணன் தனை - துர்மர்ஷண னென்ற அரசனை, தூசியில் - முன்னணிச்சேனையிலே, நிறுத்தி- நிற்க வைத்து,-ஊசிஉம் நுழையா வண்ணம் - சிறிய ஊசியும் இடையில் நுழையவொண்ணாதபடி [மிக அடர்த்தியாக], வில் பதாதி வயவரை- வில்லில்வல்ல காலாள்வீரர்களை, உரன் உற - வலிமைபொருந்த நிறுத்தி- (அவனுக்கு உதவியாக அவனுடன்) நிற்கச்செய்து,- வாசியில் - குதிரைகளிலும், இபத்தில் - யானைகளிலும், தேரில் - தேர்களிலும் (ஏறியுள்ள), ஏண் பட்ட மன்னரை- வலிமைபொருந்திய அரசர்களை, இரு கைஉம் நிறுத்தி - இரண்டு பக்கங்களிலும்நிற்கச்செய்து,- பேசிய கன்னன் - (சயத்திரதனைத் தான் பாதுகாப்பதாகப்)பிரதிஜ்ஞைகூறின கர்ணனையும், சகுனி சல்லியரை - சகுனியையும் சல்லியனையும்,பேர் அணி ஆகஏ நிறுத்தி - பெரிய நடுச்சேனையிற் பொருந்தும்படி நிறுத்தி,-(எ-று.)- "சகடதுண்டத்து நின்றனன் துரோணன்" என வருங் கவியோடு தொடர்ந்துமுடியும்.*

*தூசி - முந்துற்றுப்பொருபடை. அருச்சுனன்செய்த சபதத்தைக் கடோற்கசனால் அறிந்து துரியோதனன் துரோணன்முதலானோரை நோக்கி வேண்டியபொழுது, துர்மர்ஷணன் அங்ஙனமே தான்காப்பதாக உறுதிமொழி கூறியதனை, கீழ்ச்சருக்கத்திற் காண்க. அப்பொழுது கர்ணன்முதலியோர் தாம் காப்பதாகச் சபதஞ்செய்தமை பற்றியும் 'பேசியகன்னன்சகுனிசல்லியரை' என்றது. ஊசியும், உம்மை - இழிவுசிறப்பு. எண்பட்டமன்னரை யென்றும் படிக்கலாம். எண்பட்ட - மதிப்புப் பெற்ற. (403)*

***7. அணிகளைந்தைந்தாலைவகைவியூகமாகியசேனையின்சிரத்து,***
***மணிமுடிபுனைந்துவைத்தெனவலங்கல் வலம்புரிமார்***
***பனைநிறுத்திப்,***
***பணிவுறுமவுணர்பதாகினிவகுத்தபார்க்கவனிவனெனப்பயில்***
***போர்த்,***
***துணிவுடன்பஃறோர்சூழ்வரச்சகடதுண்டத்துநின்றனன்று***
***ரோணன்.***

*(இ-ள்.) அணிகள் ஐந்து ஐந்தால் - தனித்தனி ஐந்துஐந்து பகுப்பாகப்பிரிக்கப்பட்ட சேனைத்தொகுதிகளால், ஐவகை வியூகம் ஆகிய- ஐந்துவகை வியூகமாக வகுக்கப்பட்ட. சேனையின் - சேனையினுடைய, சிரத்து - முடியில், மணி முடி புனைந்து வைத்து என - இரத்தினகிரீடத்தைத்*

*தரித்து வைத்தாற்போல, வலம்புரி அலங்கல் மார்பனை நிறுத்தி - நஞ்சாவட்டைப்பூமாலையைத் தரித்த மார்பையுடையனான துரியோதனனை நிறக்ச்செய்து,- பணிவு உறும் அவுணர் பதாகினி வகுத்த பார்க்கவன் இவன் என - (தன்னை) வணங்குதல்பொருந்திய அசுரர்களுடைய சேனையை அணிவகுத்த சுக்கிராசாரியனே இவனென்று (ஒப்புமையால் தன்னைக்) கூறும்படி,- பயில் போர் துணிவுடன் - இடைவிடாமற் போர்செய்யும் உறுதியுடனே, பல் தேர்சூழ்வர - பலதேர்கள் (தன்னைச்) சூழ்ந்துவர,- துரோணன்-, சகட துண்டத்து - சகடவியூகத்தின் முகத்திலே, நின்றனன் - (தான்) நின்றான் - (தான்) நின்றான்; (எ-று.)*

*சதுரங்கங்கள்கூடின தனது பெருஞ்சேனைத்தொகுதியைத் தனித்தனிஐந்தாகப்பிரித்து, அவற்றை ஐந்துவியூகமாக அமைத்து, அவற்றிற்கெல்லாம் ஒருமகுடம்வைத்தாற்போல அலங்காரமாயமையும்படி துரியோதனனைத் தலைமையாகநிறுத்தித் தான் அவ்வைந்து வியூகங்களுட் பிரதானமானதும் மற்றை நான்கையுந் தனக்குள்ளேகொண்ட மகாவியூகமான சகடவியூகத்தின் முன்னிடத்திலே நின்றனனென்பதாம். ஐந்துவியூகம் - சகடம், பதுமம், கர்ப்பம், சூசீ, கூடம் என்பன. அசுராம்சமான கௌரவசேனையைத் தேவாம்சமான பாண்டவரோடு பொருதற்கு அணிவகுத்த துரோணாசாரியனுக்கு அசுரகுரு ஏற்ற உவமையாவன். சகடவியூகம் - நால்வகைச் சேனைகளையும் வண்டிபோல வடிவம் அமையும்படி ஒழுங்குபட நிறுத்துதல், பதாகினி என்பது - கொடிகளையுடையதெனக் காரணப் பொருள்படும்; பதாகா - த்வஜம். பார்க்கவன் - ப்ருகு என்னும் முனிவனது சந்ததியிற் பிறந்தவன்; தத்திதாந்தநாமம். 'பஃறேர் சூழ்வர' என்றது - பலதேர்வீரர் தன்னைச்சுற்றி வந்து நிற்க என்றவாறு. **பி -ம்:** வியூகமாக்கியச்சேனையின். (404)*

### *8.- துரோணன்படைவகுத்ததன் சிறப்பு.*

**மந்தணமிருந்துகங்குலின்முதனாண்மன்னனோடியம்பியவகையே,**
**யந்தணனணிந்தவிரகினைவிமானத்தமரருமதிசயித்துரைத்தார்,**
**சந்தணிகடகவாகுநீள்சிகரச்சயத்திரதனையொருபகலிற்,**
**கொந்தழலுரோடத்தனஞ்சயன்பொருதுகோறலோவரிதெனக்**
**குறித்தே.**

*(இ-ள்.) முதல் நாள் கங்குலின் - முந்தினநாளிரவில், மந்தணம் இருந்து - ஆலோசனைச்சபையிலே யிருந்துகொண்டு, மன்னனோடு இயம்பியவகை ஏ - துரியோதனனுடன் சொன்னபடியே,*

*அந்தணன் - பிராமணனான துரோணன், அணிந்த - அணிவகுத்த, விரகினை - தந்திரத்தை, (கண்டு),- விமானத்து அமரர்உம்- (வானத்தில்) விமானத்தின்மீது இருந்துகொண்டு போர்காண்கிற தேவர்களும், 'சந்து அணி - சந்தனக்குழம்பைப் பூசியவையும், கடகம் - கடகமென்னும் வளையை யணிந்தவையும், நீள் சிகரம் - உயர்ந்த மலையுச்சி போன்றவையுமான, வாகு - தோள்களையுடைய, சயத்திரதனை-, கொந்து அழல் உரோடம் தனஞ்சயன் - பற்றியெரிகிற தீத்திரள் போன்ற பெருங்கோபத்தையுடைய அருச்சுனன், பொருது - போர் செய்து, ஒரு பகலில் - இன்றை ஒருபகற்பொழுதினுள், கோறல்ஓ- கொல்லுதலோ, அரிது - அருமையானது', என குறித்து - என்று எண்ணி, - அதிசயித்து உரைத்தார் - (துரோணண் படைவகுத்த திறத்தைப்பற்றி) ஆச்சரியப்பட்டுக் கொண்டாடிப் பேசினார்கள்;*

*மந்தணம் = மந்த்ரம்: ஆலோசனையைக் குறிக்கிற இச்சொல் - இலக்கணையால், அதுசெய்தற்கு உரிய இடத்துக்கு வந்தது. பகைவர் படைக்கலங்களால் ஊறடையாத திண்மையும் பருமையும் உயர்வும் பற்றி, 'வாகுநீள்சிகரம்' எனப்பட்டது. கோறலோ, ஓகாரம்- தெரிநிலை. (405)*

### *9.- அருச்சுனன் போர்தொடங்குதல்.*

**செய்த்தலைக்கயலும்வாளையும்பிணங்குஞ்செழும்புனற்சிந்து**
**நாட்டரசைக்,**
**கைத்தலத்தடங்கும்பொருளெனக்காத்துக்காவலர்நின்ற**
**பேரணிகண்,**

***டுத்தமோசாவுமுதாமனுமுதலோரோரிருபுறத்தினுஞ்சூழ,***
***வித்தகவலவன்முன்செலத்தடந்தேர்விசயனவ்வினைஞர்***
***மேனடந்தான்.***

*(இ -ள்.)* செய்த்தலை- கழனிகளிலே, கயல் உம் - கயல்மீன்களும், வாளைஉம்- வாளைமீன்களும், பிணங்கும்- (ஒன்றோடொன்று) மாறு பட்டுப் பொருகிற, செழும்புனல் - மிக்க நீர்வளப்பத்தையுடைய, சிந்து நாடு - சிந்துதேசத்தின், அரசை -இராசனான சயத்திரதனை, கைத்தலத்து அடங்கும் பொருள் என - கையிலடங்கியபொருளைப் (பாதுகாத்தல்) போல, காவலர் - காக்குந்திறமமைந்தவர்களானஅரசர்கள், காத்து நின்ற - பாதுகாத்து நின்ற, பேர் அணி - பெரிய(எதிர்ப்பக்கத்துப்) படைவகுப்பை, கண்டு - பார்த்து,- தட தேர் விசயன் -பெரியதேரையுடைய அருச்சுனன், உத்தமோசா உம்உதா மன்உம் முதலோர்-உத்தமௌஜஸ் என்பவனும் யுதாமந்யு என்பவனும் முதலான வீரர்கள், ஒர் இருபுறத்தின்உம் சூழ - (தனது) இரண்டுபக்கங்களிலும் அடுத்துவரவும்,- வித்தகம்வலவன் - திறமையுள்ள சாரதியான கண்ணபிரான், முன் செல - (தனது தேரின்)முன்னிடத்திற் பொருந்தவும், அ வினைஞர்மேல் நடந்தான் - எதிர்ப்பக்கத்துப்போர்வீரர் மேற் (போருக்குச்) சென்றான் ; ( எ-று.)

சிறிய கயல்மீன்கள் தங்குதற்கு உரிய கழனிகளிலும் சர்ப் பெருக்குமிகுதியாற்பெரியவாளைமீன்கள் வந்துபாய்கின்றனவென்ற தன்மையும், சிறுமீன்களைப் பெருமீன்கள் உணவாகக்கொள்ளுதல் இயல்பாயினும் அந்நாட்டுக்கழனியில் நீர்வளத்தாற்கொழுத்துள்ள சிறியகயல்மீன்கள் வெளியிலிருந்துவருகிற பெரியவாளைமீன்களை

யெதிர்க்கும் வலிமையுடையனவென்ற தன்மையுந்தோன்ற, சிந்து தேசத்தின் நீர்வளச்சிறப்பை வர்ணித்தன ரென்க. அருச்சுனன் ஸ்வதந்திரனாகத் தொழில்செய்யாமற் கிருஷ்ணனுக்குப் பரதந்திரனாகநின்று தொழில் செய்தல் தோன்ற 'வித்தகவலவன் முன்செல விசயன் வினைஞர்மேல் நடந்தான்' என்றார். கண்ணன் தான்யார் யார்மீது போர்க்குத் தேரைச் செலுத்துகின்றானோ, அவ்வவர் மீதுஅருச்சுனன் போர்செய்யத்தொடங்கினனென்றவாறு. தடந்தேர் - அக்கினிபகவானாற்கொடுக்கப்பட்ட பெருமையையுடையதேர். செய் என்பது - வயலாதலை, 'நன்செய்','புன்செய்' என்ற வழக்கிலுங் காண்க; இது, பன்றிநாட்டில் வழங்குந் திசைச்சொல் :தலை - ஏழனுருபு. கைக்குள் அடங்கிய சிறியபொருளை எவ்வளவு நன்றாகப்பாதுகாக்கக்கூடுமோ அவ்வளவு நன்றாகச் சயத்திரதனை அரசர் பாதுகாக்கமுயன்றன ரென்பது, 'கைத்தலத்தடங்கும் பொருளெனக்காத்து' என்றதனால்விளங்கும். உதாமன் - யுதாமந்யு: வடசொல்திரிபு ; இவன் துருபதனுக்குநெருங்கினஉறவினனான பாஞ்சாலராசன் ; இச்சொல் - போரிற் கோபமுடையானெனக்காரணப்பொருள்படும். ***பி -ம்:*** வலவன்செலுத்திட. *(406)*

### *10.- அருச்சுனனம்புக்குப் பகைவர்சேனை யொழிதல்.*

***போர்முகத்தடங்காமடங்கலேறனையான்விதம்படப்பொழிசிலீ***
***முகங்கள்,***
***கார்முகத்தெழுந்ததாரைபோல்வழங்கக்கார்முகத்தொ***
***லியினாற்கலங்கித்,***
***தார்முகத்தரசன்றம்பியோடணிந்தாசாதுரங்கமு***
***முடனுடைந்து,***
***நீர்முகத்துடைந்தகுரம்பெனத்துரோணனின்று***
***ழிச்சென்றடைந்தனவே.***

*(இ -ள்.)* போர் முகத்து - யுத்தகளத்திலே, அடங்கா மடங்கல் ஏறு அனையான் - அடங்குதலில்லாத சிறந்த ஆண்சிங்கத்தை யொத்தவனாகிய அருச்சுனன், விதம் பட - பலவகையாக, பொழி- சொரிந்த, சிலீமுகங்கள் - அம்புகள், கார் முகத்து எழுந்த தாரை போல் - மேகத்திடத்தினின்று வெளியெழுந்தநீர்த்தாரைகள் போல, வழங்க - மிகுதியாக மேற்செல்லுமளவில்,- தார் முகத்துஅரசன் தம்பியோடு அணிந்த சாதுரங்கம்உம் - முன்னணிச்சேனையினிடத்தேபொருந்திய

*துரியோதனனுக்குத் தம்பியான துச்சாசனனுடன் அணிவகுப்பட்டுப் பொருந்தியிருந்த சதுரங்க சேனைகளெல்லாம், கார்முகத்து ஒலியினால் கலங்கி - (அருச்சுனனதுகாண்டீவமென்னும்) வில்லினது (நாணியின்) ஓசையாற் கலக்கமடைந்து, நீர்முகத்து உடைந்த குரம்பு என - நீர்ப்பெருக்குமிக்குப்பாய்தலாலுடைந்த கரைபோல, உடன் உடைந்து - ஒருசேரச் சிதைந்து, துரோணண் நின்ற உழி சென்று அடைந்தன - துரோணசாரியன் நின்றவிடத்திற்போய்ச் சேர்ந்தன ; ( எ -று.)*

*கழனியின்நாற்புறவரம்பும் மிக்கநீர்ப்பெருக்கினால் அழியுமாறு போல, கௌரவரது நால்வகைச்சேனையும் அருச்சுனனதுபாணவர் ஷத்தினால் அழிந்தனவென்க. மடங்கலேறு - எத்துணைப்பெரிய விலங்குக்கும் பின்னிடாத ஆற்றலையுடைய மிருகராஜனான சிங்கம். 'அரசன் தம்பியோடு அணிந்த சாதுரங்கம்' என்றது - துரியோதனனுக்குத் தம்பியான துர்மர்ஷணனோடு பொருந்திநின்ற சேனை*

*யென்றும் பொருள்படக்கூடிய தாயினும், அடுத்தகவியின் இரண்டாமடியையும், முதனூலையும்நோக்கி இவ்வாறு பொருள் கொள்ளப் பட்டது. இரண்டாமடியில் 'கார்முகம்' என்ற சொல் - முன்னர்த் தொடர்மொழியாயும் பின்னர்த் தனிமொழியாயும் வெவ்வேறு பொருளில் வந்தது,* ***மடக்கு*** *. (407)*

*11.- அருச்சுனன் எதிர்ச்சேனையையழித்துத் துரோணனைநெருங்குதல்.*

***புரவிமுப் பதினா யிரங்கொடு முனைந்துபொருதிறற்***
***கிருதவன்மாவுங்,***
***கரவிறற் கரிநூ றாயிரங் கொண்டு காதுதுச் சாதனன்றானு,***
***மிரவியைக்கண்டமின்மினிக் குலம்போ லீடழிந் திடவுடன்***
***றெங்குஞ்,***
***சரவிதப் படையால்விண்டலந் தூர்த்துத்தானைகா***
***வலன்முனை சார்ந்தான்.***

*(இ -ள்.) முப்பதினாயிரம் புரவி கொடு - முப்பதினாயிரங் குதிரைகளை யுடன்கொண்டுவந்து, முனைந்து பொரு - மிகமுயன்று போர்செய்த, திறல் - வல்லமையையுடைய, கிருதவன்மாஉம் - கிருதவர்மா என்ற அரசனும், கரம் விறல்கரி நூறாயிரம் கொண்டு- துதிக்கையின் வலிமையையுடைய லக்ஷம் யானைகளையுடன்கொண்டு, காது - எதிர்த்துப்போர்செய்த, துச்சாதனன்தான்உம் - துச்சாசனனும், இரவியை கண்ட மின்மினி குலம்போல் - சூரியனைக்கண்ட மின்மினிப் பூச்சிக்கூட்டம்போல, ஈடு அழிந்திட - (தமது) வலிமை கெடும்படி, எங்குஉம் உடன்று - எவ்விடத்தும் போர்செய்து, விதம் சரம் படையால் - பலவகைப்பட்ட அம்புகளாகிய ஆயுதங்களால், விண்தலம் தூர்த்து - ஆகாயத்தினிடத்தை நிறைத்துக்கொண்டு, (அருச்சுனன்), தானை காவலன் முனை சார்ந்தான்- கௌரவசேனைத் தலைவனான துரோணன் போர் செய்யுமிடத்தைச் சேர்ந்தான்; (எ -று.)-* ***பி -ம்*** *: முனைச்சார்ந்தான்.*

*சூரியனில்லாதசமயத்தில் இருளில் மின்னிக்கொண்டு விளங்கி நிற்கும் மின்மினிக்குழாம் சூரியன்வந்தவளவில் அவ்விளக்கம் ஒழிதல்போல, அருச்சுனன் வருமுன் பலபராக்கிரமங் காட்டிவந்த பகையர்சர்கள் அவன் வரக்கண்டவளவிலே அவ்வாற்றல் முற்றும் ஒடுங்கின ரென்க. (408)*

வேறு.

*12.- மூன்றுகவிகள்- அருச்சுனனும் துரோணனும் போர்செய்தலைக் கூறும்.*

***சென்ற விற்ற னஞ்ச யற்கு முனைகு லைந்த சேனைவாய்***
***நின்ற வத்து ரோண னுக்கு நீடு போர்வி ளைந்ததால்***

**ஒன்றெ டொன்று துரக தங்க ளுருமின் விஞ்சி யதிர்வுறக்**
**குன்று குன்றொ டுற்றொ னக்கொ டிக்கொ டேர்கு லுங்கவே.**

*(இ -ள்.)* சென்ற - *(இவ்வாறு)* போன, வில் தனஞ்சயற்கு உம் - விற்போரிற் சிறந்தவனான அருச்சுனனுக்கும், முனை குலைந்த சேனைவாய் நின்ற - முன்பக்கம் கலக்கமடைந்த (எதிர்புறத்துச்) சேனையில் நின்றுள்ள, அ துரோணனுக்குஉம் - அந்தத்துரோணாசாரியனுக்கும்,- துரகதங்கள்- தேர்க்குதிரைகள், உருமின் - இடியோசைபோல, ஒன்றொடு ஒன்று விஞ்சி அதிர்வுற - ஒன்றைக்

காட்டிலுமொன்று மிகுதியாகக் கனைத்தல்செய்யவும், குன்று குன்றொடு உற்று என - மலைகள் ஒன்றோடொன்று சமீபித்தாற்போல, கொடி கொள் தேர் குலுங்க - கொடிகட்டியுள்ள இருவர்தேர்களும் அசைந்து நெருங்கவும், நீடு போர் விளைந்தது - பெரும்போர் உண்டாயிற்று; ( எ - று.)- ஆல் - ஈற்றசை.

அருச்சுனனும் துரோணனும் ஒருவர்க்கொருவர் சலியாத மகா வீரராதலால் நெடுநேரம்பொருதன ரென்க. 'முனைகுலைந்த' என்பதற்கு - வலிமைநிலையழிந்த என்றுமாம். **பி - ம்** : சென்றவித்தனஞ்சயற்கு.

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச் சீரொன்றுவிளச்சீரும், மற்றையாறும்மாச்சீர்களுமாகிய **எழுசீராசிரிய விருத்தங்கள்.** *(409)*

*13.* **முட்டியாலுநிலையினாலுமொய்ம்பினாலுமுரணுறத்**
**தொட்டவில்லுநிமிர்வறத்தொடுத்தவின்மையாலுமுன்**
**கிட்டியாசிரீயனுங்கிரீடியும்பொரப்பொரப்**
**பட்டவில்லையிருவர்மேலும்விட்டவிட்டபகழியே.**

*(இ -ள்.)* ஆசிரீயன்உம்- துரோணாசாரியனும், கிரீடிஉம்- அருச்சுனனும், முன்கிட்டி - எதிரிலே (ஒருவரையொருவர்) நெருங்கி, முட்டியால்உம் - கையில் விற்பிடிக்குந் திறத்தினாலும், நிலையினால் உம் - (விற்போரில்நிற்றற்குரிய) நிலைவகைகளாலும், மொய்ம்பினால் உம் - தோள்வலிமையினாலும், முரண் உற தொட்ட வில்லு நிமிர்வு அற - வலிமைபொருந்தக் கையிலேந்திய விற்கள் நிமிர்தலொழிய [நன்றாகவளைய], தொடுத்த - அம்புதொடுத்த, வின்மையால்உம்- விற்போர்த்திறத்தினாலும், பொர பொர - மிகுதியாக (ஒருவரோ டொருவர்) மேன்மேற் போர்செய்கையில், விட்ட விட்ட பகழி - (ஒருவர்மேலொருவர்) மிகுதியாக விட்ட அம்புகளெல்லாம், இருவர் மேல்உம் பட்ட இல்லை - இரண்டுபேர்மேலும் பட்டனவில்லை;

குருவாகிய துரோணன்போலவே அருச்சுனனும் வில்வித்தையில் மிக்க திறமுடையவனாதலால், இவ்விருவரும் எய்த அம்புகளெல்லாம் அவரவர் மாறாக எய்த எதிரம்புகளினால் தடுக்கப்பட்டு இடையில் ஒன்றோடொன்று முட்டிக் கீழ்விழுந்திட்டனவே யன்றி ஒன்றேனும் இவர்களுடம்பிற் படவில்லை என்பதாம். ஆசிரீயன் - நீட்டல்விகாரம். *(410)*

*14.* **தேரிரண்டுமிடம்வலந்திரிந்துசூழவரமுனைந்**
**தோரிரண்டுதனுவும்வாளியோரொர்கோடியுதையவே**
**காரிரண்டெதிர்ந்துதம்மின்மலைவுறுங்கணக்கெனப்**
**போரிரண்டுவீரருக்குமொத்தநின்றபொழுதிலே.**

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

*(இ-ள்.)* தேர் இரண்டுஉம் - *(தங்கள்)* தேர்களிரண்டும் இடம் வலம் திரிந்து சூழ வர - இடசாரியாகவும் வலசாரியாகவும் மண்டலமாகவும் உலாவிவரவும்,- ஓர் இரண்டு தனுஉம் - *(தங்களுடைய)* ஒப்பற்ற

*விற்களிரண்டும், ஒர் ஒர் கோடி வாளி - ஒவ்வொன்று ஒவ்வொரு கோடிக்கணக்கான அம்புகளை, முனைந்து*

*உதைய - விரைந்து செலுத்தவும்,- இரண்டு கார் தம்மில் எதிர்ந்து மலைவுறும் கணக்குஎன - இரண்டுமேகங்கள் தமக்குள்[ஒன்றோடொன்று] எதிர்த்துப் போர்செய்யும்விதம்போல.- இரண்டு வீரருக்குஉம்- (துரோணன் அருச்சுனன் என்ற) இரண்டு வீரர்களுக்கும், போர் ஒத்து நின்ற பொழுதில்ஏ - யுத்தம் ஏற்றத்தாழ்வில்லாமற் சமமாக நடந்துநின்ற பொழுதிலே,- ( எ -று.)-"மால் தேரை உட்செலுத்தினான்" என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.*

*இடசாரி - இடப்பக்கமாகச் செல்லுதல். வலசாரி - வலப்பக்கமாகச் செல்லுதல். மண்டலம் - முழுவதும் சுற்றுதல். விற்கொண்டு இடைவிடாது அம்புமழைபொழிதலில் துரோணார்ச்சுனர்க்குக் காளமேகம் உவமை. காரிரண்டு எதிர்ந்துதம்மில்மலைதல் -* **இல் பொருளுவமை**. **பி - ம்** *: காரிரண்டதிர்ந்து. (411)*

*15.- அப்போது கண்ணன் துரோணனை விலகித் தேரைஉட்செலுத்தல்.*

**இகல்செய்வெஞ்சிலைக்கைவீரவிந்நிலந்தனக்குநின்**
**பகைவனின்றவந்நிலம்பதிற்றிரண்டியோசனை**
**புகலுகின்றபொழுதுசென்றதென்றவட்பொறாமன்மா**
**லுகளுகின்றபரிகொடேரையுள்ளுறச்செலுத்தினான்.**

*(இ-ள்.) (அப்பொழுது), - மால் - கண்ணபிரான்,- அவண் பொறாமல் - அவ்விடத்து (க் காலதாமதஞ் செய்தலை) ப் பொறாமல்,- (அருச்சுனனை நோக்கி),- 'இகல் செய் - போரைச் செய்கிற, வெம் சிலை - கொடிய (காண்டீவ) வில்லை ஏந்திய, கை - கையையுடைய, வீர- வீரனே! நின் பகைவன் நின்ற அ நிலம் - உனதுபகைவனான சயத்திரதன் நின்றுள்ள அவ்விடம், இ நிலந்தனக்கு - (நாம் நிற்கும்) இவ்விடத்துக்கு, பதிற்றிரண்டுயோசனை - இருபது யோசனை தூரத்திலுள்ளது; புகலுகின்ற பொழுது சென்றது - கணக்கிட்டுச் சொல்லப்படுகிற பொழுது கழிந்திட்டது', என்று - என்றுசொல்லி,- உகளுகின்ற பரி கொள் தேரை- தாவிச்செல்லுகிற குதிரைகளைப் பூண்ட (அருச்சுனனது) தேரை, உள் உற செலுத்தினான்- (துரோணனது வியூகத்தின்) உள்ளே பாய்ந்து செல்லும்படி ஓட்டியருளினான் ; ( எ -று.)*

*கௌரவசேனாமுகத்தில் நின்றுள்ள துரோணானோடு அருச்சுனன்போர்செய்கையில் காலதாமத்தைக்கண்டு பொறாதகிருஷ்ணமூர்த்தி, அருச்சுனனைநோக்கி 'உன்பகைவன் நின்றுள்ள இடம் இவ்விடத்துக்கு இருபது யோசனை தூரமுள்ளது: அங்ஙனிருக்கையில், இவ்வாசிரிய னொருவனுடனே விடாது திறங்காட்டிப் பொருதுகொண்டிருந்தால் சபதத்தை நிறைவேற்றுதல் அரிதாய் விடும்; ஆனதுபற்றி, இப்பயனில்போரை இவ்வளவோடு நிறுத்துவாய்' என்று குறிப்பாகச்சொல்லிக்கொண்டே தந்திரமாகத் தனது தேர்க்குதிரைகளைத் துரோணனைவிலகி அவனதுவியூகத்தினுட் பாய்ந்து சென்றுசேரும்படி விரைவாகச்செலுத்தினனென்பதாம். புகலுகின்ற பொழுது சென்றது என்பதற்கு - நீ சபதங்கூறின காலம்கழிந்திடுகின்றதென இடைநிலை பிரித்துக்கூட்டிப் பொருள் கொள்ளுதல் பொருத்தம். (412)*

*16.- பின்பு துரோணன் அருச்சுனனைத் தொடர்ந்து நெருங்குதல்.*

**எதிர்த்ததேர்விழித்திமைக்குமளவின்மாயமிதுவெனக்**
**கதித்துரங்கவிசையினோடுகண்கரந்துகழிதலும்**
**அதிர்த்தடர்ந்துபின்றொடர்ந்தடுத்தபோதருச்சுனன்**
**கொதித்துவந்தகுருவொடம்மதிருகிநின்றுகூறுவான்.**

